# நிலைத்து நிற்கும் வாழ்க்கைத் தத்துவங்கள்

பாகம் - 2

# PHILOSOPHIA PERENNIS - II

ஓஷோ

தமிழில்

சிவதர்ஷினி

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.
போன் - 2433 2682 / 2433 8712

மதுரை • கோவை • பாண்டி

முதற் பதிப்பு : ஜனவரி, 2018

E-mail: sales@kannadasan.co.in
Our Web Site: www.kannadasan.co.in

பதிப்பாசிரியர்: காந்தி கண்ணதாசன்

**NILAITHU NIRKKUM VAZHKAI THATHUVANGAL -II-Tamil**

Originally Published in English as **'PHILOSOPHIA PERENNIS - II'** by Osho.

Copyright © All Revisions 2017 Osho International Foundations. All Rights Reserved.

Taimil Translation Copyright © 2017 Osho International Foundations. All Rights Reserved.

Osho is registered trademark of Osho International Foundations, Used under license.For more information: www.ohso.com

A Comprehensive Multilingual web site featuring Osho's meditations, books and tapes and an online tour of the meditaitons resort at Osho Commune International.
No part of this book reproduced or transmitted in any form or by any means electronic or mechanical including photocopying or recording or by any information storage and retrieval system without permission in writing from Osho International Foundation.

"For sale in India, Sri Lanka, Nepal, Bangladesh, Bhutan and Maldives only"

**Price Rs:300/-**

Translated By : **SIVADHARSHINI**
First Edition : January, 2018
Publishing Editor : **Gandhi Kannadhasan**
Published By : **Kannadhasan Pathippagam**
23, Kannadhasan Salai,
Thiyagaraya Nagar, Chennai - 600 017.
Ph: 044-24332682 / 8712

ISBN: 978-81-8402-813-3

O' Branches : No: 1212, Range Gowder Street,
Coimbatore - 641001. Ph: 0422 - 2479774
, Annai Complex, III Street, Vasantha Nagar,
Madurai-625 003. Ph: 0452 - 2373793
37, Bharathy Street, Puducherry - 605 001.
Ph: 0413 - 2221241

Our Bankers : State Bank of India, T.Nagar, Chennai-17.

Inner Layout's : Sasikala, Ph: 8056226658
Cover Design by : naanaas@gmail.com, Ph: 99410 11196
Printed by : VASAN Print Mfg Co, Ch-14.

## பொருளடக்கம்


தங்கக் குறியீடு .......... 5

ஜோர்பா புத்தர் .......... 46

மேலும் மேலும் வினோதங்கள் .......... 87

உள்ளும் புறமும் .......... 125

முற்றிலும் புதிய ஒரு பரிமாணம் .......... 168

ஞானம் பெறுதல் உங்கள் பிறப்புரிமை .......... 203

கணத்துக்குக் கணம் வாழுங்கள் .......... 237

அனைத்துப் புரட்சிகளும் தோற்றுவிட்டன .......... 270

சார்ந்திருத்தல் ஒருவழிப் பாதையல்ல .......... 305

அழகுணர்ச்சியே நிஜமான ஒழுக்க நெறியாகும் .......... 341

நீங்கள் பூரணத்துவம் பெற்றவர் .......... 379

# முன்னுரை

**பி**தாகோரஸை அவரது சீடர்களும் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை; அவரது தங்க வரிகளைத் தொகுத்து எழுதி வைத்தவர்களும் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. அவற்றை இயந்திரத்தனமாக எழுதி வைத்துவிட்டார்கள். ஏனென்றால், பிதாகோரஸின் சீடர்களில் யார் ஒருவரும் தங்கள் நிலையிலிருந்து உயர்ந்து மேம்படவில்லை. யார் ஒருவரும் ஞானம் பெற்றிடவில்லை.

கிரேக்க நாட்டினர் அவரை முழுமையாக நிராகரித்துவிட்டார்கள். தங்கள் நாட்டைச் சேர்ந்த ஹெராகிளிட்டஸ், சாக்ரட்டீஸ், பிதாகோரஸ், பிளாட்டினஸ் போன்ற சிறந்த மனிதர்களை அவர்கள் நிராகரித்தார்கள். சாக்ரட்டீஸை அவர்கள் பெரிதும் நிராகரிக்க விரும்பினார்கள். ஆனால் அவர் மிகப்பெரியவராக இருந்துவிட்டார். எளிதாக நிராகரிக்க முடியவில்லை. எனவே அவருக்கு விஷம் வைத்துவிட்டார்கள். பிதாகோரஸ் முற்றிலுமாக ஒதுக்கித் தள்ளப்பட்டார். கௌதம புத்தர், ஏசு போன்ற மற்ற ஞானமடைந்தவர்களிடம் இருந்து திறவுகோலை பிதாகோரஸும் பெற்றிருந்தார்.

அத்துடன் கூடுதலாக இன்னொரு விஷயமும் இருந்தது. அந்த திறவுகோலைக் கண்டறியப் பிதாகோரஸ் உழைத்த அளவுக்கு ஏசுவோ, புத்தரோ, லாவோ போன்றவர்களோ அந்த முயற்சியில் இறங்கவில்லை. அதைக் கண்டறிய அவர் கடுமையாக உழைத்தார். பிதாகோரஸ் நிஜமான தேடல் உணர்வுடன் இருந்தார். அதற்காக எதையும் பணயம் வைக்கத் தயாராக இருந்தார். உலக நிலப்பரப்பு என்று அக்காலத்தில் அறியப்பட்டிருந்த பகுதிகள் அனைத்திற்கும் அவர் பயணம் சென்றார். எல்லா வகையான குருமார்களிடமும் கல்வி பயின்றார். பலவிதமான மடாலயங்களில் சேர்ந்து, அவர்களின் நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டு நடந்தார். அவரே ஒரு அட்டவணை போன்று அமைந்திருந்தார்.

ஓஷோ
(எனக்குப் பிடித்த புத்தகங்கள்
என்ற நூலில் இருந்து)

# நிலைத்து நிற்கும்
## வாழ்க்கைத் தத்துவங்கள்

பாகம் - 2

அத்தியாயம் - 1

கவனத்தில் கொள்ளுங்கள், நான் கூறுவதை மனதில் செதுக்கி வைத்துக் கொள்ளுங்கள்

தவறான அபிப்பிராயங்களுக்கு இடம் தராமல் மற்றவர்களின் அச்சங்களை முன்னுதாரணமாகக் கொள்ளாமல்

இரு கண்களையும், காதுகளையும் மூடிக் கொண்டு விடுங்கள். சுயமாகச் சிந்தியுங்கள்

ஆலோசனை கேளுங்கள், ஆழ்ந்து சிந்தியுங்கள் சுயமாக முடிவு செய்யுங்கள்

முட்டாள்கள் லட்சியமின்றியும், காரணமின்றியும் செயல்பட்டு விட்டுப் போகட்டும்

நீங்கள் நிகழ்காலத்தில் இருந்தபடியே எதிர்காலம் பற்றி யோசிக்க வேண்டும்

இது பற்றி உங்களுக்குத் தெரியவில்லை என்றால்

வெறுமனே காரியமாற்றுவது போல் நடக்காதீர்கள்

**காலமும், பொறுமையும் இருந்தால்**
**சகலமும் அனுகூலமாக நடக்கும் என்பதை**
**நீங்களே உங்களுக்கு அறிவுறுத்திக் கொள்ளுங்கள்**
**உங்கள் ஆரோக்கியத்தை அலட்சியம் செய்யாதீர்கள்**
**நிதானத்துடன் செயல்படுங்கள்**
**உடலுக்கும், மனதுக்கும் தரப்படும் உணவு சீராக**
**அமைந்திருக்கட்டும்**

**அதிக அக்கறை காட்டுதல் அல்லது அக்கறையின்மை என்ற**
**இரண்டையும் தவிர்த்து விடுங்கள்**

**அதீதம் என்பது அதிகம் வசீகரிக்கப்பட்டது போன்றதாகும்**

**பொறாமையும் இவ்வகைப்பட்டதுதான்**

**ஆடம்பரமும் பேராசையும்**
**ஒரேவிதமான பலன்களையே தரும்**

**எல்லா விஷயங்களில் இருந்தும்**
**ஒருவர் நியாயமானதையும், நல்லதையும் மட்டுமே**
**தேர்ந்தெடுக்க வேண்டும்**

பிதாகோரஸ் 'காஸ்மாஸ்' என்ற வார்த்தையை அறிமுகப்படுத்தினார். அதற்கு இயக்க முறை, லயம், ஒருங்கிசைவு என்றெல்லாம் பொருள் உண்டு. வாழ்க்கை குழப்பம் நிறைந்தது அல்ல. அது ஒழுங்குமுறைக்கு உட்பட்டது. மனித குலத்தின் சிந்தனைக்கும், படிப்படியான வளர்ச்சிக்கும் பிதாகோரஸ் பெரும் பங்களிப்புச் செய்திருக்கிறார். ஒழுங்குமுறை குறித்த அவரது கண்ணோட்டம் அனைத்து அறிவியல் ஆய்வுகளுக்கும் பிரதான அடிப்படையாக அமைந்திருக்கிறது.

வாழ்க்கை ஒழுங்குமுறையுடன் கூடியதாக இருந்தால் மட்டுமே அறிவியல் நிலைத்து நின்றிட இயலும். அது குழப்பமான தாக அமையும் பட்சத்தில் எந்த அறிவியலுக்கும் வாய்ப்பு இருக்காது. விதிமுறைகள் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு கணமும் மாறிக் கொண்டே இருந்தால், ஒருநாள் தண்ணீர் நூறு டிகிரி வெப்பத்தில் கொதித்து ஆவியாகும். மறுநாள் அது ஆவியாக ஐநூறு டிகிரி வெப்பம் தேவைப்படும். தண்ணீர் மனம்போனபடி செயல்பட்டால் எவ்வித விதிமுறைகளுக்கும் அது கட்டுப்படாவிட்டால் அங்கே அறிவியல் எவ்விதம் தோன்ற இயலும்?

வாழ்க்கை ஒழுங்குமுறையுடன் அமைந்த விவேகமான பாதையில் செயல்படுவதாக அறிவியல் முன்னரே அனுமானித்துக்

கொண்டுவிட்டது. வாழ்க்கை பைத்தியக்காரத்தனமானதல்ல. வாழ்வை நாம் ஆழமாக ஆராய்ந்தால் விதிமுறைகளைக் கண்டுணர இயலும். அந்த விதிமுறைகளே அனைத்து விந்தைகளுக்கும் ஆதாரங்களாக அமைந்துள்ளன. அது அறிவியல்போலவும், ஆன்மீகம் போலவும் நிஜத்தன்மை கொண்டது. ஆன்மீகம் என்பது உள்முக அறிவியல் அன்றி வேறு எதுவுமல்ல. புறத்தில் உள்ள அறிவியல் வெறுமனே அறிவியல் எனப்படுகிறது. உள்முக அறிவியல் ஆன்மீகம் எனப்படுகிறது. சீரான இயக்க முறை இருந்தால் மட்டுமே அவை இரண்டும் உயிர்ப்புடன் திகழ இயலும்.

அக உலகத்திற்குச் சில விதிமுறைகள் உண்டு. அறிவியல் விதிமுறைகளைக் கண்டுபிடித்தது போலவே அவற்றையும் கண்டறிய முடியும். அறிவியல் மற்றும் ஆன்மீக விதிமுறைகள் எதையும் புதிதாகக் கண்டுபிடித்துவிடவில்லை. அவற்றைக் கண்டு பிடிக்க வேண்டியதில்லை என்பதே உண்மையாகும். நீங்கள் கண்டு பிடித்தது எதுவானாலும் அது நிஜமானதல்ல. கண்டுபிடித்ததாகச் சொல்லப்படுபவை எல்லாம் பொய். உண்மையைக் கண்டுணர வேண்டும். கண்டுபிடிக்கக் கூடாது.

ஐன்ஸ்டீன் குறிப்பிட்ட ஒரு விதியைக் கண்டுணர்ந்தார். பதஞ்சலி ஒரு குறிப்பிட்ட விதியைக் கண்டுணர்ந்தார். நியூட்டன் புவியீர்ப்பைக் கண்டுணர்ந்தார். கிருஷ்ணர் ஈஸ்வர கிருபையைக் கண்டுணர்ந்தார். ஒன்று பூவுலகம் சம்பந்தப்பட்டது. ஒன்று, வானுலகம் சம்பந்தப்பட்டது. ஒன்று உலகியல் தேவைகள் சார்ந்தது. ஒன்று, சக்தி லோகம் சார்ந்தது. ஒன்று, கண்ணால் காணக்கூடியது. ஒன்று, பார்த்தறிய இயலாதது.

இயக்க விதிமுறைகள் என்ற கோணத்தில் இருந்து பார்க்கும் போது அறிவியல் கண்டுபிடிப்பு என்ற பொதுக் கொள்கைக்கு உலகின் முன்னோடியாகப் பிதாகோரஸ் இருக்கிறார். அவரே முதல் அறிவியலாளராக இருந்தார். காரணம் அவர்தான், பிரதான அடித் தளம் அமைத்தவர் ஆவார். அவருடைய இயக்க விதியை நன்கு புரிந்துகொள்ள வேண்டும். அதைப் புரிந்துகொள்ளாது போனால் அவர் எது குறித்துப் பேசுகிறார் என்பதை உங்களால் உணர்ந்தறிய இயலாது போய்விடும்.

உணர்வுபூர்வமான அகஉலகம் சில குறிப்பிட்ட விதிமுறை களைப் பின்பற்றுகிறது. அந்த விதிமுறைகள் மாற்ற முடியாதவை. அவை நிலையானவை. எனவே நான் அவற்றை நிலைத்து நிற்கும் வாழ்க்கைத் தத்துவங்கள் என்று அழைக்கிறேன். அந்த விதிமுறைகள்

காலத்தின் கட்டுப்பாட்டில் இல்லை. காலத்தையே தமது பிடிக்குள் அவை வைத்திருக்கின்றன. காலமும் அந்த விதிமுறைகளைப் பின்பற்றியே இயங்குகிறது. வெளியுலகில் நீங்கள் ஏதாவது செய்ய வேண்டுமானால் வெளிவாழ்க்கை எப்படி நடக்கிறது என்று தெரிந்து கொள்ளவேண்டும். எவ்வாறு நடக்கிறது என்று தெரிந்துகொள்ளாது போனால் நீங்கள் தோல்வியடைய நேரிடும்.

இயற்கை உங்களை அனுசரித்து நடந்து அனுகூலம் செய்யாது. நீங்கள்தான் இயற்கையை அனுசரித்து நடக்கவேண்டும். இயற்கையை அனுசரித்து உங்களை மாற்றிக் கொள்ளும்போதுதான் நீங்கள் அதைத் தோற்கடிக்க முடியும். நீங்கள் வெற்றியாளராகவும் மாறமுடியும். இயற்கைக்கு எதிராகச் செயல்பட்டால் காரியம் நடக்காது. இயற்கையுடன் இணைந்து அதற்கு இசைவாக நடக்க வேண்டும். அக உலகின் சக்ரவர்த்தியாகவும் நீங்கள் திகழமுடியும். விதிகளுக்கு எதிராக நடக்காமல் அந்த விதிகளுக்கு இசைவாக இருந்து செயலாற்ற வேண்டும்.

இந்த இறைமையியல் பார்வைக்கு என்ன காரணம் என்றால், இந்த உலகம் தன்னிச்சைச் செயல்பாடு கொண்டதல்ல. அராஜக மானதல்ல அது. முழுமையான ஒருங்கிசைவும், விதிமுறைகளுடன் கொண்ட நேர்த்தியான ஒழுங்கு முறைகளுக்கு உட்பட்டதாகும். தேடல் எண்ணம் கொண்டவர்களுக்காகப் பிதாகோரஸ் பலவற்றைக் கண்டறிந்தார். தியானத்திற்கேற்ற சுற்றுச்சூழலை இசையால் உருவாக்க முடியும் என்பது பிதாகோரஸ் கண்டறிந்த விஷயங்களில் ஒன்றாகும். மேற்கு நாடுகளுக்கே இதை அறிமுகப்படுத்திய முன்னோடியாக அவர் விளங்கினார். இசை தியானத்துக்கு உதவி கரமாக இருக்கும் என்பதை கிழக்கு நாட்டவர்களாகிய நாம் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே அறிந்து வைத்திருந்தோம். அது ஏன்? இசை உங்களைச் சுற்றி ஒரு இணக்கமான சூழ்நிலையை உருவாக்கு கிறது. உங்களைச் சுற்றியுள்ள அந்த இணக்க நிலை உங்களுக்குள்ளே யும் ஒரு இணக்கத்தைத் தட்டியெழுப்பும். வெளிப்புறம் இணக்க மாக இருந்தால் உட்புறம் இசைவாக மாறத் தொடங்கிவிடும். இதை நீங்கள் பலதடவை பார்த்திருக்கிறீர்கள்.

சந்தைக் கடையில் இருக்கும்போது பெருமளவு இடையூறு உங்களுக்குள் ஏற்படுவதாக உணர்கிறீர்கள். நீங்கள் வீட்டில் இருக்கும்போது கூட்டச் சந்தடியை உணர்ந்தது இல்லை. சந்தைக் கடையில் முழுமையான சூழ்நிலையும் இசைக்கு எதிராக உள்ளது.

அதில் இணக்கம் இல்லை. அது குழப்பம் தருகிறது. வெளிப்புறக் குழப்பம் உட்புறக் குழப்பத்தைத் தூண்டியெழுப்புகிறது.

ஒரு பைத்தியக்கார விடுதிக்குச் சென்று அங்குள்ள பைத்தியங்களுடன் சிலமணிநேரம் தங்கியிருங்கள். உங்களுக்குள் ஏதோ ஒரு கிறுக்குத்தனம் தலையெடுக்கத் துவங்குவதை உணரத் தொடங்குவீர்கள். மருத்துவமனை ஒன்றுக்குச் சென்று அங்குள்ள நோயாளிகளுடன் சிலமணிநேரம் தங்கியிருங்கள். அப்போது உங்களுக்குள் நோய் புகுந்துவிட்டது போன்ற உணர்வை அடைவீர்கள். நீங்கள் நோயாளி அல்ல. மருத்துவமனைக்குள் நுழையும்போது உங்களுக்கு எந்த நோயும் இருக்கவில்லை. அப்படியானால் என்ன நடந்தது? நோய் சார்ந்த அதிர்வலைகள் உங்களைச் சுற்றிலும் இருக்கின்றன. அவை உங்களுக்குள் ஒரு இசைவான சூழலை உருவாக்குகின்றன. ஏனென்றால் அகமும், புறமும் தனித்தனியாகப் பிரித்து வைக்கப் படவில்லை. ஒரு முழுமையின் இரண்டு அங்கங்களாக அவை உள்ளன. அகம் என்பது புறத்தின் அகமாகும். புறம் என்பது அகத்தின் புறமாகும். அவற்றைப் பிரிக்கமுடியாது. எனவே ஒன்று அடுத்ததைப் பாதிக்கிறது.

நீங்கள் தியானத்தை ஆழமாகக் கற்றுணர்ந்தால் உங்களால் சந்தைக் கடைச் சந்தடியிலும் அமர்ந்து தியானிக்க முடியும். உங்களுக்கு இடையூறு ஏற்படாது. காரணம், உங்களிடம் ஒரு சக்தி வாய்ந்த இசை உள்ளே ஒலித்துக் கொண்டிருக்கிறது. அது சக்தி வாய்ந்தது. சந்தைக் கடையும், அதன் இரைச்சலும் அதைப் பாதிப்பதில்லை. அதற்குப் பதிலாக உங்களைச் சுற்றியுள்ள இடமும் மக்களும் உங்களுக்கு இதமும், அமைதியும் அளிப்பதுபோன்ற உணர்வைப் பெற்றிடத் தொடங்குகிறீர்கள்.

ஒருவர் நிஜமான புத்தராக இருந்தால் சந்தைக் கடையிலும் அமர்ந்து தியானிக்க இயலும். அங்கும் அவரால் புத்த புலத்தை சிருஷ்டிக்க முடியும். அந்த புத்த புலத்தில் நுழையும் எவர் ஒருவரும் உடனே தாக்கத்திற்கு ஆட்படுவார். இணக்கநிலை ஏற்படுவதை அவர் உணர்வார். அவருக்குள் எதுவோ நிலைபெறத் தொடங்கும். அவருக்குள் இருந்து எதுவோ வெளிப்படவும் ஆரம்பிக்கிறது. அவர் பலமாகத் தன்னுள் மையம் கொள்கிறார். அதுதான் புத்தர் ஒருவருடன் சேர்ந்திருப்பது எனப்படும் **சத்சங்கத்தின்** ரகசியமாகும்.

அதன் முழுமையான ரகசியம் இதுதான். குருவுடன் சேர்ந்திருப்பது என்பதன் பொருள் அவருடைய அதிர்வலைகள் உங்கள் அகஇசைவைத் தட்டியெழுப்ப அனுமதிப்பதாகும்; அந்த அகஇசைவு

உள்ளே ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பதால் உங்களுக்கு அது பற்றிய எந்த விழிப்புணர்வும் இல்லை. ஆனால் சாதாரணமாக நீங்கள் கடை வீதிக்குச் சென்றுவிட்டுத் திரும்பி வரும்போது களைப்பும், சோர்வும் ஏற்படுகின்றன. ஏதோ ஒன்றை இழந்துவிட்டதுபோல் இருக்கும். ஓய்வுகொள்ள விருப்பம் ஏற்படும். இரவு நன்றாக ஓய்வு எடுத்துக் கொண்ட பின்னர் மீண்டும் சந்தைக் கடைக்குச் செல்ல முடியும்.

இசை என்பது இசைவானது. ஓசைக்கும் மௌனத்திற்கும் இடையே அது ஒருங்கிணைப்பை ஏற்படுத்துகிறது. ஒலி இவ்வுலகம் சார்ந்தது. மௌனம் இவ்வுலகிற்கு அப்பாற்பட்டது. கடவுளைத் தரிசிக்க வைக்கும் புனிதமான, விந்தைத் திறன் இசைக்கு உண்டு என்று பிதாகோரஸ் நம்பினார். எனவே இசையை Numinous என்ற சொல்லால் அழைத்தார். அந்த வார்த்தை Numen என்ற கிரேக்கச் சொல்லின் வேரிலிருந்து தோன்றியதாகும். அது மிகவும் முக்கியத்துவம் நிறைந்த வார்த்தை. நிறைய அர்த்தங்களைத் தனது கர்ப்பத்தில் கொண்டிருக்கிறது. Numen என்றால் வாகனத்தின் அங்கீகாரத் தலையசைப்பு என்று பொருள்.

அவ்விதமான ஒரு ஒருங்கிசைவைக் கொண்டதாக இசை அமைந்திருக்கிறது. உலக வாழ்க்கையும் உங்களைப் பார்த்து அங்கீகரிக்கும். ஆம் என்று உங்களிடம் தெரிவிக்கத் துவங்கிவிடும். இசை கடவுளை தரிசிக்க வைக்கும் திறன் பெற்றது. சட்டென்று வானம் உங்களை ஸ்பரிசிக்கும். வாகனத்தால் நீங்கள் வெற்றி கொள்ளப்படுவீர்கள். வாகனம் உங்களிடம் நெருங்கி வரும்போது, வாகனத்தின் காலடியோசையைக் கேட்கமுடியும். உங்களுக்குள் இருக்கும் ஏதோ ஒன்று அந்த சவாலை எதிர்கொள்கிறது. மௌனமாக, நிதானமாக, பதட்டமின்றி அமைதியாகச் சக்தியைச் சேகரித்துக் கொள்கிறது.

பிரதானமான பிதாகோரஸின் மடாலயத்தில் இசை பெரிய ஒரு அம்சமாக இருந்து வந்தது. இங்கே எனது முயற்சியும் அது போன்றது தான். மேன்மை நிறைந்த இசையை நான் சிருஷ்டிக்க வேண்டும். அப்போது சிறப்பான தியானநிலை சாத்தியப்படும். இசை என்பது வெளிப்புறமாக நடக்கும் தியானம். தியானம் உள்ளே ஒலிக்கும் இசையாகும். அவை இரண்டும் ஒன்றுசேர்ந்து கரம் கோர்த்துக் கொள்கின்றன. ஒன்றையொன்று தழுவிக் கொள்கின்றன.

உங்களைச் சுற்றி இசை சூழ்ந்து நிற்கும்போது, இசை உங்களை வெல்லும்போது, வெள்ளமாய் பிரவகிக்கும்போது, தியான நிலை உருவாகி அது வளர்ச்சி அடையத் துவங்குகிறது. அது ஒரு அற்புதமான அனுபவமாக இருக்கும். தியானமும், இசையும்

சந்திக்கும் சமயத்தில் பூமியும், வாழ்வும் சந்தித்துக் கொள்கின்றன. உடலும் உணர்வும் சந்தித்துக் கொள்கின்றன. அதுவே இறைமை யியல் இணைப்பாகும்.

கிழக்கு நாடுகளில் நாம் அதை யோகா என்று கூறுகிறோம். யோகா என்றால் இணைதல் என்றுதான் அர்த்தம். மாபெரும் தவஞானி வியாசர் யோகா என்பதற்கு சிறந்ததும், சுருக்கமானதுமான ஒரு விளக்கத்தைத் தருகிறார் சமாதிநிலையே யோகம் ஆகும் என்கிறார். பொதுவாக, சமாதியை பேரின்பநிலை என்று கூறு கிறோம். அது சரியல்ல. பேரின்ப நிலை என்பது விலகித் தள்ளி நிற்பது என்று பொதுவாகச் சொல்லப்படுகிறது. சமாதி என்பது அதனுள் தங்கியிருத்தல் ஆகும். யோக என்பது உள்ளே தங்கி இருத்தல். எதுவும் காரியமாற்றாமல் அமைதியாக இருத்தல். அதுவே தியான நிலையாகும்.

வெளியில் இருந்து ஏதாவது ஒன்று உதவி செய்யமுடியு மானால் அதில் சிறிதளவு இசை கலந்திருக்க வேண்டும். அப்போது தான் அது உதவி செய்திட இயலும். குன்றுகளில் இருந்து ஓடிவரும் சிற்றோடை நீர் தியானத்திற்கு உதவிட முடியும். காரணம், அதற் கென்று சுயமான ஒரு இசை இருக்கிறது. ஆர்ப்பரிக்கும் கடல் அலைகளாலும் உதவ முடியும். ஏனெனில் அதற்கென்று சுயமாக இசை இருக்கிறது. காலை நேரத்தில் பறவைகளின் பாட்டொலியும் உதவ முடியும். அமைதியான இரவின் சிள்வண்டுகளின் ஓசை அல்லது மழைநீர் கூரைமீது விழும் சப்தம்போன்று இசை யெழுப்பும் எதுவும் தியானத்தையும் உருவாக்க இயலும்.

பிதாகோரஸின் மடாலயம் இசை, பாடல்கள், நடனம், பெரும் கொண்டாட்டங்கள் நிறைந்த மடாலயமாக இருந்தது. அம்மாதிரி யான ஒரு மடாலயத்தில் நீங்கள் மீண்டும் வாழ்கிறீர்கள்.

இசை கீழ்நோக்கியும் இழுத்துச் செல்லும். மேலே உயர்த்தவும் செய்யும் என்பதை மக்கள் மறந்துவிட்டார்கள். நவீன இசை உங்களைக் கீழ்நோக்கி இழுத்துச் செல்கிறது. உங்கள் உடலின் தாழ்ந்த காம மையங்களுடன் அது சம்பந்தப்பட்டிருக்கிறது. அது பாலுணர்வைத் தருகிறது. காமவெறித் தூண்டலை ஏற்படுத்துகிறது. எல்லா உயரங்களையும் அது தொலைத்துவிட்டது. ஜாஸ் அல்லது பாப் இசை போன்றவை அசிங்கமானவை. அது வெறும் சப்தம் தான். வேறு எதுவுமில்லை. ஓசை உங்களை கீழே ஆழ்த்துகிறது. அது ஒருவித போதையாகும். அது செவிட்டுத்தனத்தைத் தருகிறது. இழப்பு உணர்வை ஏற்படுத்துகிறது. ஏதோ நிகழ்வதாக எண்ணு

கிறீர்கள். நிலம்நோக்கி நீங்கள் மேலும்மேலும் இழுக்கப் படுகிறீர்கள். உங்களுக்குள் உள்ள மிருகத்தை நோக்கி மேலும் நெருங்கிச் செல்கிறீர்கள். இதுதான் நடக்கிறது.

பாரம்பரிய இசையான சாஸ்திரிய சங்கீதம் முற்றிலும் மாறு பட்ட தாக்கத்தை ஏற்படுத்துகிறது உங்களை மேல்நோக்கி உந்தித் தள்ளுகிறது. புவியீர்ப்பிலிருந்து மேலே கொண்டுசெல்கிறது. அது வானில் பறக்கும் மந்திர வித்தையின் ஒரு அங்கமாகும். நீங்கள் மேலே மேலே மிதந்து செல்லத் துவங்குகிறீர்கள். அதில் நிறைய தியானநிலை கலந்துள்ளது. அது உயர்ந்த மையங்களுக்கு உங்களைக் கொண்டு சேர்க்கிறது.

நிஜமான இசை உங்களுடைய ஏழாவது மையமான சஹஸ்ர ஹாரத்தில் சில நிகழ்வுகளை ஏற்படுத்துகிறது. வெகு அரிதாக ஏதாவது ஒரு விவேகி அந்த இடத்தை அடைந்து, அவ்விதமான இசையை உருவாக்குகிறார். உங்கள் இதய மையம் தூண்டப்பட்டால் அதுவே போதும். உங்கள் இதயமையம் நடனமிட்டுச் சுற்றிச் சுழன்றால் நீங்கள் தியானத்திற்கு வெகு அருகில் சென்று விடு கிறீர்கள்.

மௌனம், ஓசை ஆகியவற்றின் சந்திப்பாக இசை இருப்பது போல, பிதாகோரஸின் தத்துவம் ஆன்மீகம், அறிவியல் ஆகிய வற்றின் சந்திப்புப் புள்ளியாக இருக்கிறது. சிறப்பான ஒருங் கிணைப்பே தத்துவம் என்பது அவரது கருத்தாகும். அவருக்கு நிகரான ஒருங்கிணைப்பாளர் வேறு யாரும் கிடையாது. எப்போதும் துருவ எதிர்முனைகளை ஒன்றுசேர்த்து, அவை ஒன்றுக்கொன்று அனுசரணையாக இருக்கும்படி செய்தார். அழிக்கும் எதிர்முனை களில் விளையாடிய மாபெரும் கலைஞர் அவர். எப்போதெல்லாம் அவர் எதிர்முனைகளைப் பார்க்கிறாரோ, உடனே அவற்றை ஒன்றிணைத்துப் பாலமிடுவதற்கான விஷயத்தைத் தேடுவதில் இறங்கிவிடுவார். அந்த இணைப்புப் பாலம் போடுதல் முக்கிய மான ஒரு பணியாகும்.

நூற்றாண்டுக் காலமாக அறிவியலும், ஆன்மீகமும் தம்முள் சச்சரவு செய்து கொண்டிருக்கின்றன. காரணம், அவை பிதாகோரஸின் கூற்றைக் கவனிப்பதில்லை. அப்படிச் செய்திருந்தால் இந்த பிரிவினை ஏற்பட்டிருக்காது. இந்த பிரிவினை மோசமான பெருந் துன்பங்களில் ஒன்று என்று நிரூபணமாகியிருக்கிறது. ஆன்மீகமும், அறிவியலும் எதிரிகள் போல் ஒருவருடன் ஒருவர் சண்டையிட்டுக் கொள்கிறார்கள். நூற்றாண்டுகளாகவே அறிவியலானது வளர்ச்சியும்,

மேன்மையும் அடையத் தேவாலயங்கள் அனுமதிக்கவில்லை. கலிலியோ, கெப்ளர் போன்றவர்கள் தண்டிக்கப்பட்டார்கள்.

அறிவியலைக் கண்டு ஆன்மீகம் அச்சம் கொள்கிறது. இது முட்டாள்தனமானது. ஏனென்றால், அறிவியலால் மட்டுமே ஆன்மீகத்துக்கு உதவி செய்திட இயலும். உள்முக அறிவியலுக்கான களத்தை அறிவியலால் மட்டுமே தயார் செய்ய இயலும். தேவாலயத்தைச் சேர்ந்த மனிதர்களும், அறிவியலுக்கு எதிரான கருத்துடைய போப்பாண்டவர்களும் முட்டாள்தனமாகச் செயல்படுகிறார்கள். தாங்கள் என்ன செய்கிறோம் என்பதை அவர்கள் அறியவில்லை.

உண்மையை ஒருபோதும் நசுக்கிவிட முடியாது. யாரும் உண்மையைச் சிலுவையில் அறைந்துவிட இயலாது.

மிக மெதுவாக அறிவியல் காலூன்றி பலம் பெற்றுவருகிறது. அது பலம் பெற்று வருவது நல்ல காரியமாகும். ஆனால் ஆன்மீகம் போலவே அழிக்கும் குணம் கொண்ட பாதையிலேயே அறிவியலும் செல்லத் தொடங்கிவிட்டது. பழிவாங்கும் செயலாக அது மாறுகிறது. முன்நூறு ஆண்டுகளாக பிரதான அறிவியல் நீரோட்டச் சிந்தனையாளர் ஆன்மீகத்தை அழித்துவிடக் கடுமையாக முயற்சி செய்து வருகிறார்கள். கடவுள் இறந்துவிட்டதாக அவர்கள் பிரகடனப் படுத்துகிறார்கள். ஆன்மா என்று ஒன்று இல்லை என்று அவர்கள் தெரிவிக்கிறார்கள். மரணத்துக்குப் பிந்தைய ஒரு வாழ்க்கை கிடையாது என்று அறிவிக்கிறார்கள். மனிதனுக்கு அகஉயிர்ப்பு என்ற ஒன்று இல்லை தெரிவிக்கிறார்கள். அவர்கள் மனிதனை ஒரு இயந்திர நிலைக்குக் கொண்டுவந்து தரம் குறைத்துவிட்டார்கள்.

மனிதன் எல்லாச் சிறப்பையும் இழந்துவிட்டான். அர்த்தமுள்ளதாக இனி எதையும் உணர முடியாது. காரணம் அறிவியலின் முட்டாள்தனமான அணுகுமுறை, அறிவியலின் பழிவாங்கும் அணுகுமுறை போன்றவையே ஆகும். அதனால் உலகிலிருந்து எல்லா அர்த்தங்களும் மறைந்துவிட்டன. மனிதர்கள் வெறுமனே இழுத்துச் செல்லப்படுகிறார்கள். கவித்துவத்திற்கு வழியில்லை. அதற்கான வாய்ப்புக்கும் வழியில்லை. ஏனெனில், கடவுள் இல்லாது போனால், உலகம் ஒழுங்குமுறையுடன் திகழஇயலாது. அது வெறும் இயந்திரத்தனமான செயல்பாடாகவே அமையும். அதன் பின்புலத்தில் உயிரோட்டம் இருக்காது. கடவுள் இல்லை என்றால் உலகில் பரிவு இருக்காது. அது உங்கள் தாயாக இருந்திட இயலாது. இரண்டுங்கெட்டானாக இருந்துவிட நேரிடும். நீங்கள் வாழ்கிறீர்களா,

சாகிறீர்களா என்பதுபற்றிய அக்கறை இயற்கைக்கு இல்லாமல் போய்விடும்.

மனிதன் இயற்கைமீது அலட்சியம்கொள்ளும் ஒரு எண்ணத்தை அறிவியல் உருவாக்கிவைத்துவிட்டது. அது ஆபத்தானதாகும். ஏனெனில் மனிதன் மிகவும் சிறியவன். இயற்கை பரந்து விரிந்து பிரும்மாண்டமானதாக இருக்கிறது. அந்த பரந்துவிரிந்த இயற்கை உங்களை அலட்சியப்படுத்தினால் நீங்கள் எப்படி முக்கியத்துவமுள்ளவராக, அர்த்தமுள்ளவராக இருப்பதாக உணர முடியும்? நீங்கள் ஒரு அந்நியராக, ஒதுங்கி நிற்பவராக, வாழ்வு ஒரு தற்செயல் நிகழ்வுபோல உணர்வீர்கள்.

அறிவியல் மிகவும் முக்கியத்துவம் கொண்ட ஒன்றாக இருக்கிறது. தத்துவவாதிகளும் அறிவியல்பூர்வமான வழிகளில் சிந்திக்கத் தொடங்கிவிட்டார்கள். அது பொருத்தமில்லாத பாதையாகும். முழுமை, ஒருமைப்பாடு என்ற சிறந்த கோட்பாட்டை தத்துவவாதிகளும் தவறவிட்டு விட்டார்கள்.

பிதாகோரஸ், ஹெறாக்ளிட்டிஸ், புத்தர், சாக்ரட்டீஸ், லாவோ, ஜோராதஸ்திரர் போன்றவர்களுடன் ஒப்பிடும் அளவுக்கு நவீன தத்துவவாதிகள் இல்லை. நவீன தத்துவவாதி மிகவும் சாதாரணமானவர். அவர் ஒரு தத்துவப் பேராசிரியர் என்ற நிலையைவிட ஒன்றும் மேம்பட்டவர் அல்ல. தத்துவம் என்பது அவரது உயிரில் கலந்த ஆனந்தமாக இருக்கவில்லை. அது பாடலாக, இசையாக அமைந்திருக்கவில்லை. அவர் செய்வதெல்லாம் வெறும் மொழி ஆய்வுதான். நவீன தத்துவவாதி அசிங்கமான செயல்பாடு கொண்டவர். நவீன தத்துவவாதியிடம் வாழ்க்கைத் தத்துவம் இல்லை. கடைசியாக அது தர்க்கரீதியான கோட்பாட்டை கூர்மைப்படுத்திக் கொள்ளும் ஒரு முயற்சியாகவே அது இருந்துகொண்டிருக்கிறது. அதை அவர் எதற்காகச் செய்கிறார்? அவரது முழு முயற்சியும் பயனற்றதாகத் தெரிகிறது. நவீன தத்துவம் வெறுமனே அறிவியலின் நிழலாக மாறிவிடுகிறது. தனது சிறப்பை அது இழந்துவிடுகிறது. இனி அது அறிவியலின் அறிவியலாக இருக்கப் போவதில்லை. அது ராணியாக இருக்கப் போவதில்லை.

பிதாகோரஸிடம் இருந்தபோது தத்துவம் புரிதலின் உச்சமாகவும், உண்மையை நோக்கிச் செல்லும் சிறந்த வானவெளிப் பயணமாகவும் அமைந்திருந்தது. அதன் ஒரு சிறகு அறிவியலாகவும், இன்னொரு சிறகு ஆன்மீகமாகவும் இருந்து வந்தன. அவை தத்துவ

வாதிகளின் அற்புதமான நாட்களாக இருந்து வந்தன. நிஜமான சிறந்த தத்துவவாதிகளை உலகம் கண்டுணர்ந்தது.

சீனாவில் கன்ஃபூஸியஸ், லாவோ, சுவாங் ஜு, மென்ஸியஸ், லிச் ஜு போன்ற எல்லோரும் நெருக்கமாகச் சமகாலத்தில் வாழ்ந் தவர்கள். இந்தியாவில் கௌதமபுத்தர், மகாவீரர், பிரகுதா காத்யா யனா, சஞ்சய் வைலதிபுட்டா, மகாலி கோஷல், பூர்ண காஷ்யப் போன்ற பலர் இருந்தார்கள். கிரேக்கத்தில் பிதாகோரஸ், ஹெரா கிளிட்டஸ், சாக்ரட்டீஸ், பிளேட்டோ, அரிஸ்டாட்டில் என்று அந்த சங்கிலித் தொடர் நீண்டுகொண்டே சென்றது. ஈரானில் ஜோரா திஸ்திரர் இருந்தார். இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன்னர் உலகம் தத்துவத்தில் உன்னத நிலையில் உயர்ந்திருந்தவர்களை அறிந்துகொண்டது.

தற்சமயம் தத்துவவாதிக்குப் பதிலாக நீங்கள் தத்துவம் கற்றுத் தரும் எளிய பேராசிரியர் ஒருவரையே கண்டறிந்திருக்கிறீர்கள்.

நான் கேட்டறிந்த ஒரு கதையைச் சொல்கிறேன்.

நரமாமிசம் தின்னும் ஒரு தேசத்தின் அரசர் சுற்றுலாப் பயணி களுக்காக தனது நாட்டு எல்லைகளைத் திறந்து வைக்க முடிவு செய்தார். பழங்குடி மக்களின்மீது ஆர்வம்கொண்டவராக இருந்த உலகப் புகழ்பெற்ற தத்துவவாதி ஒருவர் இந்த பின்தங்கிய மக்கள் பகுதிக்கு வந்து தனது ஆய்வைத் தொடர நினைத்தார்.

அந்த தத்துவவாதி நரமாமிசம் தின்போரின் தேசத்துக்கு வந்த பிறகு, தனிப்பட்ட ஒரு சுற்றுலாவுக்கும், நரமாமிசம் தின்னும் மக்களின் அரசரை நேரில் சந்தித்துப் பேசவும் விருப்பம் கொண்டார். அவற்றுக்கு அமைதி கிடைத்ததுடன்மட்டுமின்றி, அந்த அரசர் நாட்டுக்கு வந்துள்ள முக்கியப் பிரமுகரின் அபிலாஷைகள் அனைத் தையும் நிறைவு செய்திடவும் தீர்மானித்தார். அவர் பார்க்க வேண்டிய முக்கிய இடங்கள் பற்றியும் கூறினார். தத்துவவாதி அவற்றைத் தனது மஞ்சள் குறிப்பேட்டில் எழுதிக் கொண்டார். அன்றைய தினத்தின் மாலைப் பொழுதில் அரசர் தனது மக்களின் பிரத்தியேகமான, புனிதமான கட்டிடம் ஒன்றைத் தத்துவவாதிக்குக் காட்ட விரும் பினார். அது ஒரு நரமாமிசச் சிறப்பு அங்காடி என்றும் அவர் அறிவித்தார். பளபளக்கும் அந்த நவீன மோஸ்தர் கட்டிடத்தில் உலகின் எல்லா பகுதியைச் சேர்ந்த மனிதர்களின் உடல் உறுப்பு களும் சேகரித்து வைக்கப்பட்டிருந்தன.

தத்துவவாதி ஆர்வத்துடன் அதைப் பார்க்க ஒப்புக்கொண்டார். விரைவில் அவர்கள் அந்தக் கட்டிடத்தை அடைந்து அதனுள் நுழைந் தார்கள். வரிசை வரிசையாக பளபளக்கும் கண்ணாடிப் பெட்டிகளில் பிரகாசமான விளக்கொளியில் பொருட்கள் பிளாஸ்டிக்கில் பொதிந்து வைக்கப்பட்டிருந்தன. விலைகளைக் காட்டும் அட்டைகள் தெளிவாகத் தென்பட்டன. மனிதக் கால்கள், புஜங்கள், கைகள், காதுகள் மற்றும் இன்னபிற இத்யாதி உறுப்புகளும் தென்பட்டன. தத்துவவாதி அந்த சந்தையைச் சுற்றிப் பார்த்தபோது கண்டறிந்த வற்றைத் தனது குறிப்பேட்டில் ஆர்வமாக எழுதிக் கொண்டார்.

அதிக விலையுள்ள பொருட்கள் இருக்கும் இடம் என்று நரமாமிச தேசத்து அரசர் கூறிய குறிப்பிட்ட விற்பனைப் பிரிவைக் கடைசியாக அவர்கள் சென்றடைந்தனர். அது மனிதமூளைகள் விற்பனை செய்யப்படும் பகுதியாகும். காட்சிக்கு வைக்கப்பட்டிருந்த பொருட்களும் இடையே இருந்த நடைபாதை வழியே அவர்கள் மெதுவாக நடந்து சென்றார்கள். தத்துவவாதி அங்கே காணப்பட்ட விலைக்குறிப்புகளைப் பார்த்தார். புத்துலகம் கண்டறிந்த ஆய்வாளர் களின் மூளை 'ஒரு பவுண்ட்டின் விலை பத்து செண்ட்'. மதப் பிரசார கர்களின் மூளை 'ஒரு பவுண்ட்டின் விலை இருபது செண்ட்'. வியாபாரிகளின் மூளை, 'ஒரு பவுண்ட்டின் விலை ஒரு டாலர்'. படை நடத்தும் சேனாதிபதிகளின் மூளை, 'ஒரு பவுண்ட்டின் விலை பத்து டாலர்கள்' என்று எழுதப்பட்டிருந்தன. கடைசியாக இருந்த பொருளின் விலை தெளிவாகவும், பெரியதாகவும் எழுதப் பட்டிருந்தது. தத்துவவாதியின் மூளை, 'ஒரு பவுண்ட்டின் விலை ஐம்பது டாலர்கள்'.

தத்துவவாதி உடனே மகிழ்ந்து போனார். தன்னைக் கட்டுப் படுத்திக் கொள்ளமுடியாத அவர் நரமாமிச தேசத்து அரசர் பக்கம் கம்பீரமாகத் திரும்பினார். அந்த சிறப்பு அங்காடியில் மற்ற பொருட் களைக் காட்டிலும் தத்துவவாதிகளின் மூளைக்கு அதிக விலை குறிப்பிடக் காரணம் என்ன என்று கேட்டார்.

அதற்கு நரமாமிச தேசத்து அரசர், "தத்துவவாதிகளின் ஒரு பவுண்ட் மூளையைப் பெறுவதற்கு நாங்கள் எத்தனை பேரைக் கொல்ல வேண்டியிருக்கிறது தெரியுமா?" என்று வினவினார்.

நவீன தத்துவங்களும், நவீன தத்துவவாதிகளும் மதிப்பற்ற தகுதிக் குறைவானவை. தத்துவங்கள் தங்கள் உயர்ந்த நிலையை இழந்துவிட்டன. உயர்ந்து மேலே செல்லப் போவதில்லை.

அறிவியல், ஆன்மீகம் எதுவாக இருந்தாலும் இந்த நிலைதான். இன்று அவற்றின் செயல்பாடுகள் குழப்பத்துடன் உள்ளன.

பிதாகோரஸைப் பொறுத்தவரையில் அறிவியல் என்பது புற உலகில் உண்மையைத் தேடுவதாகவும் அமைந்திருந்தது. தத்துவம் என்பது சத்தியத்தின் தரிசனத்தைத் தேடுவதாக இருந்தது. எனவே அறிவியலும், ஆன்மீகமும் இரண்டு சிறகுகள் அல்லது இரண்டு கரங்கள் போன்றோ அமைந்திருந்தன. அவை இரண்டும் எதிரெதிரானவை அல்ல. ஒன்றுக்கொன்று அனுசரணையானவை. அதை நாம் மீண்டும் நினைவில் கொண்டால் இந்த உலகம் நலம் பெறும்.

தேவாலயமும், கோவிலும், ஆய்வுக்கூடமும் எதிரிகளாக இருக்க வேண்டியதில்லை. ஒருவித நட்புடன் அவை இணைந்திருக்க இயலும். அதன் பின்னர் மனிதன் செழுமை பெற்றிட இயலும். அவன் அறிவியலைத் தேர்வு செய்தால் வெளியே செல்வந்தனாகலாம். ஆனால் உள்ளே மேலும் மேலும் ஏழையாகிவிடுவான். ஆன்மீகத்தைத் தேர்ந்தெடுத்தால் உள்ளே செல்வந்தனாகலாம். ஆனால் வெளியே மேலும் ஏழையாகிவிடுவான். அந்த இரண்டுமே அசிங்கமான காட்சிகளாகிவிடும்.

மேற்கு நாடு அறிவியலைத் தேர்வு செய்தது. உலகின் செல்வங்கள் எல்லாவற்றையும் அது பெற்றது. ஆனால் மனிதன் முழுமையாகத் தொலைந்து போனான். வாழ்க்கை அர்த்தமற்றது என்ற உணர்வு தோன்றி தற்கொலை செய்துகொள்ளும் எண்ணத்தை ஏற்படுத்திக்கொள்கிறான். மனிதன் உள்ளே அகத்தைப் பார்க்கும் போது வெறுமையை, உள்ளீடற்ற தன்மையைக் காண்கிறான். எதுவும் தென்படுவதில்லை. மேற்கு நாட்டினருக்கு அகஉலகம் வறுமையானதாக இருக்கிறது.

கிழக்கு நாட்டில் இதற்கு எதிரானது நிகழ்கிறது. மக்களுக்கு அறிவியலுக்குப் பதிலாக ஆன்மீகத்தைத் தேர்வுசெய்கிறார்கள். அவர்களின் அகஉலகம் அமைதி, நிதானம் மற்றும் செழுமை நிறைந்ததாக இருக்கிறது. ஆனால் புறஉலகில் பட்டினி கிடந்து கொண்டிருக்கிறார்கள். செத்துக்கொண்டிருக்கிறார்கள். உணவு இல்லை, நோய்தீர்க்கும் மருந்துகள் இல்லை. மனித வாழ்க்கைக்குத் தேவையான வசதிகள் இல்லை. கிட்டத்தட்ட மிருகங்கள் போலவோ, அல்லது அதைவிட மோசமாகவோ வாழ்கிறார்கள்.

இது பிதாகோரஸின் சொல்லைக் கேட்காது போனதன் பின் விளைவாகும். பிதாகோரஸ் சொன்னதைக் கேட்டு, அதைப் புரிந்து

கொண்டிருந்தால், உலகின் மனித இனத்தின் வரலாறே மாறிப் போயிருக்கும். மேற்கு, மேற்காகவும், கிழக்கு, கிழக்காகவும் இருந் திருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்காது. யாரும் லௌகீக வாதியாகவும் இருக்கவேண்டியிருந்திருக்காது. ஆன்மீகவாதி யாகவும் இருக்கவேண்டியிருந்திருக்காது. உடலும் மனமும் இணையும்போது அவை இரண்டும் உங்களிடம் ஒன்றுசேர்ந்து அமைந்து இருக்கும். ஒவ்வொருவரிடமும் அவ்விதமே அமைந் திருக்கும். அதன் பிறகு லௌகீகமும், ஆன்மீகமும் ஏன் ஒன்று சேர்ந்து இருக்க முடியாது? அவை சேர்ந்திருக்க இயலும்!

மனிதன் ஆன்மீகவாதியாகவும் இருக்க வேண்டும், லௌகீக வாதியாகவும் இருக்க வேண்டும். எது வேண்டும் என்று தேர்வு செய்ய வேண்டிய தேவையில்லை. இரண்டு உலகங்களையும் நீங்கள் பெற்றிடவேண்டும். இரண்டு உலகங்களிலும் நீங்கள் இருந்திட வேண்டும். அது உங்கள் பிறப்புரிமை.

இந்த இணைப்பு பற்றி நான் உங்களுக்குக் கற்றுக் கொடுக் கிறேன். மற்ற லௌகீக வாதிகள் போலவே நீங்களும் லௌகீக வாதியாக இருக்கவேண்டும். மற்ற ஆன்மீகவாதிகள் போலவே நீங்களும் ஒரு ஆன்மீகவாதியாக இருக்கவேண்டும். இரு தரப் பினரும் உங்கள் மீது சினம் கொள்வார்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்களிடம் உள்ள லௌகீகத்தை ஒரு ஆன்மீகவாதி யால் மன்னித்து ஏற்றுக்கொள்ள இயலாது. உங்கள் ஆன்மீகத்தை ஒரு லௌகீகவாதியால் ஏற்றுக்கொள்ள முடியாது.

அதனால்தான் ஜனங்கள் எனக்கு எதிராக இருக்கிறார்கள். எல்லாவிதமான மக்களும் எதிராக இருக்கிறார்கள்! ஆன்மீகம் சார்ந்த மக்கள் எனக்கு எதிராக இருக்கிறார்கள். காரணம் என்னுடைய லௌகீக அணுகுமுறைகளை அவர்களால் ஏற்றுக்கொள்ள இயல வில்லை. லௌகீகவாதிகளும் எனக்கு எதிராக இருக்கிறார்கள். எனது ஆன்மீக அணுகுமுறையை அவர்களால் அங்கீகரிக்க முடிய வில்லை. இந்த இரண்டு பிரிவுகளையும் ஒன்றாக நீங்கள் மேற் கொள்ள வேண்டும் என்று நான் உங்களுக்கு நினைவூட்டுகிறேன். இது பூமியில் ஒரு புதிய சமுதாயத்தையும், மனித இனத்தையும் கொண்டுவந்து சேர்க்கும். அது மிகவும் தேவையான ஒன்றாகும். கட்டாயம் தேவையான ஒன்றாகும். புதிய மனிதனும், புதிய சமுதாயமும், புதிய கோட்பாடும் தேவைப்படுகின்றன.

குறிப்பிட்ட ஒன்றை மட்டும் தேர்வு செய்யத் தேவையில்லை. இயற்கை உங்களுக்கு ஒரு உடலைத் தந்திருக்கிறது. நீங்கள் லௌகீக

வாதியாக இருக்கவேண்டும் என்பது அதன் பொருளாகும். உங்களுக்கு இயற்கை ஒரு ஆன்மாவையும் வழங்கியிருக்கிறது. நீங்கள் ஆன்மீகவாதியாக இருக்க வேண்டும் என்பது அதன் அர்த்த மாகும். இந்த இரண்டின் இணைப்பாக நீங்கள் இருக்கவேண்டும். நீங்கள் ஒரு யோகியாக, ஒன்றிணைந்தவராக இருத்தல்வேண்டும். உங்கள் உடலும் மனமும் சமநிலைப்படும் சமயத்தில் உங்கள் லௌகீகமும், ஆன்மீகமும் சமநிலைப்பட்டுவிடும். அந்த லயத்தில் நீங்கள் அந்த உயர்ந்த இசை நிலையை எட்டுவது சாத்தியப்படும். அந்த இசையே தியானமாகும். அந்த இசையே சமாதியாகும்.

சூத்திரங்கள்... தூய்மைப்படுத்துதல் தொடர்கிறது.

**கவனத்தில் கொள்ளுங்கள், நான் கூறுவதை மனதில்**
**செதுக்கி வைத்துக் கொள்ளுங்கள்**
**தவறான அபிப்பிராயங்களுக்கு இடம் தராமல்**
**மற்றவர்களின் அச்சங்களை முன்னுதாரணமாக்கிக் கொள்ளாமல்**
**சுயமாகச் சிந்தியுங்கள்.**

கவனத்தில் கொள்ளுங்கள் என்கிறார் பிதாகோரஸ். காலங் காலமாகவே குருவாக இருப்பவர்கள், கவனத்தில் கொள்ளுங்கள் என்று எப்போதும் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறார்கள். பெரும் பாலும் நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்றால், கேட்கிறீர்கள். ஆனால் கவனத்தில் இருத்திக் கொள்வதில்லை. கேட்டல், கவனித்தல் என்ற இந்த இரண்டு சொற்களுக்கும் இடையே மிகப்பெரிய அளவில் வித்தியாசம் இருக்கிறது.

கேட்டல் என்பது மிகவும் மேலோட்டமானது. உங்களுக்குக் காதுகள் இருப்பதால் உங்களால் கேட்டிட இயலும், அவ்வளவுதான். காதுகள் உள்ள யாராலும் கேட்க முடியும். அது ஒரு சாதாரண நிகழ்வு. கவனத்தில் கொள்ளல் என்பது வித்தியாசமான குணாதிசயம் கொண்டதாகும். எந்த ஒன்றையும் நீங்கள் அக்கறையுடன் கேட்டால் அது கவனத்தில் கொள்ளல் என்றாகிறது. கேட்டல் என்பது உடல் சார்ந்த ஒரு செயல். உங்கள் மனமும் அதில் அக்கறை கொள்ளும் போது அது கவனித்தல் என்று மாறுகிறது.

புரிந்து கொள்வதற்காக கவனித்துக் கேட்கிறோம். உண்மைக்கு சான்றாதாரங்கள் தேவையில்லை. உண்மை சுயச்சான்று உள்ள தாகும். அதற்கு கவனித்து உணரும் தகுதி இருந்தால் போதும்.

மாணவர்கள் கேட்கிறார்கள். சீடர்கள் கவனத்தில் கொள் கிறார்கள். ஆர்வம் உள்ளவர்கள் கேட்கிறார்கள். காரணம், அவர்கள்

ஆசை அறிவுபூர்வமானது. தேடல் கொண்டவராக இருக்கும் ஒருவரின் விருப்பம் ஆர்வம் மட்டுமல்ல. அவரது விருப்பம், வாழ்க்கை மற்றும் மரணம் பற்றிய கேள்வியாகும். எனவே, அவர் கவனிக்கிறார். அனைத்தையும் பணயம் வைக்கும் நிலையில் இருப்பதால், நீங்கள் எப்படி கவனத்தில் கொள்ளாமல் இருக்க இயலும்?

கவனம் கொள்ளல் என்பது உங்கள் உடலும், மனமும் ஆழமான ஒருங்கிணைப்பில் செயல்படும் ஒரு காரியமாகும். உங்கள் உடம்பெல்லாம் காதுகளாகி விடுகின்றன. உங்கள் கால்கள், கைகள், உடல் செல்கள், உடம்பினுள் இருக்கும் முழு உயிரும் சிரத்தை கொள்கின்றன. மிகவும் முக்கியத்துவம் கொண்ட ஏதோ ஒன்று உங்களுடன் பகிர்ந்து கொள்ளப்படுகிறது. ஏதோ ஒன்றின் தொடர்பு ஏற்படுகிறது. அதை நீங்கள் தவறவிட விரும்பவில்லை.

நீங்கள் ஒரு சீடராக இருந்தால்மட்டுமே எதைக் கவனிக் கிறீர்கள் என்று உணர இயலும். பெருவிருப்பத்துடன், ஆர்வத்துடன், தீவிரத்துடன் கேட்டால் அதை ஜுவாலையைக் கேட்டறியலாம். முழுமையான கவனத்துடன் கேட்டால், மௌனத்தைக் கேட்டுண ரலாம். இதுவே கவனித்து அறிதலாகும்.

பிதாகோரஸ் **கவனத்தில் கொள்ளுங்கள்** என்கிறார். பிதாகோரஸின் சமகாலத்தில் வாழ்ந்த புகழ்பெற்றவர்களில் ஒருவரான மகாவீரர், உண்மையின் உலகிற்குள் நுழைய இரண்டு வழிகள் இருப்பதாகக் கூறுகிறார். ஒன்று முறையாக கவனித்துக் கேட்டல். கவனித்துக் கேட்பதில் தவறு செய்தவர்களுக்கு இருக்கும் அடுத்த வழி சரியான பயிற்சியாகும். உங்களுக்கு வியப்பு ஏற்படலாம். சரியாகக் கவனிப்பதில் தோற்றவர்களுக்குச் சரியான பயிற்சி தேவைப்படுகிறது. ஞானம் பெற்ற ஒருவரின் பேச்சை கவனித்துக் கேட்டால் போதும். ஒரு புத்தரின் பேச்சைக் கேட்டால் போதும். அவர் ஜுவாலையாக இருக்கிறார். கவனித்துக் கேட்கும் சமயத்தில் நீங்களும் ஒரு ஜுவாலையாகிவிடுவீர்கள். ஞானம் பெற்றவரிட மிருந்து ஏதோ ஒன்று துள்ளிக்குதித்து சீடரிடம் வந்துசேர்ந்து கொள்ளும். விந்தையான ஏதோ ஒன்றின் தொடர்பு ஏற்படுகிறது. மதநூல்களுக்கும், வார்த்தைகளும் அப்பாற்பட்ட ஏதோ ஒன்று கடந்து வந்து சேர்ந்துகொள்கிறது. ஆனால் அதற்கு கவனித்துக் கேட்டல் அவசியப்படுகிறது.

நான் பல வருடங்களாக இந்த நாட்டில் சுற்றுப்பயணம் செய்து வருகிறேன். கிட்டத்தட்ட பதினைந்து வருடங்களாக லட்சக்கணக்

கானவர்கள் மத்தியில் உரை நிகழ்த்தியிருக்கிறேன். அவர்கள் எல்லோரும் வெறுமனே கேட்கிறார்கள். கவனத்தில் கொள்வது இல்லை. கவனிக்கவைப்பதில் உதவிட நான் கடுமையாக முயன்றேன். ஆனால் அது நடைபெறவில்லை. நான் பயணங்களை நிறுத்திக் கொண்டுவிட்டேன். கவனித்துக் கேட்கக்கூடியவர் களுக்காக மட்டுமே நான் இப்போது காத்திருக்கிறேன்.

இந்த மௌனத்தை, உங்களின் தரிசனத்தை, முழுமையான சிரத்தையை என்னிடம் இருக்கும்போது காணலாம். அந்தத் தருணத்தில் ஒரு பரிமாற்றம் நிகழத் தொடங்குகிறது. ஏதோ ஒன்று உங்களுக்குள் தட்டியெழுப்பப்படுகிறது. அத்தருணங்கள் மதிப்பு மிக்கவை. நீங்கள் கவனித்துக் கேட்கும் திறன் பெற்றது போன்றே அந்த கணங்களும் மதிப்பு உடையவை.

உங்கள் மனம் எங்கோ சஞ்சரித்துக்கொண்டிருந்தால் உடலளவில் நீங்கள் என் பேச்சைக் கேட்டுக்கொண்டிருக்கிறீர்கள். ஆனால் கவனித்துக் கேட்டல் இயலாத விஷயமாகிவிடுகிறது. பலவித எண்ணங்கள் உங்களுக்குள் ஓடிக் கொண்டிருக்கும்போது பெரிய அளவில் போக்குவரத்து நெரிசல் ஏற்படுகிறது. அப்போது நீங்கள் வெறுமனே கேட்டுக் கொண்டிருக்க மட்டுமே செய்கிறீர்கள். நான் உங்களிடம் வருவதாகக் கூறுவதை அந்த சிந்தனை யோட்டங்கள் அனுமதிப்பதில்லை. மேலும் அவை நான் உங்களிடம் வருவதையும் அனுமதிப்பது இல்லை. மனம் எண்ணங்களற்று இருந்தால் உள்ளே நடக்கும் போக்குவரத்து நின்றுபோகும். மனதின் உள்ளே நடக்கும் உரையாடல் தடைபட்டுப் போகிறது. அந்த இடை வெளியில், அந்த மௌனத்தில் அன்புநிலை, உயிர்ப்பு மற்றும் கவனித்துக்கேட்டல் போன்றவை நிகழ்கின்றன.

சரியாக கவனித்துக் கேட்டல் என்பது புரிந்துகொள்வதாகும். வேறு எந்த முயற்சியும் தேவையில்லை. உண்மையைக் கண்டறியப் பயிற்சி தேவையில்லை. காரணம், ஏற்கனவே அது அங்கு இருந்து கொண்டிருக்கிறது. நீங்கள் புரிந்துகொண்டால் அது இருப்பதை அறியலாம். நீங்கள் கண்களைத் திறந்தால் அதைக் கண்டறியலாம். உண்மை காணாமல் போய்விடவில்லை. நீங்கள்தான் உறங்கிப் போகிறீர்கள். நீங்கள் கவனித்துக் கேட்டால் விழிப்புணர்வு பெறு வீர்கள். உண்மை அங்குதான் எப்போதும் இருந்து வருகிறது.

**கவனத்தில் கொள்ளுங்கள். நான் கூறுவதை மனதில் செதுக்கி வைத்துக் கொள்ளுங்கள்** என்கிறார் பிதாகோரஸ். நீங்கள் கவனித்துக்கேட்டால் மட்டுமே சொற்கள் மனதிற்குள் சென்று

சேரும். வெறுமனே கேட்டால், சொற்கள் தலைக்குள் மட்டுமே சென்று சேரும். இதயமே உங்களின் உள்மையமாக இருக்கிறது. நீங்கள் ஆழ்ந்த மௌனத்தில் இருந்தால் மட்டுமே குரு உங்களிடம் வருவதற்கான பாதை கிடைக்கும். உங்கள் மனதைத் தொட வேண்டுமானால் அந்த செய்தியை மனதில் செதுக்கி வைத்துக் கொள்ளுங்கள்.

**நான் கூறுவதை மனதில் செதுக்கி வைத்துக் கொள் ளுங்கள்.** அதுபோதும். உண்மை என்ற விதை ஒருமுறை மனதில் விழுந்துவிட்டால் நீங்கள் ஒரு தோட்டமாக மாறிவிடுகிறீர்கள். நீங்கள் பூத்துக் குலுங்கத் தொடங்குவீர்கள். அதற்குக் காலமும், பொறுமையும் தேவைப்படுகிறது. மனம் என்ற மண்ணில் விழும் விதை வளர்கிறது. பருவகாலம் வரும்போதுதான் விதை முளைக்கும். பெரிய கிளைகள் வளரத் தொடங்கும். வசந்தகாலம் வரும்போது அதில் ஆயிரக்கணக்கான பூக்கள் மலரும். அது பூத்துக் குலுங்கும்.

அதனால்தான் மகாவீரர் கவனித்துக் கேட்டல் முறையாக இருந்தால் போதும் என்கிறார். முறையான கவனிப்பின்போது உங்கள் மனம் குருவின் வசமாகிறது. ஒருமுறை சீடரின் மனதில் குரு புகுந்துவிட்டால் அதன் பிறகு எதுவும் தேவையில்லை. ஜுவாலை ஒருவரிடமிருந்து ஒருவருக்குத் தாவிவிடுகிறது. தீபச் சுடர் ஏற்றப்பட்ட மெழுகுவர்த்தி எரியாமல் உள்ள மற்ற மெழுகுவர்த்தி களை ஏற்ற உதவும் வகையில் தனது சுடரைப் பகிர்ந்துகொள்கிறது. ஜுவாலை ஒருவரிடமிருந்து மற்றவருக்குச் செல்வதும் இது போன்றதுதான்.

**தவறான அபிப்பிராயங்களுக்கு இடம் தராமல் மற்றவர்களின் அச்சங்களை முன்னுதாரணமாகக் கொள்ளாமல் இரு கண்களையும், காதுகளையும் மூடிக்கொண்டுவிடுங்கள்.**

உங்களுக்கு தொந்தரவு தரும் எதுவும், நீங்கள் கவனித்துக் கேட்க அனுமதிக்காத எதுவும் தப்பான அபிப்பிராயம் சார்ந்ததுதான். நீங்கள் ஒரு இந்துவாக என்னிடம் வந்தால் நான் கூறுவதைக் கவனத்தில் கொள்ளமாட்டீர்கள். வெறுமனே காதில் போட்டுக் கொள்வீர்கள். காரணம், நீங்கள் தொடர்ந்து முடிவு செய்கிறீர்கள், விமர்சிக்கிறீர்கள், மதிப்பீடு செய்கிறீர்கள், ஒப்பிட்டுப் பார்க்கிறீர்கள். நீங்கள் ஒரு முகமதியராகவோ, கிறிஸ்தவராகவோ, பொதுவுடைமை வாதியாகவோ, கத்தோலிக்கராகவோ என்னிடம் வந்தால் நான் சொல்வதைக் கவனித்துக் கேட்கமாட்டீர்கள். நீங்கள் வெறுமனே

கேட்பீர்கள். ஆனால் உள்முகப் பணிகளில் ஆழ்ந்துவிடுவீர்கள். நீங்கள் வசப்படமாட்டீர்கள். தவறான அபிப்பிராயம் ஒருவரை மூடி வைத்துவிடுகிறது.

நீங்கள் தப்பான அபிப்பிராயம் கொண்டிருந்தால் நீங்கள் முன் கூட்டியே ஒரு தீர்மானத்திற்கு வந்தவிடுவதால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு பாதையில் மட்டுமே கவனத்தைச் செலுத்துவீர்கள். உங்கள் தவறான அபிப்பிராயங்களுக்கு ஆதரவு தரும் விஷயங்களை மட்டுமே கவனிப்பீர்கள். உங்கள் தவறான அபிப்பிராயத்துக்கு எதிரானவை பக்கம் கவனம் செலுத்த இயலாது.

அதனால்தான் மனிதர்கள் வெறுமனே காதால் கேட்கிறார்கள், கண்களால் பார்க்கிறார்கள். கண்களினால் பார்ப்பதிலும் தப்பு அபிப்பிராயம் நுழைந்துவிடுகிறது. நீங்கள் பார்க்க விரும்புவதை மட்டும் பார்க்கிறீர்கள். உங்கள் தவறான அபிப்பிராயங்களுக்கு ஏற்ற வகையில் அதை அர்த்தப்படுத்திக் கொள்கிறீர்கள். நீங்கள் உங்களுடைய தவறான அபிப்பிராயங்களில் இருந்து வெளியே வரா விட்டால், உங்களால் வெளிச்சத்திற்கு வரமுடியாது. உங்கள் தப்பான அபிப்பிராயம் உங்களது சிறைச்சாலையாகும்.

எங்கெங்கும் தவறான அபிப்பிராயங்கள் நீக்கமற நிறைந்திருக்கின்றன. சமூகம், அரசியல், மதம், தத்துவம் என்று தவறான அபிப்பிராயங்கள் அடுக்கடுக்காக அமைந்திருக்கின்றன. ஏகப்பட்ட அடுக்குகள் உங்களைச் சூழ்ந்திருக்கின்றன. உங்களிடம் வந்து சேர்வது கிட்டத்தட்ட முடியாத காரியமாகப் போய்விடுகிறது. அந்த தப்பான அபிப்பிராயங்களை நீங்கள் உதறித் தள்ள வேண்டும்.

"நான் எதைச் சொன்னாலும் நீங்கள் அதன் மீது நம்பிக்கை கொள்ள வேண்டும்" என்று பிதாகோரஸ் சொல்லவில்லை. "கவனத்தில் கொள்ளுங்கள்" என்றுதான் கூறுகிறார். நீங்கள் அதை நம்புகிறீர்களா அல்லது அவநம்பிக்கையுடன் இருக்கிறீர்களா என்பது ஒரு கேள்வியே இல்லை. நான் உங்களிடம் கூறுவதும் அதுதான். உங்களிடம் சொல்லப்படும் எதையும் நம்ப வேண்டும் என்பது இல்லை, அவநம்பிக்கை கொள்ள வேண்டும் என்பதும் இல்லை. உண்மைக்கு இது எதுவும் தேவையில்லை. கவனத்தில் கொள்ள வேண்டும் என்பது மட்டுமே உண்மை எதிர்பார்க்கிறது. ஒருமுறை கவனத்தில் கொண்டுவிட்டால் அது உங்களுடைய உண்மை என்றாகிவிடும். அதன்மீது நீங்கள் நம்பிக்கை வைக்கத் தேவையில்லை. நீங்கள் அறியாத விஷயங்களாக இருந்தால் மட்டுமே அப்போது அவற்றின் மீது நம்பிக்கை கொள்ள வேண்டும். நீங்கள்

அவற்றைப் பற்றி அறியாது இருந்தால், அவை உங்கள் சொந்த அனுபவங்களாக இல்லாது போனால், அப்போது நீங்கள் அவை குறித்து நம்பிக்கை கொள்ள வேண்டும்.

கவனத்தில் வைக்கத் தயாராக உள்ள எந்த ஒரு மனிதரும் நம்பிக்கை, அவநம்பிக்கை என்று எதுவும் கொள்ளத் தேவையில்லை. அவரது தெளிவான நிலை உடனே விஷயத்துக்கு முடிவு கண்டு விடும். நீங்கள் திறந்த கண்களோடும், திறந்த காதுகளோடும் கவனித்தால், தெளிவுடனும், ஒளிவுமறைவற்றும் இருந்தால் உண்மையின் நிஜத்தன்மை உடனே புரிந்துவிடும். பொய்யின் நிஜத் தன்மையும் உடனே புலப்பட்டுவிடும். அவை குறித்து நீங்கள் சிந்தித்துப் பார்க்க அவசியமில்லை. எது சரி, எது தவறு என்று யோசித்துப் பார்க்கத் தேவையில்லை.

ஒளிவுமறைவற்ற மனதில், சரியானது சரியானது என்பது புலப்படும். தவறானது தவறானது என்பதும் புலப்படும். தெளிவு பட்ட ஒளிவுமறைவற்ற மனம் தீர்மானங்கள் கொண்டது. அது உடனே முடிவு செய்துவிடுகிறது. அந்தத் தீர்மானம் தர்க்கரீதியான தாக அமைந்திருப்பது கிடையாது.

ஆனால் நாம் தவறான மதிப்பீடுகளைச் சுமந்துகொண்டு திரிகிறோம். சிறிய தப்பு அபிப்பிராயங்கள் தடை ஏற்படுத்தக் கூடும். உங்கள் கண்ணில் விழும் சிறிய தூசு இந்த அழகான உலகை நீங்கள் பார்க்க முடியாமல் செய்யப் போதுமானதாக உள்ளது. உங்களால் கண்களைத் திறக்க முடிவது இல்லை. உங்களால் இமயமலையைப் பார்க்க முடிகிறது. சிறிய தூசு உங்கள் கண்ணில் விழுந்ததும் இமயமலை மறைந்து போகிறது. தூசி மிகவும் சிறியதுதான். ஆனால் அது பெரிய வேலை செய்கிறது. பிரும்மாண்டமான இமயமலையை மறைந்துபோகச் செய்கிறது.

உங்கள் கண்களில் தூசு மட்டும் நிறைந்திருக்கவில்லை. மலையளவு தவறான அபிப்பிராயங்களும் உள்ளன. சீடனிடம் இருக்க வேண்டிய முதல் அம்சம் என்னவென்றால், தவறான அபிப் பிராயங்கள் விஷயத்தில் சகலத்தையும் உதறிவிட்டு வெறுமையாக இருக்க வேண்டும். அவற்றை அப்பால் தூக்கிப் போடுங்கள். உங்களுக்குச் சுய அனுபவம் கிடையாது. எதை நம்புவது, எதை நம்பக்கூடாது என்று சொல்லி வைத்திருக்கிறார்கள். எல்லாவற்றை யும் உதறுங்கள். சுத்தமான கண்ணாடிபோல் இருங்கள். பிறகு கவனத்தில் கொள்ளுங்கள்.

**கவனத்தில் கொள்ளுங்கள் நான் கூறுவதை மனதில்**
**செதுக்கிவைத்துக் கொள்ளுங்கள்**
**தவறான அபிப்பிராயங்களுக்கு இடம் தராமல்**
**மற்றவர்களின் அம்சங்களை முன்னுதாரணமாகக் கொள்ளாமல்**
**இரு கண்களையும், காதுகளையும் மூடிக்கொண்டுவிடுங்கள்.**
**சுயமாகச் சிந்தியுங்கள்.**

மற்றவர்களைப் பாருங்கள், கவனியுங்கள். அவர்கள் பல வற்றை முன்பே தீர்மானித்து வைத்திருக்கிறார்கள். தவறான அபிப் பிராயங்கள், மதநூல்கள், தத்துவங்கள், கோட்பாடுகள், பேராசைகள் போன்றவை அவர்களிடம் இருக்கின்றன. எங்கிருந்து அவை வந்திருக்கின்றன? அவற்றைக் கவனியுங்கள். உங்களுடைய தவறான அபிப்பிராயங்களை உதறித் தள்ளாது போனால் நீங்கள் பழைய நிலையிலேயே இருக்கநேரிடும் என்ற பயம் ஏற்பட வேண்டும்.

வெளியே சென்று ஜனங்களைப் பாருங்கள். அவர்கள் வாழ்வில் மகிழ்ச்சி இல்லை. அவர்கள் வாழ்வில் உத்திரவாதம் கிடையாது. அவர்கள் தீவிரமான நம்பிக்கையாளர்களாக இருக் கிறார்கள். சிலர் மசூதிக்குப் போகிறார்கள். சிலர் தேவாலயத்திற்குச் செல்கிறார்கள். வேறு சிலர் கோவிலுக்குப் போகிறார்கள். அவர்கள் எல்லோரும் மதநம்பிக்கை கொண்டவர்கள். சிலர் பைபிள் படிக் கிறார்கள். சிலர் மூலதன நூலைப் படிக்கிறார்கள். வேறு பலர் கீதையை வாசிக்கிறார்கள். இவர்கள் எல்லோரும் நம்பிக்கை யாளர்கள்! சிலர் புனிதகாபாவை நம்புகிறார்கள். சிலர் காசி நகரை நம்புகிறார்கள். சிலர் கிரெம்ளின் மாளிகையை நம்புகிறார்கள். ஆனால் எல்லோரும் நம்பிக்கையாளர்கள். அவர்கள் வாழ்வில் என்ன நடந் திருக்கிறது? கடவுள் இன்றும் சம்மதம் தரவில்லை. அவர்கள் வாழ்வில் இன்னும் அருளாசி கிட்டவில்லை. கடவுள் அவர்களிடம் இன்னும் ஒப்புதல் கூறவில்லை. தெய்வீகம் குறித்து அவர்களுக்கு எதுவும் தெரியாது.

நீங்கள் அவர்களின் கண்களைப் பாருங்கள். அதில் துயரம் தான் இருக்கிறது என்பதைக் கண்டறியலாம். வேறு எதுவும் இருக்காது. ஏமாற்றம் பெரிய எழுத்தில் எழுதப்பட்டிருப்பது தென்படும். அவர்கள் வாழ்க்கையைக் கவனியுங்கள். அவர்கள் இழுபட்டுக் கொண்டிருப்பது தெரியும். கால்களில் சந்தோஷ நடனம் கிடையாது. எதுபற்றி அவர்கள் பேசுகிறார்கள் என்று பாருங்கள். அங்கு எவ்வித இன்னிசையும் கிடையாது என்று கண்டறிவீர்கள்.

அவர்கள் வாழ்க்கையைக் கவனியுங்கள். அங்கே எந்த ஆசீர்வாதமும் இல்லை என்பதைக் காண்பீர்கள். உலகைச் சூழ்ந்திருக்கும் இது போன்ற மனிதர்கள் போலிருக்க விரும்புகிறீர்களா? இந்த மந்தை யில் ஒரு அங்கமாகிவிட விருப்பமா? அல்லது கடவுளின் ஒப்புதல் பெற்றிட ஆசைப்படுகிறீர்களா? எது வேண்டும் என்பதை நீங்கள் தான் முடிவு செய்ய வேண்டும்.

**மற்றவர்களின் அச்சங்களை முன்னுதாரணமாகக் கொள் ளாமல்** இருங்கள் என்ற பிதாகோரஸின் கூற்று மிகவும் சரியானது. மற்றவர்களைக் கவனியுங்கள். அது உங்களுக்கு உதவிகரமாக அமையும். உங்கள் பெற்றோரைக் கவனியுங்கள். அவர்கள் எங்கு சென்று சேர்ந்திருக்கிறார்கள் என்று புரியும். அவர்கள் உங்களுக்கு வழிகாட்டுகிறார்கள். குருடர்கள் மற்ற குருடர்களுக்கு வழிகாட்டு கிறார்கள். உங்கள் தலைவர்களைப் பாருங்கள். பைத்தியக்கார மனிதர்கள் மற்ற பைத்தியங்களை வழிநடத்துகிறார்கள். உங்கள் மதபோதகர்களைப் பாருங்கள். அவர்களுக்கு என்ன அனுபவம் இருக்கிறது? நேர்நின்று அவர்கள் பார்வைகளை எதிர்கொள்ளுங்கள். அவர்கள் உங்களைப் போலவே பயம் கொண்டும், இருண்டும் கிடப்பதைக் காண்பீர்கள். அவர்களிடம் ஒரு சிறிய ஒளிக்கீற்றையும் காணமுடியாது. உங்கள் யூதகுருமார்கள், இந்துப் பண்டிதர்கள், கிறிஸ்தவப் பாதிரியார்கள் எல்லோரையும் இவ்விதமே கவனித்து அறியுங்கள்.

மனிதர்களைக் கவனிப்பதில் கொஞ்சம் உஷாராக இருங்கள். "நான் இவர்கள் போலவா இருக்கிறேன்? இந்த மனிதர்கள் போலவா இருக்கிறேன்?" என்ற புரிதல் உடனே ஏற்படும். வாழ்க்கை தொலைந்து போய்க்கொண்டு இருக்கிறது. உங்களைச் சுற்றியுள்ள இந்த கும்பலிடம் இருந்து எதையும் கற்றுக் கொண்டுவிட இயலாது. உங்கள் பெற்றோர், உங்கள் நண்பர்கள், உங்கள் அக்கம்பக்கத்தவர் யாரிடமிருந்து கற்றுக்கொள்ளமுடியாது. ஒரு விஷயம் மட்டும் நிச்சயம் சத்தியத்தின் பாதை தவறான அபிப்பிராயங்கள் வழியாகச் செல்லவில்லை. தெய்வீகத்தின் பாதை மதநூல்கள், நம்பிக்கை களின் வழியாகச் செல்லவில்லை. தெய்வீகத்தின் பாதை அமைதி, மனத்தூய்மை, மனத்தெளிவு போன்றவற்றினூடே செல்கிறது. தவறான அபிப்பிராயங்கள் இல்லாத மனமே தூய்மையான மனம் என்பது நினைவிருக்கட்டும்.

நான் தூய்மை என்று கூறுவது ஒழுக்கம் சார்ந்தது அல்ல. ஒரு வகையில் நான் தூய்மை என்பது, அறிவியல் சார்ந்தது ஆகும். "இந்த

தண்ணீர் தூய்மையானது" என்கிறீர்கள். ஒழுக்கம் சார்ந்த அர்த்தத்திலா அவ்வாறு சொன்னீர்கள்? தண்ணீர் ஒழுக்கம் சார்ந்ததா? இந்த தண்ணீர் தூய்மையானது என்று கூறும்போது **தூய்மை** என்ற வார்த்தை எவ்விதமான ஒழுக்கநெறியைச் சுட்டும் அர்த்தத்திலும் பயன்படுத்தப் படவில்லை. தண்ணீரில் வேறு தேவையற்ற புறப்பொருட்கள் எதுவும் இல்லை என்பதே அதன் பொருளாகும். நீர் தெளிவாகவும், தூசு இல்லாமலும், மாசுபடாமலும் இருக்கிறது என்று அர்த்தம். அது இயல்பான நிலையில் உள்ளது என்று கூறப்படுகிறது. தண்ணீர் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருக்கிறது.

தவறான அபிப்பிராயங்கள் இல்லாத மனதை நான் தூய்மை யான மனது என்று அழைக்கிறேன். அங்கு தெளிவு காணப்படுகிறது. சுத்தமான கண்ணாடிபோல் மனம் செயல்படுகிறது.

ஒழுக்கநெறி சார்ந்தவரின் மனம் தூய்மையானது அல்ல. காரணம், எது நல்லது, எது கெட்டது என்பதுபோன்ற ஒருதலைப் பட்சமான அபிப்பிராயம் அவரிடம் இருக்கிறது. அவர் நல்லவராக இருக்க வேண்டும் என்றும், கெட்டவராக மாறக்கூடாது என்றும் முயல்கிறார். அவர் தவறு என்ற விஷயத்துக்கு எதிரானவர். தவறு என்பது எது என்பதை அவர் அறியமாட்டார். ஏனென்றால், நல்லது எது? என்பதை அவர் அறிந்து வைத்திருக்கவில்லை. அவர் வெறுமனே மற்றவர்களைப் பின்பற்றுகிறார். மிக நீண்ட ஒரு அடிமைத்தனத்தின் கண்ணியாக அவர் இருக்கிறார்.

நீங்கள் ஜைனக் குடும்பத்தில் பிறந்திருந்தால் உருளைக்கிழங்கு சாப்பிடுவது பாவம் என்று கூறப்படுகிறது. உருளைக்கிழங்கா? ஆம் சாதாரண உருளைக் கிழங்கா? அவர்கள் அப்பாவி மக்கள். உருளைக் கிழங்கு சாப்பிடுவது பாவம் என்று கருதும் மக்களைக் காட்டிலும் அப்பாவிகளை நீங்கள் கண்டதுண்டா? ஜைனர்களுக்கு உருளைக் கிழங்கு உண்பது பாவச்செயல். மண்ணுக்கு அடியில் வளரும் எந்தக் காய்கறியையும் ஜைனர்கள் ஒதுக்கி வைக்கிறார்கள். அது பாவகர மானது என்கிறார்கள். அதை மனதாலும் எண்ணிப் பார்க்கலாகாது. நீங்கள் ஒரு ஜைனராகப் பிறந்து இருந்தால் இது உங்கள் தவறான அபிப்பிராயம் ஆகும்.

உங்கள் தவறான அபிப்பிராயங்களைக் கவனியுங்கள். அவை எல்லாம் இது போன்றவைதான். ஏதாவது ஒன்று உங்கள் சொந்த அனுபவத்திலிருந்து வேர்விடாது போனால் அது தளையாகிவிடும். **மற்றவர்களின் அச்சங்களை முன்னுதாரணமாகக் கொள்ளாமல் இரு கண்களையும், காதுகளையும் மூடிக்கொண்டு விடுங்கள்.**

**சுயமாகச் சிந்தியுங்கள்.** கவனியுங்கள், காணுங்கள். மற்றவர்கள் கருத்தை நம்பாதீர்கள். உங்களைச் சுற்றியுள்ள மனிதர்களுக்கு என்ன நடக்கிறது என்று விழிப்புடன் இருங்கள். எப்போதும்.... **சுயமாகச் சிந்தியுங்கள்.**

'உங்களை உணருங்கள்' என்கிறார் சாக்ரட்டீஸ். உங்களைப் பற்றிச் சிந்தித்தால் மட்டுமே உங்களை நீங்கள் அறியமுடியும். சிந்திக்கும் உரிமை நம் எல்லோருக்கும் வழங்கப்பட்டுள்ளது. அது உங்கள் இயல்பான உரிமையாக, அடிப்படை உரிமையாக இருக்கிறது. அதை நாம் பிறருக்குக் கொடுத்துவிட்டோம். உங்களுக்காக மற்ற வர்கள் சிந்திக்கிறார்கள்! எது சரி, எது தவறு என்று உங்கள் பெற்றோர் முடிவு செய்கிறார்கள். உங்கள் ஆசிரியர்கள், உங்கள் மதபோதகர்கள், உங்கள் அரசியல்வாதிகள் முடிவு செய்கிறார்கள். உங்கள் சிந்திக்கும் உரிமையைப் பிறருக்குத் தந்துவிட்டீர்கள். பிரதானமான அடிப்படை உரிமையைப் பிறருக்கு தந்துவிட்டீர்கள். அதைக் காட்டிலும் அடிப்படையானது வேறு எதுவுமில்லை.

உங்களது சிந்திக்கும் உரிமையை பிறருக்கு ஒருபோதும் தராதீர்கள். அவர் யாராக இருந்தாலும் சரி. நிஜமான குரு உங்கள் உரிமையை உங்களிடமிருந்து பிடுங்கிக்கொள்ள மாட்டார். சொல்லப்போனால், அதை நீங்கள் மீண்டும் பெறுவதற்கு உதவவே செய்வார். அதை மீண்டும் கண்டறிய, மறுஉரிமை கோர உதவுவார். நீங்கள் உங்களுக்குள் ஒளியாக மாறிட உதவிபுரிவார்.

"உங்களுக்குள் நீங்கள் ஒளியாக இருங்கள்" என்று புத்தர் கடைசி நேரத்தில் கூறிய சொற்களை எண்ணிப்பாருங்கள்.

பிதாகோரஸ் **சுயமாக சிந்தியுங்கள்** என்று கூறுகிறார். அதே விஷயத்தையே வேறு சொற்களில் தெரிவிக்கிறார். கவனித்துக் கேளுங்கள், அனுபவம் பெறுங்கள். என்ன நடக்கிறது என்று பாருங்கள். ஆனால் இறுதிமுடிவு உங்களுடையதாக இருக்க வேண்டும். முற்றிலும் உங்களுடையதாக இருக்க வேண்டும்.

"எனது பெற்றோர் செய்து கொண்டிருப்பதால் நானும் அதைச் செய்கிறேன்" என்று ஒருபோதும் கூறாதீர்கள். அது முட்டாள்தன மானது. அது சரியானது என்று நீங்கள் உணர்ந்தால் மட்டும் அதைச் செய்யுங்கள். அது உங்கள் சுயதீர்மானமாக இருந்தால், உங்கள் சொந்தச் சிந்தனையின் மூலம் முடிவு செய்ததாக இருந்தால் மட்டும் அதைச் செய்யுங்கள். அதைப் பற்றி வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. குரானில் சொல்லப்பட்டிருக்கிறது. விவிலியத்தில் சொல்லப்

பட்டிருக்கிறது". அதனால்தான் அதைச் செய்கிறேன் என்று பேசா தீர்கள். எல்லாம் மாறிவிட்டன. காலங்களும் மாறிவிட்டன. வேத காலத்தில் சரியாக இருந்தவை எல்லாம் எல்லாக் காலமும் சரியான தாக இருக்காது. குரான் எழுதப்பட்ட காலத்தில் சரியாக இருந்தவை இன்றும் சரியானதாக இருக்காது. அப்படி இருக்கவும் இயலாது.

உதாரணம் சொல்லவேண்டுமானால், முகமது நபி தனது சீடர்களிடம், "முடிந்தவரை எத்தனை முடியுமோ அத்தனை குழந் தைகள் பெற்றுக் கொள்ளுங்கள்" என்று கூறியதைச் சுட்டிக் காட்டலாம். முகமது நபிகள் எந்த மனிதர்களிடம் பேசிக் கொண் டிருந்தாரோ அவர்களுக்கு அந்த அறிவுரை சரிப்பட்டு வரலாம். அவர் போராளிகளிடம் பேசினார். அன்றைய நாட்களில், குறிப்பாக அரபு தேசங்களில் உயிர் பிழைத்திருக்க ரத்தம் சிந்திப்போராட வேண்டி யிருந்தது. அதற்கு நிறைய மனிதர்கள் தேவைப்பட்டார்கள். போர் வீரர்களாகப் பணிபுரிய நிறைய ஆண் பிள்ளைகள் தேவைப் பட்டார்கள். அங்கு பெண்கள் அதிகமாக இருந்தார்கள். ஆண்களைக் காட்டிலும் நான்கு மடங்கு அதிக எண்ணிக்கை கொண்டவர்களாக இருந்தார்கள். அதனால் நபிகள் நாயகம், "நீங்கள் நான்கு மனைவிகள் வைத்துக் கொள்ளலாம்" என்று சொன்னார்.

அது தர்மப்படியும், நியாயப்படியும் மிகவும் சரியானது. ஒரு மனைவி போதும் என்று நபிகள் நாயகம் வற்புறுத்திச் சொல்லி யிருந்தால் மூன்று பெண்கள் கணவனின்றி, குடும்பமின்றி, குழந்தை களின்றி இருக்க நேரிடும். அது பெரிய அளவில் விபச்சாரம் செய்யும் நிலை உருவாக்கிவிடும். அதன்மூலம் பெரும் ஒழுக்கக்கேடு தலை தூக்கி விடும். எனவே அவர் நீங்கள் நான்கு பெண்களைத் திருமணம் செய்து கொள்ளுங்கள் என்று சொன்னது மிகவும் சரியானதாகும். அவர் ஒன்பது பெண்களை மணந்துகொண்டு முன்னுதாரணமாகத் திகழ்ந்து காட்டினார். சீடர்களைக் காட்டிலும் குரு சிறப்பான சொன்னதைச் செய்துகாட்ட வேண்டும். நான் அவரது கருத்துக்கு முற்றிலும் உடன்படுகிறேன். அவர் சொன்னவை எல்லாம் தர்க்கரீதி யாக, அறிவுபூர்வமாக, ஏற்றுக்கொள்ளக் கூடியவைகளாக இருந்தன. சொன்னவற்றை முறையாகச் செயலிலும் காட்டினார் அவர். நான்கு திருமணங்கள் செய்துகொள்ளுங்கள் என்று கட்டளையிட்ட அவர் அதற்கேற்றபடி பொறுப்புள்ள தளபதியாகவும் நடந்துகொண்டார்.

ஆனால் முஸ்லீம்கள் இன்றுவரையிலும் நான்கு திருமணங்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். அதுதான் இடையூறாக அமைகிறது. அது தீர்க்கதரிசி சொன்னது என்கிறார்கள். இன்று உலகில் பெண்

களின் எண்ணிக்கை ஆண்களின் எண்ணிக்கைக்குச் சமமாக அமைந்திருக்கிறது. உண்மையில் சில நாடுகளில் ஆண்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் குறைவாக உள்ளது. ஆகமொத்தத்தில் சமமாக இருக்கிறது. எனவே ஒரு ஆணுக்கு ஒரு பெண் என்பதுதான் அறிவுபூர்வமான வழிமுறையாகும். நீங்கள் நான்கு பெண்களைத் திருமணம் செய்துகொண்டால் மூன்று ஆண்கள் மணம் செய்து கொள்ள முடியாது இருப்பார்கள். அவர்கள் இடைஞ்சலை ஏற்படுத்து வார்கள். சொல்லப்போனால், மூன்று திருமணமாகாத பெண்களை விடவும் அதிகமான தொல்லையை அவர்கள் உருவாக்குவார்கள்.

பெண்கள் பொறுமையானவர்கள். அனுசரித்துப் போகக் கூடியவர்கள். சொன்னதை ஏற்று நடக்கக் கூடியவர்கள். ஒரு பெண் எந்த ஆணையாவது கற்பழித்ததாகக் கேள்விப்பட்டது உண்டா? அப்படி எதுவும் நடக்காது. ஆனால் பெண்துணை இல்லாத அந்த மூன்று ஆண்கள் கற்பழிப்பவர்களாக மாறக்கூடும். சமுதாயம் முழுவதையும் அவர்கள் கெடுத்துவிடுவார்கள். அழகாகவும், நன்றாகவும், இணக்கமாகவும் இருப்பதை எல்லாம் அவர்கள் அழித்து விடுவார்கள். அது மோசமான பாலுறவாக, வக்கிரம் பிடித்த சமூகமாக மாறிவிடும்.

நபிகள் நாயகம் சொன்னது சரியானதுதான். ஆனால் குறிப்பிட்ட ஒரு காலகட்டத்திற்கு மட்டுமே அது சரியாக இருந்தது. அவர், "முடிந்தவரை நிறையக் குழந்தைகள் பெற்றுக் கொள் ளுங்கள்" என்றார். முகமதியர்கள் அந்த காரியத்தை இன்றுவரை யிலும் செய்து கொண்டிருக்கிறார்கள். இப்போது மக்கள் நெருக்கடி யில் உலகம் திணறிவருகிறது. பிற்பாடு என்ன நடக்கப் போகிறது என்ற எச்சரிக்கையின்றி நபிகள் இருந்தார். எதிர்காலத்தை யாராலும் கணித்துவிட முடியாது. இப்போது உலகம் மக்களால் நிறைந்து கிடக்கிறது. கூடுதல் ஜனங்கள் நமக்குத் தேவையில்லை. நமக்கு குறைவானது போதும். குறைந்த மக்களே போதும். இந்தியாவின் மக்கள் தொகையில் பாதிமட்டும் இன்று இருந்தால், அது மிகப் பெரிய ஒரு ஆசீர்வாதமாக அமைந்துவிடும். ஆனால் முகமதியர்கள் குழந்தை பெறுவதை நிறுத்த முடியாது என்கிறார்கள். குழந்தை பெற வேண்டும் என்று மதநூல் சொல்வதாகச் சொல்கிறார்கள்.

நான் இப்படிக் கூறுவதால் முகமதியர்கள் எனக்கு எதிரான வர்களாக மாறுகிறார்கள். அவர்கள் ஏதாவது ஒரு இடத்தில் ஒன்று திரள்கிறார்கள். அவர்களின் தீர்க்கதரிசிக்கு எதிராக நான் பேசுவதாக எதிர்ப்புக் காட்டுகிறார்கள். நான் தீர்க்கதரிசிக்கு எதிராகப் பேச

வில்லை. உங்கள் முட்டாள்தனத்துக்கு எதிராக மட்டுமே பேசு கிறேன். முகமது நபியின் காலத்துக்குப் பிறகு ஆயிரத்து நானூறு ஆண்டுகள் கடந்துவிட்டன. கங்கையில் ஏகப்பட்ட வெள்ளம் ஓடிச் சென்றுவிட்டது.

இந்துமத நன்னெறிக் கோட்பாடுகள் பற்றி மனு எழுதி வைத்ததற்குப் பின்னர் ஐயாயிரம் ஆண்டுகள் கடந்துவிட்டன. ஐயாயிரம் ஆண்டுகள் ஓடிவிட்டன. அனைத்தும் மாறிவிட்டன. ஆனால் இந்துக்களின் மனம் மனுதர்மம் சார்ந்தே இன்னும் இருந்து வருகிறது. மோஸஸ் உங்களுக்குக் கட்டளைகள் வழங்கி மூவாயிரம் ஆண்டுகள் ஆகிவிட்டன. இன்னும் அவற்றை நீங்கள் பின்பற்றி நடந்து வருகிறீர்கள்.

ஒவ்வொரு கணமும் வாழ்க்கை மாறுதல் அடைந்து கொண் டிருக்கிறது. நிஜமான விழிப்புணர்வு பெற்ற மனிதன் ஒவ்வொரு கணமும் சூழ்நிலைக்குத் தகுந்தபடி நடந்து கொள்வான். அவன் எந்தப் பிணத்தையும் சுமந்து திரியவில்லையே? கடந்தகாலத்தை அவன் தனது தலைக்குள் சுமந்து திரியவில்லை. அவன் தனது சூழலக்கு ஏற்ற வகையில் உள்ள தூசு படியாத கண்ணாடியாக இருக்கிறான். சூழ்நிலைக்கு ஏற்றபடி அவன் செயல்படுவான். தனது செயலுக்குப் பொறுப்பேற்றுக்கொள்வான். **பொறுப்பேற்றல்** என்ற சொல்லின் அர்த்தம் இதுதான். என்னைப் பொறுத்தவரை பொறுப் புள்ள ஒரு மனிதனே ஒழுக்கமுள்ள மனிதனாவான். ஒழுக்க சீலர்கள் என்று நீங்கள் குறிப்பிடும் மனிதர்கள் எல்லாம் பொறுப்புள்ள மனிதர்களாக நடந்து கொள்வதில்லை.

பொறுப்புணர்ச்சி என்பது ஒழுக்கத்தைக் காட்டிலும் முக்கிய மானது. **பொறுப்புணர்ச்சி** என்று நான் கூறுவது இக்கணத்திற்கு ஏற்ப நடந்துகொள்ளும் திறமையாகும். முன்பே ஆயத்தப்படுத்தி வைத்திருந்த சூத்திரங்களுக்கு ஏற்ப நடப்பதல்ல. முன்பே கைவசப் படுத்தி வைத்துள்ள தவறான அபிப்பிராயங்களுக்கு ஏற்றபடி நடப்பதல்ல. அதற்குப் பதிலாக, நிகழ்காலச் சூழலுக்கு ஏற்றபடி நடப்பதாகும். அக்கணத்துக்குத் தகுந்தபடி நீங்கள் நடந்தால் அது விடுதலை அது எப்போதும் நன்மை தரக்கூடியது. எப்போதும் அதுவே போதுமானது.

**சுயமாகச் சிந்தியுங்கள்.** உங்களுக்காக நபிகள் நாயகம் சிந்திக்க முடியாது. கிருஷ்ணராலும் அவ்வாறு செய்ய முடியாது. ஏசுவாலும் செய்ய முடியாது. உங்களுக்காக நான் சிந்திக்க இயலாது.

நீங்கள் ஒரு கண்ணாடியாக மாற நான் உதவிட முடியும். எனவே, உங்களுக்காக நீங்கள்தான் சிந்தித்தாக வேண்டும்.

நினைவிருக்கட்டும், ஒரு நிஜமான குருவுக்கும், போலி குருவுக்கும் இடையிலுள்ள வித்தியாசம் இதுதான். போலியான குரு நீங்கள் சிந்திக்க வேண்டியதை உங்களுக்குத் தருவார். நிஜமான குரு எப்படி சிந்திப்பது என்று கற்றுத் தருவார். போலி குரு ஆயத்தமாக உள்ள சூத்திரத்தைத் தருவார். உண்மையான குரு நீங்கள் ஒரு கண்ணாடியாக மாறுவதற்கு உதவுவார். எப்போது நீங்கள் எங்கு இருந்தாலும் சூழ்நிலைக்கு ஏற்ப நடந்து கொள்ளுங்கள். உங்கள் பொறுப்புணர்ச்சி பற்றாக் குறையானதாக இருக்கலாகாது.

போலியான குரு தத்துவத்தை உங்களுக்கு வழங்குவார். ஒரு மதக் கோட்பாட்டை, நம்பிக்கை உருவாக்குவார். நிஜமான குரு உங்களுக்கு விவேகத்தை, விழிப்புணர்வை, புரிதலை ஏற்படுத்துவார். அதன் பிறகு ஒவ்வொரு செயலும் புரிதலோடு வெளிப்படும்.

ஜனங்கள் பொறுப்புணர்வுடன் நடந்தால் இந்த உலகம் நிஜமாகவே ஒரு சொர்க்கமாக மாறிவிடும். ஆனால் சிந்திக்கும் பொறுப்பைப் பிறரிடம் தந்துவிடுவது எளிதாக செயலாக இருக்கிறது. ஜனங்கள் சிந்திக்க விரும்புவதில்லை. பிறர் தங்களுக்காக அசைபோட விரும்புகிறார். அதன் பிறகு உணவை எளிதாக விழுங்கி விடலாம். தாங்களாக அசைபோட விரும்புவதில்லை. நீங்களாக அசைபோடாவிட்டால் போஷாக்கு அடைய இயலாது. நீங்களாக அசைபோடாவிட்டால் உங்களிடம் முழுமையான தனித்துவம் ஏற்படாது. ஒரு அடையாளமில்லாத எண்ணாக இருப்பீர்கள். நிஜமான தனித்துவம் கிட்டாது.

தனித்துவம் பெறுவதே வாழ்வின் குறிக்கோள் ஆகும். அப்போதுதான் உலகத்தின் அங்கீகாரம் பெறுவீர்கள். அதனிடம் உங்களை அர்ப்பணிக்கமுடியும். அதன்பிறகுதான் அர்ப்பணிக்க ஏதோ ஒன்று உங்களிடம் இருக்கும் சூழல் உருவாகிறது. அதற்கு முன்னர் நீங்கள் உள்ளீடற்றுக் கிடந்தீர்கள். வெறும் சக்கையாக இருந்தீர்கள். மதிப்புமிக்க எதுவும் உங்களிடம் இருக்கவில்லை.

**ஆலோசனை கேளுங்கள், ஆழ்ந்து சிந்தியுங்கள்.**
**சுயமாக முடிவு செய்யுங்கள்.**

**ஆலோசனை கேளுங்கள்** என்கிறார் பிதாகோரஸ். மற்றவர்கள் சொல்வதைக் கேட்டு நடக்கும்படி அவர் கூறவில்லை. **ஆலோசனை கேளுங்கள்** என்கிறார். உங்களைவிட அனுபவசாலிகள் நிறையப்பேர் இருப்பார்கள்.

**ஆலோசனை கேளுங்கள். ஆழ்ந்து சிந்தியுங்கள்** அதை ஏற்றுக் கொள்ளாதீர்கள். ஆலோசனை பெறுங்கள். அதைப் பற்றித் தீவிரமாகச் சிந்தித்துப் பாருங்கள். நன்றாக யோசியுங்கள். பிறகு **சுயமாக முடிவு செய்யுங்கள்.** இறுதியான முடிவு உங்களுடைய தாக இருக்கவேண்டும். சுயமாக முடிவெடுங்கள். சுயமாக முடிவு செய்யாது போனால் நீங்கள் ஒருபோதும் விடுதலை பெற முடியாது.

விடுதலை என்பது உங்கள் வாழ்வில் நீங்கள் செய்த சுயமான முயற்சிகளின் கூட்டுத்தொகை ஆகும். சுயமான முயற்சி எதையும் நீங்கள் செய்யவில்லை என்றால், எப்படி விடுதலை பெற முடியும்? விடுதலை என்பது விலைக்கு வாங்கும் ஒரு சரக்கு அல்ல. வாழ்வில் நீங்கள் செய்த சுயமான முயற்சிகளின் கூட்டுத்தொகை ஆகும்.

உங்கள் மனைவியை நீங்கள் தேர்வு செய்வதில்லை. உங்கள் தகப்பனார் உங்கள் வாழ்க்கைத் துணையைத் தேர்வு செய்கிறார். நீங்கள் வழிபாடு செய்யும் கோவிலை நீங்கள் தேர்வுசெய்வது கிடையாது. உங்கள் பிறப்பு அதை முன்பே முடிவுசெய்து வைத்து விட்டது. நீங்கள் தேவாலயம் செல்லலாம். கத்தோலிக்க, பிராட்டஸ் டண்ட் என்று ஏதோ தேவாலயத்திற்குப் போகலாம், அல்லது கோவிலுக்குப் போகலாம். இந்து, ஜைன, புத்தமதக் கோவில்களில் ஏதாவது ஒன்றுக்குச் செல்லலாம். உங்கள் பிறப்பு அதைத் தீர்மானிக் கிறது. உங்கள் திருமணம் பெற்றோர்களால் நிச்சயிக்கப்படுகிறது. நீங்கள் படிக்கும் பாடப்பிரிவு பெற்றோர்களால் முடிவு செய்யப்படு கிறது. அதன் பிறகு உங்களுக்குச் சுதந்திரம் தேவையா? எல்லா விஷயங்களும் மற்றவர்களால் தீர்மானிக்கப்படுகின்றன. சுதந்திரம் என்பது சொந்த முயற்சிகளின் கூட்டுத்தொகையாகும். வாழ்வில் நீங்கள் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியையும் சுயமாக முடிவு செய்தால், மெல்லமெல்லச் சுதந்திரத்தை உரிமைப்படுத்திக் கொள்வீர்கள். அந்த சுதந்திரம் உங்களுக்குள் ஒரு சக்தியாக மாறு கிறது. விடுதலையே வாழ்வின் மிகப்பெரிய கொடையாகும். ஆனால் அதற்கு நீங்கள் தகுதியுள்ளவராக இருப்பது அவசியம்.

உங்கள் பொறுப்புகளை மற்றவர்கள் மீது சுமத்தாதீர்கள். அது எளிதானது. ஏனென்றால், “நான் என்ன செய்யட்டும்?” என்று சொல்ல உங்களுக்கு ஒரு வாய்ப்பை அது அளிக்கிறது. பொருத்த மில்லாத மனைவி அமைந்தால் உங்களால் என்ன செய்ய முடியும்? உங்கள் பெற்றோர் அல்லது ஜோதிடர்கள், கைரேகை பார்ப்பவர்களே அதற்குப் பொறுப்பு. நீங்கள் பொறுப்பை ஏற்க மறுத்துவிட்டீர்கள். அதன் மூலம் மதிப்புமிக்க ஒன்றை மறுத்து விலகித் தள்ளி

விட்டீர்கள். உங்கள் கணவர் அல்லது மனைவியை நீங்கள் தேர்வு செய்வதன் மூலம் அவர்களுடன் ஒன்றிணைய முடியும். திடமும், தெளிவும் பெறமுடியும். சுயமாக மேற்கொள்ளப்படும் ஒவ்வொரு வாய்ப்பும் உங்களைத் திடப்படுத்துகின்றன. தெளிவுபடுத்துகின்றன.

**முட்டாள்கள் லட்சியமின்றியும், காரணமின்றியும்
செயல்பட்டுவிட்டுப் போகட்டும்.
நீங்கள் நிகழ்காலத்தில் இருந்தபடியே
எதிர்காலம் பற்றி யோசிக்க வேண்டும்.**

முட்டாள்கள் லட்சியமின்றிச் செயல்படுகிறார்கள். துறவிகளும் லட்சியமின்றிச் செயல்படுகிறார்கள். அதனால்தான் சில சமயங்களில் துறவிகள் முட்டாள்களாகத் தெரிகிறார்கள். முட்டாள்கள் துறவிகள் போலிருக்கிறார்கள். ஒரு விஷயம் துறவி, முட்டாள் என்ற இருவருக்கும் பொதுவாக இருக்கிறது. லட்சியமின்றிச் செயல்படுவது அந்த இருவருக்கும் பொதுவான அம்சமாகும். ஆனால் அதற்கான காரணங்கள் வெவ்வேறானவை.

முட்டாள் லட்சியமின்றி இருக்கிறான். காரணம் அவனுக்கு அறிவு இல்லை. விழிப்புணர்வு இல்லாமல் இயந்திரம் போல் செயல்படுகிறான். துறவி லட்சியமின்றி இருக்கிறார். காரணம் அவர் மிகுந்த தெளிவுடன் இருக்கிறார். அதனால் லட்சியம் குறித்துச் சிந்திக்க வேண்டிய தேவை இல்லை. ஆழ்ந்த தெளிவு அவரைச் சரியான திசையில் அழைத்துச் சென்றிடப் போதுமானதாக உள்ளது. சரியான குறிக்கோள் நோக்கிச் சென்றிடப் போதுமானதாக இருக்கிறது.

நீங்கள் அந்த இரண்டுக்கும் இடைப்பட்ட நிலையில் இருக்கிறீர்கள். முட்டாளாகவும் இல்லை. துறவியாகவும் இல்லை. முட்டாள்களைப் போலவே துறவிகளும் வெகு அரிதானவர்கள். லட்சக்கணக்கான மனிதர்கள் இந்த இடைப்பட்ட நிலையில்தான் இருக்கிறார்கள். இந்த சூத்திரம் அப்படி இடைநிலையில் உள்ளவர்களுக்கானது. அப்படிப்பட்டவர்கள்தான் பெரும்பான்மையானவர்களாக இருக்கிறார்கள். தொண்ணூற்று ஒன்பது சதவீதம் மக்கள் இந்த இடைநிலை சார்ந்தவர்கள்.

**முட்டாள்கள் லட்சியமின்றியும், காரணமின்றியும்
செயல்பட்டுவிட்டுப் போகட்டும்
நீங்கள் நிகழ்காலத்தில் இருந்தபடியே
எதிர்காலம் பற்றி யோசிக்க வேண்டும்.**

தெளிவுடன் செயல்படுங்கள். ஆழ்ந்து யோசித்துத் தேர்வு செய்யுங்கள். தொடர்நிகழ்வுகள் குறித்துச் சிந்தனைசெய்யுங்கள். ஆனால் ஒன்று நினைவிருக்கட்டும். பிதாகோரஸ் அதீத எதிர்காலச் சிந்தனையுடன் இருக்கும்படி சொல்லவில்லை. அதனால் அவர், **"நிகழ்காலத்தில் இருந்துகொண்டு எதிர்காலம்பற்றி யோசியுங்கள்"** என்கிறார்.

நிகழ்காலத்தில் காலூன்றி இருங்கள். நிகழ்காலம் சார்ந்து இருங்கள். எதிர்காலம் பற்றிய அதிகமான கற்பனைகளுடன் ஒன்றிவிட வேண்டாம். ஆனால் எதிர்காலத்தை முழுமையாக உதறித் தள்ளிவிட வேண்டாம் என்கிறார். முழுமையான விழிப்புணர்வு ஏற்பட்ட பின்னரே அதை உதறவேண்டும். எனவே நீங்கள் இப்போது நிகழ்காலத்தில் தங்கியிருத்தல் என்ற காரியத்தை மட்டும் செய்ய வேண்டும். அது கூடுதல் விழிப்புணர்வு ஏற்பட வழிவகுக்கும். அதன் தொடர் நிகழ்வுகள் குறித்துச் சிந்தியுங்கள். அது உங்களின் முட்டாள்தனத்தைப் படிப்படியாகக் குறைய உதவி செய்யும். இந்த இரண்டு விஷயங்கள்மூலம் அதிக அறிவாற்றல் வெளிப்படும். எப்போதும் நிகழ்காலத்தில் இருத்தல், மற்றும் லட்சிய உணர்வுடன், இலக்கைநோக்கி, அதன் திசையில் செல்லல். இந்த இரண்டு காரியங்கள் முக்கியத்துவம் பெற்றவையாகும்.

கடைசியாகத் திசையும், இலக்கும் மறைந்துபோகும். அதன் காரணமாகவே புனித ஃபிரான்ஸிஸ் தன்னை இறைத்தன்மையுள்ள முட்டாள் என்று கூறிக் கொண்டார். ஏசு நாதரும் ஒரு முட்டாளாக எண்ணப்பட்டார். ராமகிருஷ்ணரும் ஒரு முட்டாள். ஆனால் அது வித்தியாசமான முறையில் அமைந்த ஒன்று ஆகும். அவர்கள் மிகவும் அப்பாவிகளாக இருந்தார்கள். குழந்தை நிலைக்கு மீண்டும் சென்று விட்டார்கள். குறிக்கோள் இல்லாமல் தன்னிச்சையாகச் செயல் பட்டார்கள். தொடர்நிகழ்வுகள் பற்றிய கவலை இருக்கவில்லை. ஆனால் மிகவும் விழிப்புடன் இருந்தார்கள். எனவே அவர்களால் தவறான பாதையில் செல்ல இயலாது. அவர்களுக்குக் கண்கள் இருந்தன. ஆகவே வாசல் இருக்கும் இடம்குறித்து யோசிக்க அவசியமில்லை. ஆனால் நீங்கள் குருடராக இருக்கிறீர்கள். வாசல் பற்றி நீங்கள் யோசிக்காது போனால், ஏதாவது அறைகலன் (Furniture) மீது இடறிவிழுவீர்கள். சுவரில் மோதிக்கொள்வீர்கள். உங்களுக்கு அடிபட்டுக் காயம் ஏற்படலாம்.

**இதுபற்றி உங்களுக்குத் தெரியவில்லை என்றால், வெறுமனே காரியமாற்றுவது போல் நடிக்காதீர்கள்.**

உங்களுக்குத் தெரியவில்லை என்றால் தெரிந்ததுபோல் நடிக்காதீர்கள். இரண்டாந்தரமான மனம் செல்லும் பாதை அது. அது நடிக்கிறது. தனக்கு அது பற்றி எதுவும் தெரியாது என்பதையோ தனக்கு விஷயம் தெரியாது என்பதையோ, தான் தெரிந்துகொள்ள வேண்டியவை உள்ளன என்பதையோ அவர் ஏற்றுக்கொள்வதில்லை. அவர் நடிக்கத் துவங்குகிறார். தனக்குத் தெரியும் என்பது போல் நடந்துகொள்ள ஆரம்பிக்கிறார். அதனால் அவர் மேலும் மேலும் முட்டாளாகிறார். நீங்கள் அறிவுள்ளவராக மாற அந்த நடிப்பு உதவி செய்யாது. அந்த நடிப்பு அறிவுக்குத் தடையாகி விடுகிறது.

பி.டி. அவுஸ்பென்ஸ்கி தனது குரு குர்ட்ஜிஃப்பிடம் முதலில் சென்றபோது குர்ட்ஜிஃப் அவரது கண்களைப் பார்த்தார். எதுவும் பேசாமல் ஒரு வெற்றுத் தாளை அவரிடம் கொடுத்தார். அடுத்த அறைக்குச் சென்று தாளின் ஒரு பக்கத்தில் அவருக்கு என்ன தெரியுமோ அது பற்றியும், மறுபக்கத்தில் என்ன தெரியாதோ அது பற்றியும் எழுதி எடுத்துக் கொண்டு வரும்படி கூறினார்.

அவுஸ்பென்ஸ்கி சற்றே வியந்துபோனார். "இது புதுவிதமான துவக்கமாக இருக்கிறதே?" என்று நினைத்தார். வழக்கமான அறிமுகம் இல்லை. பெயர் என்ன என்றும் கேட்கவில்லை. "எதற்கு இங்கு வந்திருக்கிறாய்?" என்று கேட்கவேயில்லை. ஒரு வெற்றுத் தாளைக் கொடுத்து "உனக்கு எது தெரியும், எது தெரியாது என்பதை எழுதிக்கொண்டு வா" என்று அனுப்புகிறார்.

அவ்ஸ்பென்ஸ்கி அந்த அறைக்குள் சென்றார். அது குளிரான இரவு. குளிர் மிகுந்த ரஷ்ய இரவு. ஆனால் அவருக்கு வியர்க்கத் தொடங்கியது. தனக்குத் தெரிந்தவை எவை என்று எழுத வேண்டிய பக்கத்தில் ஒரு வரியைக்கூட எழுதமுடியவில்லை. தனக்கு எதுவுமே தெரியாது என்ற விழிப்புணர்வு முதல்முறையாக அவருக்கு ஏற்பட்டது. கடவுள், சத்தியம், அன்பு, வாழ்வு, மரணம் என்று பலவற்றைப் பற்றியும் யோசித்தார். அவர் அறிவு இல்லாதவர் என்று பொருள் அல்ல. அவர் ஏற்கனவே பிரசித்தி பெற்ற ஒரு எழுத்தாளராக இருந்தார். தனது புகழ்பெற்ற Tertium Organum என்ற புத்தகத்தை எழுதியிருந்தார்.

இதுதான் உலகில் சிறந்த மூன்றாவது நூல் என்று நான் சில நாட்களுக்கு முன்பு உங்களிடம் கூறியிருக்கிறேன். முதல் புத்தகம் அரிஸ்டாட்டிலின் Organum ஆகும். இரண்டாவது புத்தகம் பேகன் எழுதிய Novum Organum. மூன்றாவது புத்தகம் அவ்ஸ்பென்ஸ்கி எழுதிய Tertium Organum. அது மூன்றாவது சிந்தனைப் பீரங்கியாகும்.

அவர் ஏற்கனவே அந்த நூலை எழுதியிருந்தார். அவர் ஏற்கனவே உலகப் புகழ் பெற்றிருந்தார். குர்ட்ஜிஃப் பற்றி யாருக்கும் தெரியாது. உண்மையில் அவ்ஸ்பென்ஸ்கி மூலம்தான் குர்ட்ஜிஃப் வெளி யூருக்கு அறிமுகமானார்.

ஒரு புகழ்பெற்ற கணிதமேதை, புகழ்பெற்ற தத்துவவாதி மற்றும் சிந்தனையாளர், சிறந்த எழுத்தாளர் போன்ற தகுதிகள் உள்ள ஒருவரால் தனக்குத் தெரிந்த பல்லாயிரம் விஷயங்கள் குறித்து எழுத முடியும். தனது Tertium organum என்ற சிறந்த புத்தகத்தை குர்ட்ஜிஃபுக்கு அவர் சமர்ப்பணம் செய்திருந்தார். "இவை எல்லாம் நான் அறிந்த விஷயங்கள் என்று அதில் கூறியிருந்தார். அந்தப் புத்தகத்தில் அவர் உபநிஷத யோகி போலவும், தீர்க்கதரிசி போலவும் பேசுகிறார். நீங்கள் அந்தப் புத்தகத்தைப் படித்தால், ஞானம் பெறாத ஒருவரால் எப்படி இதையெல்லாம் எழுத முடியும் என்று வியந்துபோவீர்கள். ஆனால் அவற்றை எழுத முடியும். அதற்குக் கொஞ்சம் புத்திசாலித் தனம் மட்டுமே தேவைப்படுகிறது.

ஆனால் அன்றைய இரவில் அவரால் ஒரு வார்த்தையும் எழுத முடியவில்லை. கண்களில் கண்ணீரோடு திரும்பிவந்தார். குர்ட்ஜிஃபின் கால்களில் விழுந்து அந்த வெற்றுத்தாளைத் திருப்பிக் கொடுத்துவிட்டு, "எனக்கு எதுவும் தெரியாது. அரிச்சுவடியில் தொடங்கி எல்லாவற்றையும் கற்றுத் தாருங்கள்" என்று கேட்டுக் கொண்டார். இதுதான் சிஷ்ய நிலையின் துவக்கமாகும், இப்படிப் பட்ட ஒருவரால்தான் சீடராக மாற முடியும். ஏனென்றால் அவர் தனது தவறான அபிப்பிராயங்கள் அனைத்தையும் உதறித் தள்ளிவிட்டார். புகழ்பெற்ற நிலையில் உள்ள ஒருவருக்கு அது மிகவும் சிரமமான காரியம்.

**இதுபற்றி உங்களுக்குத் தெரியவில்லை என்றால் வெறுமனே காரியமாற்றுவதுபோல் நடிக்காதீர்கள் நீங்களே உங்களுக்கு அறிவுறுத்திக் கொள்ளுங்கள்** கற்றுக்கொள்ளுங்கள். உங்களுக்கு ஏற்கனவே தெரியும் என்று எண்ணினால், உங்களால் எப்படிக் கற்றுக்கொள்ள இயலும்? **காலமும், பொறுமையும்** இருந்தால் சகலமும் அனுகூலமாக நடக்கும்.

நீங்கள் கற்றுக் கொண்டால், கவலைப்படத் தேவையில்லை. **காலமும் பொறுமையும் இருந்தால் சகலமும் அனுகூலமாக நடக்கும்.** இயற்கை எப்போதும் உங்கள்மீது அக்கறை கொண்டிருக் கிறது. நீங்கள் உண்மையானவராக இருந்தால், உங்கள் தேடல் நிஜமானதாக, நீங்கள் பாசாங்கு செய்யாதவராக இருந்தால் காலம்

உங்களுக்கு உதவி செய்யும். உங்களுக்கு ஒத்துழைப்பு வழங்கும். இயற்கை காலத்தை வழங்கும். பொறுமை உங்கள் பக்கத்தைச் சேர்ந்ததாக இருக்க வேண்டும்.

Patient என்ற ஆங்கில வார்த்தை அழகானது. அது தவறான வர்கள் கைக்குச் சென்று மிகவும் மோசமான சொல்லாகிவிட்டது. இப்போது Patient என்றால் நோயுற்ற ஒருவரைக் குறிக்கிறது. பழங் காலத்தில் உடல்நலமற்றவர் Patient எனப்பட்டார். உடல்நலமின்மை என்பது நீங்கள் ஆரோக்கியமாக இருப்பது எப்படியென்று கற்றுக் கொள்ளவில்லை என்றாகிறது. எனவே நீங்கள் கற்றுக் கொண்டாக வேண்டும். பழங்காலத்தில் Patient என்றால் கற்றுக் கொள்ளும் மாணவர் என்றே பொருள்பட்டது. நோயுற்றவர் ஆரோக்கியமாக இருப்பது எப்படி என்று கற்றுக்கொள்ள வேண்டும். அதைக் கற்றுக் கொள்ள நிரம்பவும் பொறுமை தேவை. எனவே அவர் Patient எனப்பட்டார். மற்றபடி நோய்க்கும் அதற்கும் சம்பந்தமில்லை.

ஒவ்வொருவரும் இங்கு நோயுற்றவராகவே இருக்கிறார். தினமும் அது நடக்கிறது. ஜனங்கள் இங்கு வருகிறார்கள்.... நான்கு வாரங்களுக்கு மட்டுமே அவர்கள் வர முடியும். பிறகு திரும்பிச் செல்வது அவர்களுக்கு கஷ்டமாக இருக்கிறது. அவர்கள் என்னிடம் "ஓஷோ! நாங்கள் நோயுற்று இருப்பதாக மீண்டும் எங்கள் அலுவல கத்திற்கு, முதலாளிக்கு எழுதவேண்டும். நாங்கள் நோயுற்று இருந்தால்மட்டுமே இங்கே தங்கியிருப்பதை நீட்டிக்க முடியும். ஆனால் அது பொய் சொல்லல் ஆகிவிடாதா? இதுபற்றி சொல்ல விரும்புகிறீர்கள்?" என்று கேட்கிறார்கள்.

நான் அவர்களிடம், "எழுதுங்கள்! அப்படி எழுதுவது பொய் சொல்வதாகாது. நீங்கள் எல்லோரும் நோயுற்றுத்தான் இருக்கிறீர்கள். அதற்கு உங்களுக்குச் சான்றிதழ் தேவையில்லை. அது முழுமையான நிஜம். நீங்கள் மீண்டும் மீண்டும் வருடக்கணக்கில் அப்படி எழுதலாம். அது பொய்யானதாகிவிடாது" என்பேன்.

நோயுற்று இருப்பது என்பது புத்தநிலை பெறுதலாகும். நீங்கள் புத்தநிலை பெறும்வரை அப்படி எழுதலாம். **நீங்களே உங்களுக்கு அறிவுறுத்திக் கொள்ளுங்கள். காலமும், பொறுமை யும் இருந்தால் சகலமும் அனுகூலமாக நடக்கும்.**

**உங்கள் ஆரோக்கியத்தை அலட்சியம் செய்யாதீர்கள்.**

பிதாகோரஸ் ஆரோக்கியம் என்று கூறுவது இரண்டு அம்சங் களை உள்ளடக்கியது ஆகும். ஒன்று, உடல் ஆரோக்கியம். அடுத்தது

மன ஆரோக்கியம். உடலே உங்கள் கோயிலாகும். அதை அலட்சியம் செய்யாதீர்கள். உங்கள் முட்டாள்தனமான துறவு மனப்பான்மை உடலை நிராகரிக்கும்படி கூறுகிறது. உடலை நிராகரிக்க மட்டும் கூறவில்லை. உடலை அழித்துவிடவும் தூண்டுகிறது. பிதாகோரஸ் துறவியல்ல. அவர் புரிதல் உள்ள மனிதராக இருந்தார்.

"உங்கள் உடலுக்கு மதிப்பளியுங்கள். அதை உதாசீனம் செய்யாதீர்கள்" என்று அவர் கூறுகிறார். உங்கள் உடல் உதாசீனப் படுத்தப்பட்டால், உங்களால் அதன் ஒருங்கிணைப்பைக் கண்டறிய இயலாது. ஏனெனில் உடல் ஒருங்கிசைவு கொண்டது. அக ஒருங் கிணைப்பை அடைய அது உதவுகிறது. உங்கள் உடல் ஆரோக்கியம் மற்றும் உடல்குறித்த ஒவ்வொரு விஷயத்திலும் அக்கறை கொள் ளுங்கள். அதை நேசியுங்கள். மதிப்புக் கொடுங்கள். அது ஒரு பெரிய கொடையாகும். அது ஒரு அற்புதம், விந்தை ஆகும்.

**நிதானத்துடன் செயல்படுங்கள்**
**உடலுக்குத் தரப்படும் உணவு**
**மனதுக்கு ஓய்வு தருவதாக அமையட்டும்**

உடலுக்கு என்ன உணவு தரப்படுகின்றதோ அது மனதுக்கு நிம்மதி தருவதாக மாறுகிறது. உணவு உடலுக்கு ஊட்டம் தருகிறது. நிம்மதி மனதுக்கு ஊட்டம் தருகிறது. லௌகீகவாதிகள் நிம்மதி யைப் பற்றி மறந்து போய்விடுகிறார்கள். அதனால்தான் மேற்கு நாடுகளில் நிறைய அமைதியின்மை நிலவுகிறது. அவர்கள் நிம்மதியை மறந்துவிட்டார்கள். எவ்வாறு ஓய்வுகொள்வது என்று தெரிந்துகொள்ளவில்லை. சுவாதீனப்படுத்திக் கொள்ளாத நிலையில் இருப்பது எப்படி என்று அவர்களுக்குத் தெரியவில்லை. எதுவும் செய்யாமல் மௌனமாக அமர்ந்திருப்பது எப்படி என்று அவர் களுக்குத் தெரியவில்லை. அதை அவர்கள் சுத்தமாக மறந்துபோய் விட்டார்கள். லௌகீகவாதிகள் மறதிநோக்கிச் செல்கிறார்கள். நிறைய உணவு உண்கிறார்கள். உடல் எவ்வளவு அதிகமாகப் பெருத்துப் போகிறதோ அந்த அளவுக்கு மனம் மெலிந்து போகும் என்பதை அவர்கள் மறந்துவிட்டார்கள்.

சில சமயங்களில் நான் பார்க்கும் மனிதர்களுக்கு உடல் மட்டுமே இருக்கும். மனம் இருப்பதில்லை. அடுக்கடுக்காக கொழுப்பு சதைத் திரள்கள் காணப்படும். அதற்கு உள்ளே ஒன்றும் இருக்காது. காய்கறிகளும், முட்டைக் கோசும்தான் இருக்கும். அவர்கள் எவ்வளவுதான் நவீனமானவர்களாக இருந்தாலும், கற்றறிந் தவர்களாகவும், நிறைய விஷயஞானமுள்ளவர்களாக இருந்தாலும்

அதனால் பெரிய வித்தியாசம் ஏற்பட்டுவிடுவதில்லை. காலி ஃபிளவருக்கும், முட்டைக்கோஸுக்கும் இடையிலான வித்தியாசம் பற்றி அவர்கள் விளக்கிச் சொல்லக்கூடும். அது பெரியதல்ல. முட்டைக்கோஸு கல்லூரி சென்றால் அது காலிஃபிளவராகி விடும்.

உணவைக் காட்டிலும் நிம்மதி முக்கியத்துவம் நிறைந்தது. சிலசமயம் சிறிய அளவில் நீங்கள் உபவாசம் இருந்தால் அது நல்லது தான். ஆனால் நிம்மதி குறித்து மறந்துவிடக் கூடாது. ஏனென்றால் அடிப்படையில் இந்த உடல் ஒரு கோயிலாக இருக்கிறது. தெய்வம் உள்ளே இருக்கிறது. தெய்வத்தின் கோயிலாக இருப்பதால் உடலை நேசிக்க வேண்டும். உடல் என்பது ஒரு துவக்கம்தான்! முடிவான விஷயம் உள்ளே இருக்கிறது.

நிம்மதியே உணவாகும். மனதிற்கு தியானம் உணவாக அமைகிறது. நிம்மதி என்பது மௌனம், ஓய்வு, அமைதி, பதட்ட மின்மை, ஒருங்கிணைவு, தியானநிலை போன்ற ஒன்றாகும். சுவா தீனப்படுத்திக் கொள்ளாத நிலையில் மனதை வைத்திருப்பது என்பது வெறுமை, அமைதி, எதையும் செய்வது பற்றிய திட்ட மின்றி இருத்தல், எங்கும் செல்லாது இருத்தல், எங்கும் பதட்டத் துடன் ஓடித்திரியாது இருத்தலாகும். தற்சமயம் இங்கு தங்கி இருத்தலாகும் அதுவே நிம்மதியாகும். இப்போது இங்கே இருப்பது பெருமளவு ஊட்டம் தருவதாகும். காரணம் அப்போது இயற்கை யுடன் நீங்கள் ஆழமாக இணைகிறீர்கள். பிறகு இசை உங்கள்மீது பொழியத் துவங்குகிறது.

கடந்தகாலம் என்பது இனி இல்லை. அது காலாவதியாகி விட்டது. எதிர்காலம் என்பது இன்னும் வரவில்லை, அது இன்னும் ஜனிக்கவில்லை. நிகழ்காலம் மட்டுமே இருக்கிறத. நிகழ்காலம் மட்டும்தான் உயிருடன் இருக்கிறது. நீங்கள் இங்கு இருக்கும்போது வாழ்வு உங்களுக்குள் பிரவாகிக்கிறது. நீங்கள் இங்கே இருக்கும் போது நீங்கள் தெய்வீகத்துடன் இருக்கிறீர்கள். அதுவே போஷாக்கு ஆகும். நிஜமான உணவாக அமையும்.

இந்த அர்த்தத்தில்தான் உபநிஷதங்கள் **"அன்னம் பிரம்மா"**, உணவே கடவுள். கடவுளே உணவு என்று கூறுகின்றன. இந்த அர்த்தம் கொண்ட நிம்மதியே **நிஜமான** உணவாகிறது. உணவு இல்லாதுபோனால் உடல் அழியும். நிம்மதி இல்லை என்றால் மனம் அழியும்.

லௌகீகவாதி உடலைப்பற்றி மட்டுமே சிந்திக்கிறார். ஆன்மீகவாதி மனம்பற்றி மட்டுமே சிந்திக்கிறார். இரண்டும்

பொருந்திவராத நிலையில் உள்ளன. ஒன்றின் மூலம் மனம் செழுமை பெறுகிறது. ஆனால் உடல் ஊட்டமற்றுப் போகிறது. கோயில் அழியும் நிலை பெறுகிறது. மற்றொன்றில் அழகான பளிங்குக் கோயில் இருக்கிறது. ஆனால் தெய்வம் உயிரற்றுக் கிடக்கிறது, அல்லது இன்னும் அங்கு வந்து சேராத நிலையில் இருக்கிறது. இரண்டிலும் ஏதோ ஒன்று இல்லாமல் போயிருக்கிறது.

வானும், மண்ணும் இணைந்த, உடலும், மனமும் கலந்த ஒரு இசை நமக்குத் தேவை. கட்புலன், சூட்சுமம் இரண்டுக்கும் இடையில் ஒரு இணக்கம் ஏற்படும் நிலை நமக்கு அவசியம். உணவு கண்ணால் காணக்கூடியது. நிம்மதி கண்ணுக்குப் புலப்படாதது. உங்களுக்கு அந்த இரண்டும் வேண்டும். அந்த இரண்டுக்கும் இடையில் ஒரு லயம் ஏற்படுதல் அவசியம்.

நிம்மதி என்றால் என்ன என்பதை அறியாத ஒருவர், மித மிஞ்சிய உணவுமூலம் தனக்குத் துன்பத்தை வரவழைத்துக் கொள்கிறார். ஓய்வு பற்றி அவர் அறிந்துகொள்ளாத வரையில் வேறு எதுவும் உதவி செய்திட இயலாது. உணவுக் கட்டுப்பாடு உதவாது. பயிற்சிகளும் உதவி செய்யாது. நல்லொழுக்கம் பயன் தராது. விரைவிலோ அல்லது தாமதமாகவோ அவர் மீண்டும் சாப்பிடத் துவங்கிவிடுவார். ஏனென்றால், அவரது அகஉடல் மிகவும் வெறுமை யாக இருப்பதாக உணர்கிறது. அதை நிறைவுசெய்ய வேறு வழி இல்லை என்று அவருக்குத் தெரியும். அவருக்கு ஒரு வழிதான் தெரியும். உள்ளே உணவைத் தள்ளத் தொடங்குகிறார்.

உணவின் மீது ஆர்வமுள்ள பிரச்சினையுடன் மக்கள் என்னிடம் வரும்போது நான் தரும் ஒரே ஆலோசனை, நன்கு சிந்தனை செய் யுங்கள் என்பதுதான். உணவு குறித்துக் கவலைப்பட வேண்டாம். நன்கு அன்பு செய்யுங்கள். நன்கு சிந்தியுங்கள். பிரச்சினை மறைந்து போகும். நீங்கள் நிறைய அன்பும், சிந்தனையும் உடையவராக இருந்தால் உங்களுக்கு அதிக உணவு தேவையில்லை. உணவு பதிலி என்ற மாற்றுப் பொருள்தான். ஏனெனில் நீங்கள் அக உணவைத் தவறவிட்டுவிட்டீர்கள். அதற்குப் பதிலாக வெளி உணவைத் தந்து சரிக்கட்ட முயல்கிறீர்கள்.

நிம்மதியுள்ள மனிதர் மிகமிக கவனமும், விழிப்பும் கொண்ட வராக, தான் என்ன உண்கிறோம் என்ற தெளிவுடன் இருப்பார். எவ்வளவு உணவு உண்கிறோம் என்று தெரிந்துவைத்திருப்பார். அவர் தேவைக்கு அதிகமாக உண்ணமாட்டார். தேவைக்குக் குறை

வாகவும் உண்ணமாட்டார். அவர் எப்போதும் நடுநிலையில் இருப்பார். சமநிலையில் இருப்பார்.

**அதிக அக்கறை காட்டுதல் அல்லது அக்கறையற்ற குணம் என்ற இரண்டையும் தவிர்த்துவிடுங்கள்**
**அதீதம் என்பது அதிகம் வசீகரிக்கப்பட்டது போன்றதாகும். பொறாமையும் இவ்வகைப்பட்டதுதான்.**

பிதாகோரஸ் எப்போதும் தங்கமான ஒரு குறியீடு பற்றி நினைவூட்டுகிறார். அது மையத்தில் இருத்தல் என்பதாகும். அது **மாஜிஹிம் நிகாய்** என்று புத்தர் குறிப்பிட்டு நினைவூட்டியது போன்றதாகும். நடுவில் உள்ள பாதை என்பதே அதன் பொருள். **அதிக அக்கறை காட்டுதல், அல்லது அக்கறையின்மை என்ற இரண்டையும் தவிர்த்துவிடுங்கள்...**

அதிகமாக மக்கள் கவனத்தைக் கவர வேண்டும் என்று எதிர் பார்க்காதீர்கள். அது அகந்தைசார்ந்த பயணம் ஆகும். அதிகம் புகழ்பெற ஆசைப்படாதீர்கள். அது தற்பெருமை சார்ந்த பயணம். முக்கியத்துவம் அற்ற சாதாரண மனிதராக இருக்கமுயலுங்கள் என்பது இதன் பொருள் அல்ல. உங்களைப் பற்றி யாருக்கும் தெரிந்திருக்கக் கூடியது. நீங்கள் அனாமதேயமாக இருக்க முயலுங்கள் என்று அர்த்தமல்ல. இதுவும் அதுபோன்ற ஒரு அகந்தைப் பயணம் தான். மறுபக்கம் உள்ள பயணம். அந்த இரண்டு பக்கங்களையும் தவிர்த்துவிடுங்கள்.

அனைத்து அதீதங்களும் தவிர்க்கப்பட வேண்டும். அளவுக்கு அதிகமானால் அது தீமை பயக்கும் என்பது பிதாகோரஸ் கருத்து. எனவே மையத்தில் இருங்கள். சரியாக மையத்தில் இருப்பது பவித் திரமானது. நீங்கள் தன்னலம் அற்றவராக இருக்க வேண்டாம். சுய நலமும் வேண்டாம். நிறைய உணவு உண்ணாதீர்கள். அதேசமயம் அதிகமாகப் பட்டினி விரதங்களும் வேண்டாம். ஆடம்பரத்தின்மீது ஆசை வைக்காதீர்கள். ஆடம்பரத்திற்கு எதிரான அதிக எளிமையும் வேண்டாம்.

**ஆடம்பரமும், பேராசையும்**
**ஒரேவிதமான பலன்களையே தரும்.**
**எல்லா விஷயங்களில் இருந்தும் ஒருவர்**
**நியாயமானதையும், நல்லதையும் மட்டுமே**
**தேர்ந்தெடுக்க வேண்டும்.**

இந்த உலகைத் துறக்க வேண்டாம். லௌகீகவாதியாகவும் இருக்க வேண்டாம். நடுநிலையில் மகிழ்ந்திருங்கள். நடனமிட்டு

மகிழுங்கள். ஏனென்றால் நடுநிலையே ஒரு மகிழ்ச்சியான நடன நிலைதான். பாடிக் களித்திருங்கள். சமநிலையே ஒரு பாடல்தான். இசையாக இருங்கள். ஏனென்றால், சமநிலை இசையை உருவாக்கு கிறது.

ஒவ்வொன்றிலும் தங்கக் குறியீட்டு நிலையைப் பின்பற்ற வேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் தங்கக் குறியீட்டு நினைவூட்டலைப் பின்பற்றினால் தங்கமாக மாறுவீர்கள்; உங்களுடைய அற்ப உலோகம் மதிப்புமிக்க தங்கமாக மாறிவிடும்.

தங்கம் என்பது உயர்ந்த மதிப்பின் அடையாளம். அதனால் தான் பிதாகோரஸ் தனது சூத்திரத்தை, தங்க வரிகள் என்று அழைத்தார். அது ஒரு ரசவாத விளக்கமாகும். காலங்காலமாக மட்ட உலோகத்தைத் தங்கமாக மாற்றும் முறைகள் பற்றிய முயற்சி நடந்து வருகிறது. இது மட்ட உலோகம், தங்கம் சம்பந்தப்பட்டதல்ல. அவர்களின் முழுமையான நோக்கம் பாலுறவு குணமுள்ள மிருகத்தை பேரின்ப நிலை கொண்ட ஆன்மாவாக, மனிதனிடமுள்ள மிருகத்தை தெய்வமாக மாற்றுவதாகும். அந்த நிலை தங்கத்தை பிரதிநிதித்துவப் படுத்திக் காட்டப்படுகிறது.

தங்கக் குறியீட்டு நிலையைப் பின்பற்றினால் நீங்கள் தங்கமாக மாறலாம். சமநிலை கொண்ட பாதையைத் தேர்வு செய்யுங்கள். அறிவின் மர்மங்கள் எல்லாம் உங்களுக்குப் பிடிபடும். எனது சந்நியாசிகளுக்கு நான் கூறும் செய்தியும் இதுதான். உலகைத் துறக்க வேண்டாம். அதைப் பிடித்துக்கொண்டு தொங்கவும் வேண்டாம்.

இன்று இவ்வளவு போதும்.

அத்தியாயம் - 2

முதல் கேள்வி

**ஓஷோ,**

**இப்போது இங்கு உங்களை நான் பருக இயலும். உங்கள் புத்த நிலையில் பங்குகொள்ள முடியும். ஆனால் நான் அதை விரும்பவில்லை. நாட்கள் செல்லச் செல்ல என்னால் முடியாது போகிறது. ஓஷோ, ஒன்றை உதறித்தள்ள முடியாத பழக்கதோஷம்தான் காரணமா?**

வாழ்வில் மிகவும் சிரமமான காரியம், கடந்தகாலத்தை உதறுவதுதான். ஏனென்றால், கடந்த காலத்தை உதறுவது என்பது முழுமையான அடையாளத்தை உறுவுவதாகும். முழுமையான குணாதிசயத்தை உதறுவதாகும். அது உங்களையே உதறுவதாகும். கடந்தகாலம் என்பதைத் தவிர நீங்கள் வேறல்ல. பழக்கதோஷம் என்பதைத் தவிர நீங்கள் வேறல்ல.

அது ஆடைகளை உதறித்தள்ளுவது போன்றதல்ல. ஒருவருடைய தோலை உரிப்பது போன்றதாகும். நீங்கள் யார் என்று

முழுமையாக அறிந்துவைப்பது கடந்தகாலமாகும். அதை உதறுவது சிரமம், கடினம். வாழ்வில் மிகவும் சிரமமான காரியம் அது. ஆனால் தைரியமாக உதறக்கூடியவர்தான் வாழ முடியும். உதறாத மற்றவர்கள் வாழ்வதாக நடிக்கிறார்கள். தங்களை இழுத்து சென்றபடி காலம் தள்ளுகிறார்கள். அவர்களிடம் உயிர்ப்பு இல்லை. அப்படி இருக்கவும் வழியில்லை. குறைந்தபட்ச வாழ்வு வாழ்கிறார்கள். குறைந்தபட்ச வாழ்வு என்பது விஷயத்தை முழுமையாக தவறவிட்டது போன்றதாகும்.

உங்களது உள்ளுறை ஆற்றல்மீது நம்பிக்கைகொண்டு வாழும்போது மட்டும்தான் வாழ்வில் மலர்ச்சி ஏற்படும். அந்த நம்பிக்கைதான் உங்கள் ஆன்மாவை, சத்தியத்தை, தெய்வீகத்தைக் கொண்டுவந்து சேர்க்கிறது. அப்போதுதான் நீங்கள் தெய்வீகத்தின் சந்நிதானத்தில் இருக்கும் உணர்வைப் பெறுகிறீர்கள்.

நீங்கள் எந்த அளவுக்கு காணாமல் போகிறீர்களோ அந்த அளவுக்கு தெய்வீக தரிசன உணர்வைப் பெறுவீர்கள். தரிசன உணர்வு பின்னர்தான் ஏற்படும். நீங்கள் காணாமல் போகவேண்டும் என்ற முதல் விதிமுறை நிறைவு செய்யப்பட வேண்டும். அது ஒருவித மரணம் போன்றது. அது சிரமமான காரியம்.

உங்கள் பழக்கவழக்கங்கள் உள்ளே ஆழமாக வேரோடிக் கிடக்கின்றன. காரணம் ஆரம்பம்முதலே பழக்கவழக்கத்திற்கு அடிமைப்பட்டுப் போய்விட்டீர்கள். நீங்கள் பிறக்கும் கணமும் முதலே அதற்குப் பழக்கப்பட்டுப் போய்விட்டீர்கள். நீங்கள் கொஞ்சம் ஜாக்கிரதையும், விழிப்பும் கொள்ளும் தருணம் வரும் போது பழக்கவழக்கம் உங்களுக்குள் ஆழமாகப் பதிந்துவிடுகிறது. அந்த ஆழத்திற்குள் நீங்கள் ஆழமாகச் செல்லாதவரையில், மௌன மாகவும், கபடமற்றும் இருக்காதவரையில் நீங்கள் யார் என்று உங்களால் அறிந்துகொள்ள இயலாது.

உங்களை ஒரு இந்துவாகவோ, கிறிஸ்தவராகவோ, பொதுவுடைமைவாதியாகவோ நீங்கள் அறிந்து வைத்திருக்கிறீர்கள். உங்களை ஒரு இந்தியராகவோ, சீனராகவோ, ஜப்பானியராகவோ நீங்கள் அறிந்து வைத்திருக்கிறீர்கள். இப்படிப் பலவற்றை நீங்கள் தெரிந்து வைத்திருக்கிறீர்கள். அந்த விஷயங்கள் எல்லாம் உங்கள் மீது திணிக்கப்பட்ட பழக்கவழக்கங்கள்தான். இந்த உலகிற்கு நீங்கள் முழு மௌனத்துடன், தூய்மையுடன், கபடமற்று வந்தீர்கள். உங்கள் பேதைமை பூரணமானதாகும்.

தியானம் என்பது அந்த ஆழமான மையத்திற்குள் ஊடுருவிச் செல்வதாகும். ஜென் மனிதர்கள் அதை "உண்மையான முகத்தை அறிந்துகொள்ளல்" என்று குறிப்பிடுகிறார்கள்.

அந்தப் பழக்கவழக்கத்தை முதலில் புரிந்துகொள்ள வேண்டும். அந்த பழக்கவழக்கம் காரணமாக நீங்கள் மிகவும் முக்கியமான, இயல்பான ஒன்றை உங்களிடம் இயல்பாக அமைந்துள்ள ஒன்றை இழந்து விடுகிறீர்கள். அதன்பின்னர் நீங்கள் மனிதராக இருக்க முடியாது. வெளித்தோற்றத்தில் மட்டுமே அப்படி இருக்கிறீர்கள். நீங்கள் ஒரு இயந்திரமனிதன் போலாகிவிடுகிறீர்கள்.

இயந்திரமனிதனால் தன்னைப்பற்றித் தெரிந்துகொள்ள முடியாது. தான் யார் என்ற யோசனை அதற்கு இல்லை. தன்னைப் பற்றி அதன் கருத்துக்கள் எல்லாம் கடன் வாங்கப்பட்டவை. மற்ற இயந்திர மனிதர்களிடம் இருந்து பெற்றவை. இயந்திர மனிதர் களால் சுயமாகச் செயல்பட்டு இயங்க இயலாது. விருப்பம் கொள்ளும் திறமை அதற்கு இல்லை. அது பிறரைச் சார்ந்து செயல்படும் இயல்புள்ளது. அது தனது சுதந்திரத்தை இழந்துவிட்டது. அது அதனுடைய மனநோயாகும்.

மனித சமுதாயம் முழுவதும் இன்று மனநோய் வசப்பட்டிருக் கிறது. உங்களுக்கு இயல்பானவர்களாகத் தோன்றும் மனிதர்கள் எல்லாம் இயல்பானவர்கள் அல்ல. இந்த முழு உலகமும் ஒரு பைத்தியக்கார விடுதி போலாகிவிட்டது. முழு உலகும் பைத்தியக் கார விடுதியாகிவிட்டதால் அதைப் பார்த்து அறிவது சிரமமாக இருக்கிறது. எல்லா இடங்களிலும் உள்ள மனிதர்கள் உங்களைப் போலவே இருக்கிறார்கள். எனவே நீங்கள் இயல்பாக இருப்பது போலவே மற்றவர்களும் இயல்பாக இருப்பதாக நினைக்கிறீர்கள்.

ஒரு மனிதன் உலகில் இயல்பானவராக இருப்பது மிகவும் அரிது. இந்த உலகம் இயல்பாக இருக்க அனுமதிப்பதில்லை. புத்தர் இயல்பானவர், ஏசு இயல்பானவர், முகமது நபி இயல்பானவர். ஆனால் அவர்கள் அசாதாரண மனிதர்கள் போல் தோன்றினார்கள். காரணம் அவர்கள் மிகவும் சிறுபான்மையானவர்கள். பெரும்பான் மையான மனிதர்கள் மனநோய் உள்ளவர்கள். அந்த பெரும்பான்மை யானவர்கள் தீர்மானமானவர்கள். அந்த சமூகம் ஏசுவைச் சிலுவை யில் அறைந்தது. அது சாக்ரட்டீஸுக்கு விஷமிட்டுக் கொன்றது. அது மன்சூரைக் கொன்றது.

இயந்திர மனிதனால் சுயமாகச் சிந்திக்க முடியாது. அது எப்போதும் அதிகாரம் படைத்தவர்களை எதிர்பார்க்கிறது. என்ன

செய்ய வேண்டும் என்று சொல்லக் கூடியவர்களை எதிர்பார்க்கிறது. அது கீழ்ப்படியத் தயாராக இருக்கிறது. தேர்வுசெய்து செயல்பட ஒருபோதும் தயாராக இல்லை. அதனால்தான் பிதாகோரஸ் மற்றும் பல பெரிய குருமார்களும் தேர்வு செய்து செயல்படுமாறு உங்களிடம் கூறுகிறார்கள். அது உங்களுக்குள் ஒளியாக மாறும்.

இயந்திர மனிதனால் சுயவிருப்பம் கொள்ள இயலாது. ஏனென்றால், அவ்வாறு செய்ய அது கற்றுக் கொள்ளவில்லை. அதனால் நீங்கள் "இப்போது இங்கே நான் உங்களைப் பருக முடியும். உங்கள் புத்தநிலையை பங்குபோட்டுக் கொள்ள முடியும். ஆனால் அவ்வாறு செய்ய விரும்பவில்லை" என்கிறீர்கள். காரணம், நீங்கள் சுயவிருப்பம் கொள்ள இயலவில்லை. சுயமாகத் தேர்வு செய்ய முடியவில்லை. நீங்கள் முழுமையாகப் பிறரைச் சார்ந்து இருக் கிறீர்கள். இயந்திர மனிதனால் சுயமாகச் சிந்திக்க முடியாது. காரணம், அவ்வாறு செய்ய அது கற்றுக் கொள்ளவில்லை. சுயவிருப்பம் கொள்ள இயலாத நிலையில் இருப்பது பரம்பரைக் குணமல்ல. அது பாரம்பரியமாக வந்த திறமைக் குறைவு அல்ல. அதற்குப் பதிலாக, சாதிக்கப்பட்ட ஒரு திறமைக் குறைவாகும்.

உண்மையைக் கண்டறிய நீங்கள் பிறந்திருக்கிறீர்கள். அதற்கு நீங்கள் தகுதி பெற்றிருக்கிறீர்கள். இயற்கையைக் கண்டறியவும், அதனுடன் தொடர்பு கொள்ளவும் ஒவ்வொரு குழந்தையும் தகுதி பெற்றிருக்கிறது. அவ்வாறு செய்யவும் அது விரும்புகிறது. ஆனால் நாம் அதை தடுத்துவிடுகிறோம். மெல்லமெல்ல எல்லாக் கதவுகளும் மூடப்பட்டு விடுகின்றன. மெல்ல மெல்ல அவர் ஒருவிதமான தகுதி யின்மையை ஏற்படுத்திக் கொள்கிறார். ஒரு வகையான கையலாகாத் தனத்தை உருவாக்கிக் கொள்கிறார். அதன்பின்னர் சிறையின் கதவுகள் திறந்துகிடப்பதை அவர் கண்டாலும் வெளியே வருவதில்லை. சிறைக் கம்பிகளை பிடித்துக் கொண்டு தொங்குகிறார்.

இது வெகுகாலம் கூண்டில் அடைபட்டுக் கிடக்கும் ஒரு கிளி தனக்குச் சிறகுகள் இருப்பதையே மறந்து விடுவது போன்றதாகும். கூண்டின் கதவுகளைத் திறந்து வைத்தாலும் அது வெளியே வராது. அதை வெளியே கொண்டுவர முயன்றால் கூண்டின் கம்பிகளை இறுகக் கௌவிக் கொண்டுவிடும்.

அதுபோலத்தான் உங்களுக்கும் நடந்து கொண்டிருக்கிறது. நீங்கள் சாதித்துப் பெற்ற கையாலாகத்தனம் அது. அந்த கையாலாகத் தனத்தின் அர்த்தம் என்னவென்றால், நீங்கள் ஆரம்பகாலத்தில் பெற்ற கல்வி மற்றும் வளர்ப்பு முறைகள் மனிதன் என்ற வகையில்

உங்களுக்கு பலன் தராமல் அதைாயதகைக் கொடுத்துவிட்டன. சமூகத்தில் ஒரு ஸ்தானத்தை அடைய விரும்பிச் செயலாற்று வதற்கான வாய்ப்பைத் தராமல் இருந்துவிட்டன.

பிள்ளைகள் சுயவிருப்பம் கொள்ளப் பெற்றோர் அனுமதிப்ப தில்லை. போதாக்குறைக்கு ஆசிரியர்களும் இருக்கிறார்கள். அந்த ஆசிரியர்கள் பெற்றோர் அல்லது இந்த சமூகத்தின் மூலம் நியமிக்கப் பட்டவர்கள். அவர்கள் காலாவதியான விஷயங்களை உங்களுக்கு வழங்குகிறார்கள். கல்விமுறைகள் அமைப்பு எல்லாம் கடந்த காலத்துக்கே சேவை செய்கின்றன. அவை உங்களுக்குச் சேவை செய்யவில்லை என்பது நினைவிருக்கட்டும். மழலையர் பள்ளி தொடங்கி கல்லூரிகள்வரையிலும் உள்ள ஆசிரியர்கள் மற்றும் பேராசிரியர்கள் எல்லோரும் கடந்த காலத்திற்குச் சேவை செய்து கொண்டிருக்கிறார்கள். கடந்தகாலத்தை நிலைநிறுத்திக் கொண் டிருக்கிறார்கள். அவர்கள் உங்களுக்கானவர்கள் அல்ல. அவர்கள் உங்களுக்கு உதவ இயலாது. அவர்கள் உங்களைப் பழக்கவழக்கத் திற்கு அடிமைப்படுத்துகிறார்கள்.

பாதிரியார்களும், அரசியல்வாதிகளும் உங்களைப் பழக்கத் திற்கு அடிமைப்படுத்துகிறார்கள். நீங்கள் சுதந்திர மனிதனாக இருப்பதை யாரும் விரும்பவில்லை. ஒவ்வொருவரும் உங்களை அடிமையாக வைத்திருக்க விரும்புகிறார்கள். எந்த அளவுக்கு நீங்கள் அடிமையாக இருக்கிறீர்களோ அந்த அளவுக்கு உங்களை தங்கள் சுயநலத்திற்குப் பயன்படுத்திக்கொள்ள முடியும். தலைவருக்குத் தொண்டர்கள் தேவை. அவர் எங்கு சென்று தொண்டர்களைத் தேடுவார்? ஜனங்கள் அடிமைகளாக, தங்கள்மீது யாராவது ஒருவர் ஆதிக்கம் செலுத்துபவராக இருக்கவேண்டும் என்று தொடர்ந்து எதிர்பார்க்காது போனால் தொண்டர்களுக்கு அவர் எங்கே போவார்?

முட்டாள் அரசியல்வாதிகள் லட்சக்கணக்கான மக்கள்மீது ஆதிக்கம் செலுத்துகிறார்கள். அதற்குக் காரணம், லட்சக்கணக்கான அந்த மக்கள் மனம் சார்ந்த அடிமைத்தனத்துக்குத் தாழ்ந்து விட்டார்கள். சுயமாகச் செயல்பட அவர்களால் முடியவில்லை. தனித்து இருப்பதைக் காட்டிலும் ஒருவன் குருடனாக இருந்தாலும் அவனைப் பின்பற்றுவது நல்லது என்று நினைக்கிறார்கள். அவர்கள் செம்மறியாடுகள் போலாகிவிட்டார்கள். அவர்கள் ஜனங்களாக, மனிதர்களாக இருக்கவில்லை. இயந்திர மனிதன் ஒரு செம்மறியாடு போன்றது. இயந்திரமனிதன் மந்தை மிருகம் போன்றது.

செம்மறியாடுகள் நடந்து செல்வதை நீங்கள் கண்டதுண்டா? ஒன்றுடன் ஒன்று நெருங்கி நின்றபடி மந்தையில் இணைந்து கொள்கின்றன அல்லவா? ஒவ்வொரு ஆடும் பயந்து கிடக்கிறது. இயந்திர மனிதனின் அடிப்படை நிலை அம்சம் சார்ந்ததே ஆகும். எல்லாவித பயங்களும் உள்ளன. பயத்தின் மூலம் ஆரம்பம் முதலே நஞ்சூட்டப் பட்டுவிட்டது. நரகம் பற்றிய பயம், மரியாதையின்மை குறித்த பயம், உலகில் ஒரு தோல்வியாளராக இருக்கும் பயம்... அச்சம் அச்சம் மேலும் மேலும் அச்சம்.

சண்டிக் குதிரையின் முன்னால் காரட்டை நீட்டி முன்னோக்கி நடத்திச் செல்வதுபோல உங்களுக்கு எல்லாவிதமான உத்திரவாதங்களையும் பாதிரியார்கள், அரசியல்வாதிகள் மற்றும் ஆசிரியர்கள் வழங்குகிறார்கள். உங்களுக்கு இம்மையிலும், மறுமையிலும் எல்லாவிதப் பரிசுகளம் கிடைக்கும் என்று உறுதி கூறுகிறார்கள்.

இயந்திர மனிதன் தான் பக்குவப்படத் தொடங்கும் வருடங்களில் மற்றவர்களின் வடிவமைப்பைத் திட்டங்கள், வழிநடத்தல்கள், நோக்கங்கள் போன்றவற்றிற்குப் பயன்படுத்துவதை வழக்கமாக்கிக் கொள்கிறான். அவனது ஆசைகளை நிறைவேற்ற மற்றவர்கள் காரியமாற்ற வேண்டும். திறமையுடனும், திருப்தியளிக்கும் வகையிலும் செயல்பட வேண்டும். சுயமாக அதைச் செய்ய அவன் கற்றுக் கொள்ளவில்லை. இயந்திரமனிதனாக வாழும் அவன் ஒரு மனிதப் பிறவிதான். அவனுக்கு இறைவன் பிறப்புரிமையாக வழங்கிய மனித சாத்தியங்களை விருப்பத்துடன் அவன் நிராகரிக்கிறான். இப்போது அந்த மனதின் கொடுங்கோன்மையை விரும்பும், கொடுங்கோன்மையின் துணை தேவைப்படும் ஒருவனாக மாறுகிறான். தனது வாழ்நாள் முழுவதும் அது தேவைப்படுகிறது. அது இல்லாது போனால் அவன் புத்தபுலத்தின் ஒரு அங்கமாகி, தனது உறக்கத்திலிருந்து விழித்து எழுந்திருப்பான்.

அந்த விழிப்புணர்வே சடோரியாக, சமாதியாக மாறுகிறது. அதுவே ஞானமடைதலாகும். நீங்கள் ஏற்கனவே பெறாத எதையும் குரு கொடுத்துவிட முடியாது. குரு உங்களிடமுள்ள பழக்க வழக்கங்களை அகற்றுகிறார். உங்களைத் தனிமைப்படுத்தி, பிறந்த நிலையில் இருக்கச் செய்கிறார். குரு உங்களை மீண்டும் குழந்தையாக மாற்றுகிறார். குருவின் முழுமையான நோக்கம் அதுதான்.

ஆனால் இது கட்டாயப்படுத்தி உங்கள்மீது திணிக்கப் படுவதில்லை. பழக்கவழக்கங்களை உதறித் தள்ள நீங்கள் தைரியம் மிகுந்தவராக இருக்கவேண்டும். பெரும் துணிச்சல் தேவைப்படு

கிறது. சந்நியாசியாவதன்மூலம் நீங்கள் எற்கனவே உங்கள் துணிவைக் காட்டிவிட்டீர்கள். எதிரில் என்னுடன் அமர்ந்திருப்பதன் மூலம் நீங்கள் ஏற்கனவே உங்கள் துணிவைக் காட்டிவிட்டீர்கள்.

கொஞ்சம் கூடுதல் துணிச்சல்மட்டும் போதும். உங்கள் பழக்கவழக்கங்களை உதறத் தொடங்கும்போது உங்களிடம் உள்ள சிறகுகள்குறித்த விழிப்புணர்வு ஏற்படுகிறது. அந்த சிறகுகள் மேம்பட்ட உண்மைநிலைக்கு அழைத்துச் செல்லும். தனியாகத் தனிமை நிலைக்கு தூக்கிச் செல்லும். ஆனால் நீங்கள் கபடமற்று இருந்தால் மட்டுமே அங்கு செல்ல முடியும். பழக்கவழக்கங்களின் பிடியில் சிக்காமல் கடந்த காலத்தின் மூலம் அடையாளப்படுத்தப் படாமல் இருக்க வேண்டும்.

இப்போது என்னை நீங்கள் பருக முடியும் என்று எனக்குத் தெரியும். யாரும் தடை செய்யவில்லை. உங்களை நான் வரவேற் கிறேன். சூழ்நிலை முழுமையாக ஆதரவளிக்கிறது.

நீங்கள் "என்னால் முடியாது" என்கிறீர்கள். உங்களால் மட்டுமே இதைச் செய்ய முடியும். உங்கள் சார்பில் வேறு யாரும் செய்ய முடியாது. உங்கள் சார்பாக வேறு யாரோ செய்வது உங்களை மீண்டும் இயந்திர மனிதனாகவே இருக்கச் செய்துவிடும். இந்தக் காரியத்தை நீங்கள்தான் செய்தாக வேண்டும். இதற்கு முன்பு நீங்கள் எதையும் செய்தது இல்லை. ஆகவே நீங்கள் இதைச் செய்தாக வேண்டும். எவ்வளவு காலம் பிடித்தாலும் செய்துமுடிக்க வேண்டும். உங்க ளுக்காக நான் இதைச் செய்ய முடியாது. இந்தக் காரியத்தை நான் வசீகரமானதாக, உள்ளத்தைத் தூண்டக் கூடியதாகச் செய்ய முடியும். ஆனால் நீங்கள் செயலில் ஈடுபட வேண்டும்.

உங்கள் வாழ்வின் சுதந்திரத்திற்காக நீங்கள் செய்யும் முதல் காரியம் இதுதான். முதற்படி என்பது பயணத்தில் பாதியை நெருங்கி விட்டதற்குச் சமம். மீதமுள்ள மறுபாதி எளிதானது. அது தானே நடந்துவிடும்.

ஒருமுறை சாத்தான்கள் எல்லாம் ஒன்றுகூடின. உலகத்தை வேகமாகவும், எளிதாகவும் அழிப்பது எப்படி என்று கலந்து ஆலோசித்தன. எல்லாம் ஒன்று சேர்ந்து உட்கார்ந்து யோசித்தன.

கடைசியாக கூட்டத்தில் ஒரு சலசலப்பு.

கூட்டத்திலிருந்து மெல்ல எழுந்து நின்ற சினம் "உலகத்தை அழிக்கும் பணிக்குச் செல்ல என்னை அனுமதியுங்கள்" என்று கேட்டது. "நான் அண்ணன் தம்பிகளை ஒருவருக்கு ஒருவர் எதிராகத்

திருப்புவேன். மனிதர்களை ஒருவர் மீது ஒருவர் கோபம் கொள்ளும்படி செய்வேன். மனிதர்கள் ஒருவரை ஒருவர் அழித்துக் கொள்வார்கள்" என்று கூறியது.

ஆனால் சாத்தான்களின் தலைவருக்கு அது திருப்தியளிக்கவில்லை. கூட்டத்திலிருந்து காமம் எழுந்து நின்று பேசியது. "மனித மனங்களை நான் கெடுப்பேன். அன்பைக் காணாமல் போகச் செய்து விடுவேன். மனிதர்கள் மிருக நிலைக்குச் சென்றுவிடுவார்கள்" என்றது.

அதைக் கேட்ட பேராசை அதிருப்தியுடன் தலையசைத்து விட்டு, "என்னை மனிதர்களிடம் செல்ல அனுமதியுங்கள். நான் மனிதர்களின் மனதில் அழிவுக் குணமுள்ள ஆசைகளைத் திணிப்பேன். மனிதர்களின் கட்டுப்படுத்தமுடியாத ஆசைகள் அவர்களை அழித்துவிடும்" என்று விளக்கியது.

இரட்டையர்களான குடிப்பழக்கமும், அதிகம் உண்ணும் ஆசையும் எழுந்து நின்றன. மனிதர்கள் உடலில் நோயையும், மனங்களில் மந்தநிலையையும் தங்களால் எப்படி உருவாக்க முடியும் என்று அவை விவரித்தன. பகைமை, பொறாமை, வெறுப்பு போன்ற ஒவ்வொரு சாத்தான் குணங்களும் தங்களால் எவ்விதம் மனிதர்களை அழிக்க இயலும் என்று விளக்கின. சோம்பேறித்தனம் எழுந்து, தன்னாலும் அப்பணியைச் செய்ய முடியும் என்றது.

இவை எதுவும் தலைவருக்குத் திருப்தி அளிப்பதாக இல்லை. இறுதியாக தலைவரின் கடைசி உதவியாளர் பேசினார். "மனிதன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்று கடவுள் ஆசைப்படுகிறார் தெரியுமா என்று அவனிடம் நான் கவர்ச்சியாகப் பேசுவேன். அவனது திட்டங்கள் எல்லாம் நியாயமானதாகவும், தூய்மையானதாகவும், துணிச்சலானதாகவும் இருந்தால் எவ்வளவு நன்மை கிடைக்கும் என்பதை விளக்குவேன். வாழ்வில் நல்ல நோக்கங்களுடன் இருக்க அவனை நான் ஊக்கப்படுத்துவேன்."

அந்த விளக்கத்தைக் கேட்ட தலைவர் சலிப்பை வெளிப்படுத்தினார். ஆனால் உதவியாளர் தொடர்ந்து பேசினார். "நான் மனிதனிடம் 'இப்போது ஒன்றும் அதற்கு அவசரமில்லை. இந்த காரியங்களை நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம். சூழ்நிலை சாதகமாக இருக்கும்போது நற்காரியங்கள் செய்வதை ஆரம்பிக்கலாம்' என்று ஆலோசனை தருவேன்" என்றது.

அதைக் கேட்ட சாத்தானின் தலைவர் மகிழ்ந்து போனார். "மனிதர்களை அழிக்கப் பூமிக்குச் செல்லவேண்டிய ஆள் நீதான்" என்றார்.

எப்போதெல்லாம் உங்கள் "நாளைக்குப் பார்க்கலாம்" என்கிறதோ அந்த மனம் சாத்தானைப் போல் செயல்படுகிறது என்பதைக் கவனத்தில் கொள்ளவேண்டும். செயல்பட வேண்டிய தருணம் இப்போது இங்கே இருக்கிறது. அதை ஒருபோதும் தள்ளிப் போட வேண்டாம். தள்ளிப்போடுதல் ஒரு போதைப் பழக்கம் போலாகிவிடும். வாழ்வை அழிக்கும் மோசமானது என்னவென்றால், எதையும் நாளைக்கு என்று தள்ளிப்போடும் எண்ணமே ஆகும். நாளை என்பது என்றும் இல்லை. காரியங்கள் செய்யாமல் நாளை என்று ஒருவர் தள்ளிப் போட்டுக் கொண்டே இருந்தால், ஒருநாள் மரணம் வந்து சேர்ந்துவிடும். காரியம் செய்ய இயலாமல் காலம் கடந்துவிடும்.

இனி தள்ளிப்போட வேண்டாம். நீங்கள் **நிச்சயமாகப்** பெற்றுள்ள கணம் இதுதான். அடுத்த கணம் வரும் என்பது உறுதி யில்லை. முழுமையில் இணைந்து வாழ்ந்திட வேண்டிய தருணம் இதுதான்.

**இரண்டாவது கேள்வி**

**ஓஷோ,**

**மனித சமூகம் குறித்த உலகக் கருத்தரங்கிற்கு நீங்கள் வழங்கும் செய்தி என்ன?**

உலகம் சார்ந்த புதிய மனிதன் புதிய மனித சமூகம், புதிய உயிர் வாழ்க்கைக் கோட்பாடு குறித்து நான் போதிக்கிறேன். ஹோமோ நோவஸ் என்ற கருத்தை நான் பறைசாற்றுகிறேன். பழைய மனிதன் செத்துக் கொண்டிருக்கிறான். இனி தொடர்ந்து அவன் பிழைத் திருக்க உதவி செய்ய அவசியமில்லை. பழைய மனிதன் மரணப் படுக்கையில் கிடக்கிறான். அதற்காகப் புலம்ப வேண்டியதில்லை. உயிர் பிரிய உதவலாம். பழையது மறைந்தால் மட்டுமே புதியது பிறக்கும். பழைமையின் அழிவிலிருந்து புதியது பிறக்கிறது.

புதிய மனம் தோன்ற வேண்டும் என்பதே நான் மனித சமூகத் திற்கு விடுக்கும் செய்தியாகும். அதற்குக் குறைவான எதுவும் தேவையில்லை. மேம்படுத்தப்பட்ட ஏதோ ஒன்றோ, கடந்த

காலத்துடன் தொடர்பு உள்ள ஏதோ ஒன்றோ வேண்டாம். முழுமையாகத் தொடர்பற்றுப் போனது வேண்டும்.

இன்றுவரை மனிதன் வாழ்ந்துவரும் வாழ்க்கை உண்மையானது அல்ல. அதிகாரப்பூர்வமானது அல்ல. மனிதன் மிகவும் போலியான ஒரு வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கிறான். பெரும் நோய்களுடன் வாழ்கிறான். மனிதன் பெரும் நோய்க்குறிகளுடன் வாழ்கிறான். இந்த நோய்களுடன் வாழ வேண்டிய தேவையில்லை. சிறையிலிருந்து நம்மால் வெளியே வரமுடியும். காரணம் அந்த சிறை நமது சொந்தக் கைகளால் உருவாக்கப்பட்டதாகும். நாம் சிறையில் இருக்கிறோம். அந்த சிறையை நாம் சிறையாக எண்ணவில்லை. நமது இல்லமாக நினைத்துக் கொண்டிருக்கிறோம்.

மனித சமூகத்துக்கு எனது செய்தி. நடந்ததெல்லாம் போதும். விழித்தெழுங்கள்! மனிதன், சுயமாகத் தனக்கு என்ன செய்து கொண்டான் என்று கவனியுங்கள். மூவாயிரம் வருட காலத்தில் மனிதன் ஐயாயிரம் யுத்தங்கள் புரிந்திருக்கிறான். இந்த மனித சமூகம் ஆரோக்கியமாக இருக்கிறது என்று உங்களால் கூற முடியாது. ஒரு தடவை மட்டும் புத்தர் மலர்ந்திருக்கிறார். தோட்டத்தில் உள்ள செடிகளில் ஒன்று மட்டும் ஒரே தடவை பூக்கிறது. மற்றபடி எல்லாச் செடிகளும் மலர்களின்றி இருக்கின்றன. அதை நீங்கள் ஒரு பூந்தோட்டம் என்று அழைப்பீர்களா? அடிப்படையான ஏதோ ஒன்று தவறாகிவிட்டது. ஒவ்வொரு மனிதனும் புத்தனாகப் பிறப்பெடுக்கவே ஜனித்திருக்கிறான். அதற்குக் குறைவான எதுவும் உங்களுக்கு திருப்தி தராது.

உங்கள் புத்தநிலையை நான் உங்களுக்கு அறிவிக்கிறேன்.

என்ன தவறு நேர்ந்தது? ஏன் மனிதன் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஒருவித நரகத்தில் வாழ்கிறான்? ஆயிரக்கணக்கான வருடங்களாக நாம் இது அல்லது அது என்று ஏதாவது ஒரு கருத்தைக் கொண்டு வாழ்கிறோம். ஒருவித யுத்தகளத்தில் இருந்துகொண்டு உயர்வு - தாழ்வு, லௌகீகம் - ஆன்மீகம், இகலோகம் - பரலோகம், நல்லது - கெட்டது, கடவுள் - சாத்தான் போன்றவற்றின் நடுவில் இருந்து கொண்டு போராடிவருகிறோம். அவற்றின் தொடர்ச்சியாக நமது உள்ளுறை ஆற்றல்கள் பலமாகக் கட்டுப்படுத்தப்பட்டு விட்டன.

மனிதனை அழிக்க, அவன் சக்தியைக் கெடுக்க ஒரு பெரிய தந்திரயுக்தி பயன்படுத்தப்படுகிறது. அது மனிதனை இரண்டாகப்

பிரிப்பதே ஆகும். இது அல்லது அது என்ற ஏதாவது ஒரு கோட்பாட்டைச் சார்ந்து மனிதன் வாழ்கிறான். ஒன்று லௌகீகவாதியாக இருக்கிறான் அல்லது ஆன்மீகவாதியாகிறான். இரண்டு நிலைகளிலும் இருக்க உங்களால் முடியாது என்று உங்களுக்குச் சொல்லித் தந்திருக்கிறார்கள். ஒன்று உடலாக இருங்கள் அல்லது உயிராக இருங்கள். இரண்டுமாக இருக்க முடியாது என்று உங்களுக்கு கற்பிக்கப்பட்டிருக்கிறது. மனிதனின் துன்பங்களுக்கு ஆணிவேராக இருப்பது இந்த கருத்தே ஆகும். ஒரு மனிதனுக்கு எதிராக அவனையே கூறுபோட்டுப் பிரித்து நிறுத்துவதால் அவன் தொடர்ந்து நரகத்தில் இருந்துவிட நேர்கிறது. தனக்கு எதிராக அவன் பிரிந்து நிற்காதபோது சொர்க்கம் பிறக்கிறது. மனிதன் பிளவுபடுவது என்பது துயரமாகும். அவன் ஒன்றிணைவது என்பது பேரானந்தம் பெறுவதாகும்.

இன்றுவரை மனிதஇனம் மனநோய் பீடித்துக் கிடக்கிறது. உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ள வேண்டும், நிராகரிக்க வேண்டும், மறுத்துக் கூற வேண்டும் என்று பல விதமான இயற்கை இயல்புகள் குறித்துப் போதிக்கப்பட்டுள்ளது. நிராகரிப்பதாலும், மறுத்துக் கூறுவதாலும் அவற்றை நீங்கள் அழித்துவிட முடியாது. அவை பேசாமல் அடித்தளத்துக்குச் சென்றுவிடுகின்றன. அவை உங்கள் ஆழ்மனதில் இருந்துகொண்டு செயல்படுகின்றன. நிஜமாகவே அவை மிகவும் ஆபத்தானவைகளாக மாறிவிடுகின்றன.

மனிதன் ஒரு உயிரியல் சார்ந்த முழுமையாக இருக்கிறான். இயற்கை மனிதனுக்கு வழங்கியவை எல்லாவற்றையும் பயன்படுத்த வேண்டும். மறுத்து ஒதுக்க அங்கு எதுவுமில்லை. மனிதன் ஒரு இசைக்குழு போன்று மாறவேண்டும். படைப்புக் கலை அங்கு ஒன்றிணைய வேண்டும் என்பது அவசியமாகும்.

நீங்கள் மதங்கள் என்று அழைப்பவை எல்லாம் உங்களுக்கு ஒருங்கிணைப்பு ஏற்படாத நிலை, தொடர்பு அறுபடுதல், சச்சரவு செய்யும் வழிமுறைகள் போன்றவற்றைக் கற்றுத் தருகின்றன. நீங்கள் உங்களுடன் சண்டையிடும்போது சக்தியை வீணாக்குகிறீர்கள். நீங்கள் மந்தமாகி, அறிவற்றவராக, முட்டாளாக இருக்கிறீர்கள். நிறைய ஆற்றல் இல்லாதுபோனால் யாரும் அறிவாளியாக முடியாது. ஆற்றல் பொங்கி வழியும்போது அங்கு அறிவு தோன்றுகிறது. ஆற்றல் பொங்கி வழிவதால் ஏற்படும் அறிவாற்றலை முயன்று மனிதன் வளர்க்க முயலும்போது அவன் அகவறுமையில் வாழ நேர்கிறது.

புதிய மனிதனை உருவாக்குங்கள். பிளவுபடாத, ஒருங் கிணைந்த, முழுமையானவனாக அவனை உருவாக்குங்கள். மனித குலத்திற்கு நான் கூறும் செய்தி இதுதான்.

புத்தர் முழுமையானவர் அல்ல. கிரேக்க ஜோர்பாவும் முழு மையானவர் அல்ல. இருவரும் பாதி பாதியானவர்கள். நான் ஜோர் பாவையும் நேசிக்கிறேன். புத்தரையும் நேசிக்கிறேன். ஆனால் ஜோர்பாவை உள்முகமாக ஆழ்ந்து நான் பார்க்கும்போது ஏதோ ஒன்று காணப்படாதிருக்கிறது. அவருக்கு உயிர் இல்லை. புத்தரை உள்முகமாகப் பார்த்தால் ஏதோ ஒன்று காணாமல் போயிருக்கிறது. அவருக்கு உடல் இல்லை.

சிறந்த ஒரு இணைப்பு குறித்து நான் போதிக்கிறேன். ஜோர் பாவையும், புத்தரையும் சங்கமிக்க வைக்கிறேன். ஜோர்பா புத்தர். இது ஒரு புதிய இணைப்பு ஆகும். இது வானமும், கடலும் இணைவது போன்றது. கண்ணுக்குத் தெரிவதும், பார்வைக்குப் புலப்படாததும் இணைவது போன்றது. எதிர் துருவங்களான ஆணும், பெண்ணும் இணைவது போன்றது. இரவும், பகலும் கோடையும், குளிரும் இணைவது போன்றது. பாலுறவும் சமாதியும் இணைவது போன்றது. இவ்வகையான இணைப்பு மூலம்தான் பூமிக்கு ஒரு புதிய மனிதன் வந்துசேர முடியும்.

ஹோமோ நோவஸ் என்ற புதிய மனிதனின் முதல் கிரணங் களாக எனது சந்நியாசிகளும், எனது ஜனங்களும் இருக்கிறார்கள்.

உள்முகப் பிரிவு மனித சமூகத்தை தற்கொலை நிலைக்குக் கொண்டு செல்கிறது. அது அடிமைகளை மட்டுமே உருவாக்கு கிறது. அடிமைகள் நிஜமான வாழ்வு வாழமுடியாது. வாழ்வதற்கு அவர்களிடம் ஏதுமில்லை. அவர்கள் மற்றவர்களுக்காக வாழ் கிறார்கள். அவர்கள் இயந்திர நிலைக்குத் தாழ்ந்துவிட்டார்கள். திறமையும், நுட்பமும் இருந்தாலும் இயந்திரம் இயந்திரம்தான். வாழ்க்கை ஆனந்தத்தை அது பெற முடியாது. கொண்டாட்டத் துடன் திகழ அதனால் இயலாது. துன்பப்பட மட்டுமே முடியும்.

பழைய மதங்கள் மறுபிறப்பில் நம்பிக்கை கொண்டிருக் கின்றன. மறுபிறப்பு ஒரு சாபக்கேடு. நான் ஒரு ஆசீர்வாதத்தை உங்களுக்குக் கொண்டு வருகிறேன். நான் மகிழ்ச்சியை உங்களுக்குப் போதிக்கிறேன். மறுபிறப்பை அல்ல. இந்த உலகம் மறுபிறப் பெடுக்கத் தேவையில்லை. காரணம், இயற்கை அதனை மறுபிறப் பெடுக்க வைக்கவில்லை. பிறகு நீங்கள்மட்டும் ஏன் மறுபிறப்

பெடுக்க வேண்டும்? அதற்குள் இயற்கை இருக்கிறது. நீங்கள் ஏன் அதற்கு வெளியே இருக்க வேண்டும்?

வாழ்வை அதன் முழுமை குறையாமல் வாழுங்கள். முழுமையான வாழ்க்கை வாழ்ந்தால் மேன்மைநிலை கிட்டும். அப்போது வானமும், பூமியும் சந்திப்பதன் சிறந்த அழகு புலப்படும். அதில் ஒன்றும் தவறில்லை. ஒவ்வொருவரிடமும் உள்ள துருவமுனைகள் மறையும். எதிர்முனைகள் சகாயம் செய்யக் கூடியவைகளாக மாறும்.

பழைய மனிதன் இன்றுவரை நிஜமான மனிதனாக இருக்கவில்லை. அவன் ஒரு இயந்திர மனிதனாக நிஜமான முழுமையாக இல்லாத ஒரு மனிதன், முழுமைபெறாத ஒரு மனிதன் ஒருபோதும் புனிதமானவனாக இருக்க முடியாது.

புதிய மனிதன் ஒவ்வொரு நாளும் வந்துகொண்டு, வந்து சேர்ந்து கொண்டிருக்கிறான். அந்த எண்ணிக்கை சிறுபான்மையானதாக உள்ளது. அது இயல்புதான். ஆனால் புதிய மாறுதலை ஏற்படுத்த கூடிய மனிதர்கள் வந்துவிட்டார்கள். புதிய விதைகள் வந்துவிட்டன. இந்த நூற்றாண்டின் இறுதிக்காலம் முழு மனித இனமும் அழிவதை அல்லது புதிய மனித இனத் தோற்றத்தைப் பார்க்கப் போகிறது.

இவை எல்லாம் உங்களை நம்பியிருக்கின்றன. நீங்கள் பழையதைப் பிடித்துக்கொண்டு தொங்கினால், அந்த பழைய மனிதன் மாபெரும் தற்கொலை ஒன்றுக்கு அனைத்து வழிகளிலும் ஆயத்தப் படுகிறான். அது உலகளாவிய தற்கொலை ஆகும். பழைய மனிதன் சாகத் தயாராக இருக்கிறான். அவன் வாழும் ஆசையற்றுப் போய் விட்டான்.

அதனால்தான் எல்லா நாடுகளும் போருக்கு ஆயத்தம் செய்து வருகின்றன. மூன்றாம் உலகப் போர் ஒரு முழுமையான யுத்தமாக இருக்கும். யாரும் வெற்றியாளராக மாறமுடியாது. காரணம், யாரும் உயிருடன் இருக்கப் போவதில்லை. மனித இனம் மட்டும் அழிக்கப் படுவதில்லை. உலகின் உயிரினங்கள் எல்லாம் அழிந்து போகும்.

எச்சரிக்கையாக இருங்கள்! உங்கள் அரசியல்வாதிகளிடம் ஜாக்கிரதையாக இருங்கள். அவர்கள் எல்லோரும் தற்கொலை வாதிகள். பழைய பழக்கவழக்கங்கள் குறித்து எச்சரிக்கையாக இருங்கள். அவை உங்களை இந்தியன், ஜெர்மானியன், ஜப்பானியன், அமெரிக்கன் என்று பாகுபடுத்துகின்றன. புதிய மனிதன் உலகளாவியவனாக இருக்கவேண்டும். அவன் எல்லாவிதமான இன, மத, நிற, ஆண் பெண் வேறுபாட்டு எல்லைகளுக்கு அப்பாற்பட்டவனாக

இருக்க வேண்டும். புதிய மனிதன் கிழக்கு அல்லது மேற்கு நாட்டின் சார்புள்ளவனாக இருக்கலாகாது. புதிய மனிதன் உலகம் முழுவதையும் தனது தாயகமாக எண்ணவேண்டும்.

இந்த புதிய மனிதக் கோட்பாட்டினால் மட்டும்தான் மனித இனம் பிழைத்திருக்க முடியும். பழையது ஏதாவது ஒன்றின் பக்கம் சார்ந்து நிற்பதாகும். புதியதோ இரண்டையும் சார்ந்து அதில் கலந்து நிற்கிறது. மனிதன் புறவாழ்விலும் செல்வந்தனாக, அகவாழ்விலும் செல்வந்தனாக வாழவேண்டும். ஏதாவது ஒன்றைத் தேர்வு செய்ய அவசியமில்லை. அகவாழ்வு புறவாழ்வுக்கு எதிரானது அல்ல. ஒரு சுருதியின் இரண்டு அங்கங்களாகும்.

அகவாழ்வில் செல்வந்தராக இருந்துகொண்டு புறவாழ்வில் வறுமையுடன் இருக்கத் தேவையில்லை. நீங்கள் வெளியில் செல்வந்தராக இருக்க அவசியமில்லை. உள்ளே இருக்கும் செல்வத்தை உதறவும் தேவையில்லை. இன்றுவரை அப்படித்தான் நடந்து வருகிறது. மேற்கு நாட்டவர் ஒரு வழியைத் தேர்வு செய்திருக்கிறார்கள். வெளியே செல்வந்தராக இருப்பதே அந்த வழியாகும்! கிழக்கு நாடு மற்றொரு பாதையைத் தேர்வு செய்திருக்கிறது. அகத்தில் செல்வந்தராக இருப்பது! இரண்டும் பொருத்தமற்றவை. இரண்டும் நோயுற்று இருக்கின்றன.

முழுமையான செழிப்புபற்றி நான் போதிக்கிறேன். அறிவியலின் வழியாக வெளியில் செல்வம் பெறுங்கள். ஆன்மீகத்தின் துணையுடன் உள்ளே செழுமை பெறுங்கள். அதுவே உங்களை ஒருமை நிலைக்கு, உயிர்ப்பு நிலைக்கு, தனித்துவ நிலைக்கு அழைத்துச் செல்லும்.

புதிய மனிதன் போர்க்களமாக இல்லை. பிளவுபட்ட குணாதிசயமாக இல்லை. ஆனால் ஒருங்கிணைந்த, தனித்துவமான, வாழ்வின் முழுமையுடன் சிறந்த ஒருங்கிணைப்புக் கொண்ட மனித வடிவாக இருக்கிறது. புதிய மனிதன் கூடுதல் ஒளிவுமறைவற்ற, மாறுதலுக்கு உட்பட்ட, புதிய வழியில் உலகில் வாழும் ஒருவராக இருக்கிறார். தரமான வித்தியாசமான பாதையைக் கண்டறிந்து அதில் நிஜமான அனுபவம் பெறுகிறார். எனவே முதியவர் இறப்பது பற்றி புலம்பாதீர்கள். பழைய மனிதர் இறப்பது குறித்து மகிழ்ச்சியடையுங்கள். இரவு மறையும்போது தொடுவானத்தில் விடியல் தோன்றும்.

பாரம்பரிய மனிதன் மறைவது பற்றி நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். பழைய தேவாலயங்கள் அழிந்துவருகின்றன.

கோவில்கள் எல்லாம் கைவிடப்பட்டுவிட்டன. பழைய பண்பாடுகள் தரையில் மல்லாந்து விழுந்து கொண்டிருக்கின்றன.

இது பெரிய மாறுதலுக்கான நேரம். சவாலை நாம் எதிர் கொண்டால் புதிய ஒன்றை உருவாக்க வாய்ப்பு கிடைக்கும். கடந்த காலத்தில் அது ஒருபோதும் பழுத்ததே இல்லை. நாம் மிகவும் அழகான ஒரு காலத்தில் வாழ்ந்து வருகிறோம். பழையது மறைந்து கொண்டிருக்கிறது அல்லது மறைந்துவிட்டது. பெருங்குழப்பம் உருவாகிவிட்டது. இந்த குழப்பத்திலிருந்து விடுபட்டால் மட்டுமே பெரிய நட்சத்திரங்கள் தோன்றும்.

உலகத்தை மீண்டும் உருவாக்கும் வாய்ப்பு உங்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. வெகு அரிதாக ஒருமுறை மட்டும் கிடைக்கும் வாய்ப்பு இது. சிக்கலான ஒரு காலகட்டத்தில் வாழும் வாய்ப்பை நாம் பெற்றிருக்கிறோம். புதிய மனிதனை உருவாக்கும் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். அந்த புதிய மனிதனை உருவாக்கு வதை உங்களிடமிருந்து துவங்க வேண்டும்.

புதிய மனிதன் இறைமையியலாளனாக, கவிஞனாக, விஞ்ஞானியாக, மற்ற எவராகவும் இருப்பான். அவன் பழைய உழுத்துப்போன பிரிவுகளின் வழியே வாழ்க்கையைப் பார்க்க மாட்டான். அவன் இறைமையியலாளனாக இருப்பான். அவன் தெய்வ தரிசனத்தை உணர்வான். அவன் ஒரு கவிஞனாக இருப்பான், காரணம், தெய்வ தரிசனத்தை அன் கொண்டாடுவான். அவன் ஒரு விஞ்ஞானியாக இருப்பான். காரணம், தரிசனக் காட்சியை அறிவியல் வழிமுறையில் ஆராய்வான். இந்த மூன்று தன்மைகளும் ஒரு மனிதனின் அமைந்திருக்கும்போது அவன் முழுமை அடைகிறான்.

புனிதத்துவம் பெற்ற மனிதன் என்ற எனது கருத்துக்கான கோட்பாடு இதுதான்.

பழைய மனிதன் அடக்குமுறைக்கு உட்படுத்தப்பட்டவன், ஆக்ரமிக்கும் குணமுள்ளவன். பழைய மனிதன் ஆக்ரமிக்கும் குண முள்ளவனாக இருக்கக் காரணம், அடக்குமுறைக்கு உட்பட்டதே ஆகும். அடக்குமுறையானது ஆக்ரமிக்கும் குணத்தைக் கொண்டு வருகிறது. புதிய மனிதன் தன்னிச்சை இயல்பு உள்ளவன். படைப் பாற்றல் கொண்டவன். பழைய மனிதன் கொள்கைகள் சார்ந்து வாழ்கிறான். புதிய மனிதன் கொள்கைசார்ந்து வாழ்வதில்லை. நற்பண்புகள்சார்ந்து வாழ்வதில்லை. உணர்வுபூர்வமாக வாழ் கிறான். புதிய மனிதன் விழிப்புணர்வுசார்ந்து வாழ்கிறான். புதிய

மனிதன் பொறுப்புணர்வு கொண்டவனாக இருப்பான். தன் மீதும், வாழ்வின் மீதும் பொறுப்புணர்ச்சியுடன் இருப்பான். புதிய மனிதன் பழைய பாணியிலான நெறிமுறைகளைக் கடைப்பிடிக்க மாட்டான். அவன் பழைமைவாதத்துக்கு எதிரானவனாக இருப்பான்.

புதிய மனிதன் தன்னுடன் ஒரு புதிய உலகைக் கொண்டு வருவான். தற்சமயம் அந்த மாறுதலை நோக்கிச் செல்லும் ஒரு சிறு பான்மைக் கூட்டமாக இருக்கலாம். ஆனால் அவன் புதிய கலாச் சாரத்தை, அதன் விதையைச் சுமந்து செல்பவனாக இருக்கிறான். அவனுக்கு உதவி செய்யுங்கள். வீட்டின் மேற்கூரைகளில் நின்று கொண்டு அவன் வருகையைப் பறைசாற்றுங்கள். அதுவே நான் உங்களுக்கு அளிக்கும் செய்தியாகும்.

புதிய மனிதன் ஒளிவுமறைவற்றவன். நேர்மையானவன். ஒளிவுமறைவற்ற உண்மை மனிதன். அதிகாரப்பூர்வமானவன், தன்னை மறைக்காமல் வெளிக்காட்டுபவன். அவன் வேஷதாரியாக இருக்கமாட்டான். அவன் இலக்குகள் சார்ந்து வாழமாட்டான். அவன் இப்போது இக்கணத்தில் வாழ்கிறான். இக்கணம், என்ற ஒரு காலத்தை மட்டுமே அவன் அறிவான். காலம் என்பது ஒன்று மட்டுமே இருக்கிறது. அந்த தருணத்தினூடே வாழ்க்கை என்பதை என்னவென்று அறிகிறான்.

மகிழ்ந்திருங்கள்! புதிய மனிதன் வருகிறான். பழைய மனிதன் வெளியேறுகிறான். பழையவன் நாற்சந்தியில் நிற்கிறான். புதியவன் தொடுவானத்துக்கு அருகில் வந்த கொண்டிருக்கிறான். மகிழ்ந் திருங்கள்! நான் மீண்டும் மீண்டும் சொல்கிறேன் மகிழ்ந்திருங்கள்!

**மூன்றாவது கேள்வி**

**ஓஷோ,**

**நீங்கள் நிர்வாணத்தை எதற்காக மக்களுக்குப் போதிக்கிறீர்கள்?**

ஐயா, நீங்கள் யாராவது நிர்வாணமாக இருப்பதைக் காண் கிறீர்களா? முழுக்குருடா நீங்கள்? நான் உண்மையைப் போதிக் கிறேன். உண்மை நிர்வாணம் நோக்கி அழைத்துச் செல்கிறது. உண்மை தன்னை மறைத்துக் கொள்ளாது. நான் நிர்வாணம் பற்றி போதிக்கவில்லை. நிச்சயமாக நான் நிர்வாணமாக ஆத்மாக்கள் பற்றிப் போதிக்கிறேன். சிலசமயம் உங்கள் ஆடைகள் ஒரு மறைப் பாக மாறிவிடுகின்றன. அவை மறைக்கின்றன. அவை தற்காப்பாக மாறுகின்றன.

எப்போதாவது வாய்ப்பு ஏற்படும்போது உங்கள் நிர்வாணம் யாருக்கும் இடைஞ்சலாக இருக்காது. நிர்வாணமாக சந்தைக்குப் போகும்படி உங்களை நான் சொல்லவில்லை. ஆனால் எப்போது சந்தர்ப்பம் கிடைக்கிறதோ சூரிய ஒளியில் எப்போது நிர்வாணமாக இருக்க முடியுமோ காற்றிலும், மழையிலும் இருக்க முடியுமோ நிர்வாணமாக இருங்கள். ஆடைகளை உதறித் தள்ளும்போது அபரிமிதமான சுதந்திரத்தை உணர்வீர்கள். ஏனென்றால், ஆடைகள் உங்கள் கலாச்சாரத்தின், பழக்கவழக்கங்களின் பிரதிநிதியாக அமைந்திருக்கின்றன.

உங்கள் ஆடைகள் வெறுமனே ஆடைகள் மட்டுமல்ல; ஒவ்வொருவரின் பார்வையிலிருந்தும் உங்களை அவை மறைக்கின்றன. சிலசமயங்களில் பறவைகள், மிருகங்கள், மரங்கள் போன்று பூரண நிர்வாணத்துடன் நீங்களும் அவற்றுடன் சேர்ந்து கொள்ளுங்கள். அது நல்லது. நான் உங்களை நிர்வாணமாக அலுவலகம் போகச் சொல்லவில்லை. நிர்வாணமாக கடைக்குப் போகச் சொல்லவில்லை. எப்போதாவது ஒருமுறையேனும் நீங்கள் நிர்வாணமாக இயல்பான நிலையில் இருக்காமல் போனால் நிச்சயம் பெருமதிப்புள்ள ஏதோ ஒன்றை இழந்துவிட்டீர்கள் என்றே நான் கூறுவேன்.

ஆனால் இந்தக் கேள்வி ஏன் உங்களுக்குமுன் எழுகிறது? நிர்வாணமாக மனிதர்களை ஆண்டவர் ஏன் படைத்தார் என்று கேட்கிறீர்கள். அவர் உங்களை ஆடையோடு அனுப்பிவைக்கவில்லை. மனிதன் நிர்வாண நிலையில் இருப்பதற்குப் பயப்படுகிறான் என்பதை அவர் அறியவில்லை.

மிஸ் விங்கிள்த்ராப் அன்புள்ளம் கொண்ட முதியவள். ஆனால் திருமண வாழ்க்கை சோபிக்கவில்லை. எனவே தனியே வாழ்ந்து கொண்டிருந்தாள். மீன்களே அவளது நண்பர்களாக இருந்தன. பெரிய பாத்திரங்கள், தொட்டிகளில் வளர்க்கப்பட்ட மீன்கள் மினுமினுக்கும் உடலோடு சிறிய கற்கள், கடல் பாசிகளினூடே துள்ளி நீந்தி விளையாடின. அவளது குளியல் தொட்டியிலும் நூற்றுக்கணக்கான மீன் நண்பர் இருந்தார்கள்.

ஒருநாள் அவள் வீட்டிற்கு வந்த பாதிரியார் அந்த வித்தியாசமான குளியல் தொட்டியைப் பார்த்து அதிசயித்துப் போனார். "மிஸ் விங்கிள்த்ராப், நீங்கள் குளிக்க வேண்டுமானால் என்ன செய்வீர்கள்?" என்று கேட்டார்.

"அதில் ஒன்றும் சிரமமில்லை, பாதிரியாரே! நான் மீன்களின் கண்களைக் கட்டிவிடுவேன்" என்று கூறினாள்.

ஆடைகள் அணிந்துகொண்டே குளிக்கும் கன்னியாஸ்திரி ஒருத்தியைப் பற்றி நான் கேள்விப்பட்டேன். யாரோ ஒருவர் அவளிடம், "என்ன விஷயம்? ஏன் இப்படிக் குளிக்கிறீர்கள்?" என்று கேட்டாராம்.

"பெரிய விஷேசம் அதில் ஒன்றுமில்லை. நாம் எங்க சென்றாலும் கடவுள் நம்மைப் பார்த்துக் கொண்டே இருப்பார் என்று சொல்லக் கேள்வி. எனவே நான் கடவுள் முன்னிலையில் என்னால் நிர்வாணமாக இருக்க இயலாது" என்றாள்.

உங்களால் கடவுளின் எதிரே ஆடை இல்லாமல் இருக்க முடியாது என்றால், அவ்வளவு அசிங்கமான உடலையா சுமந்து திரிகிறீர்கள்?

தயவுசெய்து என்னைத் தவறாகப் புரிந்துகொள்ள வேண்டாம். நீங்கள் இருபத்து நான்கு மணிநேரம் நிர்வாணமாக இருக்க வேண்டும் என்று நான் கூறவில்லை. அது மிதமிஞ்சிய காரியம். அதை மகாவீரர் செய்தார். அவர் சதா நிர்வாணமாகவே நாற்பது ஆண்டுகள் வாழ்ந்தார். அந்த அதீதமான காரியம் பற்றி உங்களுக்கு நான் போதனை செய்ய வரவில்லை. குளிராக இருந்தால் ஆடையின்றி இருக்க வேண்டாம். சமூகத்துடன் கலந்து செயல்பட்டுக் கொண்டிருக்கும்போது, ஆடை அணிகலன்களுக்கு எங்கு மதிப்பு அளிக்கப்படுகிறதோ அங்கு ஆடையின்றி இருக்க வேண்டாம். ஆடை அணிந்துகொண்டே குளியுங்கள் என்று நான் கூறவில்லை." அப்படிச் செய்வதும் ஒருவகை அதீத எல்லைக்குச் சென்றுவிடும் காரியமாகிவிடும்.

நான் எளிமை குறித்துப் போதிக்கிறேன். தங்க விதிமுறைக் குறியீடு பற்றிப் போதிக்கிறேன். ஆனால் நீங்கள் எது பற்றியாவது கொஞ்சம் கவனிக்க வேண்டும். இங்கே நீங்கள் சில நிர்வாணப் படங்களைக் கண்டிருக்கலாம். சிலபேர், இங்கு வந்து நாலாபுறம் தேடுகிறார்கள். குறிப்பாக, இந்தியர் அப்படி கண்களால் தேடுகிறார்கள். காரணம், நிர்வாண உடல்கள் மீது அவர்கள் பெரிதும் ஆர்வம் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எளிய மக்கள். நிர்வாண உடலின் அழகை அவர்கள் கண்டதில்லை. நிர்வாண உடலின் அழகான வெளித்தோற்றத்தை அவர்கள் பார்த்தது கிடையாது. நிர்வாண உடல் குறித்த எண்ணங்கள் அவர்கள் மனதில் நிறைந்து

கிடக்கின்றன. அவர்கள் இங்கே வருகிறார்கள். நாலாபுறமும் தேடு கிறார்கள். ஏமாற்றமடைகிறார்கள். ஏனென்றால், இங்கே யாரும் நிர்வாணமாக இருக்கக் காணோம்.

நீங்களும் அதே எண்ணத்தோடுதான் இங்கே வந்திருக் கிறீர்கள். ஆம், சில சமயங்கள் சிகிச்சைக் குழுவினரிடம் நிர்வாணம் தலையெடுக்கிறது. அந்தக் குழுக்களின் எண்ணம் உங்கள் வேஷத்தைக் கலைப்பதாகும். ஆடைகளைக் களைந்து வீசுவது முன்நோக்கி எட்டு வைத்துச் செல்லும் ஒரு உயர்ந்த செயலாகும். ஆடைகளைக் களைவது, உங்கள் உடல் எப்படி இருக்கிறதோ அதை அப்படியே ஏற்கும் எண்ணத்துடன் முன்னோக்கி எட்டு வைத்து நடப்பது போன்றதாகும்.

உங்கள் ஆடைகளைக் களைய ஏன் இவ்வளவு அச்சப்படு கிறீர்கள்? பலர் அசிங்கமான உடலமைப்பைப் பெற்றிருக்கிறார்கள். அசிங்கமான உடலமைப்பைப் பெறுவதற்கான காரணம், உடல் இயல்பான வளர்ச்சியடைய அவர்கள் அனுமதிக்கவில்லை. உங்கள் அசிங்கமான உடலை மறைக்க ஆடைகள் ஒரு நல்ல தந்திரமாக அமைகின்றன. மக்கள் நிர்வாணமாக இருக்க அச்சம் கொள்கிறார்கள். அது ஏன் என்றால் தாங்கள் பார்க்க நன்றாக இல்லை என்று அவர் களுக்குத் தெரியும். தங்கள் உடலை அவர்களால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

ஆடைகளை உதறித் தள்ளுவது சில சமயங்கள் உங்கள் உடலை ஏற்றுக் கொள்ளும் பெரிய ஒப்புதாகிறது. நீங்கள் அழகான உடலமைப்பைப் பெற அது உதவி செய்யவும்கூடும். ஏனெனில், உங்கள் உடல் குறித்து உங்களை ஆழ்ந்து யோசிக்க வைக்கிறது. முழு நிர்வாணமாக உங்கள் உடலை நீங்கள் பார்த்திருக்க மாட்டீர்கள். உடலுக்கு என்ன தீங்கு செய்கிறோம் என்று நீங்கள் விழிப்புணர்வு பெறவில்லை. நீங்கள் அளவுக்கு அதிகமாகச் சாப்பிடுகிறீர்கள் அல்லது பற்றாக்குறை உணவு உண்கிறீர்கள். அதனால் உங்கள் வாழ்க்கைப் பாதை ஆரோக்கியமற்று இருக்கிறது.

நிர்வாணமாக இருப்பது மிகவும் நல்லது. நண்பர்களுடன் சேர்ந்து நிர்வாணமாக இருப்பது மிகவும் நல்லது. உங்கள் குடும்பத் தினருடனும், குழந்தைகளுடனும் நீங்கள் நிர்வாணமாக இருப்பது மிகவும் நல்லது. காரணம், பெற்றோரின் உடலைப் பற்றி இளம் வயதிலேயே அறிந்து கொள்வதால் அவர்கள் ஒருபோதும் உடல்மீது வெறுப்புக் கொள்ளமாட்டார்கள். வேறு யாருடைய உடல்மீதும் வெறுப்புக் கொள்ளமாட்டார்கள். முற்றிலும் வித்தியாசமான

அணுகுமுறையை மேற்கொள்வார்கள். உடல்கள் பற்றி அவர்கள் அறிந்திருப்பவர்கள். தங்கள் தாயாரைப் பற்றி அவர்களுக்குத் தெரியும். தகப்பனார் பற்றியும் தெரியும். சகோதரர்கள் பற்றியும் தெரியும். ஆனால் அப்படி நிர்வாணமாக வீட்டில் இருப்பது சாத்திய மில்லை.

ஆழமான பாசநெருக்கம் கொண்டவர்கள் நிர்வாணமாக இருக்க வேண்டும். நண்பர்கள், குடும்பத்தினருடன் நிர்வாணமாக இருக்க வேண்டும். ஒருமுறை அவ்வாறு நடந்துவிட்டால் அது பெருமளவு உதவியாக அமையும். அது இயற்கையுடன் நெருக்கமாக இருக்கும் நிலையைக் கொண்டு வருகிறது.

உங்கள் மனதிலுள்ள எண்ணங்கள் குறித்து யோசிக்க வேண்டும் என்று நான் கூறுகிறேன். நான் என்ன செய்கிறேன் என்று நீங்கள் கவனிப்பதில்லை. தப்பெண்ணங்களை நீங்கள் கொண் டிருக்கிறீர்கள். அந்தத் தப்பெண்ணங்கள் வழியே கவனிக்கிறீர்கள். நீங்கள் செவிடாகிப் போகிறீர்கள். உங்கள் தப்பெண்ணங்களும், பழைய கருத்துகளும் மனதில் ஆழமாகப் பதிந்து கிடக்கின்றன.

மூன்று கன்னியாஸ்திரிகள் தெருவில் நடந்து சென்று கொண் டிருந்தார்கள். ஒருத்தி ஃபுளோரிடாவில் பார்த்த மிகப்பெரிய திராட்சைகளைக் கையில் வைத்துக்கொண்டு அது பற்றி விவரித்தாள்.

இரண்டாவது கன்னியாஸ்திரி ஜமைக்காவில் பார்த்த பெரிய வாழைப்பழத்தைக் கையில் வைத்துக்கொண்டு அதைப் பற்றி வர்ணித்தாள்.

சற்று செவிடான மூன்றாவது கன்னியாஸ்திரி "எந்த அப்பா வுடையது அது?" என்று கேட்டாள்.

நான் ஒன்றைச் சொல்கிறேன். நான் திராட்சைப் பழம் பற்றிப் பேசுகிறேன். நீங்கள் "எந்த அப்பாவுடையது?" என்று கேட்கிறீர்கள். உங்கள் மனம் முழுவதும் குப்பையாக இருக்கிறது. ஆனாலும் நீங்கள் அந்த கழிவை மிகவும் புனிதமானது என்கிறீர்கள். மாட்டுச் சாணம் மாட்டுச் சாணம்தான். நீங்கள் புனிதமான சாணம் என்று சொன்னாலும் சொல்லாவிட்டாலும் ஒன்றுதான். உங்கள் மனம் முழுவதும் மாட்டுச் சாணம்தான் இருக்கிறது.

மனம் இவ்விதமாக இருப்பதால் என்னை உங்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை. நான் சொல்வதையும் புரிந்து கொள்ள முடிவதில்லை. நான் சொல்வது எளிமையானது. உங்கள் தப் பெண்ணங்களை உதறினால், உங்கள் கருத்தைக் கொஞ்சம் தள்ளி

அப்பால் வைத்தால், என்னை மௌனமாகக் கவனித்தால், நான் சொல்லும் உண்மை சுயநிரூபணமாகும்.

மனிதனைத் தவிர முழு அளவில் இயற்கை நிர்வாணமாக இருக்கிறது. ஆடைகளின் மூலம் நீங்கள் இயற்கையின் தொடர்பில் இருந்து துண்டிக்கப்பட்டிருக்கிறீர்கள். சில சமயங்களில் கடற்கரையில் நிர்வாணமாக இருந்து சூரிய ஒளியில் மணலில் படுத்துச் சூரியனையும், மணலையும் உடலால் உணர்வது பெரிய முக்கியத்துவம் பெற்றதாக அமைகிறது. சில சமயம் நட்சத்திர ஒளியில் நிர்வாணமாக நடனமிடுவது மிகவும் அழகான காரியம். உங்களைச் சுற்றியுள்ள பிரபஞ்ச லயத்தை உணர்கிறீர்கள். பிரபஞ்ச அதிர்வை மீண்டும் உணர்கிறீர்கள்.

நீங்கள் முழுமையான ஒரு பிளாஸ்டிக் உலகத்தை ஏற்படுத்தியிருக்கிறீர்கள். நாம் இயற்கையால் சூழப்படவில்லை. அதற்குப் பதிலாக மனிதன் உருவாக்கிய ஆடைகளால் நாம் சூழப்பட்டிருக்கிறோம். மரங்கள் சூழ்ந்திருக்கும் நிலையில் நாம் வாழவில்லை. நம்மைச் சுற்றி அசிங்கமான பெரிய சிமெண்ட் கட்டிடங்கள் சூழ்ந்திருக்கின்றன. நாம் பூமியில் நடமாடவில்லை. சிமெண்ட், கான்கிரீட் சாலைகளின் மீது நடக்கிறோம்.

நம்மைச் சுற்றி ஒரு உலகைப் படைத்துக் கொண்டுவிட்டோம். இயற்கையிலிருந்து தொடர்பைத் துண்டித்துக் கொண்டுவிட்டோம். நாம் வேருடன் பிடுங்கப்பட்டிருக்கிறோம். இவ்வாறு வேருடன் பிடுங்கப்படுவதே நமது துன்பங்களுக்கு அடிப்படைக் காரணமாக அமைகிறது. மீண்டும் மண்ணில் ஊன்றப்படவேண்டும்.

எதிர்கால மனித இனம் அதை சார்ந்து இருக்கிறது. நமது வாழ்வில் இயற்கையை மீண்டும் கொண்டுவந்து இணைக்க வேண்டும். நீங்கள் நதிக்கரையில் அமைந்திருப்பது என்பது ஒரு நீச்சல் குளத்தின் கரையில் அமர்ந்திருப்பதைவிடவும் வித்தியாசமான காரியமாகும். நீச்சல் குளத்தில் உயிரோட்டம் கிடையாது. நீரோட்டம் இல்லை. சோம்பேறித்தனமாக அசைவற்றுக் கிடக்கிறது. நாம் மலைமீது அமைந்திருக்கும்போது அது முற்றிலும் வித்தியாசமான ஒன்றாக அமைகிறது.

நீங்கள் மலைகள், நதிக்கரைகள், மரத்தடிகளுக்குச் சென்றால் பிதாகோரஸையும், புத்தரையும், ஜோர்பாவையும், என்னையும் புரிந்துகொள்வது எளிது. ஆனால் மரங்கள் உங்கள் ஆடைகளைப் பற்றிப் புரிந்துகொள்ளாது. அவை உங்களைப் பார்த்துச் சிரிக்கும்.

சிறந்த ஜென் ஒருவரைப் பற்றி நான் கேள்விப்பட்டதைச் சொல்கிறேன்.

ஜப்பானியப் பேரரசர் ஜென் குருவைப் பார்க்கச் சென்றார். அவர் முழு நிர்வாணமாக வாழ்கிறார் என்று பேரரசர் கேள்விப் பட்டிருந்தார். குருவிடம் அணிவதற்கு ஆடைகள் இல்லை போலிருக் கிறது என்று பேரரசர் நினைத்துவிட்டார். எனவே மிக விலையுயர்ந்த ஆடைகள் தயாரிக்கும்படி உத்தரவு போட்டார். வெல்வெட் இழை களால் நெய்து வைரங்கள் பதித்த ஆடைகளையும், அங்கிகளையும் பரிசாக எடுத்துக் கொண்டு குருவிடம் சென்றார்.

அதைப் பார்த்த குரு சிரித்தார். "உன் பரிசுக்கு நன்றி! ஆனால் அதை திருப்பி எடுத்துச் சென்று விடு."

"ஏன்?" என்று கேட்டார் பேரரசர்.

"இங்கே நான் ஒருவன் மட்டுமே இருப்பது உனக்குத் தெரியும். மரங்கள், பறவைகள், மிருகங்கள் போன்றவர்களே எனது நண்பர்கள், எனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்று அவர்கள் என்னைப் பார்த்துச் சிரிப்பார்கள். அவர்கள் எல்லோரும் நிர்வாண மாக இருக்கிறார்கள். நிர்வாணம் பற்றிப் புரிந்து வைத்திருக்கிறார்கள். அவர்களால் இந்த அழகான ஆடையைப் புரிந்துகொள்ள முடியாது. வைரங்களைப் பற்றிப் புரிந்துகொள்ள மாட்டார்கள். எது பற்றியும் அவர்கள் புரிந்துகொள்ள மாட்டார்கள். நான் இந்த ஆடைகளை அணிந்தால் அவர்கள் என்னைப் பார்த்துச் சிரிப்பார்கள். என்னைக் கேலி செய்வார்கள். அத்துடன் என்னைவிட்டு விலகிச் செல்லவும் தொடங்கிவிடுவார்கள். நாங்கள் தொடர்பிழந்து போவோம். தயவு செய்து ஆடைகளைத் திருப்பி எடுத்துக் கொண்டு போய்விடு."

நீங்கள் மலைப்பகுதிகளில் வாழ்ந்தால், தட்பவெப்பநிலை அனுமதித்தால் நிர்வாணமாக இருங்கள். அது அபரிமிதமான கிளர்ச்சியை உண்டாக்கும். புதிய வாழ்க்கை உங்களுக்குள் அலை மோதும்.

புதிய வாழ்வில் நிர்வாணம் பற்றி நாம் மேலும் மேலும் கற்றுக் கொள்ளலாம். சௌகரியத்தின் பொருட்டு நாம் ஆடை அணிய வேண்டும். வேறு எந்த காரணத்திற்காகவும் அணியத் தேவை யில்லை. ஆடையை தேகவசதிக்காக அணியவேண்டும். எந்த வேறு ஒரு காரணத்திற்காகவும் அணியக்கூடாது. ஆடைகள் எந்த ஒழுக்க நெறியையும் கொண்டவை அல்ல.

நான்காவது கேள்வி

**ஓஷோ,**

**“அபரிமிதத்தின் பாதை அறிவு மாளிகைக்கு அழைத்துச் செல்லும்” என்றும், “மிகுதி என்றால் என்னவென்று மனிதன் புரிந்துகொள்வதற்கு முன்னர் அவனால் போதுமான அளவு எது என்று அறிந்துகொள்ள முடியாது” என்றும் வில்லியம் பிளேக் கூறுகிறார். இந்த தங்க விதிமுறைக் குறியீடு ஏற்கனவே உண்மையின் தொடர்பில் உள்ளவர்களுக்கான பாதை என்று நான் நம்புகிறேன். ஆனால் தேடல் உள்ளவர்களுக்கு அது தந்திரமும், கோழைத்தனமும் கொண்ட பாதையாக இருக்கும். இதுபற்றி விளக்குங்கள்.**

வில்லியம் பிளேக் கூறியது சரிதான். அவர் உலகின் தலை சிறந்த இறைமையியல் கவிஞர்களில் ஒருவர். அவர் சொன்னது தவறாக இருக்க முடியாது. “அபரிமிதத்தின் பாதை அறிவு மாளிகைக்கு அழைத்துச் செல்லும்” என்று அவர் கூறியது சரிதான். ஆனால் அறிவு மாளிகை என்பது ஒரு தங்க விதிமுறைக் குறியீடு ஆகும். அபரிமிதம் நம்பிக்கை தங்க விதிமுறைக் குறியீடுக்கு அழைத்துச் செல்லும்.

நானோ அல்லது பிதாகோரஸோ தந்திரசாலியாகவும், கோழைத் தனமாகவும் இருங்கள் என்று சொல்லவில்லை. அதன் முழு அர்த்தம், தங்க விதிமுறைக் குறியீடே லட்சியம் என்பதாகும். நீங்கள் ஏற்கனவே அதீதத்தில் வாழ்ந்து வருகிறீர்கள். இது உங்கள் முதல் பிறவி அல்ல. நீங்கள் நீண்ட காலம் வாழ்ந்தீர்கள். அபரிமிதத்தின் வாயிலாக பற்பல பிறவியெடுத்தீர்கள். போதுமான அளவு நீண்ட காலம் வாழ்ந்துவிட்டீர்கள். எப்போது நீங்கள் விழித்துக் கொள்ளப் போகிறீர்கள்?

அபரிமிதம் என்ற சாலையில் நீங்கள் நடந்து வாழ்ந்த தில்லையா? சிலசமயம் அதிகம் சாப்பிடுகிறீர்கள். சிலசமயம் விரத மிருக்கிறீர்கள். சிலசமயம் அனுபவிக்கிறீர்கள். சிலசமயம் உதறித் தள்ளுகிறீர்கள். ஒவ்வொருவரும் இதைச் செய்கிறார்கள். இதைச் செய்வதை நீங்கள் நிறுத்தினால் ஏற்கனவே ஞானம் பெற்று விட்ட தாகக் கொள்ளலாம். அதீதம் காரணமாக ஏன் இன்னும் நீங்கள் ஞானம் பெறாமல் இருக்கிறீர்கள்?

ஒரு பழைய கடிகாரத்தின் பெண்டுலம்போல நீங்கள் அசைந்து கொண்டிருக்கிறீர்கள். இடது பக்கமிருந்து வலது பக்கமும், வலதுபக்கமிருந்து இடதுபக்கமுமாக நகர்ந்துகொண்டிருக்கிறீர்கள்.

நினைவிருக்கட்டும். நீங்கள் ஒரு பக்கமாக அதன் எல்லை வரை நகரும்போது உங்கள் இயக்கமும், வேகமும் தீவிரமடைகின்றன. மறு எல்லைக்குச் செல்லும் இயங்கு விசை அதிகரிக்கிறது. இது இப்படியும் அப்படியுமாக மாறிமாறி நடக்கிறது. இது ஒரு நச்சுச்சுழல் ஆகும்.

பிதாகோரஸ் சீடர்களுக்காகப் பேசுகிறார். நானும் சீடர்களுக் காகவே பேசுகிறேன். சீடர் என்பவர் உலகியல் வழிமுறைகளில் சலிப்பு அடைந்தவராவார். புதிய கண்ணோட்டம், புதிய நுண்ணறிவு போன்றவற்றை விரும்புகிறார்.

ஆம். பிளேக் சொன்னது சரிதான். ஆனால் பிதாகோரஸின் கூற்று தவறல்ல! நீங்கள் இன்றுவரை பிளேக்கின் வழியில்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். இனிமேலும் தொடர்ந்து அந்த விஷ வளையத்தினுள் ஒருபோதும் இருக்க வேண்டாம். "அபரிமிதத்தின் பாதை அறிவு மாளிகைக்கு அழைத்துச் செல்லும்." எங்கே இருக் கிறது அந்த அறிவு மாளிகை? அபரிமிதத்தின் பாதையில் நீங்கள் நீண்ட காலம் போதுமான அளவு வாழ்ந்து விட்டீர்கள்! இப்போது இங்கு வந்து சேர்ந்திருக்கிறீர்கள். உங்கள் வாழ்க்கை முறை அதீதத் தன்மை கொண்டதாக இருக்கலாம். ஆனால் அதுபற்றி விழிப் புணர்வு உங்களிடம் இல்லை.

உங்கள் அதீதம் குறித்து விழிப்புணர்வு கொள்ளுங்கள். உங்கள் வாழ்விலும், செய்யும் காரியங்களிலும் விழிப்புணர்வைக் கொண்டு வாருங்கள். மெள்ள மெள்ள அதீதம் மறைந்து போவதைக் காண் பீர்கள். மிகவும் வேகமாகப் பெண்டுலம் இப்போது நகர்வதில்லை. வேகம் குறைகிறது. அதன் ஆட்டம் முன்போல் அவ்வளவு பெரிய தாக இல்லை. ஊசலாட்டம் சிறியதாகி விடுகிறது. மெதுவாக ஒரு நாள் அதன் ஆட்டம் குறைந்து மையத்தில் அசைவற்று நின்றுவிடும். பெண்டுலம் மையத்தில் அசைவற்று நிற்கும் சமயத்தில் நீங்கள் நித்தியத்துவத்தினுள் நுழைகிறீர்கள். பெண்டுலம் நின்றுபோகும் போது, கடிகாரம் நின்றுபோகும்போது, காலம் அசைவற்றுப் போகும்போது நீங்கள் நித்தியத்துவத்தில் நுழைகிறீர்கள்.

வில்லியம் பிளேக் சொன்னது சரிதான். ஆனால் பிதாகோரஸ் சொன்னதோ அதைவிடவும் சரியானது. வில்லியம் பிளேக் பாதை யைப் பற்றி மட்டும் கூறுகிறார். பிதாகோரஸ் உங்கள் இலக்கு பற்றிப் பேசுகிறார். "அபரிமிதம் என்றால் என்னவென்று தெரியாதபோது மனிதனுக்குப் போதுமான அளவு என்பது பற்றி எதுவும் தெரியாது" என்கிறார். அபரிமிதம் என்பது என்ன என்று இதுவரை நீங்கள்

தெரிந்து வைத்திருக்கிறீர்களா? அது குறித்துச் சிந்தித்துப் பாருங்கள். பிளேக்கை விதிவிலக்காக எடுத்துக் கொள்ளாதீர்கள். நீங்கள் தந்திர சாலியாக மாறிவிடுவீர்கள். நீங்கள் ஒரு முறையிலிருந்து மறு முனை நோக்கி வேகமாக ஊசலாடவில்லையா? அதீதத்தில் வாழ வில்லையா? அதில் எவ்வளவு காலம் வாழ விரும்பினீர்கள் என்பது பற்றித் தெரியுமா? அது பற்றித் தெரியும் என்று நீங்கள் எண்ணிக் கொண்டிருந்தீர்களா? எந்த ஒன்றையும் நீங்கள் அறிமுகப்படுத்திக் கொள்ள வேண்டும். ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். அப்போதுதான் உங்களால் அபரிமிதம் என்றால் என்ன, குறைந்த அளவு என்றால் என்ன என்பதெல்லாம் புரியும்.

சிந்தனை சமநிலையை அளிக்கிறது. சமநிலையே அழகு, சமநிலையே இன்னிசை, சமநிலையே தெய்வீகம் ஆகும்.

நாம் பயன்படுத்தும் கிழ்த்திசை நாட்டின் உயர்வான பொருட் செறிவுள்ள வார்த்தைகள் எல்லாம் சமநிலை என்ற வேர்ச் சொல்லில் இருந்து தோன்றியவை ஆகும். **சமாதி** என்பது சம் என்ற வார்த்தை யிலிருந்து வந்ததாகும். சம் என்றால் சமநிலை. **சங்கீதம்** எனப்படும் இசை என்ற வார்த்தையும் சம் என்பதிலிருந்து தோன்றியதுதான். **சம்போதி** எனப்படும் ஞானநிலையும் சம் என்பதில் இருந்து வந்தது தான். சம் என்றால் சமநிலை என்று அர்த்தம். சமநிலையே **சமாதி** நிலையாகும். சமநிலையே ஞானமடைதலாகும்.

அதீதம் என்றால் என்ன குறைந்த அளவு என்றால் எவ்வளவு என்பதை எல்லாம் தெரிந்துகொள்ளப் போதுமான காலம் வாழ்ந்து விட்டீர்கள். ஆனால் இன்றுவரை வாழ்ந்து வரும் அந்த வாழ்வில் தொடர்ந்து தங்கியிருக்கச் சில சாக்குப் போக்குகளைக் கண்டுபிடிக்க விரும்புகிறீர்கள். அந்த தங்கவிதிமுறைக் குறியீடு ஏற்கனவே உண்மையின் தொடர்பில் உள்ளவர்களுக்கான பாதை என்று நான் நம்புகிறேன்.... என்று கூறுகிறீர்கள். உண்மையின் தொடர்பில் உள்ள அவர்களுக்கு வேறு பாதை தேவையில்லை. அவர்கள் வந்து சேர்ந்து விட்டார்கள். உங்கள் புத்திசாலித்தனத்தையும் தந்திர புத்தியையும் என்னிடம் காட்டாதீர்கள். சத்தியத்தில் இருந்து விலகிச் செல்ல வழி தேடாதீர்கள். நிஜமாகவே உண்மையின் அருகில் வந்துவிட்டவர் களுக்கான பாதையல்ல அது. அவர்களுக்கு வேறு பாதை தேவை யில்லை. இன்னும் வந்துசேராதவர்களின் பாதை அது.

“தேடல் உள்ளவர்களுக்கு அது தந்திரமும், கோழைத்தனமும் கொண்ட பாதையாக இருக்கும்” என்று கூறுகிறீர்கள். அது அப்படி யல்ல. அது விழிப்புணர்வின் பாதை. தந்திரத்தின் கோழைத்தனத்தின்

பாதையல்ல. கோழைத்தனம் கொண்டவனாக இருப்பது மீண்டும் ஒரு அதீத எல்லைக்குச் செல்வது போன்றதாகும். தைரியம் என்றும், கோழைத்தனம் என்றும் அழைக்கப்பட்டவை இரண்டு அதீத எல்லைகள். தந்திரம் ஒரு எல்லை. எளிமை அதன் மறுமுனை ஆகும்.

தங்க விதிமுறைக் குறியீடு என்பது தைரியமோ, கோழைத் தனமோ அல்ல. அது விழிப்புணர்வு ஆகும். அது எளிமையும் அல்ல, தந்திரமும் அல்ல. அது விழிப்புணர்வாகும். அது எப்போதும் விழிப்புணர்வாகும். விழிப்புணர்வே தங்க விதிமுறைக் குறியீட்டில் சுவையாக அமைகிறது.

உங்கள்மீது சில குணாதிசயங்களைத் திணித்துக்கொள்ள வேண்டும் என்று பிதாகோரஸ் சொல்லவில்லை. அவர் எளிமையாக, "கவனத்துடன் இருங்கள். ஒரு எல்லையிலிருந்து மறு எல்லை நோக்கி எவ்வாறு நகர்கிறீர்கள் என்று பாருங்கள்" என்கிறார். கவனி யுங்கள்.... உங்கள் சுயமான தங்கவிதிமுறைக் குறியீட்டைக் கண்டறி வீர்கள். வேறு யாரிடமிருந்தும் அதைக் கற்றுக்கொள்ள முடியாது. உங்களிடமிருந்து தோன்றும் அது ஒரு கண்டுபிடிப்பு போன்றது.

ஐந்தாவது கேள்வி

**ஓஷோ,**

**நான் எனது மனைவிக்கு மிகவும் பயப்படுகிறேன். அது ஏன்? வேறு எந்தத் தவறும் அவளிடம் இல்லை. அவள் மிகவும் நிறைவான பெண்மணி, அவள் போல வேறு ஒருத்தியைக் காண இயலாது.**

நமது அன்பு எப்போதும் பயத்தினால் அசுத்தப்பட்டு விடு கிறது. மனைவி கணவனைக் கண்டு அச்சம் கொள்கிறாள். கணவன் மனைவியைப் பார்த்துப் பயப்படுகிறான். குழந்தைகள் பெற்றோர் களைக் கண்டு அச்சப்படுகின்றன. பெற்றோர் குழந்தைகளைப் பார்த்து பயப்படுகிறார்கள். நாம் அச்சத்தில் வாழ்ந்து கொண்டு இருக்கிறோம். பயம் நமது உறவுகளின் அன்பை விஷமாக்கி விடுகிறது.

"நான் எனது மனைவிக்கு மிகவும் பயப்படுகிறேன். அது ஏன்?" என்று கேட்கிறீர்கள். யார்தான் பயப்படவில்லை? மனைவிக்குப் பயப்படாத மனிதனை நீங்கள் கண்டதுண்டா? ஒவ்வொரு மனிதனும் பயப்படுகிறான். காரணம் அச்சப்படாமல் அன்பு செலுத்துவது எப்படி என்று நாம் கற்றுக் கொள்ளவில்லை.

அன்பு செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும். அது ஒரு கலை. அதற்கு நிரம்ப அறிவு தேவை. நீங்கள் அன்பு செலுத்தவில்லை. அதனால்தான் அங்கு அச்சம் தலையெடுக்கிறது. அன்பு அங்கு இருக்குமானால் அன்பு எல்லா அச்சத்தையும் வெளியேற்றி விடும். நீங்கள் காட்டும் அன்பு போலியானது என்பதை இது உணர்த்துகிறது. வேறு ஏதோ ஒன்றைக் காட்டி அன்பு என்று நடிக்கிறீர்கள். அன்பு என்று காட்டப்படும் அது காமமாக இருக்கலாம். ஆம். காமம் அச்சத்திற்குக் கொண்டு செல்கிறது. ஏனெனில், காமம் என்றால், அந்த பெண்ணை நீங்கள் ஏமாற்றிக் கொண்டிருக்கிறீர்கள். அந்தப் பெண்ணைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். எனவே அங்கு எப்போதும் அச்சம் இருந்து வருகிறது. அவன் உங்களைவிட்டு விலகிச் சென்றுவிடலாம். உங்களை நிராகரித்துவிடலாம். அவள் முடியாது என்று செல்லிவிடலாம். காரணம் அது வெறும் இச்சை. காமஇச்சை. அவள் முடியாது என்று சொல்லிவிட்டால் உங்கள் காம இச்சைகளைத் தீர்த்துக் கொள்ள இயலாது என்று அச்சப்படுகிறீர்கள்.

இந்த விஷயத்தில் பெண்கள் மிகமிக புத்திசாலிகளாக இருக்கிறார்கள். கணவன் காமத்தில் ஆர்வம் காட்டுகிறான் என்றதும் அவர் பின்வாங்கிவிடுகிறார்கள். தாங்கள் போகக்கருவியாகப் பயன்படுத்தப்படுவதை அவர்கள் விரும்புவதில்லை. தாங்கள் ஒரு சந்தைச் சரக்குபோல் தரம் தாழ்வதை விரும்புவதில்லை.

அவர்கள் எதிர்ப்புக் காட்டுகிறார்கள், சண்டை போடு கிறார்கள்.

நான் கேள்விப்பட்டதைச் சொல்கிறேன்...

எண்பது வயதுக்கிழவர் ஒருவர் கோடைக்கால ஓய்வு விடுதி ஒன்றில் அதே வயதுள்ள ஒரு பெண்ணை பார்த்துக் காதல் கொண்டு விட்டார். இருவரும் காதல்வசப்பட்டார்கள். இதுபோன்ற ஒரு காரியம் இந்தியாவில் நடக்க முடியாது. அமெரிக்காவில்தான் அது நடக்க முடியும். இந்தியாவில் இளைஞர்களே காதல்வசப்பட இயலாது. அமெரிக்காவில் எண்பது வயதுக்காரர் காதலில் விழுகிறார். இரண்டு சூழ்நிலைகளும் அசிங்கமானவை. இளைஞன் காதல் வசப்படாது இருப்பது அசிங்கம். எண்பது வயதுக்காரர் காதலில் விழுவதும் அசிங்கம். ஒரு இளைஞன் காதல் வசப்பட வில்லை என்றால் அவன் இளைஞனல்ல என்பதை அது காட்டு கிறது. எண்பது வயதுக்காரர் இன்னும் மன முதிர்ச்சி பெறவில்லை என்று உணர்த்துகிறார்.

காதல் வசப்பட்ட அந்த முதியவர்கள் திருமணம் செய்து கொண்டார்கள். முதலிரவில் அந்த முதியவர் கிழவியின் கையைப் பிடித்து அன்போடு அழுத்தினார். சிறிது நேரம் இருவரும் ஒருவர் கையை ஒருவர் பிடித்தபடி இருந்தார்கள். பிறகு இருவரும் தூங்கப் போய்விட்டார்கள். அப்படித்தான் அவர்கள் முதலிரவு நடந்தது.

மறுநாள் கிழவர் அவள் கையை அழுத்தினார். ஆனால் முன்பு போல் வெகுநேரம் அதைச் செய்யவில்லை.

மூன்றாம் நாள் அவர் அவளுடைய கையை அழுத்த முயன்ற போது அவள், "இன்று எனக்குத் தலைவலி" என்று அதைத் தவிர்த்து விட்டார்.

வெறுமனே கையை அழுத்துவதும்கூட.... தான் உபயோகிக் கப்படுவதை யாரும் விரும்புவதில்லை. ஒருவரைப் பயன்படுத்திக் கொள்வதுதான் உலகிலேயே மிகவும் அவமானகரமான இழிவு படுத்தும் செயலாகும். உங்கள் மனைவியை நீங்கள் பயன்படுத்து வதால் அச்சம் கொள்கிறீர்கள். நீங்கள் அச்சப்படும் நிலையில் அவர்கள் உங்களை வைத்திருக்கிறார்கள். நீங்கள் அவர்களைப் பயன்படுத்தினால் தொடர்ந்து அச்சப்பட்டுக் கொண்டுதான் இருந் தாக வேண்டும். நீங்கள் அவர்களைப் பயன்படுத்தினால் அவர்கள் சாத்தியமான ஒவ்வொரு வழியிலும் உங்களைச் சித்ரவதை செய்தே தீருவார்கள். அவர்கள் பழிவாங்குவார்கள்.

இன்றுவரை அப்படித்தான் நடந்து வருகிறது. அன்பு குறித்து நீங்கள் இன்னும் நிறையப் புரிந்து கொள்ள வேண்டும். அன்பு ஒருபோதும் பிறரை உபயோகப்படுத்திக் கொள்வதில்லை. அன்பு பகிர்ந்தளிக்கிறது. ஒருபோதும் பிறரை உபயோகப்படுத்திக் கொள்வ தில்லை. அதன் பின்னர் பயம் அகன்று போகிறது.

பயம் நிஜமாகவே ஒரு தேவை அல்ல. அது ஒரு பிரவாக மாகும். உங்களுக்கு யாரோ ஒருவர் தேவைப்பட்டால் அதை நீங்கள் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் பற்றும்போது அச்சம் கொள் கிறீர்கள். எப்போதும் அச்சத்தில் இருந்து பற்றும் குணம் உருவா கிறது. நீங்கள் பற்றிக் கொண்டிருப்பதை மற்றவர்கள் தெரிந்து கொள்கிறார்கள். அந்த சூழ்நிலையைச் சாதகமாக்கிக் கொண்டு சுரண்ட ஆரம்பிக்கிறார்கள். மற்றவர்களும் பற்றிக் கொண்டிருக் கிறார்கள். கணவன் விலகிச் சென்றுவிடுவானோ என்று மனைவி பயப்படுகிறாள். பெண் விலகிவிடுவாளோ என்று கணவன் அஞ்சு கிறாள். இருவரும் தொடர்ந்து அச்சப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

பொறாமை உணர்வுடன் ஒருவரையொருவர் கண்காணித்துக் காவல் காக்கிறார்கள். கணவனும் மனைவியும் நண்பர்களாக இருப்பதற்குப் பதில் எதிரிகளாக மாறுகிறார்கள்.

முல்லா நஸ்ருதீன் தனது குடும்ப மருத்துவரிடம் பேசிக் கொண்டிருந்தார். "நஸ்ருதீன்! நீங்கள் முன்கோபக்காரர் என்பதை ஒப்புக் கொள்கிறீர்கள். ஆனால் உங்கள் முன்கோபம் ஒரு சிறிய நுண் கிருமியால் ஏற்படுகிறது என்று அறிவியல் கூறுவதை நீங்கள் அறிந் திருப்பீர்கள் என்று நம்புகிறேன்" என்றார் மருத்துவர்.

நஸ்ருதீன் அவரைப் பார்த்து "உங்களுக்குப் புண்ணியமாகப் போகட்டும். கொஞ்சம் மெதுவாகப் பேசுங்கள். பக்கத்து அறையில் என் மனைவி உட்கார்ந்திருக்கிறாள்" என்றார்.

கணவனும் மனைவியும் அச்சத்தில் வாழ்கிறார்கள். உறவு முறைகள் முழுமையாக நஞ்சாக மாறிவிட்டன. வாழ்வின் அடிப் படை உறவுகளில் ஒன்றான இது இவ்வாறு மாறிவிட்டதால் முழு வாழ்வும் விஷமாகி விட்டது. உங்கள் திருமண உறவின் மூலம் குழந்தைகள் பிறக்கின்றன. உங்கள் தருமணம் ஏற்கனவே கசப்பும், வலியும் கொண்டதாக மாறிவிட்டது. குழந்தைகள் அதிலிருந்து பிறப்பதால் ஆரம்பத்திலேயே அதன் நிழல்களைச் சுமந்து வந்து விடுகிறார்கள்.

திருமணம் என்பது பிரதானமான ஆதாரக் கட்டமைப்புகளில் ஒன்றாகும். அதிலிருந்தே அனைத்தும் வளர்ச்சி பெறுகின்றன. அதுவே சமூகத்தின் முக்கியமான அம்சமாக, மையப்புள்ளியாக இருக்கிறது. அது மறுமலர்ச்சியடைய வேண்டும். அது அசிங்க மானது. அது அன்பிலிருந்து தோன்றவில்லை. ஜனங்கள் திருமணம் செய்து கொள்கிறார்கள். ஆனால் அதற்கு வேறு காரணங்கள் உள்ளன. பொருளாதாரம், சமூகம், மதம் என்று பல்வேறு ஆயிரத்தொரு காரணங்கள் உள்ளன.

நீங்கள் யாராவது ஒருவரிடம் அன்பு வைத்திருந்தால் அதற்கான அடிப்படைத் தேவை என்னவென்றால், அடுத்தவரை முடிந்தவரை சுதந்திரமாக இருக்கச் செய்வதேயாகும். காரணம், நீங்கள் பிறரைச் சுதந்திரமாக இருக்கச் செய்தால் மட்டுமே நீங்கள் சுதந்திரமடைய முடியும். அந்த சுதந்திரத்தில் பயம் மறைகிறது. பயம் தளையின் ஒரு அங்கமாகும்.

வீங்கிய கண்ணும், சில சிறிய காயங்களுடனும் வந்த ஒருவரை மருத்துவமனைப் பதிவு ஊழியர், "நீங்கள் திருமணமானவரா?" என்று கேட்டார்.

"குடும்பச் சண்டையல்ல. வாகன விபத்தினால் ஏற்பட்ட காயங்கள் இவை" என்றார் வந்தவர்.

தற்போது உலகில் திருமண பந்தம் என்பது கிட்டத்தட்ட ஒரு வாகன விபத்து போலாகிவிட்டது. இரண்டு உடல்கள் ஒன்று படுவதினால் ஏற்படும் மலர்ச்சி அங்கு இதுவரை தலையெடுக்க வில்லை. கிட்டத்தட்ட அது ஒரு விபத்து போலவே அமைந்திருக் கிறது. நாம் அடிப்படையை முழுவதாக மாற்றியமைக்க வேண்டும். ஜனங்கள் மிகவும் இளம்வயதில் திருமணம் செய்துகொள்ளக் கூடாது. பல காதல் உறவு அனுபவங்களை முடிந்தவரை திருமணம் செய்துகொள்ளும் முடிவு எடுப்பதற்கு முன்னர் பெறவேண்டும்.

முதல் காதல் நிஜமாகவே உயர்வானது. காரணம் அது முதல் அனுபவம். ஆனால் அது மிகவும் ஆபத்தானது. அது முதல் அனுபவம் என்பதால் மனக்கிளர்ச்சியூட்டுவதாக அமைந்திருக்கும். ஆனால் அந்தக் கிளர்ச்சி விரைவில் மறைந்துபோய்விடும். அது பலமான அடிப்படை விஷயமாக அமையாது. அது உண்மையான திருமணமாக இருக்காது.

ஒரு ஆண் திருமணம் செய்துகொள்ள முடிவெடுப்பதற்கு முன்னர் பல பெண்களிடம் பழகவேண்டும். பெண்ணும் பல ஆண்களுடன் பழகவேண்டும். அப்போதுதான் சரியாகத் தேர்வு செய்ய முடியும். யாருடன் அவருக்கு இசைவு ஏற்படுகிறது என்று உணர்ந்தறிய இயலும். ஒன்று சேர்ந்து உயர்வு நிலை பெறத் தொடங் குபவர் பற்றிப் புரிந்துகொள்ள முடியும். ஆனால் காலங்காலமாக இவ்வாறு செய்ய நமக்கு அனுமதியில்லை.

நீங்கள் பொறுப்பேற்றுக் கொள்வதற்கு முன்னர் மற்ற ஜனங் களுடன் கலந்து பழகி நிறைய அனுபவம் பெறவேண்டும். நமது கோட்பாடுகள் தொழில்நுட்பம் காலத்துக்கு முற்பட்டவைகளாக இருக்கின்றன. ஒரு பெண் கர்ப்பமடைவது ஆபத்தானதாக எண்ணப் பட்டது. அது அவளுக்கும், அவள் குடும்பத்துக்கும் தொல்லை யளிப்பதாக இருக்கும். அவளது வாழ்நாள் முழுவதும் அது துன்பம் தரும். ஒரு ஆண் திருமணத்துக்கு முன்பு கற்புடன் இருந்தானா என்ற கேள்விக்கே இடமிருக்கவில்லை. ஆனால் உலகம் முழுவதும் ஒரு பெண் என்பவள் கற்புடன் இருப்பது என்பது ஒரு முதன்மையான தேவையாகும்.

ஏன் இந்த இரட்டை நிலை? பெண்மட்டும் ஏன் கன்னித் தன்மையுடன் இருக்க வேண்டும்? ஆணுக்குமட்டும் ஏன் அது

இல்லை? ஆண் ஆண்தான் என்கிறார்கள். பெண்கள் பெண்கள் இல்லையா? பெண்களுக்குத் தொழில்நுட்ப பாதுகாப்பு இல்லை என்பதுதான் காரணம். இப்போது பாதுகாப்பு முறைகள் வந்து விட்டன. நெருப்பு கண்டுபிடிக்கப்பட்ட பிறகு உலகின் மிகப் பெரிய அடுத்த கண்டுபிடிப்பு மாத்திரையாகும். உலகின் மிகப்பெரிய கண்டு பிடிப்புகளுடன் ஒப்பிடும்போது மாத்திரை கண்டுபிடிப்புடன் வேறு எதையும் இணை சொல்ல முடியாது. அது பற்றிய விழிப்புணர்வு உங்களுக்கு இல்லாமல் இருக்கலாம். ஆனால் மாத்திரை உலகத் தையே முழுமையாக மாற்றிவிட்டது. பாலியல் குறியீட்டையே அது மாற்றியமைத்துவிட்டது.

நீங்கள் தொழில்நுட்பம் கண்டறியப்பட்ட பின்னர் தோன்றிய காலத்தில் வாழ்கிறீர்கள். தொழில்நுட்பக் காலத்துக்கு முந்தைய கோட்பாடுகளை நீங்கள் சுமந்துதிரியத் தேவையில்லை. அவை எல்லாம் ஊறுவிளைவிப்பவை. ஒரு காலத்தில் அவை தேவைப் பட்டன. இப்போது அவை தேவையற்ற சுமைகள். நீங்கள் தேவை யற்று அந்த பாரத்தைச் சுமந்துகொண்டும், வாழ்வில் இடையூறை வரவழைத்துக் கொண்டும் இருக்கிறீர்கள்.

ஆணும் பெண்ணும் சந்திக்க வேண்டும். ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ள வேண்டும். திருமணத்துக்கு அவசரப்படத் தேவை யில்லை. நீங்கள் அன்பு செலுத்தும் கலையை மெல்ல மெல்லக் கற்றுக் கொள்வீர்கள். ஜனங்களுடன் கலந்து பழகும் முறைகளைக் கற்றுக் கொள்வீர்கள். அதில் ஒரு ஆன்மீக இணக்கம் இருப்பதையும் கற்று உணர்வீர்கள்.

திருமணம் என்பது ஒரு ஆன்மீகச் செயல்பாடு. அது உடல் சார்ந்த செயல் அல்ல. அது ஆன்மீகப் பிராயச்சித்தம் ஆகும். நீங்கள் ஒரு பெண் அல்லது ஆணை நேசிக்க ஆரம்பித்தால் உன்னத இன்னிசை எழுகிறது. அப்பாலிலிருந்து ஏதோ ஒன்று ஊடுருவிச் செல்கிறது. அதன்பின்னரே தீர்மானம் செய்து முடிவெடுக்க வேண்டும். அதுவரை அவசரப்படக் கூடாது.

"அவளிடம் வேறு எந்தத் தவறும் இல்லை" என்று கூறுகிறீர்கள். உலகில் யாரிடமும் எந்த தவறும் காணப்படுவதில்லை. நான் ஒரு அழகான ஆணைப் பார்க்கிறேன். அழகிய பெண்ணைப் பார்க் கிறேன். இருவரும் தனித்தனியே அழகானவர்கள். ஒன்று சேர்கை யில் இருவரும் அசிங்கமானவர்களாகி விடுகிறார்கள். ஏதோ ஒன்று தவறாகிப் போகிறது. அவர்கள் பொருந்திப் போவதில்லை. ஆண் அழகானவன். பெண்ணும் அழகானவள்தான். திருமணம்தான்

மோசமானது. அவர்களுக்கு பொருந்தி வரவில்லை. அவர்கள் ஒருவருக்கு ஒருவர் பொருத்தமானவர்களாக இல்லை. திருமணம் அசிங்கமானதாக மாறும்போது இருவரும் மெல்ல மெல்ல அசிங்க மாக மாறுகிறார்கள். நான் இதுவரை அசிங்கமான ஒரு மனிதனைக் கண்டதில்லை. எல்லா மனிதர்களும் அழகாகவே இருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு அழகான உறவுகள் தேவை. அவர்கள் அழகு வளர்வதற்கும், புதிய மலர்களைக் கொண்டுவருவதற்கும், புதிய கீதங்கள் இசைக்கவும் அது அவசியமாகும்.

“அவளைப் போல கச்சிதமான ஒரு பெண்ணை வேறு எங்கும் காணமுடியாது” என்று கூறுகிறீர்கள். அது சரியாகவும் இருக்கலாம். நீங்கள் சொன்னால் அதை நாம் நம்புகிறேன். இல்லாதுபோனால் கச்சிதமான மனிதர்களை எங்குமே பார்க்க இயலாது போய்விடும். கச்சிதமான மனிதர்களைக் காண முடியாமல் போய்விடும். கச்சித மற்ற தன்மை வாழ்வின் ஒரு அங்கமாக இருக்கிறது. வாழ்வின் பிரதான அம்சமாக இருக்கிறது. ஒருவர் கச்சிதமானவராக மாறும் கணத்தில் வாழ்விலிருந்து அவர் மறைந்துபோகத் தொடங்குகிறார்.

அதனால்தான் புத்தர்கள் மீண்டும் பிறக்கமாட்டார்கள் என்று நாங்கள் கூறுகிறோம். அவர்கள் பூரணத்துவம் நிறைந்தவர்கள். எனவே மீண்டும் பிறக்கத் தேவையில்லை. பூமியில் கற்றுக் கொள்ள வேண்டிய அனைத்தையும் கற்றுக் கொண்டு விட்டார்கள். எனவே மீண்டும் இங்கு வந்து பிறப்பெடுக்க அவசியம் இல்லை.

உங்கள் மனைவியைப் போல ஒரு கச்சிதமான பெண்ணை வேறு எங்கும் காண முடியாது என்று சொல்கிறீர்கள். அவர் நன்னடத்தை கொண்டவராக இருக்கலாம். எதையும் நிறைவாகச் செய்து முடிக்கக் கூடியவளாக இருக்கலாம். நிறைவாகச் செய்து முடிப்பவருக்கும், பூரணத்துவம் பெற்றவருக்கும் இடையில் ஒரு பெரிய வித்தியாசம் உண்டு. காரியத்தை நிறைவாகச் செய்யக் கூடியவர் ஒரு மனநோயாளி. அதை நிறைவான பணியின் பின்னால் எளிதாக மறைத்து வைக்கிறார். எதையும் நிறைவாகச் செய்யப் பெண்கள் ஆர்வம் காட்டுகிறார்கள். ஏன் என்றால், வேறு எந்த விதமான ஆதிக்கச் செயல்களுக்கும் அவர்கள் அனுமதிக்கப்படுவ தில்லை.

நூற்றாண்டுக் காலங்களாக ஆண் எல்லாக் காரியங்களிலும் ஆதிக்கம் செலுத்தி வருகிறான். குறிப்பாகப் பொருளாதாரம், சமூகம், அரசியல், ஆன்மீகம் என்று அவன் கை மேலோங்கி இருக்கிறது.

பெண்கள் ஆதிக்கம்செய்ய வழியே இல்லாமல் போய்விட்டது. அவள் தனது வழியைச் சுயமாக கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது.

ஒவ்வொரு பெண்ணும் நன்னடத்தை கொண்டவள், எதையும் நிறைவாகச் செய்பவள்தான். உங்கள்மீது ஆதிக்கம் செலுத்த அவளது தந்திரம் அது. புகைபிடித்தல் தவறான செயல் என்பதால் அதைச் செய்ய அவள் உங்களை அனுமதிப்பதில்லை. மது அருந்த அவள் உங்களை அனுமதிப்பதில்லை. அதுவும் தவறான காரியம் தான். கண்டதையும் தின்ன அவள் உங்களை அனுமதிப்பதில்லை. அப்படித் தின்பது முறையான செயல் அல்ல. எதற்குமே அவள் உங்களை அனுமதிப்பதில்லை! உங்கள்மீது ஆதிக்கம்செலுத்த அவள் கடைப்பிடிக்கும் வழி அதுவே ஆகும்.

உலகில் ஆண்களுக்குச் சமமாக எல்லா இடங்களிலும் பெண்கள் போட்டியிட அனுமதிக்கப்பட்டால் அதன்பிறகு அவர்கள் நிறைவாகக் காரியம் செய்யக்கூடியவர்களாக இருக்கமாட்டார்கள். மேற்கு நாடுகளில் அதுதான் நடந்து கொண்டிருக்கிறது. பெண்கள் புகைபிடிக்க ஆரம்பித்துவிட்டார்கள். இதற்குமுன்பு அவர்கள் அப்படிச் செய்ததில்லை. கணவன்மார்கள் புகைபிடித்தால் அதற்கு எதிர்ப்புத் தெரிவித்துவந்தார்கள். இப்போது அவர்களும் புகை பிடிக்கிறார்கள். என்ன ஆயிற்று? அதிகாரத்தில் இருக்க அது ஒன்று தான் வழி.

அதுதான் நீங்கள் அச்சப்படக் காரணம் என்பதை கவனத்தில் கொள்ளுங்கள். காரணம், அவள் நிறைவாகக் காரியம் செய்பவளாக இருக்கிறாள். நீங்கள் அவளுக்குச் சமமானவராக இல்லை என்ற ஒரு குற்ற உணர்வை அவள் உருவாக்குகிறாள். அதுவே அவள் தந்திரம் என்று அறிந்துகொண்டு எச்சரிக்கையுடன் இருங்கள். ஆதிக்கம் செய்யவும், கைப்பற்றவும் அது ஒரு நுட்பமான தந்திரமாகும்.

**இ**ரண்டு இளைஞர்கள் தங்களது வழக்கமான தலைப்பான பெண்கள் என்பது பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். "நான் ஒரு நல்ல பெண்ணுக்காகக் காத்திருக்கிறேன். அவள் மது அருந் தாதவளாக, புகைபிடிக்காதவளாக, வேறு கெட்ட பழக்கம் எதுவும் இல்லாதவளாக இருக்க வேண்டும்" என்றான் ஒருவன்.

"அப்படிப்பட்ட ஒருத்தியுடன் சேர்ந்து என்ன சாதித்துக் கிழிக்கப் போகிறாய்?" என்றான் மற்றவன்.

நிறைவான, கச்சிதமான ஒரு பெண்ணை நீங்கள் சந்தித்தால் உங்களுக்குத் தொல்லைகள்தான் ஏற்படும். அவள் மனுஷியாக

இருக்கமாட்டாள். மனிதத்தன்மை இல்லாது உரிமையுடன் நடந்து கொள்வாள். அவளுடன் ஒப்பிடும்போது நீங்கள் அசிங்கமாக, ஒரு புழுவைப் போல் தெரிவீர்கள். நன்னடத்தையாளர்கள் பெறும் பெரிய ஆனந்தம் இதுதான்.

துறவிகள் என்று அழைக்கப்படுவோர் எல்லோரும் அகந்தைப் பயணம் மேற்கொண்டிருக்கிறார்கள். உங்களைச் சித்திரவதை செய்வதற்காக அவர்கள் எந்த தியாகத்தைச் செய்யவும், எதைத் துறக்கவும் தயாராக இருக்கிறார்கள். நீங்கள் மோசமானவர் என்று காட்டுவதற்கு எதையும் செய்யச் சித்தமாக இருக்கிறார்கள். நீங்கள் ஒழுக்கம் இல்லாதவர்களாக, பாவிகளாக இருப்பதாகக் காட்ட நினைக்கிறார்கள். தாங்கள் துறவிகள் என்று நிரூபிக்கும் ஒரு விஷயம்தான் முழுமையான மகிழ்ச்சி தருவதாக அவர்களுக்கு அமைந்திருக்கிறது. அதற்காக நீங்கள் எதைக் கேட்டாலும் அவர்கள் தருவதற்குத் தயாராக இருக்கிறார்கள். அவர்கள் துறவிகள் என்று நீங்கள் இந்த ஒன்றைத் திருப்தி செய்தால் போதும். எந்த ஒரு முட்டாள்தனமான காரியத்தை நீங்கள் கேட்டாலும் அதைச் செய்யத் தயாராக இருக்கிறார்கள்.

கிறிஸ்தவத் துறவி ஒருவர் இருந்தார். ஒரு மதப்பிரிவை அவர் பின்பற்றினார். அந்த துறவி தான் செய்த பாவங்களுக்காகத் தினமும் தன்னைத் தானே அடித்துக் கொள்வார். உண்மையில் அவர் பெரிதும் மதிக்கப்பட்டார். அவருக்கு நிறைய பக்தர்கள் இருந்தார்கள். தன்னைத் தானே அடித்துக் கொள்வது அந்த மதப்பிரிவின் ஒரு மதிக்கத்தக்க காரியமாக அமைந்திருந்தது. முடிந்த அளவு தன்னை அடித்துக் காயப்படுத்திக் கொள்பவர் சிறந்த பக்தராக எண்ணப் பட்டார். தன்னைச் சித்திரவதை செய்து கொள்ளும் ஒருவர் சிறந்த துறவியாகிறார். எப்படிப்பட்ட முட்டாள்தனம் என்று பாருங்கள்!

ஆனால் மக்கள் விரதம் என்ற பெயரில் பட்டினி கிடக்கத் தயாராக இருக்கிறார்கள். குளிரில் ஆடையின்றி நடுங்கத் தயாராக இருக்கிறார்கள். எதையும் செய்ய ஆயத்தமாக இருக்கிறார்கள்! நீங்கள் அவருக்கு மரியாதை கொடுத்தால், அவரது அகந்தைக்குத் தீனிபோட்டு நிறைவு செய்தால் எதுவும் செய்வார்கள். இது ஒரு தந்திரமான அரசியல் ஆகும்!

பெண்களுக்கு ஆதிக்கம் செலுத்த வேறுவழி இல்லாதிருப் பதால் காரியங்களை நிறைவாகச் செய்து அதன்மூலம் ஆதிக்கம் செலுத்துகிறார்கள். இதில் அடிப்படை விஷயம் என்னவென்றால், இதுவரை நீங்கள் மனைவியிடம் அன்பு காட்டவில்லை. அவள்

உங்களிடம் அன்புசெலுத்தவும் அனுமதிக்கவில்லை. உறவு, பயம் கலந்ததாக அமைந்திருக்கிறது. அத்துடன் நீங்கள் அவளை அச்ச முறவும் செய்கிறீர்கள். இது உங்கள் பக்கத்துக் கதை. அவள் பக்கத்துக் கதைபற்றி எனக்குத் தெரியாது. நுட்பமான வழியில் அச்சுறுத்தி அவளைப் பயப்படச் செய்கிறீர்கள்.

இந்த விளையாட்டை எல்லாம் ஒதுக்கித் தள்ளுங்கள். வாழ்க்கை குறுகியது. அன்பு விலைமதிப்புமிக்கது. ஆழ்ந்த அன்பு செலுத்துவதற்கான வாய்ப்பைத் தவறவிடாதீர்கள். ஏனென்றால், அன்பு மட்டுமே வழிபாட்டிற்கான கதவைத் திறக்கும் ஆற்றல் பெற்றதாகும்.

**கடைசிக் கேள்வி**

**ஓஷோ,**

**ஏசுநாதர் இறந்து மூன்று நூற்றாண்டுகள் கழிந்த பின்னர்தான் தேவாலயங்களில் பிரம்மச்சரியம் என்ற முறை நடைமுறைப் படுத்தப்பட்டது என்கிறார்களே, அது உண்மையா? இறந்த பிறகு எல்லாத் தேவாலயங்களின் தலையெழுத்தும் இதுதானா?**

இன்றுவரை நிலைமை அப்படித்தான் இருக்கிறது. எனது மரணத்துக்குப் பிறகு எனது நிறுவனத்தில் இவ்வாறு நடக்காது என்பது நினைவிருக்கட்டும். நிலைமை அப்படிப்பட்டது. அப்படி நடக்கவும் நிறைய வாய்ப்பு இருக்கிறது.

ஏன் அப்படி நடக்கிறது? ஏன் வாழ்வுக்கு இசைவான ஒவ்வொரு மதமும் வாழ்வுக்கு எதிரானதாக மாறுகிறது? அதற்கு பலமான ஒரு காரணம் இருக்கிறது. குரு உயிரோடு இருக்கும்போது ஆமோதிப்புடன் வாழ்கிறார். உங்களை அதிகாரம் செய்ய வேண்டிய அவசியம் அவருக்கு இல்லை. அவர் தனக்கே குருவாக இருக்கிறார். அவரது குருத்துவத்திற்கு யாரும் ஆதரவு தரவேண்டும் என்ற தேவை இல்லை. அவர் யாருமின்றித் தனித்து இருந்தாலும் குருதான். அவர் ஒரு பேரரசர். அவருக்கு பக்தர்கள் தேவையில்லை. கடவுளின் ராஜ்ஜியம் என்ற பொக்கிஷத்தை அவர் பெற்றிருக்கிறார். அவர் ஆமோதிக்கப்பட்ட, ஆனந்தமான, கொண்டாட்டமான வாழ்வு வாழ்கிறார். அவர் வாழ்வு ஒரு நடனமாக, கீதமாக இருக்கிறது. அவர் வாழ்க்கை கவித்துவமானது. அவர் வாழ்வு மலர்களின் நறுமணமும், விருட்சங்களின் அழகும், மலைகளின் மௌனமும், காதலர்களின் களிப்பும் கொண்டதாக அமைந்திருக்கிறது.

அவர் தன்னை அங்கீகரித்துக் கொண்டார். தனது முழுமையை அவர் அறிந்து கொண்டார். உங்கள் முழுமையை நீங்கள் அறியும் போது அழிவுசக்தியும், எதிர்மறை எண்ணங்களும் மறைகின்றன. நேர்மறையான எண்ணங்களால் அவை உட்கிரகிக்கப்பட்டு விடு கின்றன. இல்லை என்பது அகன்று ஆம் என்பது தலையெடுக்கிறது. குரு தெய்வீக நிலை பெறுகிறார். கடவுள் அவரை அங்கீகரித்து தலையசைக்கிறார். தெய்வீகம் அவரிடம் உறைகிறது.

குரு மறைந்த பிறகு அவர் இடத்திற்கு வேறு ஒருவர் வருவதில் பிரச்சினை தோன்றுகிறது. பதவிக்கு வருபவர் ஞானம் பெற்றவராக இருந்தால் நல்லது. ஆனால் எப்போதும் அப்படி இருப்பதில்லை... ஏசுநாதர் வாழ்விலும் அப்படி நடந்தது. அவருக்குப் பிறகு பதவிக்கு வந்தவர்கள் ஞானமடைந்தவர்களாக இல்லை. அவர்கள் பெரிய கல்விமான்களாக, புலமை பெற்றவர்களாக மட்டுமே இருந்தார்கள். தேவாலயங்களை உருவாக்குவதில் சிறப்பாகப் பணியாற்றினார்கள். ஆனால் தேவாலயங்கள் ஞானம் பெற்ற மனிதர்களால் உருவாக்கப் படவில்லை. ஏசு மறைந்து முன்நூறு ஆண்டுகளுக்குப் பிறகுதான் தேவாலயங்கள் தோன்றின.

அந்த முன்னூறு ஆண்டுக் காலங்களில் ஒளி சுத்தமாக மறைந்து போய்விட்டது. இப்போது மக்கள் மீது ஆதிக்கம் செலுத்துவதற்கு ஒரே வழி, வாழ்க்கைக்கு எதிரான மதத்தை உருவாக்குவதுதான். வாழ்க்கைக்கு எதிரான மதத்தை உருவாக்கினால் மட்டுமே பாதிரி யார்கள் மக்கள் மீது ஆதிக்கம் செலுத்த இயலும். இது தவறு, அது தவறு என்று சொல்ல முடியும். செய்யத்தகாதவை என்று நீங்கள் பலவற்றைச் சொல்லும்போது மக்களை அச்சத்திலும், குற்ற உணர் விலும் ஆழ்த்துகிறீர்கள். குற்ற உணர்வில் எப்போது ஒருவர் இருக்கிறாரோ அவரை ஆதிக்கம் செய்து கட்டுப்படுத்துவது எளிது.

கிட்டத்தட்ட எல்லா மதங்களிலும் பிரம்மச்சரியம் நுழைய ஒரே ஒரு முக்கியமான காரணம் இருக்கிறது. பாலுணர்ச்சி அதீதமான சக்தி கொண்டது. யாராலும் அதை அடக்கிவைத்து வென்றுவிட இயலாது. அதை தாண்டி அப்பால் செல்வதில் வெற்றி பெறலாம். ஆனால அதை அடக்கிவைத்து வெற்றிகொள்ள உங்களால் ஆகாது. ஆகவே அது ஒரு யுக்தியாகப் பயன்படுகிறது. மக்களுக்கு பிரம்மச் சரியம் பற்றிக் கற்றுக் கொடுங்கள். அவர்களால் அதில் வெற்றி பெற முடியாது என்று உங்களுக்குத் தெரியும். அவர்கள் மீண்டும் மீண்டும் தோல்வி அடையும்போது குற்ற உணர்வுக்கு ஆட்படுகிறார்கள். மீண்டும் மீண்டும் தோற்கும்போது தன்னம்பிக்கையை இழக்

கிறார்கள். மீண்டும் மீண்டும் தோற்றுப் போகும் சமயத்தில் வேஷ தாரிகளாக மாறுகிறார்கள். தாங்கள் எவ்வளவு மோசமானவர் களாகவும், பாவிகளாகவும் இருக்கிறோம் என்பதை அவர்கள் உணர்கிறார்கள். தாங்கள் உள்ளே ஒருவிதமாகவும் வெளியே ஒரு விதமாகவும் இருப்பதை உணர்கிறார்கள்.

பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்கும் மனிதர்கள் தங்கள் ஆசைகளைத் தீர்த்துக் கொள்ள வேறு வழிமுறைகளை கண்டறி வார்கள் என்று பாதிரியார்களுக்குத் தெரியும். நிஜத்தில் அதை செய்ய முடியாவிட்டாலும் கற்பனை செய்து பார்த்தாவது திருப்திப்பட்டுக் கொள்வார்கள். உங்களால் நேருக்கு நேராக பாதிரியாரைப் பார்க்க முடியாது என்று அவருக்குத் தெரியும். நீங்கள் வெட்கப்படுவீர்கள். உங்கள் வெட்கம் அவருக்குப் பலமாக மாறுகிறது.

பிரம்மச்சரியம் வாழ்வுக்கு எதிரானது. வாழ்க்கையைப் பார்த்து அது மறுப்புத் தெரிவிக்கிறது. காரணம் பாலுணர்வு வாழ்வின் ஆதாரமாக உள்ளது. நீங்கள் வாழ்வை மறுக்கும்போது ஆசைகளை அடக்கிவைப்பது கிட்டத்தட்ட முடியாத காரியமாக மாறிப் போகிறது. மீண்டும்மீண்டும் ஆசை எழுகிறது. அக்கம்பக்கத்தில் ஏதாவது வழி இருக்கிறதா என்று பார்க்கிறது. அது வக்கிரமான புத்தியை உருவாக்குகிறது. வக்கிர எண்ணம் கொண்ட ஒரு மனிதன் மேலும் மேலும் சுய கண்டனத்துக்கு ஆளாகிறான்.

பாதிரியாரால் அந்த இளம் பெண்ணைத் தடுக்க முடிய வில்லை. அவள் பாவமன்னிப்புக் கேட்ட விஷயம் சாமான்யமான தல்ல என்று கருதினார். தனது அறைக்கு வருமாறு அவளை அழைத்தார் பாதிரியார். அங்கு சென்றதும் அவள் இடுப்பில் கை போட்டார்.

"அந்த இளைஞன் உன்னிடம் இதுபோல நடந்து கொண்டானா?" என்று கேட்டார்.

ஆமாம், பாதிரியாரே! இதைவிடவும் மோசமாக நடந்து கொண்டான்" என்று பதில் கூறினாள் அவள்.

"ம்ம்" என்று முனகிய பாதிரியார் அந்த இளம் பெண்ணை முத்தமிட்டார். "இதையும் அவன் செய்தானா?

"ஆமாம் பாதிரியாரே! இதைவிடவும் மோசமாக இருந்தது அவன் செயல்."

ஆசையோடு அப்பெண்ணை அணைத்துக் கொண்டார். "இது மாதிரியும் அவன் செய்தானா?"

"ஆமாம்! இதைவிடவும் மோசமாக இருந்தது அவன் செய்கை" என்றாள்.

இப்போது பாதிரியாருக்கு உணர்வுக் கிளர்ச்சி ஏற்பட்டு விட்டது. அந்த பெண்ணை விரிப்பின்மீது படுக்கவைத்தார். அவளுடன் உடலுறவு கொண்டார். மூச்சிரைத்தபடி அவளிடம், "அவன் இதையும் செய்தானா?" என்று கேட்டார்.

"ஆமாம் பாதிரியாரே! இதைவிடவும் அசிங்கமாக நடந்து கொண்டான்" என்றாள்.

காரியத்தை முடித்துக் கொண்ட பாதிரியார் "அவன் இதையும் செய்தானா, இதைவிட மோசமாகச் செய்தானா? அப்படி என்ன மோசத்தைச் செய்துவிட்டான்?" என்று கேட்டார்.

கூச்ச சுபாவமுள்ள அந்தப் பெண் "எனக்கு அவன் வெட்டை நோயைத் தந்துவிட்டான்" என்று நான் நினைக்கிறேன்" என்றாள்.

நீங்கள் துறவிகள் என்றும், பாதிரியார்கள் என்றும், பிரம்மச் சாரிகள் என்றும் அழைப்பவர்கள் வாழ்வின் புழக்கடை வாயில் வழியே சென்று வரும் மனிதர்களாக இருக்கிறார்கள். புழக்கடைப் பாதையைக் கண்டறிந்து கொள்வது ஒன்றும் தவறில்லை என்று சொல்ல வரவில்லை. அதில் உள்ள தவறு என்னவென்றால் அவர்கள் தங்களின் தலைவாசல் கதவை மூடிவிட்டதுதான். அதற்கு அவசியமே இல்லை. அவர்களின் பொய்வேஷம் முற்றிலும் தேவையற்றது. அவர்கள் நம்பகமான மனிதர்களாக மாறமுடியும். அதற்கு ஒரு நம்பகமான மனிதரை அவர்கள் கண்டறிய வேண்டும்.

பாலுணர்வைத் தாண்டிச் செல்ல முடியும். அதன் பிறகு ஒரு வித்தியாசமான தன்மை உங்கள் வாழ்வில் ஏற்பட்டுவிடும். பிரம்மச் சரியம் தலையெடுக்கிறது. ஆனால் அது திணிக்கப்படவில்லை. அது உங்கள் முயற்சி அல்ல. இயற்கையின் கொடையாகும். ஆழ்ந்த வாழ்க்கை அனுபவத்திலிருந்து அது வெளிப்படுகிறது. மேலும் மேலும் நீங்கள் கனிகிறீர்கள். சட்டென்று ஒருநாள் காமம் என்பது குழந்தைத்தனமான காரியமாகத் தோன்றுகிறது. அது அப்படிப் பட்டதுதான். நீங்கள் விழிப்புணர்வு இல்லாத நிலையில் இருக்கும் போதுதான் காமம் சாத்தியம் என்று தோன்றுகிறது. விழிப்புணர்வு இல்லாத இருண்ட வாழ்க்கை வாழ்கிறீர்கள்.

ஏதோ ஒரு ஒளி உங்களுக்குள் இருந்து தோன்றும்போது உங்கள் இதயத்தில் ஜுவாலை எழுகிறது. விளக்கை நீங்கள் கொண்டு

வரும்போது இருள் மறைவதுபோல காமம் அகலத் தொடங்கு கிறது. ஆனால் அது முற்றிலும் வித்தியாசமான ஒரு நிகழ்வாகும்.

கிழக்கு நாடுகளில் நாம் **பிரம்மச்சரியம்** என்ற அழகான பெயரைச் சூட்டியிருக்கிறோம். பிரம்மச்சரியம் என்ற சொல்லை Celibacy என்று மொழிபெயர்த்தால் அது சரியாக இருக்காது. Calibacy என்பது காமத்தை அடக்கி வைப்பதாகும். காமம் உங்களுக்குள் உள்ளே கொதித்துக்கொண்டு இருக்கிறது. பிரம்மச்சரியம் என்பது காமத்தைக் கடந்து செல்வதாகும். நீங்கள் மனமுதிர்ச்சி பெறும்போது அதுவரை விளையாடிக் கொண்டிருந்த பொம்மைகள் மனதுக்கு உகந்தவையாக இல்லாது போகும். அவை தானே விலகிவிடு கின்றன.

பிரம்மச்சரியம் என்ற வார்த்தை தரும் அர்த்தம் கடவுளுக்கு நிகராக வாழ்தல் என்பதாகும். மேலும் சரியான அர்த்தம் கடவுளைப் போல நடந்துகொள்ளல் என்பதாகும். அது முற்றிலும் வித்தியாச மான செயல்பாடாகும்.

குரு கடவுளின் அருளாசி பெற்று வாழ்கிறார். குரு மறைந்த பிறகு அரசியல்வாதிகள் களத்தில் குதித்துவிடுகிறார்கள். போட்டி யாளர்கள் வெற்றிபெறத் துடிக்கிறார்கள். சீடர்களை அதிகாரம் செய்ய விரும்புகிறார்கள். பதவியில் அமர விரும்புகிறார்கள். அவர்க்ள உங்கள் இயல்பான ஓட்டத்தை அழித்தால் மட்டுமே அவர்களுக்குப் பதவி வசப்படும். ஒரு மனிதனின் இயல்பான ஓட்டத்தை அழித் தால் அவன் எப்போதும் உங்கள் அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டு இருப்பான். அவன் எப்போதும் உங்கள் அடிமையாக இருப்பான்.

ஒரு மனிதனின் இயல்பு நிலையை வக்கிரப்படுத்தினால் அவர் தனது சுதந்திரத்தை ஒருபோதும் வசப்படுத்திக் கொள்ள முடியாது. பாதிரியார்கள் இதைக் காலம் காலமாக அறிந்து வைத்திருக்கிறார்கள். அதைப் பயன்படுத்துகிறார்கள். அது ஒரு மோசமான ஆயுதம்.

ஏசுவின் காலத்துக்கு மூன்று நூற்றாண்டுகளுக்குப் பின்னர்தான் அவரது பக்தர்களிடம் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்கும் பழக்கம் துவங்கியது என்பது உண்மைதான். மூன்று நூற்றாண்டுகளாக அது சாத்தியமில்லாது இருந்தது. காரணம், ஜனங்கள் ஏசுவை நினைவில் வைத்திருந்தார்கள். அவரது நறுமணம் இன்னும் கமழ்ந்து கொண் டிருந்தது. சில மனிதர்களின் இதயத்தில் அவர் இன்னும் வாழ்ந்து கொண்டிருந்தார். ஆனால் மெல்ல மெல்ல அந்த நறுமணம் மறைந்தது. ஒவ்வொரு குரு தோன்றிய பிறகும் அது மறையலாயிற்று.

பிறகு ஒரு மாறுபட்ட விஷயம் நடந்தேறியது. ஏசுநாதருக்குப் பிறகு கிறிஸ்தவ மதம் தலைதூக்கியது. அது ஏசுவுக்கு முற்றிலும் எதிராக இருந்தது. புத்தருக்குப் பிறகு பிறந்த புத்தமதம் அவருக்கு முற்றிலும் எதிரானதாக இருந்தது. அதுவே உலகின் முற்றிலும் வித்தியாசமான செயலாகும்.

நீங்கள் முடிவு எடுக்கிறீர்கள். எதை கிறிஸ்தவம் போதித்திருந் தாலும் நீங்கள் முடிவு செய்த விஷயம் ஏசு போதித்த கருத்துக்கு எதிரானதாகவே இருக்கிறது. பாதிரியார்கள் ஞானம் பெற்றவர்களுக்கு எதிராகச் செயல்படுகிறார்கள். ஆனாலும் அவர்கள் ஞானவான் களைப் பின்பற்றுவதாகக் கூறுகிறார்கள். பாதிரியார்கள் முற்றிலும் மாறுபட்ட மனிதர்கள். ஆதிக்கம் செலுத்துவதே அவர்கள் முழு விருப்பமாகும். அவர்கள் மாறுவேடத்தில் இருக்கும் அரசியல் வாதிகள்.

எனது சந்நியாசிகள் மிகவும் விழிப்புடன், எச்சரிக்கையாக இல்லாதுபோனால் இங்கேயும் அது மாதிரி நடந்திடலாம். வாழ்க்கை ஆமோதிப்பை பெறுவதில் பிடிவாதமாக இல்லாதுபோனால் இங்கும் இங்கும் அது நடக்கலாம். ஏசுவிடம் இதற்கான சாத்தியம் மிகவும் அதிகம் இருந்தது. அவர் எதைச் சொன்னாலும் மேலோட்டமாக மட்டுமே நினைவில் கொள்ளப்பட்டது. அதை மாற்றிக் கொள்வது எளிதாக இருந்தது.

நான் எதைச் சொன்னாலும் அதை மேலோட்டமாகக் கேட்டு நினைவில் கொள்வது கிடையாது. அது ஆழமாகத் தங்கியிருக்கும். நான் அதைத் தெளிவாகக் கூறுகிறேன். அதை வக்கிரப்படுத்துவது கிட்டத்தட்ட சாத்தியமில்லை. வாசகத்தை இங்கே கொஞ்சம் அங்கே கொஞ்சம் பிய்த்தெறிய உங்களால் முடியாது. எனது புத்த கங்கள் எல்லாவற்றையும் நீங்கள் எரிக்கவேண்டியிருக்கும். அப்போதுதான் எனது வாழ்க்கை ஆமோதிப்புப் போதனைகளை வக்கிரப்படுத்த முடியும்.

வாழ்க்கை அதனளவில் முழுமை பெற்றது என்று நான் உறுதி கூறுகிறேன். வாழ்வில் முழுமை சிறப்பானது. வாழ்வின் முழுமை புனிதமானது, பவித்திரமானது.

இன்று இவ்வளவு போதும்.

அத்தியாயம் - 3

முதல் கேள்வி

ஓஷோ,

நடக்கும் ஒவ்வொன்றும் நிஜத்தன்மையற்று ஒரு கனவுபோல் இருக்கிறது. ஒவ்வொரு நாளும் நீங்கள் பிரசங்கத்தில் இருந்து உள்ளேயும், வெளி யேயும் அலைபாய்ந்து கொண்டு உண்மைத் தன்மையற்றவராக இருப்பதுபோல் எனக்குத் தோன்றுகிறது. உங்கள் எதிரில் இருக்கும் போது உள்ளே ஆழத்தில் ஏதோ ஒன்று நடப்பதுபோலிருக்கிறது. ஒவ்வொரு கணமும் உங்களுடன் இருப்பதுபோலிருக்கிறது. ஆனால் எனக்கு ஒரு தெளிவான புரிதல் இருப்பதாக உணரவில்லை. எனக்கு என்ன நடக்கிறது என்று உங்களால் விளக்க முடியுமா?

ஒரு தெளிவான புரிதல் வேண்டும் என்று நினைப்பது தர்க்க ரீதியான விருப்பமாகும். அது விஷயங்களை எளிமையாக விளக்கிச் சொல்ல விரும்புதலாகும். அப்படி விஷயங்களை எளிமைப்படுத்தி விட முடியாது. வாழ்க்கை மிகவும் விந்தையானது. இதுவரை கண்ட கனவுகளை விடவும் விநோதமானது. நீங்கள் அதைத் தெளிவாக அறிந்துகொள்ள இயலாது. அறிவுத்தளத்திற்கு அதை தரம் குறைத்து

விட முடியாது. ஏனென்றால், தெளிவான அறிவுக்குப் புலப்படும் வகையில் ஒரு விஷயம் தரம் தாழ்த்தப்பட்டால் அதன் பின்னர் அது விந்தையானதாக இருக்காது.

அதைத்தான் நூற்றாண்டுக் காலங்களாக செய்ய முயன்று கொண்டிருக்கிறது. இயற்கை எளிமையாக விளக்கிச் சொல்ல முயல்கிறது. எந்த ஒரு விந்தையையாவது அறிவியல் மோப்பம் பிடித்துவிட்டது என்றால் அது சந்தேகத்துக்கு உரியதாகிவிடுகிறது. வினோதம் என்று அதை ஏற்றுக் கொண்டுவிட்டால் அப்புறம் விளக்கிச் சொல்ல வேண்டும் என்ற ஆசைக்கு அவசியம் இல்லை. அதை விலக்கிவிடலாம். இரண்டையும் உங்களால் நிறைவு செய்ய முடியாது. நீங்கள் தெளிவான, தர்க்கரீதியான விளக்கம் வேண்டும் என்ற ஆசையின் மீது பிடிப்புக் கொண்டிருந்தால் அதன் பிறகு ஒரே வழிதான் இருக்கிறது. விநோதம் என்ற எண்ணத்தை விலக்கித் தள்ளிவிட வேண்டும். விந்தை என்பது இனி இல்லை என்று கருத வேண்டும்.

அதனால்தான் தெய்வீக இயற்கை என்ற கருத்து நிராகரிக்கப் படுகிறது. இயற்கையின் ஆன்மா மறுக்கப்படுகிறது. இயற்கையின் நேசம் மறுத்து ஒதுக்கப்படுகிறது. தெய்வீகம், ஆன்மா, நேசம், அழகு, உண்மை போன்றவை அகலும்போது எது மிச்சமிருக்கும்? சுவாரஸ்யமற்ற அசிங்கம், அர்த்தமற்ற தெளிவு - சலிப்பூட்டும் தெளிவு மட்டுமே எஞ்சியிருக்கும். அறிவியல் மனிதனை பெரும் சலிப்பில் ஆழ்த்திவிட்டது.

மதம் என்பது முற்றிலும் மாறுபட்ட ஒரு பரிமாணமாகும். இந்த பிரபஞ்சத்தை எளிமையாகப் புரிந்து கொள்ள வைக்கும் ஒரு முயற்சியாகும். உங்கள் தர்க்கரீதியான தெளிவை அகற்றுவதாகும். மீண்டும் உங்களுக்கு விந்தைமிகுந்த பேதமையைத் தருவதாகும். கவிதை, இசை மீது நேசம், அழகின் மீது விழிப்புணர்வைத் தோற்று விப்பதாகும். உங்களைச் சுற்றிலும் பெருமளவு விந்தைகள் சூழ்ந் திருக்கின்றன என்ற விழிப்புணர்வைத் தோற்றுவிப்பதாகும். அந்த விந்தை வெகு ஆழமானது. அதை அளப்பதற்கு எவ்வளவு ஆழம் என்று தெரிந்துகொள்ள வழியில்லை. அது அளவிட முடியாத ஒன்றாகும்.

அந்த விந்தையை அளக்க முயல்பவர், அதில் கலந்து மறைந்து விடுகிறார். அதில் கரைந்து போகிறார். இதுவே ஆன்மீகத்துக்கும், அறிவியலுக்கும் இடையிலுள்ள வித்தியாசமாகும். விஞ்ஞானிகள்

அளக்கமுடியாத, அடியாழம் காணமுடியாத அந்த நிலை கண்டு அச்சமடைகிறார்கள்.

உங்களுக்குத் தெரியுமா? திடப்பொருள் என்ற அர்த்தம் தரும் matter என்ற சொல் அளக்கக்கூடியது (Measureable) என்ற அர்த்தம் தரும் வார்த்தையை ஆணிவேராகக் கொண்டு தோன்றியதாகும். அது matter போலவே அதே ஆணிவேரில் இருந்து தோன்றியுள்ளது. அளந்து கண்டறியக் கூடியவற்றை மட்டுமே அறிவியல் நம்புகிறது. அளக்க முடியாததை அது நிராகரிக்கிறது. அளக்கமுடியாததவை விஷயத்தில் அது கண்களை மூடிக்கொள்கிறது. ஆனால் அளக்க முடியாத அதுதான் வாழ்வில் சிறப்புச் சேர்க்கிறது. அளக்க முடியாத அதுதான் வாழ்வில் நடனத்தையும், கொண்டாட்டத்தையும் கொண்டு வந்து சேர்க்கிறது. அது அங்குதான் இருக்கிறது! மறுத்து ஒதுக்குவதால் அது அழிந்துபோவதில்லை. மறுப்பதால் ஒன்றுமட்டும் நடக்கிறது. அது வருவதற்கு இல்லாமல் அடைபட்டுப் போகிறீர்கள்.

லாவோட்ஸு கூறுகிறார்: "என்னைத் தவிர எல்லோரும் வாழ்க்கை குறித்த தெளிவான புரிதலுடன் இருக்கிறார்கள். ஒவ்வொருவரும் வாழ்க்கை பற்றி மிகத் தெளிவான புரிதலுடன் இருப்பதாகத் தெரிகிறது. நான் களிமண் மூளையுள்ளவன்" என்கிறார். அவர் பெரும் முக்கியத்துவம் பெற்ற உண்மை ஒன்றைப் பற்றி கூறுகிறார். "நான் இறைமையியலாளன். எனக்குத் தெளிவு தேவையில்லை. தெளிவை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்? எனக்குத் தர்க்கரீதியான விளக்கங்கள் தேவையில்லை. இந்த வினோதங்களை நான் நேசிக்க விரும்புகிறேன். அதுவே வாழ்வாக அமைகிறது. நான் மரங்களுடனும், பூத்து நிற்கும் மலர்களுடனும், பறவைகளுடனும் சேர்ந்துகொண்டு நடனமாட ஆசை கொள்கிறேன்" என்கிறார்.

அது ஒரு முற்றிலும் புதிய பாதையாகும். விந்தை கரைந்து போகவில்லை. வாழ்கிறது. தீர்வு காணப்படவில்லை. தீர்வு காணவும் முயற்சி மேற்கொள்ளப்படவில்லை. ஆனால் அதில் பங்கெடுத்துக் கொள்ள எல்லா முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன.

நீங்கள் இங்கே என்னுடன் இருப்பது என்பது தர்க்கரீதியான பாதைகளை உதறிவிட்டு, அன்பின் பாதையைப் பற்றி கற்றுக் கொள்ளலாகும். விளக்கங்களின் பாதையை ஒதுக்கிவிட்டு, அனுபவத்தின் பாதையைக் கற்றுக் கொள்வதாகும். அதுதான் இங்கே நடந்துகொண்டிருக்கிறது. கவலைகொள்ள வேண்டாம். ஆசீர்வதிக்கப்பட்ட உணர்வைப் பெறுங்கள்.

"எல்லாம் நிஜத்தன்மையற்றுக் கனவுபோலத் தோன்றுகிறது" என்று கூறுகிறீர்கள். உண்மை குறித்து ஒரு திட்டவட்டமான கருத்து உங்களிடம் குடியிருக்கிறது. உண்மை நிலையைத் தொட்டு உணர்ந்து அறியலாம். அழகைத் தொட்டு உணரமுடியாது. "ரோஜா மலர் அழகாக இருக்கிறது" என்று நான் சொன்னால், நீங்கள் உடனே, "அழகு எங்கே இருக்கிறது? அதை நான் தொட்டுப் பார்க்க முடியுமா? அதை எனது கையில் ஏந்திக்கொள்ள முடியுமா? அதை அளவீடு செய்ய முடியுமா? வேதியியல் முறையில் அதை மதிப்பீடு செய்ய முடியுமா?" என்று கேட்கிறீர்கள். நான் ஒவ்வொரு தடவையும் "அது இயலாது" என்று பதில் கூறவேண்டியிருக்கிறது.

"அப்படியானால் அது நிஜமாக இல்லை. இருப்பதாக நம்புவது உங்கள் கற்பனை. நீங்கள் கனவு கண்டுகொண்டிருக் கிறீர்கள். ரோஜாவுக்கு அழகு இல்லை. அதன்மீது ஒரு கனவை பிம்பப்படுத்துகிறீர்கள்" என்று நீங்கள் சொல்கிறீர்கள்.

"நான் காதல் வசப்பட்டுவிட்டேன்" என்று நீங்கள் கூறினால், யாரோ ஒருவர், "காதல் என்பது எங்கே இருக்கிறது? காதல் என்றால் என்ன? அதற்கு அறிவியல் சான்று ஏதாவது உண்டா? தர்க்கரீதியாக அதை விளக்க முடியுமா?" என்று கேட்கிறார். அலட்சியமாக நீங்கள் தோளைக் குலுக்க வேண்டியிருக்கிறது. "தர்க்கரீதியாக, அறிவியல் ரீதியாக நிரூபிக்க முடியவில்லை என்றால் அது இல்லை என்றா கிறது. நீங்கள் கனவில் வாழ்கிறீர்கள். அது கனவு சமாச்சாரம்" என்று அந்த நபர் கூறலாம்.

இதே வழியில் நீங்கள் சென்றால் எது கடைசியில் மிச்ச மிருக்கும்? லௌகீகவாதி குழம்பிப் போகிறார். பருப்பொருளுக்கு அர்த்தமில்லை, பருப்பொருளுக்கு தலைவிதி இல்லை பெருவேகம் இருக்கிறது. ஆனால் இலக்கு இல்லை என்பதால் இந்த குழப்பம் வருகிறது. அதன் பிறகு வாழ்க்கை ஒரு விபத்துபோன்றதாகி விடுகிறது. கிடைத்த ஒரு வாய்ப்பின் விளைவு என்றாகிறது. வாழ்க்கைக்கு ஒரு மரியாதை இருக்காது. நீங்கள் நிஜத்தன்மை யற்றது என்று நீங்கள் கூறும் அந்த விந்தைப் பிரதேசங்களில் இருந்து தான் மரியாதை வருகிறது.

உண்மைநிலை பற்றிய உங்கள் விளக்கங்களை நீங்கள் மாற்றிக் கொள்ள வேண்டியிருக்கிறது. அது நிஜத்திலிருந்து வெகு தொலைவில் இருக்கிறது. உயர்வான ஒன்று தாழ்ந்ததில் இருந்து வெகுதூரம் விலகியிருக்கவே செய்யும். தாழ்ந்ததைவிடவும் உயர்ந்தது கண்களுக்குத் தெரியாமல் இருக்கிறது. தாமரை மலரை

விடவும் குளத்தில் உள்ள சகதி எளிதில் கண்டறியக் கூடியதாக உள்ளது. தாமரை ஒருவகைக் கனவுத்தன்மை பெற்றதாக இருக்கிறது. சகதி சகதிதான் அதில் மாற்றம் இல்லை. அதில் அழகு, கவித்துவம், காதல் உறவு என்ற விஷயங்கள் பற்றிய பேச்சே இ ல்லை. சகதி குறித்து பதிலளிக்க முடியாத விடைகள் கிடையாது. சகதி முழுமை யாக நிஜமானது. அதை தாழ்ந்த உண்மைநிலை என்று கூறுகிறோம்.

ஆனால் அந்த சகதிக்குள் மறைந்திருப்பது தாமரையாகும். ஒருநாள் தாமரை மேலே உயர்ந்து எழுகிறது. இப்போது தாமரையில் ஒருவித கனவுத்தன்மை இருக்கிறது. கவித்துவம், இசை, அழகு போன்றவை அதில் உள்ளன. இப்போது நீங்கள் உயர்வுநிலை நோக்கி நகர்கிறீர்கள். அந்த தருணத்தில் நிஜத்தன்மையற்ற ஏதோ ஒன்று வெளிப்படத் தொடங்குகிறது. உங்களிடம் விந்தை ஊடுருவிச் சென்று தங்கியிருக்க நீங்கள் அனுமதிக்காவிட்டால் அதை நிராகரிப் பீர்கள். நீங்கள் தாமரையை மீண்டும் சகதியாகத் தரம் குறைக்க முயல்கிறீர்கள். தாமரை என்பது சகதியைத் தவிர வேறல்ல என்றும் கூறுகிறீர்கள்.

அப்படித்தான் அறிவியல் பதில் தந்துகொண்டு வருகிறது. "மனிதன் என்பவர் யார்?" என்று நீங்கள் கேட்டால் அவர்கள், "மனிதன் என்பவன் ஒரு பருப்பொருள் தவிர வேறல்ல" என்பார்கள். "உலகம் என்றால் என்ன?" என்று நீங்கள் கேட்டால், "அது பருப் பொருள் தவிர வேறல்ல" என்ற பதிலே கிடைக்கும். நீங்கள் "காதல் என்றால் என்ன?" என்று கேட்டால், "உயிரியல் சார்ந்த செயல்பாடு, ஹார்மோன் திரவங்களின் இரசாயனம் தவிர வேறு அல்ல" என்பார்கள். நீங்கள் **எதைக்** கேட்டாலும் அது உடனே குறைந்த மதிப்புள்ள நிலைக்குத் தாழ்த்தப்படுகிறது. காரணம் தாழ்ந்த நிலையில் உள்ளதை மட்டுமே புரிந்து உணர இயலும்.

அறிவியலின் கையில் அகப்படாத ஒரு உயர் நிலைக்குத் தாமரை மலர் உயர்கிறது. அது கவிதைகளுக்கு மட்டுமே வசப்படும். அது அறிவியல் சார்ந்த மனதிற்கும், அறிவியல் அணுகுமுறைக்கும், அறிவியல் செயல்முறைகளுக்கும் வசப்படாது. ஆனால் அது கவித் துவமான பார்வைக்குப் பிடிபடும். பெருமளவு வசப்படும். அபரி மிதமான அளவுக்கு அளப்படும்.

இன்று கவித்துவ நோக்கு என்பது வெறும் கனவு தவிர வேறு அல்ல கருதப்படுகிறது. கவிஞன் கனவில் வாழும் ஆசாமியாகிறான். கவிஞர்கள் கனவுகளைத் தின்பவர்கள் என்று அழைக்கப்படு கிறார்கள். கவிஞன் சற்று மேல்நிலைக்கு உயர்கிறான். அறிவியல்

சகதியில் உழன்று கொண்டிருக்கிறது. தாமரையை உண்ணும் கவிஞன் ஒரு தாமரையாக மாறுகிறான்.

அதைவிடவும் இன்னும் உயர்ந்த பிரதேசங்கள் இருக்கின்றன. ஒருநாள் தாமரை மொட்டு விரிகிறது. பூத்துக் குலுங்கும்போது இனிய நறுமணம் வெளிப்படுகிறது. குறைந்தபட்சம் அந்த மலரைத் தொட்டுப் பார்க்கலாம். கண்ணால் காணலாம். அந்த சுகந்தத்தைக் கண்ணால் காண்பது இயலாது. கிட்டத்தட்ட உயிரற்ற ஒன்று எனலாம். ஆனாலும் அது அங்கு இருக்கிறது. அது இறைமையியல் உலகமாகும். சுகந்த உலகமாகும். கவிஞன் அது குறித்துச் சிறிது ஐயம் கொள்ளும்போது, கவிஞன் அதில் ஈடுபடத் தயக்கம் காட்டும்போது, தான் மனித மனநிலையில் இருந்து வெகுதொலைவு அப்பால் சென்று விட்டதாக எண்ணுகிறான்.

அந்த சகதியுடன் மட்டுமே விஞ்ஞானி சம்பந்தப்பட நினைப்பதுபோல், கவிஞனும் தாமரை மலருடன் குறைந்த தொடர்பு கொள்ள எண்ணுகிறான். ஆனால் இறைமையியலாளர் எல்லையோ, வரம்போ கிடையாது என்று நினைக்கிறார். இறைமையியலாளர் நறுமணத்துடன் இணைந்து பயணிக்கிறார். அதுவே உச்சநிலைச் செயல்பாடாகும். ஆனால் இப்போது அது முற்றிலும் கனவு போன்ற ஒன்றாக உள்ளது. மற்றொரு சிந்தனை நிலையில் இருந்து பார்க்கும் போது அது முக்கியமான ஒரு மையப்புள்ளியாகத் தெரிகிறது. ஆனால் சகதி மீது அதிகப் பற்றுக் கொண்டிருப்பவர்கள் அதை நிராகரிப்பார்கள். கவிஞர்களும் அதை ஏற்றுக் கொள்ளத் தயங்கு வார்கள்.

முழுமையற்ற மனிதன்குறித்த எனது கருத்து விஞ்ஞானி, கவிஞர், இறைமையியலாளர் ஆகிய மூன்றும் கலந்ததாகும். ஆனால் இறைமையியலாளர் இமயமலையின் உயரத்தில் இருக்கும் எவரெஸ்ட் சிகரத்தில் இருக்கிறார்.

தயவுசெய்து சகல விஷயங்களையும் இங்கே தெளிவான புரிதல் என்ற நிலைக்குத் தாழ்த்தவேண்டாம். நாம் அவசியமான நிஜத்தன்மையற்றது இருக்கும் விஷயம் பற்றிப் பேசுகிறோம். மங்கலான ஒளியில் தெரியும் பொருட்கள் பற்றிப் பேசுகிறோம். தேவைப்படும் நிலை இருக்கும்போது பொருள் நிலையில் இல்லாதவை குறித்தும் பேசுகிறோம். நான் கூறுவதைக் கேட்பது, என்னுடன் இங்கே இருப்பது, இந்த கூட்டுத் தோழமையின் ஒரு அங்கமாக இருப்பது போன்றவைமூலம் வாழ்க்கை ஒரு கனவு போல் தோன்றத் துவங்குவது இயல்புதான்.

"ஒவ்வொன்றும் நிஜத்தன்மையற்று ஒரு கனவுபோல் இருப்பதாக நீங்கள் சொல்கிறீர்கள். நீங்கள் எனக்கு நிஜத்தன்மை யற்றவராக, சொற்பொழிவின்போது இங்கும் அங்கும் மனதை ஒவ்வொரு நாளும் அலைபாய விடுபவராகத் தெரிகிறீர்கள் என்கிறீர்கள்." ஒரு வகையில் பார்த்தால் நான் நிஜத்தன்மை அற்றவன் தான். நான் பூவின் நறுமணம் போன்றவன். அறிந்துகொள்ள முடியாத அந்த நறுமணத்தில் கலந்துவிடத் தயாராக இல்லாதவரையில் நான் நிஜத்தன்மையற்றவன் தான். ஒரு கனவு போன்றவன்தான். ஆனால் ஏதோ ஒன்று நடந்து கொண்டிருக்கிறது.

"உங்கள் எதிரில் இருக்கும்போது எனக்குள் அடியாழத்தில் ஏதோ நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்ற உணர்வை அடைகிறேன்" என்று கூறுகிறீர்கள். எனது தரிசனத்தை உங்களால் கிரகித்துக்கொள்ள முடிவதில்லை. ஆனால் தொடர் நிகழ்வாக ஏதோ ஒன்று நடக்கிறது என்பதைக் காண்கிறீர்கள். ஏதோ ஒன்று உங்களுக்குள் தூண்டப் படுகிறது. நறுமணம் உங்கள் நாசியை எட்டுகிறது. அதை உங்கள் கையால் பிடிக்க முடியாது போகலாம். ஆனால் நாசியை எட்டுகிறது. உங்கள் இதயம் ஏற்கனவே நகரத் தொடங்கிவிட்டது. அதனால்தான் நீங்கள் சந்நியாசியாக இருக்கிறீர்கள்.

"உங்கள் எதிரில் இருக்கும்போது எனக்குள் அடியாழத்தில் ஏதோ நிகழ்ந்து கொண்டிருக்கிறது. மேலும் ஒவ்வொரு கணமும் உங்களுடன் இருந்துகொண்டிருக்கிறேன். ஆனால் தெளிவான புரிதல் ஏற்பட்ட உணர்வை நான் அடையமுடியவில்லை" என்கிறீர்கள். தெளிவான புரிதல் ஏற்படும் உணர்வை உங்களால் ஒருபோதும் பெறமுடியாது. அதற்கான உறுதிமொழியை நான் வழங்க இயலாது. மேலும்மேலும் வினோதங்கள் ஏற்படலாம் என்ற உறுதிமொழியைமட்டுமே தரமுடியும். என்னைவிட்டு தூரமாய் விலகிச் செல்லும் அளவுக்கு மேலும் மேலும் அந்த வினோதம் உங்களுக்காகக் காத்திருக்கும்.

தெளிவான புரிதல் குறித்து யார் அக்கறை காட்டுகிறார்கள்? அது மிகவும் கீழ்நிலை மனோநிலை என்னும்போது அங்கு புரிதல் தேவைப்படுகிறது. எங்கு உயர்ந்த மலைச் சிகரங்கள் மேகங் களினூடே நுழைகிறதோ, எங்கு மலைச்சிகரங்கள் நட்சத்திரங் களுடன் கிசுகிசுக்கின்றனவோ, அது முற்றிலும் வித்தியாசமான உலகமாகும். அது சாதாரண உலகமல்ல. அது புனிதமான உலகம்.

நீங்கள் என்னுடன் சேர்ந்து பயணிக்க வேண்டும். உங்கள் மனம் பின்னோக்கி உங்களை இழுக்கிறது. உங்கள் மனம், "நீங்கள்

எங்கே போகிறீர்கள்? உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா?" என்று கேட்கிறது. உண்மையில் நான் சித்த ஸ்வாதீனம் இல்லாதவர்களுக்குத் தேவைப்படுவதையே இங்கு தருகிறேன். அது தெளிவு என்று சொல்லப்படுவதை உதறும் விவேகிகளுக்கானது. தர்க்கரீதியான எல்லைகளைக் கடந்து அப்பால் செல்லக்கூடிய துணிச்சல் மிக்கவர்களுக்கானது. எல்லாவிதமான பாதுகாப்பு, பத்திரமான ஸ்திர நிலை, பரிச்சயம், அறிவு போன்றவற்றை உதறிவிட்டு பெருமளவு பாதுகாப்பற்ற சூழலுக்குள் நுழைய தயாராக இருப்பவர்களுக்கானதாகும். அது முற்றிலும் வித்தியாசமான ஒரு பரிமாணத்திற்குள் நுழைவதாகும். அது சாராம்சத்தின் பரிமாணமாகும்.

இது வினோதங்களைக் கற்றுத் தருகின்ற பள்ளி. தெளிவான புரிதல் பற்றி எதுவும் கேட்கக்கூடாது. விந்தையான, வினோதமான அனுபவங்கள் பற்றிக் கேளுங்கள். அது நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. நீங்கள் ஒத்துழைத்தால், உதவி செய்தால் விரைவில் வேறு ஒரு உலகிற்கு அனுப்பி வைக்கப்படுவீர்கள்.

மேற்குநாடுகளில் என்ன நடந்தது என்று பாருங்கள். அது இப்போது கிழக்கு நாடுகளிலும் நடக்கத் தொடங்கிவிட்டது. நிறைய ஜனங்கள் அறிவியல் பூர்வமானவர்களாக, அறிவு பெற்றவர்களாக, கல்வி கற்றவர்களாக இருக்கிறார்கள். மேலும் ஒருவகை அர்த்தமற்ற வாழ்க்கை வாழ்வதுபோன்ற உணர்வைப் பெற்றிருக்கிறார்கள். அவர்களது வாழ்க்கை முக்கியத்துவமற்றதாக மாறுகிறது. அனைத்து வித மரியாதைகளையும் இழந்து அசிங்கப்பட்டுவிட்டது."

முக்கியமான ஒரு தத்துவார்த்தப் பிரச்சினை, தற்கொலைதான் என்கிறார் கேமஸ். அது ஏன்? காரணம், நவீன காலத்து மனிதன், வாழ்க்கைக்கு அர்த்தமில்லை என்பதுபோல உணர்கிறான். பிறகு தினமும் வாழ்க்கை நடத்தி என்ன பயன்? வினோதம் என்பது இல்லை என்றால், வாழ்வதில் அர்த்தமில்லை. கோழைகள் மட்டுமே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். மறைந்துபோக, தற்கொலை செய்து கொள்ள அவர்களுக்குத் துணிவு இல்லாததால் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அதன் பின்னர் வாழ்வில் மகிழ்ச்சி இருக்காது. அது ஒரு நீண்ட இழுபறியான ஆட்டம். மனதிற்குள் நீங்கள் மரணத்தை எதிர்நோக்கி இருக்கிறீர்கள். அது வந்து இந்த அசட்டுத்தனங்கள் எல்லாவற்றிலிருந்தும் உங்களை விடுவித்துவிடும். இந்த அர்த்தமற்ற குழப்பங்களில் இருந்து விடுபடலாம் என்று சொன்னவன் ஒரு முட்டாள். மூர்க்கமும், கூச்சலும் தவிர அவனிடம் வேறு செய்தி கிடையாது.

விந்தைகளை முற்றாக இந்த உலகில் இருந்து அழித்துவிட அறிவியலால் முடியுமானால், மனிதன் விரைவிலோ அல்லது கொஞ்ச காலம் கழித்தோ தற்கொலை செய்து கொண்டுவிடுவான். கவித்துவம் உங்களைச் சூழ்ந்திருக்கும்போதுதான் ஒருவர் நடன மாடிச் சந்தோஷத்துடன் களித்திருக்க இயலும். தெய்வீகத்தை உணரும்போதுதான் அளவற்ற ஆனந்தத்துடன் வாழமுடியும். ஆனால் இந்த விஷயங்கள் எல்லாம் தெளிவான புரிதலில் அடங் காதவை. தெளிவான புரிதல் வேண்டும் என்று வற்புறுத்துபவர் அது பற்றிய கணக்கீடுகள் குறித்துக் கேட்கிறார். இசை பற்றிக் கேட்க வில்லை. நிச்சயமாக இறைமையியல் குறித்தும் கேட்கவில்லை.

எல்லா விஷயங்களிலும் தெளிவு வேண்டும் என்ற பைத்தியக் காரத்தனத்தைக் குறைத்துக் கொள்வது எப்படி என்று நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டும். அந்தத் தெளிவை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்? அதில் நீங்கள் சிக்கிக் கொள்வீர்கள். தவிர்க்க முடியாதபடி அவை தெளிவற்று உள்ளனவா என்று உங்களையே கேட்டுக்கொள்ளுங்கள். தவிர்க்கமுடியாதபடி உள்ளதா என்று கேட்டுக் கொள்ளுங்கள் என்று கூறுகிறேன். அவை தெளிவாக ஒரு போதும் இருக்காது என்பதே அதன் அர்த்தமாகும். அதன்பிறகு அன்பு காட்டவும், அழகை ரசிக்கவும், இயற்கையை நேசிக்கவும் தொடங்க இயலும்.

வாழ்க்கை மலர்ச்சி பெறவேண்டுமானால் அது வினோதத்தில் காலூன்றி வேரோடியிருக்க வேண்டும். நான் வாழ்வின் விந்தைகள் பற்றிப் போதிக்கிறேன். தெளிவான புரிதல் பற்றிப் பேசவில்லை. தெளிவற்று இருப்பதை ரசிக்கும் லாவோட்ஸுவின் உலகிற்குள் ஆழமாக நுழைவதற்கு உங்களை நான் வழிநடத்திச் சென்றேன்.

## இரண்டாவது கேள்வி

**ஓஷோ,**

**"என்னோடு சேர்ந்திருக்காதவர்கள் எனக்கு எதிரானவர்கள்" என்றார் ஏசுநாதர். இந்தக் கூற்று உங்கள் விஷயத்திலும் உண்மையா என்ற கேள்வி எழுகிறது. அல்லது அதற்கு மூன்றாவது பாதை ஒன்று இருக்கிறதா? உங்களுக்கு எதிராக இல்லாமல், உங்களைப் பின்பற்ற வழி இருக்கிறதா?**

பிட் கோர்ட்டன்ஹார்ஸ்ட் அவர்களே, ஏசு வெளிப்படுத்திய இந்த அறிவிப்பு ஒரு பைத்தியக்காரத்தனம்போல் தோன்றலாம்.

ஆனால் அப்படியல்ல. அதில் ஒரு வார்த்தையை மாற்றினாலும் உடனே புரிந்துகொள்ளலாம். "என்னோடு சேர்ந்திருக்காதவர்கள் எனக்கு எதிரானவர்கள்" என்கிறார் ஏசு. எனக்கு என்பதற்குப் பதிலாக **உண்மைக்கு** என்று ஒரு வார்த்தையை மாற்றுங்கள். விஷயம் தெளிவாகப் புரிய ஆரம்பிக்கும். ஏசு சொன்ன அர்த்தம் இதுதான். "உண்மைக்கு யார் எதிராக இருக்கிறார்களோ அவர்கள் எனக்கு எதிரானவர்கள்". அதன் பிறகு சாத்தியமான மூன்றாவது மாற்றுவழி கிடையாது.

ஏசு மனிதனாக இருந்து பேசவில்லை. உண்மையின் வடிவமாக நின்று பேசுகிறார். "நானே பாதை. நானே வாயில். நானே உண்மையாகவும் இருக்கிறேன்" என்கிறார். ஏசு உண்மையின் ஒரு வெளிப்பாடாகும். அவர் "நான்" என்று சொல்வது நீங்கள் "நான்" என்று சொல்வது போன்றது அல்ல. அவருக்கு "நான்" என்பது இல்லை. "நான்" என்பது அவரிடமிருந்து வெகுகாலத்துக்கு முன்பே மறைந்து போய்விட்டது. நான் என்பது இல்லை என்றால், அகந்தை இல்லை. ஆனால் நீங்கள் பயன்படுத்தும் அதே மொழியை அவரும் உபயோகிக்க வேண்டியிருக்கிறது. வேறு வழி இல்லை. அதற்கு வேறு எந்த உதவியும் செய்ய முடியாது.

அவர் சொன்னது, "உண்மையோடு இல்லாதவர்கள் எனக்கு எதிரானவர்கள்" என்பதே ஆகும்.

"அந்த அறிவிப்பு உங்களுடன் நிஜமாகத் தொடர்பு கொண்டிருப்பது போலிருப்பதாக ஒருகேள்வி எழுகிறது" என்று நீங்கள் கூறுகிறீர்கள். எப்போதும் இதுபோன்ற தொடர்பு ஞானம் பெற்றவர்களிடம் காணப்படுவது நிஜம்தான். அவர்கள் யாராக இருந்தாலும், எங்கிருந்தாலும் அப்படித்தான். அது கிருஷ்ணர் விஷயத்தில் நிஜம் தான். லாவோட்ஸு விஷயத்தில் நிஜம்தான். பிதாகோரஸ் விஷயத்திலும் நிஜம்தான். பதஞ்சலி விஷயத்தில் நிஜம்தான். புத்தர் விஷயத்தில் நிஜம்தான். என் விஷயத்திலும் நிஜம்தான். நீங்கள் மறைந்து போனால் உங்கள் விஷயத்திலும் அது நிஜம்தான். இயற்கையிலிருந்து உங்களைப் பிரித்து வைக்கும் மோசமான கருத்தை நீங்கள் உதறினால் போதும்.

உங்களைப் பிரித்து வைக்கும் கருத்து என்பது அகந்தைதான். அது உண்மையல்ல. அது வெறும் கருத்து மட்டும்தான். அந்த கருத்தை உதறித் தள்ளினால் நீங்கள் முழுமையின் ஒரு அங்கம் என்ற உண்மையை அறியலாம். நீங்கள் ஒரு தீவு அல்ல. மனிதன் ஒரு தீவாக இருக்க முடியாது. வாழ்வு என்று அழைக்கப்படும் கண்டமாக நாம்

இருக்கிறோம். முடிவற்ற தீவின் சகல பாகங்களாகவும் இருக்கிறோம். நீங்கள் ஒரு தனிப் பருப்பொருளாக இல்லாமல் போகும் போது, உங்களிடம் பேசப்படும் எதுவும் இயற்கையுடன் பேசியதாக அமைகிறது.

அதனால் ஏசுநாதர், "வானமண்டலத்தில் இருக்கும் பரமபிதாவும் நானும் ஒருவரே!" என்று கூறினார். கிருஷ்ணன் அர்ஜுனனிடம், "உனது எல்லா மதாச்சாரங்களையும் உதறிவிட்டு எனது பாதத்தில் சரணடைந்துவிடு" என்றார். இது அவருக்கு நிகரான அகந்தை பிடித்தவர் யாரும் இல்லை என்பதுபோல் தெரியலாம். "உனது எல்லா மதாச்சாரங்களையும் உதறிவிட்டு எனது பாதத்தில் சரணடைந்துவிடு" என்று திரும்பத் திரும்பக் கூறினார்.

உங்கள் மனப்போக்கிற்கு ஏற்றவகையில் அதை நீங்கள் புரிந்துகொண்டால், அதன் அர்த்தம் முழுவதையும் தவறவிட்டு விடுவீர்கள். கிருஷ்ணர் என்ற நபரிடம் சரணடையும்படி அவர் சொல்லவில்லை. "இப்போது கிருஷ்ணர் என்ற நபர் இங்கு இல்லை. நீ சரணடைந்தால் அந்த சரணாகதி இறைவனிடம் சென்று சேரும். நான் காணாமல் போய்விட்டேன், நடுவில் நான் இல்லை. என் காலைப் பற்றுவது எனது காலைப் பற்றுவதாகாது. நீ கடவுளின் பாதங்களைப் பிடித்துக் கொண்டிருக்கிறாய்" என்று கூறினார்.

நீங்கள் எவ்விதம் உண்மைக்கு நடுவில் இருக்க முடியும்? ஒன்று அதனைச் சார்ந்து இருக்க வேண்டும். அல்லது அதற்கு எதிராக இருந்திட வேண்டும். மூன்றாவது பாதைக்கான வாய்ப்பே இல்லை.

உங்கள் மனதில் தோன்றிய எண்ணம் சரிதான், கோர்ட்டன் ஹார்ஸ்ட். அந்த கருத்து பெருவிருப்பம் கொண்டதாக இருக்கிறது. விழிப்புணர்வற்ற நிலை இன்னும் உங்களுக்குள் இருக்கிறது. ஆனால் தயக்கம் காணப்படுகிறது. எப்போதும் அப்படித்தான். அடுத்த தாவலுக்கு முன்னர் ஒவ்வொரு அறிவுள்ள மனிதனும் தயங்கவே செய்வான்.

என்னுடன் சேர்ந்திருப்பது என்பது ஒரு வேகப் பாய்ச்சலாகும். உங்கள் வாழ்நாள் முழுவதும் நீங்கள் சுமந்து கொண்டிருக்கும் உங்கள் அடையாளத்தைத் துறக்க வேண்டும். இன்றுவரை சுமந்து கொண்டிருக்கும் அடையாளம் எப்படிப்பட்டதாக இருந்தாலும் அதை உதறிவிடவேண்டும். அதுவே என்னுடன் சேர்ந்திருத்தல் என்பதன் பொருளாகும். அது சட்டென்று செய்ய வேண்டிய, ஆபத்தான ஒன்று என்று தோன்றுகிறது. ஆனால் அடுத்து என்ன நடக்கும் என்பதற்கு எந்த உத்திரவாதமும் இல்லை.

என்னால் எது குறித்தும் உங்களுக்கு உத்திரவாதம் அளிக்க முடியாது. உண்மைக்கு எந்த உத்திரவாதமும் தரமுடியாது. உண்மைக்குக் காப்பீடு அளிக்க முடியாது. கோர்ட்டன்ஹார்ஸ்ட் ஒரு பெரிய லேவாதேவிக்காரர். எனவே பாதுகாப்பு, காப்பீடு, உத்திர வாதம் போன்றவை அவரது உள்ளுணர்வில் ஆழமாகப் பதிந்து கிடக்கிறது.

முன்னோக்கிப் பாய்வதற்குமுன்னர் ஒருவர் பொதுவாகச் சிந்திப்பார். இது முன்கூட்டியே யோசிக்க வேண்டிய ஒரு பாய்ச்சல் அல்ல. இது அன்பின் பாய்ச்சல். இது சரியா, தவறா. இதில் பிரவே சிக்கலாமா என்று முன்கூட்டியே உங்களால் தீர்மானிக்க இயலாது. எப்போது பிரவேசிக்கலாம் என்பதை மட்டுமே தீர்மானிக்க முடியும். அதன் பிறகு யோசிக்க எதுவும் இல்லை. காரியங்கள் ஏற்கனவே நிகழத் தொடங்கிவிட்டன. என்னோடு இருப்பது என்றால் என்ன என்பதைப் புரிந்துகொண்ட பின்னர்தான் நீங்கள் என்னுடன் இருக்க இயலும். என்னுடன் நீங்களும் சேர்ந்து பங்கு கொள்ள வேண்டும், கரைய வேண்டும், 'நான்' என்ற எண்ணத்தை உதறவேண்டும்.

'நான்' என்ற எண்ணத்தை நீங்கள் உதறித் தள்ள உதவும் ஒரு கருவியாகவே 'குரு' இருக்கிறார். அந்த எண்ணம் அகலும்போது குரு என்ற ஒருவர் இல்லை என்னும் கருத்து உங்களிடம் ஏற்படுவது கண்டு வியப்படைந்து போவீர்கள். உங்களால் ஏசுவைக் கண்டுணர முடியாது. என்னையும் கண்டுணர இயலாது. நான் என்ற எண்ணம் அகலும்போது என்னிடம் உள்ள ஆழமான சூன்ய வெறுமையை எதிர்கொள்ள நேரிடும். அது மிகப்பெரும் சூன்யமாகும்.

அந்த வெறுமையில் தெய்வீகம் மிதந்து கொண்டிருப்பதைக் காணத் தொடங்குவீர்கள். அந்த சூன்யத்தில் நீங்கள் வெறுமையைக் காணமாட்டீர்கள். அதில் வழிந்தோடும் தெய்வீகத்தைக் காண்பீர்கள். அந்த வெறுமைதான் சகலமாகவும் இருந்து வருகிறது. 'நான்' என்ற எண்ணத்தை நீங்கள் உதறும்போது 'நான்' என்ற ஒருவன் இங்கில்லை என்று உணர்வீர்கள். இக்கருத்தைப் புரிந்து கொண்ட யாரோ ஒருவர், ஐந்து வரிகளில் அமைக்கப்படும் நகைச்சுவைக் கவிதை ஒன்றை அனுப்பியிருந்தார்.

**ஓ! நாம் எப்படிப்பட்ட வினோதமான குருவைப்**
**பெற்றிருக்கிறோம்**
**அவர் குளிர்ச்சியாகவும் இல்லை; வெப்பமாகவும் இல்லை**
**தனது நாற்காலியில் அவர் அமர்ந்திருக்கிறார்**

**அவரது சுண்டுவிரல்கள் மட்டுமே வெறுமனே தெரிகின்றன அவர் இங்கில்லை என்பதால் அப்படியிருக்கிறதோ என்று யோசிக்கிறேன்.**

என் அருகில் மிக நெருங்கி வந்து நான் இல்லை என்பதைக் கண்டறியுங்கள். நீங்கள் இல்லாமல் போகும்போதுதான் அதை உங்களால் கண்டுணர இயலும். இரண்டு வெறுமைகளால் மட்டுமே ஒன்றையொன்று சந்திக்கவும், பார்க்கவும், புரிந்துகொள்ளவும் முடியும். குரு இல்லை என்பதை அறியச் சீடர் மறைந்துபோக வேண்டும். சீடர் மறைவதற்கு குரு ஒரு கருவியாகமட்டுமே இருக்கிறார்.

ஏசுநாதர் சொன்னது சரிதான். "என்னோடு சேர்ந்திருக்காத வர்கள் எனக்கு எதிரானவர்கள்" என்றார் அவர். அந்த அறிக்கை ஒரு பித்துக்குளித்தனமாகத் தோன்றலாம். ஆனால் அப்படி இல்லை. அவர் உலகின் மிகச் சிறந்த ஞானவான்களில் ஒருவராவார்.

**மூன்றாவது கேள்வி**

**ஓஷோ,**

**நான் காமத்தை வென்றவன் அல்ல. அதில் ஈடுபாடு காட்டும் ஒவ்வொரு முறையும் 'இது சரியல்ல' என்ற உணர்வு எனக்கு ஏற்படுவது ஏன்?**

'இது சரியல்ல' என்ற உணர்வு ஏற்படக் காரணம், இன்னும் நீங்கள் அதில் ஈடுபடவில்லை அல்லது இன்னும் தொலைவில் இருக்கிறீர்கள் என்றாகிறது. பக்குவப்பட்ட மனநிலை இருந்தால் மட்டுமே நீங்கள் அதில் இறங்கமுடியும். ஒரு கணம்கூட உங்களால் அதில் கரைந்துபோக முடியவில்லை. பாதிரியார்கள் உங்களிடம் உருவாக்கிய குற்றஉணர்வுடன் அதில் இறங்குகிறீர்கள். கபடமற்ற மனதுடன் அதில் ஈடுபடவில்லை. களங்கமற்று அதில் இறங்க வில்லை.

கற்புநெறி தவறாது இருக்கும் ஒருவரால் மட்டுமே பாலுறவில் கபடமற்ற மனதுடன் இறங்க முடியும். கற்புநெறி என்ற சொல் உங்களுக்கு வியப்பைத் தரலாம். அது உடல் சார்ந்த கற்புநெறி அல்ல. அது பெரிய அளவிலான, ஆழமான மனம் சார்ந்த விஷயமாகும். கிட்டத்தட்ட ஆன்மீகத்தில் எல்லையைத் தொடும் ஒன்றாகும். பிறர் தன்மீது சுமத்திய கருத்துக் கோட்பாடுகள் எதுவும் இல்லாமல் ஒருவர் உறவில் ஈடுபடுதல் களங்கமற்ற நிலை எனப்படுகிறது.

இந்த அடிப்படையில் பார்த்தால் ஒரு களங்கமற்ற மனிதரைக் காண்பது அரிதாகும். காரணம், இந்த சமூகம் ஒவ்வொருவரையும் களங்கப்படுத்தி வைத்திருக்கிறது. பாலுறவுக்கு எதிரான கருத்துகள் உங்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. பாலுறவு பாவச்செயல், பாலுறவு மோசமானது, பாலுறவு மிருகத்தனமானது, பாலுறவு தெய்வீக மானது அல்ல, பாலுறவு உங்களுக்கும், கடவுளுக்கும் இடையில் தடையாக உள்ளது என்றெல்லாம் சொல்லிவைத்திருக்கிறார்கள். இந்தக் கருத்துகள் எல்லாவற்றையும் சுமந்துகொண்டு நீங்கள் உறவில் ஈடுபடுகிறீர்கள். இதுபோன்ற பலவற்றைச் சுமந்துசெல்லும் நீங்கள் எப்படி அதில் முழுமையாக ஈடுபட முடியும்? பாதிரியார்கள் என்ற நீளமான ஒரு சங்கிலி உங்களைப் பின்னால் இருந்து பிடித்துக் கொண்டிருக்கிறது. உங்களால் எப்படி ஈடுபாடு காட்ட முடியும்? பாதியளவுதான் அதில் ஈடுபட முடிகிறது.

நீங்கள் அதில் ஈடுபடும்போது உங்கள் பாதிரியார்கள் உங்க ளுக்குள் இருந்து கூச்சலிடுகிறார்கள். உங்களுக்கு எதிராக முழக்க மிடுகிறார்கள் உங்களைக் குற்றம் சாட்டுகிறார்கள். அதனால்தான் அதில் மனம் ஆழ்ந்து விடுகிறது. மனம் என்று நீங்கள் கூறுவது பாதிரியார்களின் குரலாக உங்கள் உள்ளே பதிந்து கிடக்கும் ஒன்றைத் தான். காலங்காலமாக மனித சமுதாயத்துக்கு இழைக்கப்படும் மாபெரும் தீங்கு அதுதான்.

இன்று அறிவியலாளர்கள் அதைவிடவும் சிறப்பான வழி முறைகளைக் கண்டுபிடித்து விட்டார்கள். மின்கடத்திகளை மூளைக்குள் வைக்கிறார்கள். ஒரு மின்கடத்தியை உங்கள் மூளைக்குள் வைத்தால் அதை உங்களால் உணரமுடியாது. காரணம், மூளைக்குத் தொடுஉணர்வு கிடையாது. கேட்டால் நீங்கள் வியப்பு அடைவீர்கள். இப்படிப் பலதடவை நடந்திருக்கிறது. யுத்த காலத்தில் ஒரு வீரனுக்குத் தலையில் குண்டடிபட்டது. அது பற்றி அவன் மறந்து விட்டான். பிறகு பல வருடங்கள் கழித்துத் தற்செயலாகத் தலையில் மூளைக்குள் குண்டு இருப்பது கண்டறியப்பட்டது. அதுவரை குண்டு இருந்தது பற்றிய உணர்வே அவனுக்கு ஏற்படவில்லை.

மூளையின் உட்பகுதியில் தொடுஉணர்வு கிடையாது. உங்கள் தலைக்குள் ஒரு கல்லை வைத்தாலும் அதை உங்களால் உணர்ந்து கொள்ள இயலாது. அதனால் மின்கடத்திக் கம்பிகளை உள்ளே வைக்க முடியும். இந்த தலைமுறையைச் சேர்ந்த புகழ்பெற்ற மனோ தத்துவ நிபுணர்களில் ஒருவரான டெல்கடோ பல மிருகங்களை வைத்துப் பரிசோதனை நடத்தினார். மின்கடத்தும் கம்பி ஒரு

காளையின் மூளையில் வைக்கப்பட்டது. இப்போது அந்தக் காளையை வெளியில் இருந்து கட்டுப்படுத்த முடியும். சில குமிழ்களும், பொத்தான்களும் உள்ள ஒரு பெட்டியை வைத்துக்கொண்டு காளையைக் கட்டுப்படுத்தலாம். உதாரணமாக, ஒரு பொத்தானை அழுத்துவதன் மூலம் காளையைக் கோபப்படுத்தலாம். கம்பியில்லா தந்தி மூலம் செல்லும் செய்தியை அது பெற்றுக் கொள்ளும். காரணம் இல்லாமல் அது உடனே மூர்க்க குணம் பெறும். வெளியில் இருந்து யாரும் அதைச் சீண்டவில்லை. யாரும் சமிக்ஞையோ, சிவப்புக் கொடியோ காட்டவில்லை. அது எந்த சந்நியாசியையும் பார்க்கவில்லை. வெளியில் இருந்து எந்தச் சீண்டலும் இல்லை. ஆனால் டெல்கடோ ஒரு பொத்தானை அழுத்துகிறார். அது காளையின் ஒரு மையத்தைத் தொடுகிறது. அந்த மையம் மூர்க்கம், கோபம், பழியுணர்வு போன்றவற்றை உருவாக்குகிறது. கடும் சினம் வெளிப்படுகிறது. அந்தக் காளை டெல்கடோ பக்கம் ஆவேசத்துடன் அவரைக் கொல்ல நெருங்குகிறது.

முதல் தடவை அந்த சோதனை நடந்தபோது ஐம்பதாயிரம் பேர் அதைப் பார்க்க வந்திருந்தார்கள். அவர்கள் மூச்சே நின்றுவிட்டது. இவ்வளவு மூர்க்கத்துடன் இருக்கும் ஒரு காளையை அவர்கள் பார்த்ததில்லை. ஸ்பெயின் நாட்டில் இந்தப் பரிசோதனை நடத்தப்பட்டது. அவர்களுக்கு காளைகளையும், காளைச் சண்டை பற்றியும் தெரியும். இவ்வளவு சீற்றத்துடன் இருந்த ஒரு காளையை அவர்கள் இதுவரை கண்டதில்லை. டெல்கடோ நிச்சயம் கொல்லப்படுவார் என்று நினைத்தார்கள். ஒரு சிறிய பெட்டி தவிர அவருக்குப் பாதுகாப்பு இல்லை.

காளை நெருங்கிநெருங்கி வந்தது. அவர் இரண்டடி தொலைவில் இருந்தார். ஜனங்கள் பார்த்துக்கொண்டிருந்தார்கள். "எல்லாம் முடிந்துவிட்டது" என்றனர். அவர் பொத்தான் ஒன்றை அழுத்தியதும் காளை அதே இடத்தில் உறைந்து சிலையாக நின்றுவிட்டது.

'இதுபோல மனிதர்களிடமும் செய்ய முடியும்' என்றார் டெல்கடோ. அந்த மின்கடத்திகளை எலியின் மூளையில் பொருத்தினார். அதற்கு ஒரு பெட்டி தரப்பட்டது. அவற்றால் பொத்தானை அழுத்த முடியும். மின்கடத்தி எலிகளின் பாலுணர்வு மையத்துடன் இணைக்கப்பட்டது. எலிகளுக்குப் பித்துப் பிடித்துவிட்டது என்று நீங்கள் வியப்படையக்கூடும். அவை பொத்தான் அருகில் சென்று நிமிடத்துக்கு அறுபது தடவைகள் வீதம் அழுத்தின!

ஒவ்வொரு தடவை இன்ப உச்சம் பெறும் சமயத்தில் சந்தோஷத்தில் உடல்கள் நடுங்கின. சிலிர்த்தன. அவை உணவை மறந்துவிட்டன. சகலத்தையும் மறந்து விட்டன. இரவும், பகலும் அவை உறங்கவே இல்லை. சலித்துத் தளர்ந்து அவை கோமா நிலைக்குச் செல்லும் வரை அந்த பொத்தானை அழுத்தின. சுகம் பெற்றிடப் பெண்ணும் தேவையில்லை, எதுவும் தேவையில்லை.

உண்மையில் நீங்கள் காதல்வசப்படும்போது அதுதான் நடக்கிறது. பெண் உங்களுடைய மூளையின் பாலுணர்வு மையத்தைத் தூண்டுகிறாள். ஆண் அந்த பெண்ணின் மூளைப் பாலுணர்வு மையத்தைத் தூண்டி விடுகிறான். டெல்கடோ "இன்று அவை எல்லாம் காலாவதியான பழைய முறைகளாகிவிட்டன" என்கிறார். உங்கள் பையில் ஒரு தீப்பெட்டி அளவுள்ள பெட்டியை வைத்துக் கொள்ளலாம். ஒரு பொத்தானை அழுத்துவது மூலம் உடனே நீங்கள் முழுமையான, பெரிய ஒரு இன்ப உச்சத்தை எட்டலாம்.

டெல்கடோ கண்டுபிடித்தது மிகவும் ஆபத்தான கண்டு பிடிப்புகளில் ஒன்றாகும். ஏனென்றால், அதை அரசியல்வாதிகளும் மருத்துவர்களும் பயன்படுத்துகிறார்கள். ரஷ்யா, சீனா போன்ற நாடுகளில் அது ஏற்கனவே பயன்பாட்டில் இருந்துவர வாய்ப்பு உள்ளது. ஒவ்வொரு குழந்தையையும் ஒரு மின்கடத்திக் கம்பியில் இணைக்கலாம். அது யாருக்கும் தெரியப் போவதில்லை. குழந்தை பிறந்ததும் மருத்துவமனையில் சிறிய அறுவைச் சிகிச்சை மூலம் பொத்தான் வடிவிலான ஒரு மின்னணுப் பொருளைத் தலையில் திணிக்க முடியும். அதை ஒரு மூளை மையத்துடன் இணைத்தால் அது உங்களைக் கீழ்படிந்து நடக்கச் செய்யும். அதுபோதும். டெல்லியில் இருந்து ஒரு பொத்தானை மொரார்ஜி தேசாய் அழுத்த முடியும். நாட்டு மக்கள் எல்லோரும் "மொரார்ஜி தேசாய் ஜிந்தாபாத்! மொரார்ஜி தேசாய் தீர்க்காயுள் பெறுக" என்று சொல்ல முடியும். நீங்கள் "வலது பக்கம் திரும்பு" என்று உத்தரவிடலாம். நாடு முழுவதும் வலதுபுறம் திரும்பி நிற்கும். "போய் எதிரியைக் கொல்லுங்கள்" என்றால் அவர்கள் கொலை செய்ய ஆரம்பிப்பார்கள்.

அணு ஆற்றலைக் காட்டிலும் மிகவும் ஆபத்தான ஒரு செயலை டெல்கடோ வெளிப்படுத்திவிட்டார். மக்கள் யாரும் அதன் தாத்பரியத்தை இன்னும் புரிந்து கொள்ளவில்லை. ஒரு மனிதனின் எதிர்காலத்தை அது முழுமையாக மாற்றிவிடும். மனிதன் மறைந்து

விடுவான். அதன் மூலம் அவன் தனது சுதந்திரத்தை இழந்து போவான். மனிதன் வெறும் இயந்திரம் போலாகிவிடுவான்.

இதுபோன்ற ஒன்றைத்தான் காலங்காலமாக பாதிரியார்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களின் வழிமுறைகள் அவ்வளவு நுட்பமானவை அல்ல என்றாலும், இன்றுவரை செயல்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. அவை உங்களிடம் மன உந்துதலை ஏற்படுத்துகின்றன. அவை ஒரு மின்னணுக் கருவியைப் போன்றவை. பாலுறவு ஒரு பாவச் செயல் என்ற எண்ணத்தை உங்கள் குழந்தைப் பருவம் தொடங்கி திரும்பத் திரும்பச் சொல்லி ஒரு மன உணர்வைத் தோற்றுவிக்கின்றன. பள்ளிகளிலும், தேவாலயங்களிலும், வீட்டிலும், எல்லா இடங்களிலும் அவை பாலுறவுக்கு எதிராகப் பேசுகின்றன. உங்களிடம் ஒரு இயக்க முறையை அவை உருவாக்கிவிடுகின்றன. இக்கருத்தால் நீங்கள் பல்லாயிரம் தடவை, பல்லாயிரம் வழிகளில் ஆகர்ஷிக்கப்படுகிறீர்கள். உங்கள் அகத்தின் ஒரு அங்கமாக அது மாறிவிடுகிறது. அது டெல்கடோவின் செயலில் இருந்து மாறுபட்ட ஒன்றல்ல.

டெல்கடோ மிகவும் அறிவியல் பூர்வமாக, நுட்பமாக, நவீன மான வழியில் மட்டுமே செயல்பட்டார். ஆனால் பாதிரியார்கள் தான் நிஜமான கண்டுபிடிப்பாளர்கள். ஐயாயிரம் ஆண்டுகளாக இந்த பாதிரியார்கள் அதை மனித இனத்தின் மீது செயல்படுத்திக் கொண் டிருக்கிறார்கள். ஒரு தடவை இந்தக் கருத்து உங்கள் மனதில் உட்புகுந்துவிட்டால் பாதிரியார் உங்களுக்குள் நுழைந்துவிடுகிறார்.

நீங்கள் உடலுறவில் ஈடுபடுகிறீர்கள். பாதிரியார் உங்களை பின்னால் இருந்து கடிவாளம் மூலம் இழுக்கிறார். "இது பாவம். நரகத்தில் நீ துன்புறுவாய்" என்று கூறுகிறார். நீங்கள் உடலுறவில் ஈடுபடுகிறீர்கள். உங்கள் மனதில் நரகத் தீ தெரிகிறது. உங்களால் எப்படி ஆழ்ந்து ஈடுபட முடியும்?

நீங்கள், "நான் காமத்தை வெற்றிகொள்ளவில்லை" என்று கூறுகிறீர்கள். அதில் நுழையவோ அல்லது வெற்றி கொள்ளவோ உங்களால் இயலாது. காரணம், முழுமையாக வெற்றி கொண்டவர் களால் மட்டுமே தீவிரம் காட்ட முடியும். அறிவும், அனுபவமும் வெற்றிக்கு உதவுகின்றன. அனுபவம் சுதந்திரம் தருகிறது.

இதில் உள்ள தந்திரம் என்னவென்றால் அதை அனுபவித்துப் பார்க்கப் பாதிரியார்கள் விடமாட்டார்கள். அதன் அழகு, அதன் விடுதலை, அதன் ஆனந்தம் போன்றவற்றை அனுபவித்து அறிய

அவர்கள் விடமாட்டார்கள். மனம் மீண்டும் மீண்டும் அது குறித்து யோசித்தபடியே இருக்கும். எப்போது நீங்கள் அதில் நுழைந்தாலும் உங்களுக்கு ஒரு தடுமாற்றம் இருந்து வரும். முழுமையாக அதில் ஈடுபட இயலாது. எனவே அந்த அனுபவத்தை நீங்கள் இழந்து விடுகிறீர்கள்.

நீங்கள் அதில் ஈடுபடாத சமயத்தில் மனம் அது பற்றிய கனவு களில் மூழ்கியிருக்கும். காரணம் மனதுக்கு அனுபவம் தேவைப் படுகிறது. அது ஒரு இயல்பான விருப்பம், இயல்பான விருப்ப மாகும். நிறைவு கொள்வதில் மனம் விருப்பம் காட்டுகிறது. அதில் நீங்கள் ஈடுபட முயலும்போது பாதிரியார்கள் வெளியே பிடித்து இழுக்கிறார்கள். நீங்கள் முகம் சுளிக்க வைக்கும் கீழ்த்தரமான பாலுணர்வின் பிடியில் அகப்படுகிறீர்கள். பாலுறவு பற்றி மனதால் எண்ணுகிறீர்கள். உங்கள் கனவுகளில் பாலுறவு வெளிப்படுகிறது. உங்கள் நடத்தையிலும் அது தென்படுகிறது. எல்லா இடங்களிலும் அது வெளிப்படையாகத் தெரிகிறது. நேர்மறையாகவோ அல்லது எதிர்மறையாகவோ எப்படி இருந்தாலும் உங்கள் மனதில் பாலுணர்வு நிரம்பிக் கிடக்கிறது. எப்போதெல்லாம் நீங்கள் அதில் ஈடுபட முயன்றாலும் பாதிரியார்கள் உங்களைப் பிடித்து வெளியே இழுக் கிறார்கள். எப்போதெல்லாம் நீங்கள் அதில் ஈடுபடுகிறீர்களோ அங்கே டெல்கடோ இருக்கிறார். அவர் பொத்தானை அழுத்தியதும் நீங்கள் நின்று விடுகிறீர்கள். இரண்டடி தொலைவில் காளை நின்று விட்டதைப் போல்.

ஏமாற்றத்துடன் நீங்கள் வெளியே வருகிறீர்கள். அந்த ஏமாற்றம் காரணமாக நீங்கள் கூடுதலாக அதன்மீது ஆசை வைக்கிறீர்கள். பாதிரியார்கள் மனித சமுதாயத்தின் மீது உருவாக்கி வைத்திருக்கும் தடுமாற்றம் இதுதான். பாதிரியார்தான் மனித இனத்தின் மிகப்பெரிய எதிரியாக இருக்கிறார்.

நீங்கள் காமத்தை முழுவதுமாக வெற்றி கொள்ளவில்லை. நீங்கள் வக்கிரமானவராக மாறிவிட்டதால் வெற்றிபெற முடிய வில்லை. வெற்றி பெறுதல் என்பது அதில் முழுமையாக ஈடுபடு வதிலும், கண்டுணர்வதிலும், அதன் முக்கியத்துவத்தை அறிவதிலும் அடங்கியிருக்கிறது. உங்கள் செயல் நிஜமான பாலுறவு அல்ல. ஆசை கொள்ளல் போன்ற ஏதோ ஒன்று. ஏதோ வேறு ஒன்றை அனுபவித்து அறிய பாலுறவு ஒரு சாக்காக இருக்கிறது. முழுமை யான பாலுறவு அனுபவத்தை நீங்கள் பெறும்போது அந்த ஏதோ ஒன்று - ஏதோ வேறு ஒன்றை அனுபவித்து அறிய பாலுறவு ஒரு

சாக்காக இருக்கிறது. முழுமையான பாலுறவு அனுபவத்தை நீங்கள் பெறும்போது அந்த ஏதோ ஒன்று பற்றிய விழிப்புணர்வு ஏற்படும்.

அது என்ன? பாலுறவின் உச்சகட்ட மகிழ்வின்போது காலம் மறைந்து போகிறது. தான் என்ற அகந்தை மறைந்துபோகிறது. இந்த இரண்டு விஷயங்களும் மறைகின்றன. உங்களுக்குள் இருக்கும் மிகப்பெரிய விருப்பம் இதுதான். ஆழ்ந்த பாலுறவின்போது காலமும், அகந்தையும் மறைந்துபோகின்றன என்பதை நீங்கள் அறியும்போது காலத்தைப் பற்றிய கவலையின்றி நித்தியத்துவத்தில் நுழையலாம். தனித்திருத்தல் குறித்த விழிப்பு உங்களிடம் இல்லை. அகந்தை செயல்பாட்டில் இருக்கவில்லை. அதுவே ஆனந்தமாகும். ஒரு தடவை இதைப் புரிந்து கொண்டால் அதுவே மகிழ்வின் ஆணி வேராக அமையும். நீங்கள் பாலுறவில் இருந்து விடுதலை பெறு கிறீர்கள். உங்களால் காலத்தையும், அகந்தையையும் உதற இயலும். காமத்தை வெல்லாமல் அதைச் செய்ய முடியும். காமம் இதைச் சில கணங்கள் மட்டுமே நிகழ்த்திக்காட்டும். பிறகு மீண்டும் இருள் சூழ்ந்து கொள்கிறது. சில கணங்கள் மட்டுமே ஒளி வருகிறது.

தியானத்தின்மூலம் இந்த ஒளி உங்களிடம் நிஜநிகழ்வாய் இணைகிறது. அகந்தையும், காலமும் இன்றி நீங்கள் வாழத் தொடங்குகிறீர்கள். பாலுறவு உச்சத்தில் ஒருகண நேரம் நீங்கள் எந்த இன்பத்தையும் பெற்றீர்களோ, அதை புத்தர் இருபத்து நான்கு மணி நேரமும் அனுபவித்தபடி வாழ்ந்தார். அதனால் அவருக்கு உடல் இன்பம் தேவைப்படவில்லை. அதுவே வெற்றி கொள்ளலாகும்.

காமத்தின் ரகசியத்தை நீங்கள் முழுமையாக அறிந்து கொண்டால் மட்டுமே வெற்றி கொள்ளல் நிகழும். காமம் என்பது உடல் சார்ந்த ஒரு இயற்கை கருவி. தியானம் பற்றிய விழிப்புணர்வை அது தரவல்லது என்பதே அந்த ரகசியமாகும். காம உச்சத்தின் வழியே தியானம் கண்டறியப்படுகிறது. அதைக் கண்டறிந்த முதல் மனிதர் காமத்தின் வழியே சென்றுதான் கண்டறிந்தார். கண்டறிய அது தவிர வேறு வழியில்லை. காரணம் காமம் என்பது இயற்கை நிகழ்வு. தியானம் ஒரு கண்டுபிடிப்பு அது இயல்பான நிகழ்வு அல்ல. அது இயற்கைக்கு மாறானது. அது ஒரு வெற்றி கொள்ளலாகும்.

"நான் நிச்சயமாக காமத்தை வெற்றி கொள்ளவில்லை. பிறகு ஏன் நான் ஒவ்வொரு தடவை அதில் ஈடுபடும்போதும் அது சரியல்ல என்ற உணர்வை ஏன் பெறுகிறேன்?" என்கிறீர்கள். அது ஒன்றுடன் ஒன்று சம்பந்தப்பட்டிருக்கிறது. நீங்கள் காமத்தை வெல்லவில்லை. அது தவறானது அல்ல என்ற உணர்வை ஏற்படுத்திக் கொள்ளாத

வரையில் அதை வெல்ல இயலாது. இது முறையானது அல்ல என்ற கருத்து டெல்கடோவினுடையதாகும். இது சரியல்ல என்பது சமூகத்தின், ஆன்மீகத்தின் கருத்தாகும். நீங்கள் தற்செயலாக அதில் பிறந்து விட்டீர்கள். பிறர் மூலம் அது உங்களிடம் தரப்பட்டிருக் கிறது. அது பிறர் மூலம் பிறருக்குத் தரப்பட்டதாகும்.

அது உங்களைக் கிழித்துக் கூறு போட்டுவிட்டது. நீங்கள் முழு மனதுடன் 'சரி' என்று சொல்ல முடியாத ஏதோ ஒன்றைச் செய்கிறீர்கள். உங்களால் எதிர்க்கவும் முடியவில்லை. காரணம் உங்கள் மனது அதை நிராகரிக்கவும் இல்லை. நீங்கள் வேறுவேறு திசைகளில் இழுபடுகிறீர்கள். உங்கள் துவக்கம் துண்டுகளாகச் சிதறி வீழ்கிறது.

இந்த நிகழ்வு மிகவும் சிக்கலானது என்பதை கவனத்தில் கொள்ளுங்கள். எப்போதாவது ஏதாவது ஒன்றை மனதில் அடக்கி வைத்துக் கொண்டால் அது மனதை வசீகரிக்கும் ஒன்றாக மாறி விடுகிறது. குறைவான அனுபவமே உங்களுக்குக் கிடைத்திருக் கலாம். ஆனால் அது உங்களை மேலும் மேலும் ஈர்ப்பை ஏற்படுத்து கிறது. நீங்கள் தந்திரமான வழிகளைக் கையாளும் சமயத்தில் உங்கள் வாழ்வு தலைகீழாகப் புரண்டு போகிறது.

எனக்கு அனுப்பப்பட்ட ஒரு அழகான கவிதையைப் பாருங்கள்.

டார்ஜிலிங்கிலிருந்து ஒரு முதியவர் வந்திருந்தார்.

அவர் ஹைட் பார்க்கிலிருந்து ஏலிங்கிற்கு பயணித்திருந்தார்.

கதவில் ஒரு அறிவிப்பு இருந்தது.

"தரையில் எச்சில் துப்பாதீர்கள்" என்றது.

எனவே அவர் கவனத்துடன் வீட்டின் உட்கூரையில் துப்பினார்.

உங்களால் என்ன செய்ய முடியும்? விபரீதமான கருத்து உங்களைத் தலைகீழாக நிற்க வைக்கிறது. காலைப் பயன்படுத்தி நிற்க நீங்கள் அனுமதிக்கப்படாதபோது உங்களால் என்ன செய்ய இயலும்? **சிரசாசனம்** செய்து தலைகீழாக நிற்கவேண்டியுள்ளது. அடக்குமுறையால் ஏற்படும் தர்க்கரீதியான தொடர்நிகழ்வு போல் அது தோன்றுகிறது.

வெற்றியை நோக்கிச் செல்ல அடக்குமுறை உதவி செய்யாது. வெளிப்படுத்துதல் மட்டுமே வெற்றியைநோக்கி உங்களை அழைத்துச் செல்லும். பாதிரியாரைக் காணாமல் போக்கிடுங்கள். பாதிரியாரை உதறிவிட வேண்டும். எல்லாவிதக் குற்றஉணர்வுகளை

யும் உதறவேண்டும். குற்றஉணர்வை உதறுவது மிகவும் சிரமம் என்று எனக்குத் தெரியும். உங்கள் முழுமனதும், முழு சமுதாயமும் அதற்கு ஆதரவாக இருந்து வருகிறது. முழு சமுதாயமும் அதன் மீது நம்பிக்கை வைத்திருக்கிறது. அதை உதறும்போது மிகவும் தனிமைப் பட்டுப் போவதாக உணர்வீர்கள். அதன் பிறகு கும்பலின் ஒரு அங்கமாக இருக்க உங்களால் முடியாது. கும்பலில் உள்ள ஒரு செம்மறி ஆடாக இருக்கமாட்டீர்கள். மனிதனாக இருப்பீர்கள். எனவே தனியே இருக்க அச்சம் தோன்றுகிறது.

எனவே ஜனங்கள் மந்தையைப் பின்தொடர்ந்து செல்கிறார்கள். கும்பல் பழைய முட்டாள்தனங்களை திரும்பவும் செய்கிறது. மூட நம்பிக்கைகள், அர்த்தமற்ற முட்டாள்தனங்களில் ஈடுபடுகிறது. திடமான நம்பிக்கையோடு தீங்கு தரும் செயல்களில் திரும்பத்திரும்ப ஈடுபடுகிறது. அதில் நாம் நம்பிக்கை கொள்ளத் தொடங்குகிறோம். ஏனெனில் நாம் நம்பிக்கை கொள்ளாவிட்டால் தனித்துவிடப் படுவோம். தனிமைப்பட்டுப் போவதற்கு ஜனங்கள் மிகவும் அச்சப் படுகிறார்கள்.

சந்நியாசிக்குத் தேவையான தைரியம் இதுதான். தனித்திருக்கும் துணிவு கொள்ளுங்கள். வாழ்க்கை அனுபவங்களை எதிர்கொள் ளுங்கள். எந்த ஒரு மூலாதாரத்தில் இருந்தும் உங்கள் வாழ்வாற்றல் தடையின்றி வெளிப்படட்டும். இந்த ஆற்றலை வாழ்க்கை உங்களுக்கு வழங்கியிருக்கிறது. அனுபவங்களில் ஆழ்ந்து போவதற்கு இந்த ஆற்றலைப் பயன்படுத்துங்கள்.

காமம் என்பது ஆழமான அனுபவங்களில் ஒன்றாகும். அதில் நீங்கள் நுழைந்து அதை வெல்ல முயலும்போது அது பெரிய விஷய மாக மாறிவிடுகிறது. காமத்திலிருந்து பிரம்மச்சரியம் பிறக்கிறது. உண்மையான பிரம்மச்சரியம் பிறக்கிறது. நம்பகமான, உண்மையான காமத்திலிருந்தே அது வெளிப்படுகிறது.

இப்போது இது ஒரு பிரச்சினை. நான் உடலின்பத்தில் ஆழமாக ஈடுபடச் சொல்கிறேன். காமத்தைக் கடந்து செல்ல அது ஒன்றுதான் வழியாகும். நீங்கள் கடந்துசெல்வதற்கு உதவும் முயற்சியில் நான் ஈடுபட்டு வருகிறேன். கடந்து செல்லாவிட்டால் நீங்கள் பூமியுடன் பிணைக்கப்பட்டு இங்கே இருப்பீர்கள். வானில் பறக்க உங்களால் இயலாது. கடந்துசெல்லாவிட்டால் நீங்கள் உயிரியல் சிறையில் கிடக்க நேரிடும். கடந்துசெல்லாவிட்டால் மிருக சாம்ராஜ்ஜியத்தின் ஒரு அங்கமாக இருந்துவிடுவீர்கள். நீங்கள்

நிஜமாக மனிதராக மாறமுடியாது - அதன் பிறகு தெய்வீகம் பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது?

காமத்தை வெல்லவேண்டும் என்றால் மிருக உணர்வை வெற்றி கொள்ள வேண்டும். காமத்தை வெற்றி கொள்ள உங்களைச் சுற்றியுள்ள உயிரியல் சிறையைத் தகர்த்து எறிய வேண்டும். காமத்தைக் கடந்துசெல்ல வேண்டுமென்றால், பூமியில் இருந்து அப்பால் சென்றாக வேண்டும். முதல் முறையாக நீங்கள் வானத்தையும், நட்சத்திரங்களையும் பார்க்கும்போது தொலைதூரத்திலிருக்கும் அந்த வெளிச்சங்கள் உங்கள் மீது பொழியத் துவங்கும்... தொலைதூரத்து இன்னிசை உங்கள் காதில் கேட்கும். நீங்கள் உங்கள் நிஜமான தலைவிதியை நோக்கிச் செல்கிறீர்கள். உங்கள் நிஜமான நிறைவை நோக்கிச் செல்கிறீர்கள்.

உங்களிடம் உள்ள மூன்று அடுக்குகள் இவைதான். முறையே மிருகம், மனிதன், தெய்வம் என்று அவை அமைந்துள்ளன. மிருக அடுக்கு பால் வேறுபாடு சார்ந்தது. மனித அடுக்கு நேசம் சார்ந்தது. தெய்வீக அடுக்கு இறைவன் சார்ந்தது. அதே ஆற்றல் தன்னை உயர்ந்த நிலைகளில் வெளிப்படுத்திக் கொள்கிறது. சகதி, தாமரை, நறுமணம் என்று தரம் உயர்கின்றன.

முகட்டைப் பார்த்து எச்சில் துப்பும் காரியத்தில் ஈடுபட வேண்டாம். நிலத்தில் உமிழுங்கள்! இயல்பாக நடந்து கொள்ளுங்கள். முரண்பாட்டை உணருங்கள். இயற்கை நிலை கடந்து அப்பால் சென்றிட வேண்டுமானால் முழுமையாகவே இயல்புடன் நடந்துகொள்வதே அதற்கான வழியாகும். அப்போதுதான் தெய்வீகத்தில் நுழைய முடியும்.

மதகுருமார்களால் உங்கள் மனம் வக்கிரப்பட்டுக் கிடக்கிறது. இந்த விஷயத்தில் நீங்கள் மிகவும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். இந்த நிலைநிறுத்தல் வெகுகாலத்துக்கு முற்பட்டது. பல நூற்றாண்டுகள் பழைமையானது. பழைமையானது எதுவாக இருந்தாலும் அதை மதிக்கவேண்டும் என்று நமக்குக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. எவ்வளவு பழைமையானதோ அந்த அளவுக்கு அதிகமாக மதிப்பளிக்க வேண்டும் என்று கற்பிக்கப்பட்டுள்ளது. எவ்வளவு பழைமையாக இருக்கிறதோ அந்த அளவுக்கு மதிப்பும், முக்கியத்துவமும் பெற்றதாக அது மாறுகிறது.

காமம் சார்ந்த விஷயங்களை மதகுருமார்கள் முதலிடம் தந்து ஏன் எதிர்க்கிறார்கள்? புத்தர்கள் ஒருபோதும் அதற்கு எதிராக இருந்த

தில்லை. அவர்கள் எல்லோரும் அதை வெற்றிகொள்ளவே விரும்பினார்கள். அவர்களைப் போலவே நானும் அதை வெற்றி கொள்ள எண்ணுகிறேன். காமத்தை வெல்லுதலே புத்தர்களின் நோக்கமாக இருந்தது. ஆனால் ஒன்றைக் கவனியுங்கள். காமத்தைக் கடந்து அப்பால் சென்றாகவேண்டும் என்று நான் கூறும்போது, நான் காமத்துக்கு எதிரானவன் என்று திரித்துக் கூறப்படுகிறது. காரணம், நாம் காமத்தைக் கடந்து அப்பால் செல்ல வேண்டும் என்று நான் கூறுவதே ஆகும். நான் காமத்துக்கு எதிரானவன் என்று நீங்கள் திரித்துக் கூறுகிறீர்கள். அப்படி இல்லாது போனால் நான் எதற்காக காமத்தைக் கடந்து சென்றிட வேண்டும் என்று கூறிட வேண்டும்?

"காமத்தை வெல்லுங்கள்" என்று புத்தர்கள் எப்போதும் கூறு கிறார்கள். ஆனால் அவர்கள் ஒருபோதும் பாலுறவுக்கு எதிரான வர்கள் அல்லர். அதை ஒரு படிக்கட்டாக வைத்து முன்னேறிச் செல்ல வேண்டும் என்று சொல்கிறார்கள். புத்தர்கள் என்ன சொல் கிறார்கள் என்பதை மதகுருக்கள் புரிந்துகொள்வதில்லை. அதை சொந்த அபிப்பிராயப்படி திரித்துக்கொண்டுவிடுகிறார்கள். பாலுறவைத் தவிர்த்துவிடுங்கள். பாலுறவுக்கு எதிரானவர்களாக இருங்கள். புத்தர்கள் என்ன சொன்னார்கள் என்று கவனியுங்கள்" என்று பேசுகிறார்கள். காமத்தை வெல்வது என்பது அதற்கு எதிரான தாக மாறுதலடந்து போகிறது. இந்தத் தவறான புரிதல் இயல்பாக எப்போதும் நடக்கிறது. நான் ஒன்றைச் சொன்னால் நீங்கள் முற்றிலும் வித்தியாசமான வகையில் அதைப் புரிந்து கொள்கிறீர்கள். முற்றிலும் அதற்கு எதிராகவும் புரிந்துகொள்கிறீர்கள்.

ஒருமுறை சிறிய நகரத்துக்கு வெளியே இருந்த கலையரங்கத்தில் பழைமையான இசைநாடகக் குழுவினர் தங்கள் நிகழ்ச்சி நடத்திய போது தவறாகப் புரிந்துகொள்ளல் பற்றி நான் அறிந்து கொண்டேன்.

அனுபவம் நிறைந்த ஒரு இசைக் கலைஞர் பிசிறடித்த குரலில் ஒரு சோகப்பாடலைக் கண்ணீரோடு பாடினார்.

பாடல் நிறைவு பெற்றதும் பார்வையாளர் ஒருவர் எழுந்து நின்று மகிழ்ச்சியுடன், "சபாஷ்! அபாரம்!!" என்று குரல் கொடுத்தார்.

அவர் பக்கத்தில் உட்கார்ந்தவர் திகைத்துப் போனார். கலை யரங்கம் செல்லும் எந்த ரசிகரும் இந்த மாதிரி மோசமான பாடலைப் பாராட்டமாட்டார். "இந்தப் பாடலை நீங்கள் விரும்பினீர்களா?" என்று கேட்டார்.

அவர், "குரலை நான் பாராட்டவில்லை. அதிலிருந்த மித மிஞ்சிய நடுக்கத்தைப் பாராட்டினேன்" என்றார்.

தவறாகப் புரிந்துகொள்வது எளிதானது. வார்த்தைகள் எப்போதும் தவறாகப் புரிந்துகொள்ள வைக்கும் திறன் பெற்றவை. நீங்கள் ஒரு தளத்தில் வாழ்கிறீர்கள். இருண்ட, ஆழமான பள்ளத் தாக்கில் வசிக்கிறீர்கள். புத்தர்கள் சூரியஒளி வீசும் மலைச்சிகரங்களில் நடமாடுகிறார்கள். அவர்கள் சொல்வது ஒளிவீசும் மலைச்சிகரங்கள் பற்றியதாகவே இருக்கும். அது உங்களிடம் வந்து சேரும்போது அது அப்படியே இருப்பதில்லை. அது எதிரொலியின் எதிரொலியாக இருக்கிறது.

உங்களுடன் இருக்கும் தந்திரசாலி மனிதர்கள் திரித்துக் கூறு கிறார்கள். அவர்கள் மதகுருவாக மாறுகிறார்கள். "நாங்கள் புரிந்து வைத்திருக்கிறோம். இப்போது உங்களுக்கு விளக்கிச் சொல்கிறோம். இதுதான் அதன் அர்த்தம்" என்கிறார்கள். புத்தர்கள் எப்போதும் தவறாகவே புரிந்துகொள்ளப்படுகிறார்கள். அது தவிர்க்கமுடியாத இயல்பான ஒன்றாகும். ஏனென்றால், ஒளிவீசும் மலைச்சிகரங்களில் பேசப்படும் மொழியானது அறியாமை என்ற இருள் சூழ்ந்த பள்ளத் தாக்குகளுக்கு ஏற்றதல்ல. பகலின் மொழி இரவுக்கு ஏற்புடையதாக இருக்காது.

தந்திரசாலிகள் எப்போதும் மத்தியஸ்தர்களாக மாறுகிறார்கள். "புத்தர்கள் சொல்வதன் அர்த்தம் எங்களுக்குத் தெரியும். அதை நாங்கள் மொழிபெயர்த்து விளக்குகிறோம்" என்கிறார்கள்.

அந்த மொழிபெயர்ப்புக்கு இன்னொரு காரணமும் உள்ளது. புத்தர்கள் பாலுறவுக்கு எதிரானவர்கள் என்ற கருத்து உங்கள் மீது அவர்களுக்கு பெருமளவு ஆதிக்கத்தை உருவாக்குகிறது. நீங்கள் காமத்தை வென்றுவிட்டால் மதகுருக்கள் ஆதிக்கம் பெற்றிட இயலாது. நீங்கள் காமத்தை மனதில் அடக்கிவைத்திருந்தால் உங்கள் இயல்புநிலை திரிந்து குற்ற உணர்வுடன் இருப்பீர்கள். மோசமாகவும், சச்சரவு நிறைந்தவர்களாக இருப்பீர்கள். உங்கள் சக்தியை உள்முக யுத்தத்தில் வீணாக்குவீர்கள். நீங்கள் ஒவ்வொருநாளும் பலவீனப்பட்டுப் போகிறீர்கள். பலவீனப்படும்போது நீங்கள் எளிதாக ஆதிக்கத்திற்கு உட்படுத்தப்பட்டு, பிடிப்பட்டுப் போவீர்கள்.

மதகுரு பலசாலி என்பதால் அவர் ஆதிக்கம் செலுத்தவில்லை. நீங்கள் பலவீனப்பட்டுப் போவதால் தான் அது நடக்கிறது. உங்கள் பலவீனத்தில் அவரது ஆதிக்கம் இடம்பிடித்துக் குடியேறி இருக்கிறது. நீங்கள் பலசாலியாக மாறும்போது மதகுரு தனது நிலையிலிருந்து மங்கி மறைந்துபோவார்.

எதிர்கால மனித சமுதாயம் பற்றிய எனது கண்ணோட்டத்தின் படி, அந்த புதிய மனிதன் ஏற்கனவே பூமிக்கு வந்து சேர்ந்துவிட்டான். அவன் பலசாலியாக, வாழ்க்கையுடன் இசைந்து நடப்பவனாக, மிகுந்த கொண்டாட்டம் உள்ளவனாக, சந்தோஷம் நிறைந்தவனாக, நற்சிந்தனையுள்ளவனாக, அனுசரித்துப் போகும் குணமுள்ளவனாக இருக்கும்போது மதகுருக்கள் காணாமல் போய்விடுவார்கள். அவர்கள் கவிழ்ந்து போவார்கள். மதகுருமார்கள் பற்றி யார் கவலைப் படப்போகிறார்கள்? உங்கள் தேவைக்கு அதிகமாகவே வாழ்க்கை கற்றுக் கொடுத்துவிட்டது.

வாழ்விலிருந்து நீங்கள் கற்றுக் கொண்டால் புத்தர்கள் குறித்து எளிதாகப் புரிந்துகொள்ள முடியும். தவறான புரிதல்கள் குறைவாக இருக்கும். ஏனென்றால், உங்கள் வாழ்வை முழுமையாக வாழும் போது சில அனுபவங்களைப் பெற்றிடத் துவங்குவீர்கள். சில மலைச்சிகர அனுபவங்கள் அவை. அவை மின்னலைப் போலத் தோன்றி மறையும். ஆனால் உயர்ந்த சிகரங்கள் பற்றிய சில கண நேரத் தரிசனம் கிட்டும். அவை முழுமையான உணர்வுநிலை களாகும். புத்தர்கள் உங்களுடன் எளிதாக உரையாட முடியும்.

புத்தர்களுக்கும் உங்களுக்கும் இடையிலான தொடர்பு மேலும் எளிதாக மாறும். மதகுருமார்கள் இடைத்தரகர்களாக இருக்கும் நிலை மறைந்தால் இது நிகழும். அவர்கள் மத்தியஸ்தர்கள் அல்ல. இணைப்புப் பாலம் அல்ல. அவர்கள் தடைச்சுவர்கள் - குறுக்கீடுகள். எனவே நான் அனைத்து வகையான குருத்துவங்களுக்கும் எதிராக இருக்கிறேன்.

நீங்கள் ஒரு குருவைக் கண்டறிந்தால் முழுமையாக அவருடன் சேர்ந்திருங்கள். ஆனால் மதகுருக்களைத் தவிர்த்துவிடுங்கள். உண்மையை அறிந்துணராத அந்த மனிதர்களைத் தவிர்த்துவிடுங்கள். கிளிப்பிள்ளை போல மற்றவர்கள் சொல்லித் தந்ததைத் திருப்பிச் சொல்கிறார்கள். ஒருவர் உண்மையை உணர்ந்து அறிந்திருந்தால், ஒருவரிடம் தெய்வீகமும், நறுமணமும் இருப்பதை நீங்கள் கண்டால், உணர்ந்தால் முழுமையாக அவருடன் இணைந்துவிடுங்கள். வாய்ப்பைத் தவறவிடாதீர்கள். காரணம், லட்சக்கணக்கில் மத குருக்கள் இருக்கிறார்கள். புத்தர்கள் அரிதாகவே காணப்படுகிறார்கள்.

எப்போதாவது ஒரு புத்தரை வழியில் நீங்கள் காணநேரலாம். பல பிறவிகள் எடுத்தும் ஒரு புத்தரைக் காணமுடியாமலும் போகலாம். எனவே எப்போது ஒரு புத்தரைக் காணநேர்ந்தாலும்

அந்த வாய்ப்பைத் தவறவிடாதீர்கள். அனைத்து ஆபத்துகளையும் எதிர்கொள்ளத் தயாராக இருங்கள். உண்மையும், அதிகாரமும் உள்ள ஒருவரை வழியில் காணநேர்ந்தால்.... அந்த அதிகாரம் பெற்ற மனிதர் அதிகாரம் செலுத்துபவரல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். அதிகாரம் பெற்ற அவர் அடக்கமான மனிதராக இருப்பார். அதிகாரம் செலுத்தும் மனிதர் அடக்கமாக இருக்கமாட்டார். மூர்க்கமானவராக இருப்பார். சொல்லப்போனால் அவர் கட்டளையிடும் அதிகாரம் உள்ளவர் போல நடிக்கிறார். அதிகாரம் செலுத்த வல்லவர் போல நடிக்கிறார். அவரது அதிகாரம் வேதங்கள், குரான், பைபிள் போன்ற வற்றைச் சார்ந்திருக்கிறது. அவரது அதிகாரம் சுயம் சார்ந்தது அல்ல. அது அவரது சொந்த அனுபவம் சார்ந்ததும் அல்ல.

ஏசுநாதர் கட்டளையிடும் அதிகாரம் படைத்தவராக இருந்தார்.

யாரோ ஒருவர் அவரைப் பார்த்து, "யார் தந்த அதிகாரத்தில் நீங்கள் போகிறீர்கள்?" என்று கேட்டார். அந்த கேள்வியின் அர்த்தம், "நீங்கள் மோஸஸ், ஆபிரஹாம் அல்லது ஈஸாக்கேல் போன்றவர் களின் சார்பில் பேசுகிறீர்களா?" என்பதாகும். எவருடைய அதிகாரத் தில் நீங்கள் பேசுகிறீர்கள்? தால்மத்தின் அதிகாரம் சார்ந்ததா? பழங் கால மதகுருமார்கள், யூதமத தீர்க்கதரிசிகளின் சார்பிலா? யாருடைய சார்பாகப் பேசுகிறீர்கள்?

அதற்கு ஏசுநாதர், "நான் எனது சொந்த அதிகாரத்தில் பேசு கிறேன். ஆபிரஹாம் காலத்துக்கு முன்னரே நான் இருந்தேன்" என்றார்.

ஆபிரஹாம் ஏசுநாதருக்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற் பட்டவர். ஆனால் ஏசு சொல்கிறார், "ஆபிரஹாம் காலத்துக்கு முன்பே நான் இருந்தேன். நான் பிரதான ஆதார மையமாக இருக்கிறேன். தொடக்க காலத்தில் இருந்தே நான் இருந்துவருகிறேன். உங்களுக்குள் நீங்கள் வெகு ஆழமாகச் சென்றால் அந்த ஆதார மையத்தை அடையலாம்."

நீங்கள் வழியில் செல்லும்போது ஆதார மையமாக இருக்கும் ஒருவரைக் காணநேர்ந்தால் எல்லா வகையிலும் அவருடன் சேர்ந் திருங்கள். "என்னைப் பின்பற்று" என்று அவர் ஒருபோதும் சொல்ல மாட்டார் என்பது நினைவிருக்கட்டும். "என்னோடு இரு" என்று எளிமையாகச் சொல்வார். "என்னுடன் கூடியிரு" என்பார். "நாம் இணைந்திருப்போம்" என்பார். நெருக்கமான பிணைப்புத்தான் சீடனாக இருக்கும் கலையாகும்.

புத்தரை நீங்கள் அனுமதித்தால் அவர் தனது ஆற்றலை உங்கள் மீது பொழியத் துவங்குவார். அது உரையாடல் மூலமான தொடர்புடன் சம்பந்தப்பட்டது அல்ல. சக்தித் தளத்தில் அது உயிர் பெறுகிறது. அதன்பிறகு புத்தர்கள் எல்லாரும் வாழ்க்கைக்கு எதிரானவர்கள் அல்லர்; அதற்கு எப்போதும் அனுசரணையானவர்கள் என்பதைப் புரிந்து கொள்வீர்கள். வாழ்க்கை என்பது இயற்கையாகும். எப்படி நாம் அதற்கு எதிராக இருக்க முடியும்?

மதகுருக்கள் எப்போதும் வாழ்க்கைக்கு எதிரானவர்கள். காரணம், நீங்கள் பலவீனப்பட்டால் மட்டுமே மதகுருக்கள் உங்கள் மீது ஆதிக்கம் செய்ய முடியும். வாழ்க்கைக்கு எதிரானவர்களாக உங்களை மாற்றினால் நீங்கள் பலவீனப்படுகிறீர்கள். பிறகு எல்லா விதமான வக்கிரங்களும் வந்து குடியேறுகின்றன.

பாலுறவு என்றால் என்ன என்பதை நீங்கள் இன்னும் அறிந்து கொள்ளவில்லை. இன்பக் களியாட்டத்தில் நீங்கள் ஈடுபட்டிருக்கலாம். பாவனையான உறவுகளில் ஈடுபட்டிருக்கலாம். சிலருடன் இன்பம் அனுபவித்தும் இருக்கலாம். வெறுமனே அது உடல் சார்ந்ததாகவே உள்ளது. உங்களால் அதன் உயிர்ப்புக்குள் நுழைய முடியவில்லை. வெளியில் இருப்பவராகவே இருக்கிறீர்கள். அந்த வினோதத்தில் பங்கு கொள்பவராக இல்லை.

பங்கு கொள்வது எப்படி என்று உங்களுக்குத் தெரியாது இருப்பதுதான் பிரச்சினை. பங்கு கொள்வதற்கான மொழி உங்களுக்குத் தெரியவில்லை. பிற மனிதர்களின் சக்தியுடன் இசைந்து போகும் கலை உங்களுக்குத் தெரியவில்லை. சாத்தியமான எல்லா சக்தி நிலைகளிலும் தொடர்பு வைத்துக் கொள்ளத் தெரியவில்லை. உடலால் மட்டுமல்ல, மனதாலும், உணர்வாலும் அதை செய்ய வேண்டும். தாழ்ந்த மையங்களில் மட்டுமின்றி உயர்நிலை மையங்களுடனும் தொடர்பு வைக்க வேண்டும்.

அதை யாரும் சொல்வதில்லை. மிருகங்களின் பாலுறவு ஒருவித இயல்பான அகத்தூண்டல் என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஆனால் மனிதனுக்கு அது ஒரு கலை. மனிதனுக்கு எல்லாமே ஒரு கலைதான். மிருகங்களுக்கு எல்லாமே அகத்தூண்டல்தான். உதாரணத்திற்கு, நீங்கள் ஒரு எருமையைக் கொண்டுவந்து தோட்டத்திற்குள் விடுங்கள். எருமை குறிப்பிட்ட சில புல்பூண்டுகளை மட்டுமே தின்னும். மற்றவற்றை எல்லாம் ஒதுக்கித் தள்ளிவிடும். அதன் தேர்வு முன்பே தீர்மானிக்கப்பட்டுவிட்ட ஒன்றாகும். அதற்கு மனம் சார்ந்த எண்ணம் கிடையாது. நிஜமாகவே அது தேர்வு செய்வ

தில்லை. அதன் தேர்வு இயந்திரத்தனமானது. ஒரு இயந்திரம் போல அது செயல்படுகிறது. அது அகத்தூண்டல் சார்ந்தது ஆகும்.

மனிதனை எடுத்துக் கொண்டால் இயல்பான அகத்தூண்டுதல் அவனுக்கு இல்லை. உள்ளுணர்வு தூண்டலின் பிடியிலிருந்து அவன் விடுபட்டுவிட்டான். அது ஒரு பெரிய நிகழ்வாகும். உணர்வுத் தூண்டலின் பிடியில் இல்லை என்பது உங்களுக்கு பெருமையான ஒன்று. ஒருவகைச் சுதந்திரத்தை நீங்கள் பெற்றுவிட்டேன்.

அதனால்தான் மனிதன் எல்லாவிதமான பொருட்களையும் உண்கிறான். எந்த மிருகமும் மனிதன் போல உண்பதில்லை. ஒவ்வொரு மிருகத்திற்கு நிர்ணயிக்கப்பட்ட உணவு வகைகள் உண்டு. மனிதன் மட்டுமே எல்லாவகையான பொருட்களையும் உண்கிறான். கற்பனை செய்யக் கூடியதையும், கற்பனை செய்ய முடியாததையும் சாப்பிடுகிறான். உங்களால் அதை நம்ப முடியாது! உலகெங்கும் உள்ள மனிதர்களின் பழக்கவழக்கங்களை நான் பார்த்து வருகிறேன். மனிதர்கள் தின்னாதது என்று எந்த ஒரு பொருளும் மிச்சமில்லை.

பூச்சி வகைகள் தின்னப்படுகின்றன. பாம்பு வகைகள் தின்னப் படுகின்றன. பாம்புகளையா என்று கேட்கிறீர்களா? சீனாவில் அது ஒரு சுவையான உணவு. ஆப்பிரிக்காவில் எறும்புகள் சாப்பிடப் படுகின்றன. சிறிய குழந்தைகளுக்கு அது நல்ல உணவு. குழந்தைகள் எறும்பு சேகரிக்கத் தொடங்குகிறார்கள். மனிதனால் தின்னப்படாதது என்று எந்தப் பொருளும் இல்லை.

வேண்டாம் என்று ஒதுக்கிவைக்கப்படாத பொருள் எதுவுமே கிடையாது. எல்லாமே ஒதுக்கிவைக்கப்பட்டவைதான். ஆனால் மனிதனுக்கு பூரணமான சுதந்திரம் இருக்கிறது.

உள்ளுணர்வுப்படி மனிதன் ஒரு சைவ உணவுக்காரனாக இருக்க வேண்டும். உள்ளுணர்வு அவனை சைவ உணவுக்காரனாக இருக்கத் தூண்டுகிறது. அவன் உயிர்க்கொல்லியாக இருக்க இயலாது. மாமிச உணவு உண்ணும் மிருகங்களுக்கு சிறிய குடல்தான் இருக் கிறது. மனிதனுக்கு நீளமான பெரிய குடல் இருக்கிறது. நீளமான குடல் சைவ உணவுக்காரர்களுக்கானது. காரணம், மாமிசம் சாப்பிடும் மிருகங்களுக்கு ஒரு தடவை சாப்பிட்டால் அது இருபத்து நான்கு மணிநேரத்திற்குப் போதும்.

சிங்கம் ஒரு நாளைக்கு ஒரு தடவைதான் சாப்பிடுகிறது. ஆனால் குரங்குகள் நாள் முழுவதும் தின்றுகொண்டே இருக்

கின்றன. ஏனென்றால், நீங்கள் காய்கறி உணவை உண்டால் அதிக அளவில் உண்ணவேண்டும். காய்கறியான சைவ உணவில் ஒதுக்கித் தள்ள வேண்டியவை நிறைய உள்ளன. சிறிய அளவு உணவே உட்கிரகிக்கப்படுகிறது. மாமிச உணவு முழுமையாக உட்கிரகிக்கப் படுகிறது. அது ஏற்கனவே உட்கிரக்கப்பட்ட உணவு இருக்கிறது. சில வேறு மிருகங்கள் உட்கிரகிக்கும் வேலைச் செய்துவிட்டன. எனவே நீங்கள் ஆயத்தப்படுத்தப்பட்ட உணவை உண்கிறீர்கள். நீங்கள் சைவ உணவு உண்டால் அது உட்கிரகிக்கப்பட நீண்ட நேரமாகிறது. அதற்கு நீளமான பாதை தேவை. எனவே அது நீண்ட நேரம் உங்கள் உடலில் தங்கி இருக்கிறது.

மனோரீதியாகவே மனிதன் ஒரு சைவ உணவுக்காரன். ஆனால் உள்ளுணர்வினால் அதைத் தீர்மானிக்க முடியவில்லை. பாலுறவும் இப்போது ஒரு தன்னிச்சையான உணர்வாக இருப்பதில்லை. அதனால் பலவகையான மனிதர்களை உங்களால் பார்க்க முடிகிறது. மிருகங்களில் அப்படிக் காண இயலாது. மிருகங்கள் தன் இனக் கலவியில் (Homosexual) ஈடுபடுவதில்லை. இருபாலினக் கலவி யிலும் (bisexual) ஈடுபடுவதில்லை. நான் மிருகக்காட்சிச் சாலைகளில் உள்ள மிருகங்கள் பற்றிப் பேசுவதாக நினைக்க வேண்டாம். மிருகக் காட்சிச் சாலைகளில் உள்ளவை மனிதர்களிடமிருந்து கற்றுக் கொள் கின்றன. நான் காட்டு விலங்குகள் பற்றிப் பேசுகிறேன். மிருகக் காட்சிச் சாலையில் உள்ள மிருகங்கள் எல்லாவிதமான காரியங்களை யும் செய்கின்றன. அது இயல்புக்கு மாறான ஒரு நிலையாகும். ஆனால் வனங்களில் அவை எதிர்பாலினங்களுடன் (Heterosexual) மட்டுமே உறவு வைத்துக் கொள்கின்றன.

ஆனால் மனிதன் மட்டும் ஏன் இப்படி எதிர்பாலினக் கலவி, சுயஇன்பம், தன் இனக்கலவி, இரு பாலினக் கலவி, தனிநபருடன் கலவி அல்லது குழுவாகச் சேர்ந்து கலவியில் ஈடுபடுதல் என்று பலவகைப்பட்டவனாக இருக்கிறான்? மனிதனுக்குத் தேர்வு செய்யும் சுதந்திரம் இருக்கிறது. இந்த வாய்ப்பு உங்களைச் சோகத்தில் ஆழ்த்தலாம் அல்லது புத்தராக மாற்றலாம். உங்கள் சுதந்திரத்தை நீங்கள் எப்படிப் பயன்படுத்துகிறீர்கள் என்பதைப் பொறுத்து அது அமைகிறது.

சுதந்திரம் என்பது ஒரு ஆபத்தான செயல்பாடு. மிகவும் முக்கியமானது என்றாலும் அது ஆபத்தானதும்கூட. நீங்கள் மிருக நிலைக்குக் கீழாகவும் போய்விடலாம், தெய்வநிலைக்கு மேலேயும் உயரலாம். அதுவே சுதந்திரத்தின் முழுமையான வீச்சாகும்.

மிருகத்தால் தனது நிலையில் இருந்து கீழே தாழ்ந்துவிட முடியாது. ஆதாம் ஏவாள் போன்றவர்களால் மட்டுமே தாழ்ந்துபோக இயலும். மற்ற மிருகங்கள் எல்லாம் இன்னும் அந்த ஈடன் தோட்டத்தில் வாழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன. எந்த ஒரு மிருகமும் அந்தத் தோட்டத்தில் உள்ள அறிவுக்கனியை உண்ணவில்லை. கனியை உண்ணுமாறு ஆதாம், ஏவாளைத் தூண்டிய நச்சுப் பாம்பும் அக் கனியை உண்ணவில்லை. இன்னும் அந்தப் பாம்பு ஈடன் தோட்டத்தில் தான் உள்ளது. பாம்பு தரம் தாழ்ந்து போனதாக நீங்கள் எப்போதாவது கேள்விப்பட்டதுண்டா? இதுவரை அப்படி ஏதும் நிகழ்ந்ததில்லை.

மனிதனுக்கு பெருமளவு சுதந்திரம் உள்ளது. அதனால் அவன் தாழ்ந்து போகிறான். அவன் இயல்பான உள்ளுணர்வுகளின் தளத்தில் இல்லை. அவன் மிகவும் தளர்வாக இருக்கிறான். அவன் மரத்தைப் போன்று வேரோடி இருக்கவில்லை. அவன் நடமாட முடியும். அவன் ஒரு நடமாடும் மரம். அவனது வேர்கள் தரையில் பதிந்து கிடக்கவில்லை. மிதந்து கொண்டிருக்கின்றன. அது ஒருவகையில் சிறப்பானதுதான். வெகுசிலரே அதை சரியாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். உங்களால் ஆதாமைப் போல வீழ்ந்திடவும் முடியும், ஏசுவைப் போல உயர்ந்திடவும் இயலும்.

காமத்தைக் கற்றுணர வேண்டும். அதைக் கற்றுத்தர யாரும் இல்லை. எந்த பள்ளிகளும் இல்லை. அந்த பள்ளிகளுக்கு அனுமதி யும் இல்லை. காமத்துக்கு எதிராக உங்களுக்கு நஞ்சூட்ட எல்லோரும் அனுமதிக்கப்பட்டுக்கிறார்கள். காமத்தின் சரியான பாதையை உங்களுக்குக் கற்றுத்தர யாரும் அனுமதிக்கப்படுவ தில்லை. அதை ஒரு நேர்த்தியான கலையாக மாற்ற யாருக்கும் அனுமதியில்லை.

நான்கு வயதுச் சிறுவனாக இருக்கும்போது அந்தச் சிறுவன் கடல் அலைகளால் அடித்துச் செல்லப்பட்டு ஒரு ஆளில்லாத தீவில் ஒதுங்கினான். அங்கு பல ஆண்டுகள் வசித்தான். அவனுக்கு இருபத்தொரு வயதாகும்போது ஒருநாள் அழகான மங்கை ஒருத்தி அலைகளால் அடித்துவரப்பட்டு கரை ஒதுங்கினாள்.

இருவரும் சந்தித்துக் கொண்டனர். "நீ யார்? என்று அவள் கேட்டாள். "இந்த தீவில் உள்ள ஒரே ஆள் நான்தான்" என்றான் அவன்.

"நாள் முழுவதும் நீ என்ன செய்வாய்?" என்று அவள் வினவினாள்.

அதற்கு, அவன், "நான் வேட்டையாடுவேன். மீன்பிடிப்பேன். மரமேறுவேன். அங்கு இருக்கும் பாறை மீது அமர்ந்துகொண்டு கூழாங்கற்களைக் கடலுக்குள் வீசுவேன்" என்றான்.

"நல்லது. உடலுறவுகொள்ள என்ன செய்வாய்?" என்று கேட்டாள்.

"உடலுறவா? அப்படியென்றால் என்ன?"

அது என்ன என்று அப்போதே அந்தக் கடற்கரையிலேயே சொல்லித் தந்தாள். எல்லாம் முடிந்த பிறகு அவள் "இப்போது இது பற்றி என்ன நினைக்கிறாய்?" என்று கேட்டாள்.

அவன் "எனது கூழாங்கல் துடுப்பில் நீ செய்தது நன்றாக, அருமையாக இருந்தது" என்றான்.

மனிதனுக்கு அனைத்தையும் கற்றுத்தர வேண்டும். மனிதனுக்கு உள்ளுணர்வுத் தளங்கள் இல்லை. எனவே எல்லாம் சாத்தியமே. உங்களுக்குச் சரியான வழிகாட்டல் கிடைக்காவிட்டால் இருட்டில் தடுமாற வேண்டியிருக்கும்.

பிதாகோரஸின் பள்ளி அப்படிப்பட்ட ஒன்றுதான். காமத்தை வெல்வதற்கு அதில் தீவிரமாக இறங்க வேண்டும் என்று அங்கே கற்பிக்கப்பட்டது. அதன் காரணமாகவே அவர் துன்புறுத்தப்பட்டார். ஒவ்வொரு நகரத்திலும் தனது வாழ்நாள் முழுவதும் சிரமத்திற்கு ஆளானார். வாழ்நாள் முழுவதும் அவர் ஒரு தீவிலிருந்து இன்னொரு தீவுக்கு ஓடியவண்ணம் இருந்தார். கடைசியாக அவர் தனது பள்ளியை ரகசியமான ஒன்றாக வைத்துக்கொள்ள நேர்ந்தது. அதை ரகசியமாக வைக்க அவசியமில்லை. காரணம், சில அருமையான அனுபவங்களை அவர் பெற்றிருந்தார். அதை மக்களுக்கு எடுத்துச் சொல்லிவிட விரும்பினார். மக்கள் அவர் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்கவும் தயாராக இல்லை. எனவே ரகசியமாக வைத்திருக்கவேண்டிய நிலை உருவாயிற்று.

ரகசியம் என்பது ஒரு பாதுகாப்புக்கு மட்டுமான ஏற்பாடாகும். மடாலயப் பள்ளியைச் சர்ந்தவர்கள் எங்கு சென்றாலும் ரகசிய மாகவே செல்ல வேண்டியிருந்தது. மிகவும் நெருக்கமான சீடர் களுக்கு மட்டுமே ரகசியங்கள் சொல்லித் தரப்பட்டன. அவற்றை வாய்மொழியாகவே வைத்திருந்தார்கள். எழுதி வைத்துக்கொள்ள யாருக்கும் அனுமதி இல்லை. போதனையாளர்களும் அதை எடுத்துச் செல்ல மாட்டார்கள். அவர்கள் எது சொன்னாலும் உங்களுக்கு வியப்பாக இருக்கும். "உங்கள் ஆரோக்கியத்தைப் பாதுகாத்துக்

கொள்ளுங்கள்" என்று அவர்கள் அதில் என்ன ரகசியம் இருக்கிறது? அவர் எளிய விஷயங்களைச் சொல்கிறார் ரகசியமாகப் பாதுகாக்க அதில் எதுவுமில்லை. அவர்கள் "எப்போதும் நடுநிலையில் இரு" என்ற தங்கக் குறியீட்டை உணர்த்துகிறார்கள். அதில் என்ன ரகசியம் இருக்கிறது என்று தோன்றும். எல்லா சூத்திரங்களையும் புரட்டிப் பார்த்தால் அதில் எந்த ரகசியத்தையும் காணமுடியாது. ரகசியங்கள் அதில் இருந்திருந்தால் அந்த சூத்திரங்கள் வெகுகாலத்துக்கு முன்பே எரிக்கப்பட நேர்ந்திருக்கும். உங்களால் அவற்றை பார்த்திருக்கவே முடியாது.

பிதாகோரஸ் உயிரிழந்த நாளில் அவரது மடாலயப் பள்ளி முழுமைக்கும் தீ வைக்கப்பட்டது. முதல் முறையாக அவர் மேற்கு நாட்டில் உருவாக்கிய அந்த ரகசியப் பாரம்பரியம் அழிக்கப்பட்டது. கிழக்கு நாடுகளில் அவர் ஞானத் தேடலில் ஈடுபட்டிருந்தார். அந்த தேடலுக்காகத் தனது வாழ்வை அர்ப்பணித்திருந்தார். அந்த ரகசியப் போதனைகள் எல்லாம் நிர்மூலமாக்கப்பட்டன.

கும்பலின் கண்ணோட்டம் எப்போதும் இப்படிப்பட்ட தாகவே இருக்கிறது. என் மீதான கண்ணோட்டமும் இவ்வாறானது தான். காரணம், சில மறைவான விஷயங்கள் பற்றி நான் பகிரங்க மாகப் பேசுகிறேன்.

மனிதனுக்கு அனைத்தையும் கற்றுத் தரவேண்டும். எப்படி உண்பது, எப்படி கலவி செய்வது, எப்படி வாழ்வது என்றெல்லாம் சொல்லித் தரவேண்டும். அவனுக்குக் கற்றுத் தராதுபோனால் அவனுடைய செயல்பாடுகள் தரமற்று இருக்கும். அவன் எதிலும் நிச்சயமற்றவனாக, தயக்கம் கொண்டவனாக இருப்பான். அவன் செயல்கள் மட்டமாகவும், தெளிவற்றும், குழப்பத்துடனும் இருக்கும். ஒரு சில விஷயங்களில் மட்டுமே அவன் ஈடுபடுவான். சில உள்ளுணர்வு உந்துதல்கள் அவற்றைச் செய்யத் தூண்டும். ஆனால் தெளிவான பாதையோ நோக்கமோ இருக்காது.

காமம் என்றால் என்ன என்பதை நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டும. நான் அதைச் சொன்னால், நீங்கள் காமத்தை அறிந்து கொள்ளக்கூடாது என்று சொல்வதாக அர்த்தப்படுத்திக் கொள் கிறார்கள். இல்லை. நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். ஆனால் உங்கள் அறிதல் மேலோட்டமானதாக உள்ளது. உங்கள் அறிதல் இன்னும் ஒரு கலையாக மாறவில்லை. இன்னும் ஒரு தத்துவமாக மாறவில்லை. உங்களுக்குச் சில குழந்தைகள் இருக்கலாம். எனவே,

பாலுறவு என்றால் என்ன என்பதை நீங்கள் அறிந்திருப்பதாக நினைக் கிறீர்கள். காரணம், உங்களுக்குக் குழந்தைகள் இருக்கின்றன.

குழந்தைகள் இருந்துவிட்டால் மட்டும் நீங்கள் பாலுறவை அறிந்து கொண்டு விட்டதாகி விட்டது. குழந்தைகளைப் பெறுவது விளக்கை அணைப்பது, ஏற்றுவது போல ஒரு எளிய காரியம்தான். விளக்கை ஏற்றுவதாலும், அணைப்பதாலும் நீங்கள் மின்சாரம் என்றால் என்ன என்று அறிந்து கொண்டுவிட்டதாக எண்ணி விடுவ தில்லை. விளக்கை அணைப்பதாலும், ஏற்றுவதாலும் மின்சாரம் குறித்து அறிந்து கொண்டுவிட்டதாக நினைக்கிறீர்களா? சிலர் மட்டும் அவ்விதம் சிந்திக்கிறார்கள்...

**எ**டிசன் பற்றிய ஒரு அழகான கதையை நான் கேள்விப் பட்டேன். அவர் மின்சார பல்பை முதல்முறையாக உருவாக்கியவர். மூன்று ஆண்டுகள் கடுமையாக உழைத்துக் கடைசியில் வெற்றி கண்டார். அது ஒரு அதிசயம். முதல்முறையாக மனிதனின் கையில் மின்சாரம் செயல்படுகிறது. அபரிமிதமான ஆற்றலுள்ள மாபெரும் சக்தி மனிதனின் சேவைக்காகத் திருப்பிவிடப்பட்டது. அவர் அங்கும் இங்குமாக முப்பது வருடங்களும், தற்போது மூன்று வருடங்கள் தொடர்ச்சியாகவும் அதற்காக உழைத்தார்.

முதல்முறையாக மின்சார விளக்கு எரிந்தபோது அவர் வியந்து போனார், திகைத்துப் போனார். அதைப் பார்த்துக் கொண்டே அங்கு உட்கார்ந்து விட்டார். பாதி இரவு கடந்துவிட்டது, மிச்சமிருந்ததும் மெல்ல மெல்ல மணித்துளிகளாகக் கழிந்துகொண்டிருந்தன. அவருடைய மனைவி வந்து "உங்களுக்குப் பைத்தியம் ஏதாவது பிடித்துவிட்டதா? இந்த அர்த்தமற்ற விளக்கைப் பார்த்தபடி அமர்ந்து கொண்டு என்ன செய்கிறீர்கள்? படுக்கைக்குப் போங்கள்" என்றாள்.

அவள் அதை 'அர்த்தமற்ற விளக்கு' என்று குறிப்பிட்டாள். அதற்கு எடிசன், "அர்த்தமற்ற விளக்கு என்றா சொன்னாய்? மின்சாரம் என்றால் என்னவென்று உனக்குத் தெரியுமா?" என்று கோபத்துடன் கத்தியதாகச் சொல்வார்கள்.

"எனக்கு அது பற்றித் தெரியும்" என்றாள் அவள். ஏனெனில் அவள் சதா அருகில் இருந்து அவர் அதையும் இதையும் செய்வதைப் பார்த்திருக்கிறாள். நீங்கள் அதைப் போடுகிறீர்கள் அல்லது நிறுத்து கிறீர்கள். அதுதான் மின்சாரம்" என்றாள்.

எடிசன்பற்றி நான் கேள்விப்பட்ட இன்னொரு கதையும் உண்டு.

விடுமுறையைக் கழிக்க அவர் ஒரு சிறிய நகருக்குச் சென்றார். அந்த நகரில் ஒரு பள்ளியில் ஆண்டு விழா நடைபெற்றுக் கொண்டிருந்தது. பள்ளிச் சிறுவர்கள் பல பொருட்களைச் செய்து கண் காட்சிக்கு வைத்திருந்தார்கள். எடிசனும் அங்கு சென்றார். அவர் எடிசன் என்று யாருக்கும் தெரியாது. மாணவர்கள் சில மின்சாரப் பொம்மைகள் செய்திருந்தார்கள். பொம்மைகள்பற்றி விளக்கிச் சொல்லிக்கொண்டிருந்த மாணவனிடம் எடிசன் சென்றார். அந்த பொம்மைகளைத் தயாரித்திருந்த அவன் பெருமிதத்துடன் காணப் பட்டான். "மின்சாரம் என்றால் என்ன?" அவனிடம் எடிசன் கேட்டார்.

அதற்கு அந்த மாணவன், "மின்சாரமா? அது பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. சற்று பொறுங்கள். எங்கள் ஆசிரியரைக் கூப்பிடு கிறேன்" என்றான்.

அவன் ஆசிரியரை அழைத்து வந்தான். அவர் அறிவியல் முதுநிலைப் பட்டதாரி. அவரிடம் எடிசன், "மின்சாரம் என்றால் என்ன?" என்று வினவினார்.

அந்த ஆசிரியர், "இப்படிப்பட்ட கேள்வியை யாரும் இதுவரை கேட்டதில்லை. மின்சாரம் என்றால் மின்சாரம்தான். கொஞ்சம் இருங்கள். பள்ளித் தலைமை ஆசிரியரைக் கூப்பிடுகிறேன். அவர் அறிவியலில் முனைவர் பட்டம் பெற்றவர். அவர் அதுபற்றி விளக்கிச் சொல்லக்கூடும்" என்றார்.

அவர் வந்து விளக்கிச்சொல்ல முயன்றார். எடிசனுக்கு விளக்கிச் சொல்ல யாரால் இயலும்? மின்சாரம் பற்றி முதலில் கண்டறிந்து தெளிந்தவர். உலகின் மிகச்சிறந்த அறிவாளிகளில் ஒருவர். ஆயிரம் புதிய கண்டுபிடிப்புகளை நிகழ்த்திய ஒரே மனிதர். யாருடன் பேசிக் கொண்டு இருக்கிறோம் என்று தெரியாத தலைமை ஆசிரியர் விளக்கிச் சொன்னார். "உங்கள் விளக்கம் பொருத்தமாக இல்லை. மின்சாரம் என்றால் என்ன என்பதை மட்டும் எளிமையாகச் சொல்லுங்கள். நீங்கள் கூறுவது என் கேள்விக்குச் சரியான பதில் அல்ல. வேறு எதையோ விளக்க முயல்கிறீர்கள்" என்றார்.

தலைமை ஆசிரியருக்கு வியர்க்கத் தொடங்கியது. அங்கே கூட்டம் சேரலாயிற்று. எடிசனுக்கு அனுதாபம் தோன்றியது. "அலட்டிக் கொள்ளாதீர்கள். நான்தான் எடிசன். எனக்கு மின்சாரம் என்றால் என்னவென்று தெரியாது" என்று கூறினார்.

ஒரு குழந்தையைப் பெற்றுவிடுவதால் மட்டும் பாலுறவு பற்றித் தெரிந்துகொண்டதாகி விடாது. காமம் என்பது மின்சாரத்தை

விடவும் மிகவும் ஆழமான ஒரு விஷயம். அது இன்னும் கண்டறியப் படவில்லை. அது முற்றிலும் வித்தியாசமான ஒரு செயல்பாடு. நீங்கள் அறிந்த மின்சாரமும் காமத்தின் ஒரு பருப்பொருள் அங்கம் தான். காமம் அதன் ஒரு உள்ளார்ந்த அங்கம். நீங்கள் அறிந்துள்ள மின்சாரம் ஒரு உயிரற்ற நிகழ்வு. காமம் உயிர்ப்பு நிறைந்தது. அது மின்சாரமும் வாழ்க்கையும் இணைந்ததாகும். அது மிக உயர்ந்த நிலையில் உள்ள கூட்டுப் பொருள். இனிமேல்தான் அதை கண்டறிய வேண்டும்.

அதற்காகச் சிலர் உழைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் எப்போதும் சமூகத்தால் துன்புறுத்தப்படுகிறார்கள். வில்ஹெம் ரிச் காமஉறவு சார்ந்த மின்சாரம் பற்றி ஆராய்ச்சி செய்த வர்களில் ஒருவர். அவரைப் பைத்தியம் என்று குற்றம்சாட்டி மனநல விடுதிக்கு அனுப்பிவிட்டார்கள். அவர் சித்த சுவாதீனம் இல்லாதவர் அல்ல. இந்த நூற்றாண்டின் தெளிவான மனிதர்களில் ஒருவராவார்.

மதவாதிகளும், அரசியல்வாதிகளும் எப்போதும் அஞ்சும் ரகசியத்திற்குள் புகுந்து புறப்பட முயன்றார். தனது வாழ்நாள் முழுவதும் அவர் துன்புறுத்தப்பட்டார். பலவந்தமாக அவரை மன நல விடுதியில் அடைத்தார்கள். சாதாரண மனித சமூகத்திற்குத் தெரியக்கூடாது என்று மதவாதிகளும், அரசியல்வாதிகளும் விரும்பிய புதிரான விஷயத்தினுள் அவர் ஆழமாக இறங்கி ஆராய்ந்தார். ஒரு முறை அதைத் தெரிந்துகொண்டால் மனிதன் சுதந்திரம் பெற்று விடுவான். குற்றவாளியாக்கப்பட்டு அவர் இறந்தார். பைத்தியம் என்று அறிவிக்கப்பட்டார். ஆனால் அவர் அப்படிப்பட்டவர் அல்ல.

தாந்த்ரீக யோக முறைக்கும் இதே நிலைதான். மூவாயிரம் ஆண்டுக் காலமாக அந்த அறிவியல் சிறிது சிறிதாக மேம்படுத்தப் பட்டது. ஆனால் எப்போதும் சமுதாயம் அதை அழிக்கிறது. மனிதர் களிடம் அந்த பெரிய ரகசியங்களை தெரிவித்தால் அவை அவர் களைச் சுதந்திரமானவர்களாக மாற்றிவிடும் என்ற பயம் இருந்தது.

பாலுறவு என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியாது. மதவாதிகளுக்கு தயவுசெய்து விடைகொடுத்து அனுப்பிவிடுங்கள். காமம் பற்றி இதுவரை உங்களுக்குச் சொல்லப்பட்ட முட்டாள்தன மான விஷயங்கள் அனைத்தையும் ஒதுக்கித் தள்ளுங்கள். மனம் திறந்த நிலையில் ஆய்வை புதிதாக மீண்டும் துவங்குங்கள். தீவிர மாக அதில் இறங்குங்கள். அது வழிபாடு போன்றது. மிகவும் புனிதமான விஷயங்களில் அதுவும் ஒன்று! புனிதத்திலும் புனித மானது. ஏனென்றால், காமத்தின் வழியாகவே வாழ்க்கை வந்து

சேர்கிறது. காமத்தின் வழியாகவே நீங்கள் வாழ்வின் ஆதார மையத் திற்குள் ஊடுருவிச் செல்கிறீர்கள். காமத்தில் ஆழமாகச் சென்றால் நீங்கள் தெய்விகத்தைக் காணலாம். இயற்கையின் கரங்கள் காதல் அனுபவ உலகினுள் ஆழமாக ஊடுருவி இருக்கிறது.

காமம் பற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். அதை ஒரு கலை யாக நீங்கள் பயின்று வைத்துக்கொள்ள வேண்டும். பாடுங்கள். நடனமாடுங்கள். கொண்டாடுங்கள். அது அவசரப்பட வேண்டிய ஒரு விஷயமல்ல. மோதிவிட்டுத் திரும்பிப் பார்க்காமல் ஓடும் விபத்து அல்ல. ஆனால் இன்று அது அந்த வகையில்தான் இருக் கிறது. அது உன்னதமான சமயச் சடங்கு போலிருக்க வேண்டும். அதனால்தான் தாந்த்ரீக வாழ்முறைச் சடங்குகள் தோன்றின. அதற்கு ஆயத்தமாகுங்கள். கூடுதல் உணர்வுத் துடிப்புடனும், திறந்த மன துடனும், அமைதியாகவும் இருங்கள். நீங்கள் கலவியில் ஈடுபடும் போது தெய்வ சந்நிதானத்தில் நுழைகிறீர்கள். வழிபாட்டு உணர் வுடன் இருந்தால்மட்டுமே அது இயலும். இல்லாதுபோனால் சாத்தியப்படாது.

ஆம், காமம் உங்களுடைய சில சக்திச் சுமைகளை இறக்கி வைக்கிறது. அது எளிதாக அதன் பிறகு நீங்கள் அதன் அனுசரணை யான பகுதியை இழந்து விடுகிறீர்கள். அந்த சக்தி உங்களுக்குப் ஊட்டமான பகுதியாக இருக்கும்போது அது உங்கள் சுமையையும் குறைக்கிறது. சில உயர்ந்த நிலைகளை உங்களுக்குள் உருவாக்கு கிறது. சிரமத்திலிருந்து விடுபட காமத்தைப் பயன்படுத்தும்போது, தும்மல் போலச் செயல்படும்போது அதன் தாழ்ந்த நிலையாக அது அமைகிறது.

காமத்தின் உயரிய நிலையானது, அற்புதமான படைப்பாற்றல் பெற்றது. உங்கள் உடலில் இருந்து சக்தியை வீணாக வெளியேற்றக் கூடாது. அதை உயர்நிலைகளுக்கு மறுசுழற்சிக்கு அனுப்ப வேண்டும். அது பறக்கத் துவங்குகிறது. புவியீர்ப்பு சக்திக்கு மேலே உயரத்தில் எழும்பத் தொடங்குகிறது. உங்கள் உயர்நிலைச் சக்கரங்களை அது ஊடுருவுகிறது. அது விடுவிக்கும் செயலாக மட்டுமின்றி அது பரவச மான பயணமாகும். அப்போது அந்த ஆழ்ந்த கணங்களின் இன்ப உச்சத்தில் தன்முனைப்பும், காலமும் மறைந்துபோகின்றன. ஒரு முறை அதை அறிந்துகொண்டுவிட்டால் அதன் பிறகு உங்களுக்கு காமம் ஒருபோதும் அவசியப்படாது. காமம் தனது ரகசியங்களை வெளிப்படுத்துகிறது. தங்கச் சாவியை உங்களுக்கு வழங்குகிறது.

பாலுறவுச் செயல்பாடுகளில் ஈடுபடாமலேயே நீங்கள் அந்த தங்கச் சாவியைப் பயன்படுத்தலாம். **விபாசனா** போன்ற ஆசன நிலைகளில் அமைதியாக அமர்ந்து பயன்படுத்தலாம். இப்போது நீங்கள் அமைதியாக உட்கார்ந்து தன் முனைப்பையும், காலத்தையும் மறந்து அதே உயரங்களை எட்டலாம். நீண்ட நேரம் அந்த உயரங் களில் தங்கியிருக்கலாம்.

அந்த சிகரங்களில் நீங்கள் நிரந்தரமாக வசிக்கும் நாள் வரும். அது பேரானந்தம் நிறைந்த தினமாகும். சாதாரண நிலையில் இருப்பவர் புத்தராக மாறுவார்.

இன்று இவ்வளவு போதும.

அத்தியாயம் - 4

## முதல் கேள்வி

**ஓஷோ,**

**சாதாரண மனிதர்களைப் போன்றிருந்த பிதாகோரஸால் மாபெரும் கணித மேதையாகவும் திகழ முடிந்தது.**

**இது எப்படி சாத்தியப்பட்டது?**

மனிதன் வெறுமனே பருப்பொருளால் உருவானவன் அல்ல. சூட்சுமப் பொருளால் ஆனவனும் அல்ல. அவன் இரண்டும் கலந்தவன். அதற்கும் மேம்பட்டவன். அவன் அகமாகவும் இருக்கிறான், புறமாகவும் இருக்கிறான். அவற்றையெல்லாம் கடந்தவனாகவும் இருக்கிறான். மனிதன் முப்பரிமாணம் பெற்றவன். அந்த முப்பரிமாண நிலை கிறிஸ்தவ மதத்தில் **மும்மை நிலை** என்றும், இந்து மதத்தில் **திரிமூர்த்தி**, கடவுளின் மூன்று முகங்கள் என்றும் கூறப்பட்டுள்ளது. ஒற்றைப் பரிமாணத்தில் வாழும் மனிதன் அரைகுறை வாழ்க்கையை வாழ்கிறான். அவன் ஆனந்தத்தின் முழுமையையும், அழகின் முழுமையையும் ஒருபோதும் அறிந்துகொள்வதில்லை.

அரைகுறை வாழ்க்கை வாழ்வது நோயுற்ற வாழ்க்கை போன்றது. பங்குபெற அனுமதிக்காத பகுதிகள் உங்களுடன் சண்டையிடுகின்றன. தங்களை வெளிப்படுத்திக் கொள்ள அவை விரும்புகின்றன. மறுக்கப்பட்ட பகுதி உங்களை வஞ்சம் தீர்க்கப் பார்க்கிறது. உங்கள் வாழ்வை நாசப்படுத்துகிறது. அது உங்களை நிம்மதியாக வாழ அனுமதிப்பதில்லை. சதா உள்முகப் போராட்டங்களில் இருந்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் உடலை உதாசீனப்படுத்தினால் அது சினம் கொள்கிறது. ஆன்மாவை உதாசீனப்படுத்தினால் ஆன்மா கோபப்படுகிறது. பிரிந்திருக்கும் இல்லம் முழுமை பெற்றதாக அமையாது. அது அமைதியுடன் இருக்காது. நிம்மதியாக இருக்காது.

அதனால்தான் லட்சக்கணக்கான மக்கள் துயரங்களில் ஆழ்ந்திருப்பதை நீங்கள் காண்கிறீர்கள். பிளவுபட்ட வாழ்க்கை வாழ்வதால்தான் துயரம் ஏற்படுகிறது. தங்களின் ஒரு பகுதியை மட்டுமே அவர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள். பெரும்பான்மையான பகுதியை நிராகரித்து விடுகிறார்கள். பார்க்க முடியாமல் இருக்கிறது என்பதற்காக ஒரு மரம் தனது வேர்களை நிராகரிப்பது போன்றதாகும் இது. வேர்கள் கோபப்பட்டால் மரம் நசிந்துபோய்விடத் துவங்கும். அல்லது மரம் தனது கிளைகள், மலர்கள் தளிர்களை நிராகரிப்பது போன்றதாகும். அப்படி நிராகரித்தால் மரம் அர்த்தமற்றதாகப் போய்விடும்.

மனிதன் அரைகுறை வாழ்க்கை வாழ்கிறான் முழுமையான மனிதன் உடலால் வேரோடி இருக்கிறான். அது மரம் மண்ணில் வேர் விட்டிருப்பது போன்றதாகும். வானில் மரக்கிளைகள் உயர்வது போல அவனும் மேலே உயர்கிறான். அகவானில் அவன் நுழைகிறான். அந்த இருமை நிலையில் ஆழமாக அவன் செல்ல வேண்டும். அது மூன்றாம் பரிமாணமாகும்.

முதல் பரிமாணம் எளிதாகக் காணக்கூடியது. அது பருப்பொருளால் ஆனது. அறிவியல் உலகின் கணித உலகின் நோக்குப்படி அதை அளந்திட இயலும். அடுத்தது அகஉடல். அது பார்வைக்குப் புலப்படாது. தெளிவற்றது. மேகமூட்டம் போன்றது. விந்தையானது. அது மங்கலான பிராந்தியம். இரவுக்கும், பகலுக்கும் சேராது இடைப்பட்டது. அது பருப்பொருள் மற்றும் தெய்வீக நிலையில் எல்லைகளையொட்டி அமைந்திருக்கிறது. இதுவும் அதுவுமாக இருக்கிறது எனலாம். அது ஒரு கவிதை, கலை உலகம்.

மூன்றாவது பரிமாணம் முற்றிலும் கண்ணுக்குப் புலப்படாத ஒன்று. யாரும் அதைப் பார்த்ததில்லை. பார்க்கப் போவதும் இல்லை.

அது மனிதனின் உள்நிலையாக உள்ளது. அதை பருப் பொருளாக மாற்ற முடியாது. அது உங்கள் அகநிலையாகும். அது எப்போதும் சாட்சியாக நிற்கிறது. யாரும் அதைக் கண்டுகொள்ள இயலாது. அது கண்டுணரும் காரியத்தில் ஈடுபடுகிறது. யாரும் அதைக் கண்டுணர முடியாது. அதுவே இறைமையியல் உலகமாகும். சூட்சுமமான தாகும்.

முழுமை பெற்ற ஒரு மனிதன் விஞ்ஞானியாக, கவிஞனாக, இறைமையியலாளனாக இருக்கிறான். பிதாகோரஸ் ஒரு முழுமை பெற்ற மனிதர். புனிதமான மனிதர்.

முழுமைபெற்ற மனிதன் இந்த மூன்றும் ஒன்று கலந்தவனாக இருப்பான் என்று நான் சொன்னால், அதை அப்படியே எடுத்துக் கொள்ள வேண்டாம். ஒருவன் விஞ்ஞானியாக இல்லாமல் இருக்கலாம். ஆனாலும் முழுமை பெற்றவனாக மாறமுடியும். ஆனால் அவன் அணுகுமுறை அறிவியல் பூர்வமானதாக இருக்கும். அவர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீனாக, நியூட்டனாக, எடிசனாக இருக்க வேண்டாம். புத்தர் ஒரு ஆல்பர்ட் ஐன்ஸ்டீனல்ல. ஆனாலும் அவரிடம் அறிவியல்பூர்வமான அணுகுமுறை உண்டு. அவரது அணுகுமுறைகள் முற்றிலும் விஞ்ஞானரீதியானவை. எவ்வித மூட நம்பிக்கைக்கும் இடம் கொடுப்பதில்லை. தர்க்க சாஸ்திரத்துக்கு புறம்பான அணுகுமுறையை அவர் அனுமதிப்பதில்லை. அவர் தீவிரமான தர்க்கவாதி. ஆனால் உங்களை தர்க்கரீதியானவற்றுக்கு அப்பால் அழைத்துச் செல்வார். அப்போதும் முறையான தர்க்க சாஸ்திரத்துக்கு உட்பட்டே, குறிப்பிட்ட ஒரு வழிமுறையில் படிப் படியாக அழைத்துச் செல்வார்.

புத்தர், ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் போன்ற விஞ்ஞானிகளுக்கும் மேம்பட்டவர். அதை அவர் சொற்களில் இருந்து கண்டறியலாம். "அனுபவப்பூர்வமாக நீங்கள் உணராதவரையில் நான் சொல்வது எதையும் நீங்கள் நம்பவேண்டாம்" என்கிறார். முழுமையான அறிவியல் மனோபாவம் கொண்ட ஒருவரால் மட்டுமே இவ்விதம் கூறமுடியும். "மதநூல்களில் சொல்லப்பட்டிருக்கிறது என்பதற்காக எதையும் நம்பிவிட வேண்டாம். யாருக்குத் தெரியும்? அந்த மத நூல்களிலும் தவறு இருக்கலாம். நீங்கள் ஒரு சாட்சியாக மாறாத வரையில் அந்த உண்மைகளுக்கு உத்திரவாதம் கிடையாது" என்று எடுத்துரைக்கிறார். வேதங்களில், உபநிஷதங்களில் சொல்லப் பட்டிருக்கிறது என்பதற்காக அவற்றை நம்பவோ, நம்பாதிருக்கவோ அவசியமில்லை. சோதித்துப் பாருங்கள். உணர்ந்து அனுபவித்து

அறியுங்கள்! ஒரு பரிசோதனைக் கூடமாக மாறுங்கள். உங்கள் சுய பரிசோதனைக் கூடமாக அது அமையட்டும். அவ்வாறு நீங்கள் ஒரு தீர்மானத்துக்கு வராதவரையில் எல்லா நம்பிக்கைகளும் தவறான அபிப்பிராயங்கள்தான், மூடக்கருத்துகள்தான். தர்க்கத்திற்கு உட்படாதவைகளாகவும், கண்டுணரப்படாதவைகளாகவுமே அவை இருக்கும். உண்மை என்று நாம் நம்பிக் கொண்டிருப்பவை பொய்யானவை. அனுபவப்பூர்வமாக அறிந்த உண்மைகள் முற்றிலும் மாறுபட்ட தன்மை கொண்டவை. எனவே, உண்மை என்று நாம் நம்பிக் கொண்டிருப்பவை எல்லாம் பொய்யானவை.

அறிவியல்பூர்வமான மனதின் அணுகுமுறை இதுதான்.

புத்தர் ஒரு கவிஞரோ அல்லது சாதாரண மனிதரோ அல்ல. அவர் ஒருபோதும் கவிதை எழுதியதில்லை. அவரே ஒரு கவிதையாக இருந்தார். அவரது நடைமுறைகள் கவிதை போன்றிருந்தன. வாழ்க்கை குறித்த அவரது கண்ணோட்டம் கவித்துவமானதாக இருந்தது. அவர் தனது கருணையைப் பொழிந்த விதம் கவிதை போன்று அமைந்திருந்தது. சாதாரணமான முறையில் பார்த்தால் அவர் ஒரு கவிஞர் அல்ல. ஆனால் அவர் முழுமைபெற்ற கவியாக இருந்தார். அவர் வாழ்வே ஒரு கவிதையாக அமைந்திருந்தது. தெய்வீக அருள் அவரைச் சூழ்ந்திருந்தது. சாஸ்வத அழகியலுடன் கலந்து வாழ்ந்தார். அதன்மூலம் ஒளிப்பிரகாசத்தை பூமிக்குக் கொண்டுவந்தார். மீண்டும் அப்படிப்பட்ட ஒரு சம்பவம் பூமியில் நிகழப்போவதில்லை. புத்தருக்கு முன்னரும் அப்படி நடக்கவில்லை. புத்தருக்குப்பிறகும் நடக்கப்போவதில்லை.

பூமியில் அப்படி என்ன மாறுதலைப் புத்தர் செய்தார்? அவர் பூமியில் பாதம் பதித்து நடந்தார். ஆனால் பூமிக்கு அப்பாலும் அவர் இருந்தார். அவர் உங்களைப் போலவும், என்னைப் போலவும் சாதாரண மானிட உடலையே பெற்றிருந்தார். ஆனால் அவர் உன்னதமான ஆதார மையத்திலிருந்து கிளம்பி வந்திருந்தார். அவர் அன்று பூமியில் வாழ்ந்தார். இன்றும் வாழ்கிறார். உன்னதமான ஆதார மையம் போன்றிருக்கிறார். காற்றில் இன்றும் அவரது நறுமணம் கமழ்கிறது. விழிப்புடன் இருப்பவர்கள் இன்றும் அவரது தரிசனம் பெறுகிறார்கள். அந்த தரிசனம் நித்தியமானது.

ஏசு எப்படியிருந்தாரோ அப்படியே பிதாகோரஸும் இருந்தார். அவர்கள் இருவரும் கவிகள், இறைமையியலாளர்கள், விஞ்ஞானிகள். உண்மையான மனிதன் என்பவன் முழுமையை நோக்கிச் செல்பவன் ஆவான். எனது போதனையும் அதுதான். நீங்கள் அரைகுறை

மனிதராக இருக்கவேண்டும் என்று நான் விரும்பவில்லை. நீங்கள் பொருத்தமற்றவராக இருக்க வேண்டும் என்று ஆசைப்படவில்லை. நீங்கள் வெறுமனே உடலால் அல்லது மனதால் மட்டும் வாழ்பவராக இருப்பதை நான் விரும்பவில்லை. மனிதர்கள் அவ்வாறு இருக்கவே முயல்கிறார்கள். அந்த முயற்சிகளின் காரணமாக மனிதன் தனது பிறப்புரிமையாக இருக்கும் நிலையை அடையமுடியாது போகிறது.

மனிதன் மலரவில்லை. மலர்ச்சி அடையவில்லை. அவனால் அது முடியாது. மூன்று பரிமாணங்களும் ஒன்றுசேராது போனால் ஏதோ ஒன்று தொலைந்து போகிறது. அது உங்களைச் சுற்றிச் சுற்றி அலைகிறது. நீங்கள் துயரத்தை உருவாக்கிக் கொள்கிறீர்கள்.

தொலைந்து போய்விட்ட அம்சம் உங்களை நிஜமான மகிழ்ச்சி கொள்ள அனுமதிக்காது. அந்த விடுபட்டுப் போன அம்சம், நீங்கள் வாழ்க்கைக்கு நன்றியுடையவராக இருக்க அனுமதிக்காது. வழிபாட்டு உணர்வு, நன்றி பாராட்டல், விசுவாசம் போன்ற நறுமணங்கள் கமழ அந்த விடுபட்டுப்போன அம்சம் அனுமதிக்காது. மனநிறைவு பெற்ற மனிதனால் மட்டுமே வழிபாடு செய்யமுடியும். திருப்தியடைந்த மனிதம் மட்டுமே ஆராதனை செய்யமுடியும். திருப்தியே வழிபாடாகும். திருப்தியே முழுமையான நறுமணமாகும்.

எபிக்யூரஸ் உடலால் வாழ்ந்தது போல நீங்களும் வாழுங்கள். இறைமையியலாளர்கள் மனதால் வாழ்வதற்கு எப்போதும் முயல்வதுபோல நீங்களும் முயலுங்கள். அதற்காக எபிக்யூரஸை நிராகரிக்காதீர்கள். ஜோராஸ்திரர், ஏசுநாதர் வாழ்க்கை போன்று முழுமை பெற்ற மனிதனின் வாழ்வும் எபிக்யூரஸுடனும் சம்பந்தப் பட்டிருப்பதாகக் கருதுவதே எனது கோணமாகும். கவிஞன் என்பவன் ஒரு இடைப்பட்ட நிலையாளன் ஆவான். உங்களுக்குள் இருக்கும் இறைமையியலும், அறிவியலும் சந்திக்கும் புள்ளியாக அவன் இருக்கிறான். இரண்டின் எல்லைகளிலும் கவிஞன் வாழ்கிறான். உங்கள் கவிஞரிடமும் நடனமிடச் சொல்லுங்கள், பாடச் சொல்லுங்கள், இசையை உருவாக்கச் சொல்லுங்கள். அறிவியல் பூர்வமான நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டதும், அருள், கவித்துவம் போன்றவற்றில் ஆழ்ந்திருக்கும் இறைமையியலும் சார்ந்த வாழ்வில் வேரூன்றிய இருக்கச் சொல்லுங்கள்.

பிதாகோரஸ் ஒரு முழுமைபெற்ற மனிதர். ஒவ்வொரு மனிதராலும் அது போல இருக்க முடியும்.

"சாதாரண மனிதர்கள் போல் இருந்த பிதாகோரஸ் ஒரு கணித மேதையாகவும் விளங்கினார். அது எப்படி சாத்தியம்?" என்று நீங்கள் என்னிடம் கேட்கிறீர்கள். நான் கணித மேதை அல்ல. ஆனால் நான் சொல்பவை எல்லாம் முற்றிலும் கணிதம் சார்ந்தவை. நான் தர்க்கவாதி அல்ல. ஆனால் நான் உங்களுக்குச் சொல்பவை எல்லாம் தர்க்கம் சார்ந்தவை. எனது தர்க்கம் உங்களைத் தர்க்க எல்லைகளுக்கு அப்பால் கொண்டு செல்ல உதவும். அதனால்தான் அதை "முற்றிலும் தர்க்கரீதியானது" என்று கூறுகிறேன். ஏனென்றால் தர்க்கத்திற்கு முரணானதும் தர்க்கம் போன்றே வாழ்வின் ஒரு அங்கம்தான். ஒருவர் நிஜமான தர்க்கவாதியாக இருந்தால் அவர் தர்க்கத்திற்கு முரண்படு வதையும் ஏற்றுக் கொள்வார். காரணம் அது அங்கு நிலைபெற்றிருக் கிறது. அதை நிராகரிக்க இயலாது.

தர்க்கவாதியாக இருப்பது என்றால் தர்க்க முரண்பாட்டையும் ஏற்றுக் கொள்வதாகும் என்று கொள்ளலாம். தர்க்க முரண்பாட்டிற்குத் தர்க்கம் ஒரு படிக்கட்டாக அமைகிறது. பிறகு தர்க்கம் நேசத்திற்கான படிக்கட்டாக மாறுகிறது. உங்களிடம் உள்ள அனைத்தும் பயன் படுத்தப்படுகிறது, எதுவும் நிராகரிக்கப்படவில்லை எனும்போது நீங்கள் பலவித கருவிகள் இசைக்கப்படும் ஒரு வாத்திய கோஷ்டி யாக ஆகிறீர்கள். அளவற்ற வசீகரத்தின் லயமாக மாறுகிறீர்கள். அந்த லயமே ஆன்மீகத்தின் இலக்கு ஆகும்.

## இரண்டாவது கேள்வி

**ஓஷோ,**

**சந்நியாசிகளைப் பற்றிப் பேசுவதற்கு முன்னரே, பிதாகோரஸ் பற்றி விவரிக்கப் போகிறீர்கள் என்று எளிதாக கண்டுகொண்டு விட்டேன். அதை விரும்பவும் செய்கிறேன். ஆனால், கோபம் கொள்ளாதே என்பன போன்ற சில அறிவுரைகள் கடுமையான நல்லொழுக்க விதிமுறைகள் தீவிரத்தன்மை கொண்டிருக் கின்றன. இதில் எந்த இடத்தில் நான் விடுபட்டுப் போகிறேன்?**

எப்போதும் ஒரு விஷயத்தைக் கவனத்தில் கொள்ளுங்கள். காலம் எல்லாவற்றையும் மாற்றிவிடுகிறது. மொழி, மொழியின் வழிமுறைகள்... காலம் எல்லாவற்றையும் மாற்றிவிடுகிறது. பிதாகோரஸ் திரும்பிவந்தால் அவர் பேசுவதை உங்களால் புரிந்து கொள்ள முடியாது. இப்போது நடைமுறையில் இல்லாத ஒரு மொழியில் அவர் பேசுவார். அவரால் புரிந்துகொள்ள முடியாத ஒரு

மொழியில் நீங்கள் பேசுவீர்கள். இருபத்தைந்து நூற்றாண்டுக் கால இடைவெளி ஏற்பட்டுவிடும். இருபத்தைந்து நூற்றாண்டு என்பது மிக நீண்ட காலம். உண்மையில், இரண்டு வெவ்வேறு தலைமுறைகளின் காரணமாக இந்த இடைவெளி உருவாகிறது. உங்கள் தகப்பனாருக்கும் உங்களுக்கும் இடையே இடைவெளி இருக்கிறது. அந்த இடைவெளியை இணைக்க முடியாது என்று ஜனங்கள் நினைக்கிறார்கள்.

பெற்றோரின் கருத்துப்படி நடப்பதை கிட்டத்தட்ட முடியாத ஒரு செயல் என்று பிள்ளைகள் நினைக்கிறார்கள். அந்த இடைவெளி அதிகமில்லை. சுமார் இருபது வருட அளவுள்ளதுதான். இருபது அல்லது இருபத்தைந்தாக இருந்தாலும் கருத்தையொட்டி நடப்பது இயலாத ஒன்று என்று பிள்ளைகள் கருதுகிறார்கள். பிள்ளைகளின் எண்ணப்படி நடப்பது சாத்தியப்படாது என்று பெற்றோரும் கருதுகிறார்கள். இருபத்தைந்து வருடங்களில் உலகம் நிறையவே மாறி விட்டது. இருபத்தைந்து நூற்றாண்டுகள் என்றால் சொல்ல என்ன இருக்கிறது ?

அதனால்தான் பிதாகோரஸ் சொன்னதன் அர்த்தம் என்ன என்பதை உங்களுக்கு ஒருவர் எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அதனால் நான் பிதாகோரஸ் குறித்துப் பேசுகிறேன். இருபத்தைந்து நூற்றாண்டுக் காலத்து இடைவெளியை நிரப்பிட இயலும். அதனால் பிதாகோரஸ் உங்கள் மத்தியில் வாழும் சக்தியாக மீண்டும் உருவெடுக்க இயலும். நீங்கள் நேரடியாகப் பிதாகோரஸைப் புரிந்துகொள்ள முயன்றால் உங்கள் எதுவும் முடியாது. உலகில் இருந்து மறைந்துபோய்விட்ட ஒரு பாஷையில் அவர் பேசுகிறார். அது பதஞ்சலியின் பாஷை. மகாவீரரின் பாஷை. பதஞ்சலியும், மகாவீரரும் ஃபிராய்டின் கோட்பாட்டுக் காலத்துக்கு முந்தையவர்கள். அவர்கள் சொற்களை முற்றிலும் வித்தியாசமான வழியில் பயன்படுத்துகிறார்கள். ஃபிராய்டு பற்றி அவர்களுக்கு எதுவும் தெரியாது. பிதாகோரஸும் அதே வகையில்தான் மொழியைப் பயன்படுத்துகிறார். எனவே நீங்கள் சிறிது பொறுமை காக்க வேண்டும்.

கோபப்பட வேண்டாம் என்று அவர் சொன்னால், **அடக்கி வைத்தல்** என்ற பொருளில் நீங்கள் அதைப் புரிந்துகொள்ளக் கூடாது. கோபப்படாதீர் என்று சொல்வது கோபத்தை அடக்கி வையுங்கள் என்ற அர்ததத்தில் அவர் சொன்னதல்ல. கோபத்தை வெல்லுங்கள் என்று உங்களிடம் அவர் கூறுகிறார். அவை

இரண்டுக்கும் நிறைய வித்தியாசம் உள்ளன. வித்தியாசம் மட்டு மல்ல, அடிப்படையில் மாறுபட்ட பொருளும் கொண்டவை.

கோபப்படாதிருக்க நீங்கள் முயன்றால் சினத்தை உள்ளே அடக்கி வைத்தவராகிறீர்கள். கோபத்தை வெற்றிகொள்ள முயன்றால் அதை அடக்கி வைப்பதில்லை. அதற்கு மாறாக, நீங்கள் கோபத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். கோபத்தைக் கவனிக்கவேண்டும். அவ்வாறு கவனிப்பதே வெற்றி கொள்ளலாகும்.

நீங்கள் கோபத்தை அடக்கினால் அது உங்கள் ஆழ்மனதிற்குச் சென்றுவிடுகிறது. நீங்கள் மேலும் மேலும் விஷமாக மாறுகிறீர்கள். அது நல்லதல்ல. ஆரோக்கியமானதல்ல. விரைவிலோ அல்லது மெதுவாகவோ அது உங்களை மனநோயில் ஆழ்த்திவிடும். ஒருநாள் உள்ளே சேகரமாகியிருக்கும் கோபம் வெடிக்கும். அது மிகவும் ஆபத்தானது. காரணம், அது உங்களால் முற்றிலும் கட்டுப்படுத்த முடியாத ஒன்றாக மாறிவிடும். தினமும் சிறிய அளவில் கோபப் பட்டு அதை முடிவுக்குக் கொண்டு வந்துவிடுவது எவ்வளவோ தேவலாம். அந்த சிறிய கோபம் ஹோமியோபதி மருந்து உருண் டைகள் போன்றவை. உங்களுக்கு கோபம் ஏற்படும்போது கோபப் பட்டு விடுங்கள். வருடக் கணக்கில் உள்ளே கோபத்தை அடக்கி வைத்து ஒருநாள் சட்டென்று வெளிப்படுவதைக் காட்டிலும் அது ஆரோக்கியமானதுதான். அப்படி கோபம் வெளிப்படும்போது அது அளவுக்கு அதிகமானதாக இருக்கும். அப்போது என்ன செய்கிறோம் என்ற சுயநினைவே உங்களுக்கு இருக்காது. சுத்தமாகப் பித்துப் பிடித்தவர் போலாகி விடுகிறீர்கள். உங்களுக்கோ அல்லது பிறருக்கு பெருமளவு தீங்கு விளைவிக்கும் செயலை நீங்கள் செய்துவிடக் கூடும். மற்றவர்களை நீங்கள் கொன்றுவிடக் கூடும், அல்லது தற் கொலையில் இறங்கிவிடவும் செய்யலாம்.

கோபத்தை அடக்கிவைக்குமாறு பிதாகோரஸ் சொல்ல வில்லை. அதை அடக்கிவைக்கும்படி ஞானம்பெற்ற எந்த ஒருவரும் சொல்லமாட்டார். அதை வெற்றிகொண்டு கடந்து அப்பால் செல்லுமாறு கூறுகிறார். வெற்றிகொள்ளல் என்பது முற்றிலும் மாறுபட்ட ஒரு செயல்பாடு. வெற்றி கொள்ளும்போது அதை நீங்கள் அடக்கி வைப்பதும் இல்லை. வெளிப்படுத்துவதும் இல்லை. கோபத்தைச் செயல்படுத்த உங்களுக்கு இரண்டு வழிகள் தான் தெரியும். ஒன்று வெளிப்படுத்துவீர்கள், அல்லது அடக்கி வைப்பீர்கள். அதன் செயல்பாட்டுக்கான சரியான வழிமுறைகள் அந்த இரண்டும் அல்ல. கோபத்தை வெளிப்படுத்துவதும் சரியல்ல.

காரணம், கோபத்தைக் காட்டினால் அது மற்றவர்களிடமும் கோபத்தை ஏற்படுத்துகிறது. பிறகு அது ஒரு தொடர் சங்கிலியாக மாறிவிடுகிறது. மற்றவர்கள் கோபத்தை வெளிப்படுத்தும்போது நீங்கள் மீண்டும் தூண்டப்படுகிறீர்கள்... பிறகு அதற்கு முடிவு ஏது? கோபத்தை வெளிப்படுத்தும் அளவுக்கு அது ஒரு பழக்கமாகவே மாறிவிடுகிறது. இயந்திரத்தனமான பழக்கமாகி விடுகிறது. கோபத்தை வெளிப்படுத்தும் அளவுக்கு கோபத்தில் நீங்கள் பயிற்சி பெற்றுவிடுகிறீர்கள். பின்னர் அதிலிருந்து நீங்கள் விடுபடுவது சிரமமாகிவிடும்.

இந்தப் பயத்திலிருந்து கோபத்தை அடக்கிக் கொள்தல் தலை தூக்குகிறது. கோபத்தை வெளிப்படுத்தக் கூடாது. ஏனென்றால், அது உங்களுக்கு பெரிய அளவு துயரத்தைக் கொண்டுவருகிறது. எந்த நோக்கமும் இன்றி மற்றவர்களுக்கும் சினத்தை வரவழைக்கிறது. அது உங்களை அசிங்கப்படுத்துகிறது. வாழ்க்கைச் சூழல்களை அவலட்சணப்படுத்துகிறது. நீங்கள் அதற்கு விலை கொடுத்தாக வேண்டும். மெல்ல மெல்ல அது ஒரு பழக்கமாகிவிடுகிறது. அது உங்கள் இரண்டாவது இயல்பாகி விடுகிறது. கோபத்தை வெளிப் படுத்த அச்சப்படும்போது அதை அடக்கிவைக்கும் குணம் தலை யெடுக்கிறது. கோபத்தை அடக்கினால் நச்சுக் குணத்தை அதிகப் படுத்திக் கொள்கிறீர்கள். அது வெடிக்கும் நிலைக்குப் போகிறது.

உலகின் ஞானம் பெற்ற மனிதர்களின் மூன்றாவது அணுகு முறை கோபத்தை வெளிப்படுத்துவதோ அல்லது அடுக்குவதோ அல்ல. அதைக் கவனிப்பதே ஆகும். கோபம் வரும்போது அமைதி யாக உட்கார்ந்து அது உங்கள் அகஉலகைச் சூழ்ந்துகொள்ள அனுமதியுங்கள். மேகங்கள் உங்களைச் சூழ்ந்துகொள்ளட்டும். அமைதியான ஒரு பார்வையாளராக இருங்கள். இதுதான் கோபம் என்று கண்டறியுங்கள்.

“கோபம் தலையெடுக்கும்போது அதனைக் கவனியுங்கள். அது தரும் செய்தியைக் கவனியுங்கள்” என்று புத்தர் தனது சீடர் களுக்குச் சொன்னார். கோபம் கோபம் என்று சொல்லிக்கொண்டே இருக்கிறீர்கள் என்பதை மீண்டும் மீண்டும் நினைவில் கொள் ளுங்கள். விழிப்புடன் இருங்கள். உறங்கிப் போய்விடாதீர்கள். கோபம் உங்களைச் சூழ்ந்திருக்கிறது என்ற விழிப்புடன் இருங்கள். கோபமாக நீங்கள் மாறிவிடவில்லை. அதை வேடிக்கை பார்ப் பவராக இருக்கிறீர்கள். திறவுகோல் எங்குள்ளது என்று அறிய வழி அதுதான்.

மெல்லமெல்ல அதைக் கவனிக்கத் தொடங்கும்போது முற்றிலும் அதிலிருந்து விலகத் துவங்கிவிடுகிறீர்கள். அது உங்களைப் பாதிப்பதில்லை. அதிலிருந்து பெரிதும் விடுபட்டுப் போகிறீர்கள். பெருமளவு தனித்துப் போகிறீர்கள். மிகவும் சாந்தமாகி விடுகிறீர்கள். வெகுதூரம் விலகிவிடுகிறீர்கள். அந்த தூரம் எவ்வளவு என்பது முக்கியமல்ல. கோபத்தின்போது கடந்த காலத்தில் செய்த கோமாளித் தனங்களை நினைத்துச் சிரிக்கிறீர்கள். அது நீங்கள் அல்ல. கோபம் உங்களுக்கு வெளியே இருக்கிறது. உங்களைச் சூழ்ந்து கிடக்கிறது. உங்களை அதனுடன் அடையாளப்படுத்திக் கொள்ளாது போகும் போது, உங்கள் சக்தியை அதன்மீது பொழிவதில்லை.

நமது சக்தியைக் கோபத்தின்மீது பொழிந்துவிடுகிறோம் என்பது நினைவிருக்கட்டும். அதன் பிறகுதான் அது முக்கியத்துவம் பெற்றுவிடுகிறது. அதற்குச் சுயஆற்றல் கிடையாது. அது உங்கள் ஒத்துழைப்பைச் சார்ந்து நிற்கிறது. தள்ளி நின்று கவனிக்கும்போது ஒத்துழைப்பு அறுபட்டுப் போகிறது. அதன்பிறகு நீங்கள் கோபத் துக்கு ஆதரவு தருவதில்லை. அது அங்கே சில கணங்கள் மட்டுமே நிற்கிறது. பின்னர் அகன்று விடுகிறது. அதன் வேர்களை உங்களுக்குள் காணமுடியாது போகிறது. கோபத்தின் வசப்படாதவராக, வெகு தொலைவில் குன்றுகளின்மீது இருந்துகொண்டு வேடிக்கை பார்ப்பவராக இருப்பதைக் காண்கிறீர்கள். கோபம் சிதறடிக்கப் படுகிறது, அது காணாமல் போகிறது. அந்த காணாமல் போதல் அழகானது. அந்த காணாமல் போதல் ஒரு சிறந்த அனுபவம்.

கோபம் மறைவதைப் பார்க்கும்போது பெரிய நிம்மதி எழுகிறது. புயலுக்குப் பிறகு அமைதி வருகிறது. கோபம் எழும் போதெல்லாம் அதை வேடிக்கை பார்க்க முடிவதை எண்ணி நீங்கள் வியப்படைவீர்கள். இதுவரை அறிந்திராத நிம்மதியை அடைவீர்கள். ஆழ்ந்த தியானம் போன்ற நிலைக்குள் அமிழ்வீர்கள். கோபம் மறையும்போது நீங்கள் மிகவும் புத்துணர்ச்சி பெறுவீர்கள். மிகவும் இளமையாக, மிகவும் கபடமற்றவராக உணர்வீர்கள். அதுபோன்ற அனுபவத்தை முன்னர் ஒருபோதும் பெற்றதில்லை. எனவே, கோபத்திற்கும் நீங்கள் நன்றியுடையவராக இருப்பீர்கள். அதன் மீது உங்களுக்கும் கோபம் இல்லை. காரணம், நீங்கள் வாழ்வதற்கு ஒரு புதிய காலத்தை முற்றிலும் புதிய அனுபவத்தைப் பெறுகிறீர்கள். நீங்கள் அதை பயன்படுத்திக் கொண்டீர்கள். அதை ஒரு படிக்கட்டாக மாற்றிக் கொண்டீர்கள்.

எதிர்மறை உணர்ச்சிகளைப் படைப்பாற்றலாக மாற்றிக் கொள்வது இவ்வாறுதான். பிதாகோரஸ் சொன்னது இதைத்தான்.

மொழிகளின் இயல்பு மாறிக் கொண்டிருக்கிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

அழகான காட்டுக் குதிரைக் குட்டியொன்று வனத்தில் தனது பாட்டியைத் தேடிச் சென்று கொண்டிருந்தது. திடீரென்று ஒரு மரத்தின் பின்னாலிருந்து ஓநாய் வெளிப்பட்டது.

"ஆஹா ஹா! உன்னை மடக்கிப் பிடித்துவிட்டேன். இப்போதே தின்னப் போகிறேன்" என்றது ஓநாய்.

"சாப்பிடு, சாப்பிடு. முட்டாளே! இனி யாரும் உன்னிடம் அன்பு காட்ட மாட்டார்கள்" என்று கோபத்துடன் கூறியது குதிரைக் குட்டி. 'லவ்' என்ற சொல்லுக்கு பாலுறவு என்று தப்பர்த்தப்படுத்திக் கொண்டது ஓநாய்.

மொழிகள் மாறிக்கொண்டிருக்கின்றன. உருவக அணிகள் மாறிக் கொண்டிருக்கின்றன. குறியீடுகள் மாறிவருகின்றன. ஒரு வார்த்தையைப் பயன்படுத்தும்போது அதன் அர்த்தம் முற்றிலும் மாறிப் போகிறது.

ஒரு ஆணும் பெண்ணும் கூட்டம் ஒன்று நடந்தபோது சந்தித்துக் கொண்டனர். தற்செயலாக இருவரும் ஹோட்டல் ஒன்றில் ஒரே அறையில் தங்க நேர்ந்தது. இருவரும் விபரமானவர்கள். இந்த ஜனக்கும்பல் சூழ்நிலையைச் சமாளிப்பது சிரமமான செயல் என்று தெரிந்திருந்ததால் வருவதைப் புத்திசாலித்தனமாக எதிர்கொள்வதே நல்லது என்று தீர்மானித்தார்கள்.

இருவரும் ஒரே கட்டிலில் படுத்துக்கொண்டார்கள். துணி மணிகள் வைக்க ஒரே அலமாரியைப் பயன்படுத்தினார்கள். மற்ற விஷயங்களில் ஒருவரைஒருவர் கண்ணியமாக ஒதுங்கியிருந்து கொண்டு சமாளித்தார்கள்.

இரண்டாம் நாள் இரவில் குளிர் கடுமையாக இருந்ததைப் பெண்மணியால் பொறுக்கஇயலவில்லை. நடுங்கி உறைந்து போனாள். பிறகு தயக்கத்தோடு, "நீங்கள் நல்லவராக இருப்பதால், அலமாரியிலுள்ள போர்வையை எடுத்துத் தர முடியுமா?" என்று வேண்டினாள்.

அருகில் படுத்து உறங்கிக் கொண்டிருந்த அவன், "நட்புணர்வோடு இதை நீங்கள் கேட்கிறீர்கள். ஒரே அறையில் நாம் இருந்தாலும், கணவன் மனைவி போல எப்படி நடக்க இயலும்?" என்றான்.

அந்தப் பெண் களுக்கென்று சிரித்தாள். "எனக்கு அதில் விருப்பம் இருக்குமென்று தோன்றுகிறது" என்றாள்.

அதற்கு அவன், "நல்லது! அப்படியானால் எனது மனைவி என்றால், உனது ஒட்டுப்போட்ட போர்வையை நீயே எடுத்துக் கொள். என்னை நிம்மதியாக இருக்க விடு" என்றான்.

இருபத்தைந்து நூற்றாண்டுகள் கடந்த பின்னரும் பிதாகோரஸ் என்ன சொன்னார் என்பதை நேரடியாக உங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. உங்களுக்கு ஒருவர் தேவைப்படுகிறது. உங்களுடன் நிகழ்காலத்தில் வாழும் அவர், நித்தியத்துவத்துடன் பிதாகோர ஸுக்கும் சமகாலத்தவராக இருக்க வேண்டியுள்ளது. அப்போதுதான் அந்த உருவகங்கள் புதிய நிறம் பெறும். அந்த உருவகங்களுக்குப் புதிய அர்த்தம் கிடைக்கும்.

குறிப்பாக, அதனால்தான் கிழக்கு நாடுகளில் காலங்காலமாக ஞானம் பெற்ற மனிதர்கள் பற்றி அவரையடுத்து வரும் ஞான வான்கள் விளக்கம் தருகிறார்கள். அதன் அடிப்படைக் காரணம் இதுதான்.

கிருஷ்ணரைப் பற்றி சங்கரர் விளக்குகிறார். உபநிஷதங் களிலும், பிரம்ம சூத்திரத்திலும் எடுததுரைக்கிறார். பழங்கால ஞானிகள் குறித்து ராமானுஜர் பேசுகிறார். வல்லபரும் அவ்விதமே செய்கிறார். கிழக்குநாடுகளில் எப்போதும் இவ்வாறுதான் நடக்கிறது. காலம் கடந்து செல்லும்போது நிறையத் தூசு படிந்து விடுகிறது. இப்போது முற்றிலும் புதிய உலகில் இருந்தபடி உப நிஷதங்கள் எழுதப்படுகின்றன. அந்த மனிதர் மறைந்துவிட்டார். அந்த மனம் அகன்றுவிட்டது. அந்த உலகம் இப்போது இல்லை.

சில உபநிஷத விரும்பிகள் உங்களைக் காண வரலாம். நீங்கள் முற்றிலும் திகைத்துப் போவீர்கள். நாளந்தா, தட்சசீலம், மற்றும் பிதாகோரஸின் கல்விச்சாலை போன்ற பழங்கால மடாலயங்களுக்கு நீங்கள் சென்று பார்க்க நேரிட்டால் அங்கு என்ன நடக்கிறது என்று உங்களால் புரிந்துகொள்ள முடியாது! காரணம், நான் மொழிகளின் வழியாகவே புரிந்துகொள்கிறோம். மௌனத்தின் வழியாகப் புரிந்து கொள்ளாத வரையில் எதுவும் பிடிபடாது. மௌனம் நித்தியமானது. அது மாற்றமில்லாதது. காரணம், அது மானிட உலகின் ஒரு அங்க மல்ல. நீங்கள் ஆழ்ந்த மௌனத்தில் இறங்கும்போதுதான் உங்களால் பிதாகோரஸைப் புரிந்துகொள்ள முடியும். அந்த மௌனத்தில் அவருடன் நீங்கள் ஒருங்கிணைவீர்கள். அவர் உங்களுடன் ஒருங்

கிணைவார். அவ்வாறில்லாது போனால் நீங்கள் சங்கடங்களை எதிர் கொள்வீர்கள்.

என்னால் உங்கள் பிரச்சினையைப் புரிந்துகொள்ள முடிகிறது. "சந்நியாசிகளைப் பற்றி பேசத் தொடங்குவதற்கு முன்னரே நீங்கள் பிதாகோரஸ் பற்றித்தான் சொல்லப் போகிறீர்கள் என்று என்னால் கண்டுகொள்ள முடிகிறது" என்று கூறுகிறீர்கள். காரணம், நீங்கள் ஒரு ஒடுக்கப்பட்ட சமுதாயத்தில் வளர்க்கப்பட்டிருக்கிறீர்கள். கிறிஸ்தவம், இந்து மதம், ஜைனமதம் என்பதெல்லாம் ஒரு பொருட்டே அல்ல. நீங்கள் ஒரு ஒடுக்கப்பட்ட சமுதாயத்தால் வளர்க்கப்பட்டிருக்கிறீர்கள். அதனால்தான் சந்நியாசிகள் பற்றிப் பேசுவதற்கு முன்னர், என்னைச் சந்திப்பதற்குமுன்பே, பிதா கோரஸைப் புரிந்துகொண்டுவிட்டீர்கள். ஆனால் நான் சொல் கிறேன். நீங்கள் தவறாகப் புரிந்துகொண்டிருக்கிறீர்கள். சரியாகப் புரிந்து கொள்ளவில்லை.

உங்கள் பெற்றோர் உங்களுக்குக் கற்றுத் தந்தது போல உணர்வு களை அடக்கிக்கொள்வது பற்றி அவர் போதித்தார் என்று எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். ரோமிலோ, காண்டர்பரியிலோ, மெக்காவிலோ உள்ள மதகுருக்கள்போலவே அவரும் இருந்தார் என்று நீங்கள் எண்ணுகிறீர்கள். அவர்கள் எல்லோரும் உணர்ச்சிகளை அடக்கி வைப்பவர்கள்.

மதகுருக்கள் எல்லாம் தீவிரமான கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டவர்கள். ஞானம் பெற்ற மனிதரால் மட்டுமே உங்களுக்கு விடுதலை தரமுடியும். ஏனென்றால், அவருக்கு அடிமைகள் தேவை யில்லை. மதகுருக்களுக்கு அடிமைகள் தேவை. அவர்களால் உங்களுக்கு விடுதலை தரமுடியாது. அவர்கள் உங்களை பெரிய அளவில் கைதிகளாக்குகிறார்கள்.

இது ஒரு மனோதத்துவ சாதனம். இயற்கை உணர்வுகளை அடக்கி வைத்தால் நீங்கள் கைதியாகவே இருப்பீர்கள். நீங்கள் எப்போதும் அதிக நோயுற்று இருப்பீர்கள். எப்போதும் உங்களுக்கு மற்றவர் ஆதரவு தேவை. நீங்கள் பேதமையுடன் இருப்பீர்கள். மற்றவர்களின் வழிகாட்டல் அவசியமாகிறது. உங்களுக்குத் தலைவர்கள் தேவைப்படுகிறார்கள்.

"நான் சந்நியாசிகளைப் பற்றிப் பேசுவதற்கு முன்னரே பிதாகோரஸ் பற்றித்தான் சொல்லவிருக்கிறேன் என்று எளிதாகக் கண்டு கொண்டுவிட்டதாகச் சொன்னீர்கள்." அது நிஜமான ஒருங்கிணைதல்

அல்ல. அது பொய்யானது. இப்போது நீங்கள் விவரிக்கலாம். காரணம், மற்றொரு பிதாகோரஸுடன் மீண்டும் இருக்கிறீர்கள். ஆனால் இப்போது நீங்கள் இடையூறுகளை உணர்கிறீர்கள். நான் இன்னும் விரும்பவே செய்கிறேன். ஆனால் சில விஷயங்களில் கட்டுப்பாடும், சட்டதிட்டங்களும் கடுமையாக இருக்கின்றன. 'கோபப்படாதே' என்பன போன்ற அறிவுரைகள் தீவிரமானவை. நான் எங்கே விடுபட்டுப் போகிறேன்?" என்று கேட்கிறீர்கள்.

நீங்கள் விடுபட்டுத்தான் போகிறீர்கள். இருபத்தைந்து நூற்றாண்டுக் கால இடைவெளி மிகப்பெரிய ஒரு இடைவெளி என்பதை நீங்கள் மறந்துபோய்விட்டீர்கள். நீங்கள் பிதாகோரஸ் மறுபிறவி எடுக்கவேண்டும் என்று விரும்புகிறீர்கள். அவரைப் பற்றி விளக்கிச் சொல்வதன் மூலம் நான் அதைத்தான் செய்து கொண் டிருக்கிறேன். அது அவர் சொற்களுக்குப் புதிய அர்த்தம் தருகிறது. வார்த்தைகளுக்குப் புதிய வடிவம் தருகிறது. அந்த வார்த்தைகள் உங்களுக்குப் புரிகின்றன. அந்த வார்த்தைகள் உங்களுக்கு சரி யானவை என்று தோன்றுகின்றன. அந்த வார்த்தைகளுடன் சம்பந்தப் பட முடிகிறது.

நகரிலிருந்து தொலைதூரத்தில் அந்த பயணிகள் தங்கும் விடுதி அமைந்திருந்தது. வளர்ச்சியடையாத பிரதேசத்தில் அது இருந்தது. அதன் வாசல் முகப்பில், "வாடகைக்கு அறைகள் கிடைக்கும். உணவு வசதி உண்டு. கிராமியச் சூழலை அனுபவியுங்கள்" என்று எழுதப்பட்ட அறிவிப்புப் பலகை தொங்கியது. அந்த விடுதி நவீன வசதிகள் கொண்டதல்ல என்றாலும், ஒருநாள் இரவு வேளையில் பளபளக்கும் கருப்புநிற கெடிலாக் சொகுசுக் கார் ஒன்று முகப்பு அருகே வந்து நின்றது. காரின் உரிமையாளர்கள் வழிதவறிப் போய் விட்டதால் இரவை அங்கு கழிக்க வேண்டியவர்களாக இருந்தனர்.

அந்த மனிதரும் அவர் மனைவியும் பெரிய நகரத்தில் வாழ்பவர்கள். நாகரீகமான உடை உடுத்தியிருந்தார்கள். இந்த உலகமே தங்களுக்குச் சொந்தம் என்பது போன்ற மதர்ப்புடன் இருவரும் காரிலிருந்து இறங்கினார்கள். கிராம வாழ்க்கை மீது வெறுப்புக் கொண்டிருந்தாலும், ஒரு இரவு தங்கியிருந்தாக வேண்டுமே என்று நினைத்தார்கள். அங்கே தங்குவதற்கு இஷ்டப் பட்டது போல பெயருக்குப் பாவனை செய்யவும் இல்லை. இதெல்லாம் அவர்களுக்கு ஒரு பொருட்டே அல்ல.

வரவேற்பு அறையில் இருந்தவரிடம் பெயர்களைப் பதிவு செய்துகொண்ட பிறகு அந்தத் தம்பதியர் விடுதியின் உணவுக்

கூடத்தில் நுழைந்தார்கள். அங்கு இருந்த எளிமையான உணவுப் பட்டியலை ஒதுக்கித் தள்ளிவிட்டு ஒரு டாலரை எடுத்து வைத்து விட்டு, எங்களுக்கு உணவு, குடிப்பதற்குப் பானம், மற்றும் பொழுது போக்குக் கேளிக்கைக்கும் ஏற்பாடு செய்" என்றார் அந்த மனிதர்.

சில நிமிடங்களுக்குப் பிறகு விடுதிக் காப்பாளர் இரண்டு துண்டு முலாம் பழங்களுடன் வந்தார். "நீங்கள் கொடுத்த காசுக்கு உணவும், பானமும், கேளிக்கையும் வேண்டும் என்கிறீர்கள் அல்லவா? இதோ இருக்கின்றன. முலாம்பழத்தின் சதைப் பற்றைச் சாப்பிடுங்கள். சாற்றை அருந்துங்கள். பழத்தின் விதைகளை வைத்துக் கொண்டு விளையாடுங்கள்" என்றான்.

**மூன்றாவது கேள்வி**

**ஓஷோ,**

**எவ்வகைப்பட்ட நுண்ணறிவுகள் நமது கடந்தகாலத்தை உதறித்தள்ளவும், அதை மனதில் பூட்டிவைத்து அடக்கிக் கொள்ளாமலும் இருக்க அனுமதிக்கின்றன?**

நிறைய நுண்ணறிவுகள் தேவையில்லை. ஒற்றை நுண்ணறிவே உங்கள் கடந்த காலத்தை உதறிடப் போதுமானது. "கடந்த காலத்தை உதறிட அனுமதிக்கின்றன" என்று நீங்கள் சொல்வது சரியல்ல. ஒரு நுண்ணறிவு போதும். கடந்த காலம் தானே அகன்று போகும். நீங்கள் உதறித் தள்ள வேண்டாம்.

அந்த ஒற்றை நுண்ணறிவு எது? கடந்த காலம் என்பது இல்லை. நிகழ்காலம் மட்டுமே இருக்கிறது என்ற புரிதலே அந்த நுண்ணறிவாகும். எளிமையாக வாழ்தல் என்பது நிகழ்காலத்தில் வாழ்தலாகும். வாழ்வதற்கு அதுதவிர வேறு வழியில்லை. இருக்கவும் முடியாது. கடந்த காலம் என்பது இனி இல்லை. எதிர் காலம் இன்னும் வந்து சேரவில்லை. இரண்டும் உயிருடன் இல்லை. உயிருடன் இல்லாத ஒன்றைப் பிடித்துக் கொண்டு தொங்குவது முட்டாள்தனம்.

கடந்த காலம் என்பது நினைவுப் பதிவு. எதிர்காலம் என்பது கற்பனை நிலை. கடந்தகாலம், எதிர்காலம் என்ற இரண்டு அரக்கர் களுக்கு நடுவே வழிதவறி நிகழ்காலம் கிடக்கிறது. மற்ற இரண்டும் உங்களை ஏமாற்றப் பார்க்கின்றன. அவை பிறர் ரத்தத்தை உறிஞ்சி வாழும் ஒட்டுண்ணிகள். அவை பேய்கள். அவை உயிருடன்

இல்லை. உங்களுக்கு நிகழ்காலம் பற்றிய விழிப்புணர்வு இல்லாது போனால் அவை உயிர்பெற்று வெளிப்படலாம்.

பழங்காலக் கிரேக்க மொழியில் கடவுள் என்ற சொல்லுக்கு நிகழ்காலம் என்றுதான் அர்த்தம் என்பதை அறிந்தால் நீங்கள் வியந்து போவீர்கள். G என்றால், அது ; O என்றால், எது ?; D என்றால் இது ; எனவே GOD என்ற பழைய சொல்லுக்கு நிகழ்காலம் என்பதே பொருளாகும்.

கடவுள் என்பது ஒரு நபர் அல்ல. அதுவாக, எதுவாக, இதுவாக இருக்கிறார். இங்கே, இந்தக் கணத்தில், கடவுள் காட்சி தருகிறார். கடவுளைக் கடந்த காலத்தில் காணமுடியாது. கடவுளை எதிர்காலத்திலும் காணமுடியாது. கடவுள் எப்போது நிகழ்காலத்தில் இருந்து வருகிறார், இருந்தார், இருப்பார் என்று வார்த்தைகளாகக் கடவுளுடன் தொடர்புபடுத்திப் பேசவேண்டாம். கடவுள் இருந்தார் என்று நீங்கள் சொல்ல முடியாது. அது முற்றிலும் முட்டாள்தன மானது. கடவுள் இருக்கப் போகிறார் என்று நீங்கள் சொல்ல இயலாது. அது மீண்டும் சர்வ முட்டாள்தனம். கடவுள் இருக்கிறார் என்ற சொல்லை மட்டும்தான் நீங்கள் பயன்படுத்த முடியும். கடவுள் இருக்கிறார் என்று கூறுவது, சொன்னதை மறுபடியும் வேறுவிதமாகச் சொல்வது போன்றதாகும். அது கூறியது கூறலாகும். கடவுள் என்பது நிகழ்காலம் ஆகும். கடவுள் இருக்கிறார் என்று நீங்கள் சொல்ல முடியாது. இருப்பின் மற்றொரு பெயர்தான் கடவுள். அதுவாக, எதுவாக அவர் இருக்கிறார்.

நிகழ்காலத்துடன் இணைந்திருத்தல் என்ற ஒற்றை நுண்ணறிவு என்பது ஆழ்ந்து சிந்தித்தல் ஆகும். எது என்று வினவப்படும் அதனுடன் இணைந்திருத்தல் என்பது எண்ணங்களில் இருந்து முழுமையாக விடுபடுதலாகும். கடந்த காலமாக இருந்தாலும், எதிர் காலமாக இருந்தாலும் எண்ணங்களின் வழியாகவே அவை உயிர் பெறுகின்றன. அதை நினைவு என்று சொல்லுங்கள், கற்பனை என்று சொல்லுங்கள். எப்படியிருந்தாலும் அவை எல்லாம் எண்ணங்கள். எண்ணங்களின் வடிவங்கள்.

எண்ணங்களற்ற நிலையுடன் அமைந்த விழிப்புடன் இருங்கள்.... வானத்து மின்னல்போல, கத்தியின் வேகமான வீச்சு போல கடந்தகாலம் என்பது நிரந்தரமாக மறைந்துவிடுகிறது. எதிர் காலமும் அப்படித்தான். அந்தக் கணம்தான் விடுதலை கிடைக்கிறது.

அது ஒரு ஒற்றை நுண்ணறிவு. அது சடோரி. அது சமாதி. பல நுண்ணறிவுகள் அதற்குத் தேவை இல்லை. அது வாளின்

வேகமான வீச்சு. அதை இப்போதே நீங்கள் பெறலாம். இல்லா விட்டால் நீங்கள் வேறுவிதமாக முடிவெடுக்கலாம்.

இந்தக் கணத்தில் கடவுள் எங்கும், எல்லா இடங்களிலும் இருக்கிறார். கடவுள் மட்டுமே இருக்கிறார். இந்த அமைதியை அனுபவியுங்கள். அந்த அமைதி உங்கள் இதயத்தின் ஆழத்தில் ஊடுருவ அனுமதியுங்கள். அது உள்ளே சென்று பரவட்டும். உங்கள் இதயத்துடன் சேர்ந்து துடிக்கட்டும். அது உங்கள் சுவாசமாகட்டும், உயிராகட்டும். அந்த கடந்த காலம் எங்கே இருக்கிறது? அது தானாக மறைந்து போய்விட்டது.

அதை உதற அவசியமில்லை. நீங்கள் விளக்கைக் கொண்டு வந்ததும் இருள் அகல்வதுபோல அது அகன்றுவிட்டது. மெல்ல மெல்ல அல்ல. கொஞ்சம் கொஞ்சமாக அல்ல. படிப்படியாக மறையவில்லை. இருண்ட அறையில் நீங்கள் ஒரு மெழுகுவர்த்தியை ஏற்றினால், படிப்படியாக, மெல்ல மெல்ல இருள் அகல்வதில்லை. போக விருப்பமில்லை என்று மறுப்பதில்லை. சட்டென்று இருள் காணாமல் போய்விடுகிறது.

மெழுகுவர்த்தி கொளுத்தப்பட்டதும் இருள் அங்கு இருப்ப தில்லை. ஆழ்ந்த சிந்தனை என்ற மெழுகுவர்த்தி இப்போது இங்கே இருக்கிறது. மெழுகுவர்த்தி என்ற கடவுள் என்பதன் அர்த்தம் எல்லா கடந்த காலங்களும் அகன்று போய்விட்டன என்பதாகும். அது மீண்டும் தலையெடுக்காது. ஒருமுறை நீங்கள் அழகை, நிகழ் காலம் என்பதன் பயன் கிட்டவேண்டுமென்ற பிரார்த்தனை எழும்போது அது அபரிமிதமாக மாறுகிறது. அப்போது மனம் என்ற கண்ணாடி யில் படிந்து கிடக்கும் புழுதியைப் பற்றி யார் கவலைப்படப் போகிறார்கள்?

நீங்கள் கடந்த காலம் பற்றிச் சிந்தனை செய்து கொண்டிருக் கிறீர்கள். காரணம், நிகழ்காலத்துடன் எப்படிச் சார்ந்திருப்பது என்று உங்களுக்குத் தெரியவில்லை. ஏதாவது செய்ய வேண்டும் என்பதற் காக நீங்கள் கடந்த காலம் பற்றிச் சிந்திக்கிறீர்கள். ஏழாவது ஒரு பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது. குழந்தைகள் எதிர்காலம் குறித்துச் சிந்தனை செய்கிறார்கள். வயதான மனிதர்கள் கடந்த காலம் பற்றி யோசிக்கிறார்கள். குழந்தைகளுக்குக் கடந்த காலம் என்பது இல்லை. எனவே அவர்களால் கடந்தகாலம் குறித்துச் சிந்திக்க இயலாது. எதிர்காலம் பற்றித்தான் சிந்திக்க வேண்டியிருக்கிறது. வயதானவர்களுக்கு எதிர்காலம் என்று ஒன்று மில்லை. சீனப் பெருஞ்சுவர் போல மரணம் அங்கே நின்று கொண்

டிருக்கிறது. இனி எதிர்காலம் என்பது இல்லை என்று அவர்களுக்குத் தெரியும். நாளை என்பது ஒருபோதும் வராது. அச்சம் காரணமாகப் பின்புறம் திரும்பிப் பார்க்கிறார்கள்.

அதுபோல தனி மனிதர்களுக்கு நடக்கிறது. தேசங்களுக்கு நடக்கிறது. சமூகங்களுக்கு நடக்கிறது. நாடுகளுக்கும் நடக்கிறது. உதாரணமாக, அமெரிக்கா போன்ற இளைய தேசம் எதிர்காலம் பற்றிச் சிந்திக்கிறது. அதன் பொற்காலம் இன்னும் தோன்றவில்லை. இந்தியாவைப் போன்ற புராதனமான, பழைமையான தேசம் கடந்த காலம் பற்றிச் சிந்திக்கிறது. அதன் பொற்காலம் கடந்துபோய் விட்டது. ராமராஜ்ஜியக் காலம் பொற்காலமாக இருந்தது. இப்போது அது காலம் கடந்த ஒன்றாகிவிட்டது. இந்த தேசம் மிகமிகப் பழைமை யானது. இனி ஒரு எதிர்காலத்தைச் சூல்கொள்ள அதனால் முடியாது என்பதைக் காட்டும் ஒரு எளிய அறிகுறியாகும் அது. எதிர்காலம் மரணித்துப் போய்விட்டது.

குழந்தையாக இருந்தாலும் தவறவிட்டுவிட நேரிடும். வயோதிகராக இருந்தாலும் தவறவிட்டுவிட நேரிடும். சிந்தனை யாளர் சரியான மையத்தில் இருக்கிறார். அவர் நித்திய இளமையைத் தன்னுள் கொண்டவராக இருக்கிறார்.

கிழக்கு நாடுகளில் நாம் ஞானம்பெற்ற மனிதர்கள் யாரையும் வயதானவர்களாகச் சித்தரித்து ஓவியம் வரைந்து வைக்கவில்லை என்பதை அறிந்தால் வியந்து போவீர்கள். இளைஞர்களாகவே எப்போதும் நாம் அவர்களை வரைந்து வைத்திருக்கிறோம். புத்தர், மகாவீரர், ராமன், கிருஷ்ணர் போன்ற யாரையும் வயதான உருவில் வரைந்து வைத்து நீங்கள் பார்த்திருக்கமுடியாது. ஓவியங்களிலும், விளக்க உரைகளிலும், சிற்பங்களிலும் அவர்கள் இளமையாகவே சித்தரிக்கப்பட்டிருக்கிறார்கள். ஏதோ ஒன்றைக் குறிப்பிட்டுக் காட்ட வேண்டியுள்ளது. சிந்தனையாளர் எதிர்காலம்பற்றிச் சிந்திக்க அவர் ஒரு குழந்தையல்ல. கடந்தகாலம் குறித்துச் சிந்திக்க அவர் முதியவரும் அல்ல. அவர் மையத்தில் இருக்கிறார். அதனால் இளமையாக, புத்துணர்வுடன் இருக்கிறார். கடந்தகாலம், எதிர் காலம் பற்றியெல்லாம் அவருக்கு ஒன்றும் தெரியாது. இக்கணத்தை மட்டுமே அவர் அறிவார்.

கிருஷ்ணர் ஒருபோதும் வயோதிகம் அடைந்ததாகத் தெரிய வில்லை. அவர் இறக்கும்போது வயது எண்பது. புத்தரும் முதுமை பெறவில்லை. அவர் மரணம் அடைந்தபோது வயது எண்பத்து இரண்டு. வயது முதிர்ந்து நோய்வாய்ப்பட்டு, உடல் மோசமான

நிலையில் இருந்தது. மகாவீரரும் வயது முதிர்ந்தவராகவே இருந்தார். ஆனால் நாம் அவர்களது முதுமைக்காலக் கதைகளைக் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. காரணம் அவை அவர்களது உயிர் சார்ந்த உண்மைக் கதைகள் அல்ல. அவை அவர்களின் புறத்தோற்றம் சார்ந்தவைமட்டுமே ஆகும். அவர்களின் மையங்கள் சார்ந்தவை அல்ல. மையம்தான் உண்மையான விஷயம். புறத்தோற்றம் வெறும் நிழல். மையம் தான் ஸ்திரமானது. நிகழ்காலம் மட்டுமே உள்ளது என்ற ஒற்றை நுண்ணறிவுமட்டும் போதும். அதுதவிர வேறு எதுவும் இல்லை. அதுதவிர வேறு எதுவும் எப்போதும் இல்லை. வேறு எதுவும் இருக்கவும்முடியாது. நிகழ்காலம்மட்டுமே இருக்கிறது.

அது உங்கள் நுண்ணறிவாக அமையவேண்டும். எனது நுண்ணறிவு உங்களுக்கு உதவாது. எனது நுண்ணறிவை உங்களுடன் நான் பகிர்ந்துகொள்ள முடியும். அதைத்தான் நான் செய்துவருகிறேன். ஆனால் அது உங்கள் நுண்ணறிவாக மாறவேண்டும். ஒருமுறை அது நடந்தால், ஒரே ஒருமுறை மட்டும் நடந்துவிட்டால் நிகழ்காலத்துடன் நீங்கள் தொடர்பு கொண்டுவிடுகிறீர்கள். முற்றிலும் புதிய மனிதராக மாறிவிடுகிறீர்கள். அது மறுபிறப்பு, புனர்ஜென்மம் ஆகும்.

**நான்காவது கேள்வி**

**ஓஷோ,**

**விழிப்புணர்வுமட்டுமே புனிதமானது, விழிப்புணர்வு இன்மை பாவகரமானது என்று நீங்கள் சமத்காரமாகப் பேசுகிறீர்கள். ஞானம் பெறாத ஒரு சாதாரண மனிதன் எப்படி முடிந்தவரை விழிப்புடன் இருப்பதற்கான சக்தியைப் பெறமுடியும்?**

சொல்லப்போனால் மகிழ்ச்சி நிலையில் இருப்பதைவிட துயரமான நிலையில் இருப்பதற்குத்தான் நிறைய சக்தி தேவைப் படுகிறது. காரணம், மகிழ்ச்சி என்பது ஒரு இயல்பான நிலை. மகிழ்ச்சியுடன் இருக்கச் சக்தி தேவையில்லை! அது இயற்கை யானது. சக்தி தேவைப்படுவதுதான் துயரகரமானது. ஏனென்றால், அது இயற்கைக்கு மாறானது. மிகவும் இயல்பாக நீங்கள் இருந்தால் குறைந்த சக்தியே தேவைப்படும். பெரிய அளவில் நீங்கள் இயற்கைக்கு மாறாக இருந்தால் அதிக சக்தி தேவைப்படும்.

நிலத்தில் நீங்கள் கால்களை ஊன்றி நிற்கக் குறைந்த சக்தியே போதும். தலைகீழாக நிற்பதற்கு நிறைய சக்தி தேவைப்படும்.

எப்போதெல்லாம் கூடுதல் சக்தி தேவை என்று அறிகிறீர்களோ அப்போது நீங்கள் ஏதோ இயல்புக்கு மாறாகச் செய்ய முயல்கிறீர்கள் என்பதை நன்கு அறிந்துகொள்ளுங்கள். தியானம் செய்ய சக்தி தேவையில்லை. தியானம் நேர்மறையானதாகும். செயலற்ற நிலையில் அமைவதாகும். அமைதியாக இருப்பதாகும். காரியம் எதுவும் செய்வதில்லை. அப்புறம் எதற்கு உங்களுக்கு சக்தி தேவை?

கோபப்பட சக்தி தேவை. சிந்திக்க சக்தி தேவை. வன்முறைக்கு சக்தி தேவை. காரணம், இயல்புக்கு மாறான ஏதோ ஒன்றை நீங்கள் செய்கிறீர்கள். இயற்கைக்கு எதிராகப் போராடுகிறீர்கள். இது நீங்கள் நீரோட்டத்தை எதிர்த்து நீந்துவது போன்றதாகும். நீங்கள் நதியோடு சேர்ந்து பயணித்தால் சக்தி தேவையில்லை. நீங்கள் நதியோடு செல்ல முயன்றால் சக்தி எதற்கு? நீங்கள் நதியோட்டத்துடன் பயணிக்கலாம். நதி உங்களை இழுத்துச் செல்லும். எதிர்த்து நீங்கள் நீந்தினால் நிறைய சக்தி தேவைப்படுகிறது. காரணம், நீரோட்டத்தை எதிர்த்து நீங்கள் போராடுகிறார்கள்.

முல்லா நஸ்ருதீன் தனது வீட்டின் முன்னால் உட்கார்ந்திருந்தார். அப்போது மழை பெய்துகொண்டிருந்தது. ஒருவர் வேகமாக ஓடிவந்து அவரிடம், "இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? உங்கள் மனைவி ஆற்றில் விழுந்துவிட்டாள்" என்றார்.

முல்லா ஆற்றங்கரைக்கு ஓடினார். ஜனங்கள் கூட்டமாக நின்றிருந்தார்கள். ஆனால் ஆற்றில் குதித்துக் காப்பாற்றும் துணிவு யாருக்கும் இல்லை. வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்ததால், ஆற்றில் இறங்குவது ஆபத்து என்று கருதினார்கள். முல்லா நீரில் குதித்து வெள்ளத்தை எதிர்த்து நீந்தினார்.

ஜனங்கள் சிரித்தனர். "முல்லா! என்ன செய்கிறீர்கள்? வெள்ளத்தை எதிர்த்து நீங்கள் ஏன் நீந்துகிறீர்கள்?" என்று வினவினார்.

அதற்கு அவர், "வாயை மூடுங்கள்! எனக்கு என் மனைவியைப் பற்றித் தெரியும். நீரில் அவள் விழுந்திருந்தால் வெள்ளத்தை எதிர்த்தே அவள் போயிருப்பாள். ஆற்று நீரோடு போகமாட்டாள். இயல்பான காரியங்கள் எதையும் செய்ய அவளால் முடியாது. என் மனைவியைப் பற்றி எனக்குத் தெரியும்" என்றார்.

வெள்ளத்தை எதிர்த்து நீங்கள் நீந்தினால் அதற்காகப் போராட வேண்டியிருக்கும். ஏன் மக்கள் மிகவும் சோர்ந்து காணப்படுகிறார்கள்? அவர்கள் போராடிக் கொண்டிருக்கிறார்கள். போராட

வேண்டும் என்று உங்கள் மதம் சொல்லித் தருகிறது. உங்கள் வளர்ப்பு முறை முழுவதும் சச்சரவுகளை அடிப்படையாகக் கொண்டதாகும். சச்சரவுகள் வழியாகவே செல்வதால் அகந்தை உருவாகிறது. நீங்கள் ஒய்வாக இருந்தால் அகந்தை அழிகிறது. ஒய்வாக இருப்பது என்றால் அகந்தை இல்லாதிருத்தல் என்றே பொருளாகும். நீங்கள் நதியின் நீரோட்டத்துடன் சென்றால் அகந்தையை உருவாக்கிக் கொள்ள மாட்டீர்கள். அகந்தை என்பது இயற்கைக்கு மாறான ஒரு நிகழ்வு. அதை உருவாக்கப் பெரிய அளவில் சக்தி தேவைப்படுகிறது. அதை செயல்படுத்தி இயக்கவும் பெரிய அளவு சக்தி தேவைப்படுகிறது. அதை நிர்வகிக்கவும் பெருமளவு சக்தி அவசியப்படுகிறது. அகந்தை கொள்ளல் என்பது பெரும் செலவுபிடிக்கும் ஒரு காரியமாகும். உங்கள் முழு வாழ்வும் அதில் வீணாகிவிடுகிறது.

எனவே நான் உங்களுக்குச் சொல்ல விரும்பும் முதல் விஷயம் என்னவென்றால், விழிப்புணர்வு பெறுவதற்குச் சக்தி தேவை யில்லை என்பதையே ஆகும். விழிப்புணர்வின்றி இருக்கத்தான் சக்தி தேவை என்பது உங்களுக்கு வியப்பளிக்கலாம். தியானத்திற்கு சக்தி தேவையில்லை. சிந்திக்கச் சக்தி தேவை. ஒய்வாக இருக்கச் சக்தி தேவையில்லை. மன இறுக்கத்திற்குச் சக்தி தேவை. துயரம், வேதனை கொள்ளச் சக்தி வேண்டும்.

எனவே, ஆரம்பத்திலேயே தெளிவு பெற்றுவிடுங்கள். ஞானம் பெற்ற மனிதர்கள் மனப்போராட்டம் இல்லாது வாழ்கிறார்கள். அவர்களுக்கு எந்த சக்தியும் தேவையில்லை. ஏனென்றால், அவர் போராடுவதில்லை. காரணம், தனது சக்தியை அவர் வீணடிப்ப தில்லை. ஒரு விந்தை நிகழ்கிறது. இயற்கைப் பேராற்றல் அவரிட மிருந்து பொங்கிப் பிரவாகிக்கிறது. நதியை எதிர்த்து நீங்கள் போராடவில்லை என்றால் நீரோட்டம் உங்களைத் தனது தோளில் சுமந்து செல்லும். நீங்கள் வாழ்க்கையுடன் போராடவில்லை என்றால், இயற்கை உங்களைத் தனது தோளில் சுமந்து செல்லும்.

நதியுடன் மோதாதீர்கள். நதி உங்கள் எதிரியல்ல. பெருமளவு சக்தி உங்களிடமிருந்து வெளியேறுகிறது.

நீங்கள் இரண்டாவதாகச் சொன்ன விஷயம், "ஞானம் பெறாத ஒரு சாதாரண மனிதன்..." என்பதாகும். யாருமே சாதாரண மனிதர்கள் இல்லை. ஒன்று ஞானம் பெற்றவராக இருக்கிறார் அல்லது ஞானம் பெறாதவராக இருக்கிறார். சாதாரண மனிதர்கள் என்று யாரும் கிடையாது. சாதாரணமானது என்று எதுவும் இல்லை. காரணம், ஒவ்வொன்றிலும் தெய்வீகம் நிறைந்திருக்கிறது. தெய்வீகம் எப்படி

சாதாரணமானதாக முடியும்? தெய்வீகம் உறக்கத்தில் இருக்கலாம். என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் அது சாதாரணமான தாக விடாது. உங்களுக்கும் புத்தருக்கும் இடையிலான வித்தியாசம் சாதாரணம் அசாதாரணம் சார்ந்தது அல்ல. விஷயம் மிகவும் சிறியது. நீங்கள் குறட்டைவிட்டுத் தூங்குகிறீர்கள். அவர் விழிப்புடன் இருக்கிறார். அவர் அசாதாரணமானவர். நீங்களும் அசாதாரண மானவர். அல்லது நீங்கள் அந்த **சாதாரணம்** என்ற வார்த்தையை விரும்பினால், அவரும் சாதாரணமானவர், நீங்களும் சாதாரண மானவர் என்று வைத்துக் கொள்ளலாம்.

முழு உலகமும் சாதாரணமானது, அசாதாரணமானது என்று எப்படி வைத்துக் கொண்டாலும் நீங்கள் விரும்பிய எந்த ஒன்றையும் தேர்வு செய்து கொள்ளலாம். **அசாதாரணமானது** என்ற வார்த்தை மீது எனக்கு ஆர்வமில்லை. முழு உலகமும் ஒற்றை ருசி கொண்ட தாக ருசிப்பதற்கு ஏற்றபடி இருக்கிறது. அசாதாரணம், சாதாரணம் என்று அதைப் பிரிக்க வேண்டாம், நாம் ஏன் பிரிக்கும் வேலை செய்ய வேண்டும்? அப்படிச் செய்வது மீண்டும் அகந்தையின் பாதையில் செல்வதாக மாறிவிடும். பெரிய செயல்களைச் செய்ய நாம் விரும்புகிறோம். பெரியது எது பெரிதாக இல்லாதது எது என்று பாகுபாடு செய்ய வேண்டியுள்ளது.

முந்தைய இரவில் நான் டேவிட் மானர்ஸ் எழுதிய நினைவுக் குறிப்புகளைப் படித்துக் கொண்டு இருந்தேன்.

ஒரு சமயம் நண்பர் ஒருவர் எனது அருமையான குடிசைக்கு "புனிதர்" ஒருவரை அழைத்து வந்தார். ஜென்ஜாகி ஸான் என்ற வயதான ஜென் துறவி அவர். குடிசையில் இருந்த நாற்காலியில் அவரை அமர வைத்தார். அப்போது நான் குளிக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தேன். அந்த சப்தம் பக்கத்து அறைக்குத் தெளிவாகக் கேட்கவும் செய்யும். அதுபோன்ற சங்கட நிலையையும், அவமான உணர்வையும் ஒருபோதும் அனுபவித்ததில்லை. "புனிதரை" வரவேற்க வேகமாக குளியல் அறையில் இருந்து பதட்டத்துடன் வெளிப்பட்டேன். ஆனால் புனிதர் சட்டென்று நாற்காலியைவிட்டு எழுந்தார். தனது கோட்டைக் கழற்றி வைத்துவிட்டு "நான் குளிக்கப் போகிறேன்" என்று சொன்னபடி குளியலறை நோக்கி நகர்ந்தார். நான் சிரிக்கத் துவங்கினேன். அந்த சிரிப்பு எல்லா அவமானத்தையும் அகற்றிவிட்டது. வாய்திறந்து ஒரு வார்த்தையும் பேசுவதற்கு முன்னரே நான் அந்தப் புனிதரை மதிக்கத் தொடங்கிவிட்டேன்.

உண்மையில், குரு அவருக்கு உணர்த்தியிருக்கிறார். அவமானத்தை அகற்ற அப்படிச் செய்திருக்கிறார். புனிதமற்றது என்று எதுவும் கிடையாது. குளியல் அறையிலிருந்து வரும் ஓசையும் புனிதமற்றது என்று ஒதுக்கிவிட முடியாது. அனைத்தும் தெய்வீகமானவை. புனிதமானவை. உங்கள் உறக்கமும் புனிதமானது. தெய்வீகமானதுதான். உங்கள் விழிப்புணர்வற்ற நிலையும் புனிதமானது, தெய்வீகமானதுதான். விழிப்புணர்வு, விழிப்புணர்வு இல்லாத நிலை என்ற இரண்டும் மனிதனின் இரண்டு பாதைகள். ஆனால் மனிதன் எப்போதும் தெய்வீகமானவன். அதற்கு என்ன பெயரை வைக்க விரும்பினாலும் வைத்துக் கொள்ளுங்கள். ஆனால் வாழ்வின் சுவை, வாழ்வின் முழுமை என்பது ஒன்றுதான்.

"மனிதனின் விழிப்புணர்வு புனிதமானது, விழிப்புணர்வு இல்லாத நிலை பாவகரமானது என்று நீங்கள் சமத்காரமாகப் பேசுகிறீர்கள். ஞானம் பெறாத ஒரு சாதாரண மனிதன் விழிப்புணர்வு நிலையில இருக்கத் தேவையான சக்தியைப் பெறுவது எப்படிச் சாத்தியம்?" என்று கேட்கும் நீங்கள் ஒரு விஷயத்தைத் தவறவிட்டு விட்டீர்கள். விழிப்புடன் இருக்க முயற்சி செய்தல் என்ற கேள்விக்கே இடமில்லை. விழிப்புடன் இருக்க நீங்கள் முயன்றால் நீங்கள் உங்களுக்குள் மன இறுக்கத்தை ஏற்படுத்திக் கொள்கிறீர்கள். எல்லா முயற்சிகளும் மன இறுக்கத்தையே தருகின்றன. நீங்கள் விழிப்புடன் இருக்க முயன்றால் உங்களுடனே நீங்கள் மல்லுக் கட்டுகிறீர்கள். அப்படிப் போராட அவசியமில்லை. விழிப்புணர்வு என்பது முயற்சியின் துணைத் தயாரிப்பு அல்ல. விழிப்புணர்வு என்பது தானே உருவாகின்ற ஒரு நறுமணம். விழிப்புணர்வு என்பது சரணாகதியின் மலர்ச்சி, நிம்மதியின் மலர்ச்சியாகும்.

ஒய்வான நிலையில் அமைதியாக இருங்கள். எதுவும் செய்யாமல் இருந்தால் விழிப்புணர்வு தோன்ற ஆரம்பித்து விடும். எங்கிருந்தோ அதை இழுத்து வரவேண்டியது இல்லை. எங்கிருந்தோ அதைக் கொண்டுவர வேண்டியது இல்லை. அது உங்கள் மீது அங்கிங்கு எனாதபடி எங்குமிருந்தும் அது வர்ஷிக்கும். அது உங்கள் சுயஉற்பத்தி ஸ்தானத்தில் இருந்து வெளிப்படுகிறது. மௌனமாக, நிம்மதியுடன் இருந்தால் போதும்.

உங்கள் பிரச்சினையை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அமைதியாக உட்கார்ந்திருப்பது மிகவும் சிரமம். எண்ணங்கள் மனதில் ஓடத் துவங்குகின்றன. அவற்றை அனுமதியுங்கள். எண்ணங்களுடன் சண்டையிட வேண்டாம். அதற்கு எந்த சக்தியும் செலவிடத்

தேவையில்லை. எண்ணங்கள் வெளிப்பட அனுமதியுங்கள். மேகங்கள் வருகின்றன, சென்று விடுகின்றன. அதற்கு உங்களால் என்ன செய்ய முடியும்? எண்ணங்கள் வெளிப்பட அனுமதியுங்கள். அவை செல்ல விரும்பும்போது அதற்கும் அனுமதியுங்கள். காபந்து செய்யாதீர்கள். எண்ணங்கள் தோன்றலாம், தோன்றக்கூடாது என்ற ஒரு குறிப்பிட்ட மனோபாவத்துடன் இருக்காதீர்கள். தீர்ப்பு சொல்லும் காரியத்தில் இறங்காதீர்கள். எப்போது விரும்பினாலும் அவை வந்து செல்ல அனுமதியுங்கள். நீங்கள் முற்றிலும் வெறுமை யாக இருங்கள். எண்ணங்கள் அப்பால் செல்லும். அவை வரும், போகும். மெல்ல மெல்ல நீங்கள் அந்த வருகை, போதல்களால் பாதிக்கப்படாது இருப்பதைக் கண்டுணர்வீர்கள். அவை வந்து போகும்போது நீங்கள் பாதிக்கப்படாமல் இருந்தால் அவை மறையத் தொடங்கும். அவை ஆவியாகிவிடும். உங்கள் முயற்சியால் அல்ல, நீங்கள் அமைதியாக, நிம்மதியுடன் வெறுமையாக, ஓய்வு நிலையில் இருப்பதால் அவை மறைந்து போகின்றன.

ஓய்வாக இருப்பதற்கு நிறைய சக்தி தேவைப்படுகிறது என்று சொல்லாதீர்கள். எதற்கு ஓய்வுகொள்ள சக்தி தேவை? ஓய்வு என்பது நீங்கள் எதுவும் செய்யாமல் இருப்பதாகும்.

**வெறுமனே அமைதியாக**
**எதுவும் செய்யாதிருந்தால்**
**வசந்தம் வருகிறது**
**புற்கள் தானே முளைக்கின்றன**

இந்த மந்திரத்தை உங்கள் இதயத்தில் பதித்துக் கொள்ளுங்கள். தியானத்தின் சாரம் இதுதான். வெறுமனே அமைதியாக எதுவும் செய்யாதிருந்தால் வசந்தம் வருகிறது. புற்கள் தானே முளைக் கின்றன. சகலமும் நடக்கிறது! நீங்கள் செயல்படுபவராக இருக்க வேண்டியதில்லை.

உங்கள் குறிக்கோள் பற்றி விழிப்புணர்வு கொள்ளாதீர்கள். அவ்வாறு இல்லாது போனால் நீங்கள் எனது கருத்தைத் தவற விட்டு விடுவீர்கள். எளிமையாக விளக்கினேன். விழிப்புணர்வு புனித மானது. விழிப்புணர்வு இல்லாமை பாவகரமானது என்றேன். உங்கள் மனதில் நடந்தது என்ன, விழிப்புணர்வு புனிதம் நிறைந்தது என்றால், அதை அடைவது எப்படி, விழிப்புணர்வு இல்லாத நிலை பாவச் செயல் என்றால் அதை உதறித் தள்ளுவது எப்படி, என்று யோசிக்கிறீர்கள். அப்போது சக்தி பற்றிய கேள்வி எழுகிறது. எப்படி என்று நீங்கள் கேட்கும்போது கூடுதல் சக்தியைக் கேட்கிறீர்கள். அந்த

நேரத்தில் பிரச்சினை தலையெடுக்கிறது. அந்த விழிப்புணர்வை எதிர்த்துப் போராட என்னிடம் போதுமான சக்தி இல்லை. விழிப் புணர்வை வளர்த்துக் கொள்ளவும் போதுமான சக்தி இல்லை என்கிறீர்கள்.

நான் ஒரு சாதாரண விழிப்புணர்வு இல்லாத எளிய மனிதன். நான் என்ன செய்யட்டும்? புத்தர்களால் மட்டுமே இதைச் செய்ய முடியும் என்ற கருத்து உங்களிடம் எழுகிறது. உங்களுக்குத் தெரியுமா? புத்தரும் உங்களைப் போலவே சாதாரணமானவர்தான். உங்களைப் போலவே ஞானமற்றவர்தான். எப்போதும் அவர் புத்தராகவே இருப்பதில்லை.

ஒருநாள் அது நடந்தது. அதை மீண்டும் சொல்வது நல்லது. ஒருநாள் அவர் மரத்தடியில் முற்றிலும் ஓய்வாக, எந்த வேலையும் செய்யாது இருந்தபோது அது நடந்தது. ஆறு வருட காலம் அவர் ஞானம் பெறுவதற்குக் கடுமையான முயற்சி செய்தார். அதில் மீண்டும் மீண்டும் தோற்றார். அந்த ஆறு வருடங்களில் முற்றிலும் ஏமாற்றம் தவிர வேறு எதுவும் கிட்டவில்லை. அவரால் முடிந்த அனைத்தையும் செய்துபார்த்தார். விரதமிருத்தல், யோகாசனப் பயிற்சிகள், சுவாசப் பயிற்சிகள் என்று இந்தியாவில் உள்ள எல்லா வழிமுறைகளையும் செய்துபார்த்தார். நீண்ட விரதங்களால் தனது உடலைக் கெடுத்துக்கொண்டார்.

அன்றைய மாலை வேளையில் அவர் பெரிதும் தளர்ச்சியும், ஏமாற்றமும் அடைந்திருந்தார். அந்த விதிவசமான முழுநிலா இரவில் அவர் ஒரு முடிவுக்கு வந்தார். "அனைத்தும் பயனற்றவை. உலகம் வீண். அதை நான் கண்டுணர்ந்துவிட்டேன்" என்றார். வேண்டிய அளவு அந்த அனுபவத்தை அவர் பெற்றிருந்தார். அவர் ஒரு மன்னரின் மகன். "நான் உலகத்தைத் துறந்தேன். அது அர்த்த மற்றது. துறவு மேற்கொள்ளல் என்ற அர்த்தமற்ற செயலை நான் இப்போது துறந்து விட்டேன். உண்மையைக் கண்டறியும் தேடலை யும் துறந்துவிட்டேன். அதுவும் அர்த்தமற்றது. இந்த பாதை அல்லது அந்த பாதை என்று எதன்மூலமும் பலன் பெறமுடியாது. பயன் பெற எதுவும் இல்லை. அது பயனற்றது. அர்த்தமற்றது" என்று தீர்மானித்தார்.

உண்மையின் தேடலை உதறித்தள்ளுவது பெரிய அளவில் ஏமாற்றம் தருவதாக இருந்திருக்கலாம். அன்றைய இரவில் அவர் ஆழ்ந்து சுவாசித்து ஓய்வில் இருந்தார். எல்லாம் முடிந்துவிட்டது.

எங்கும் போகவேண்டியதில்லை. எதுவும் செய்யவேண்டிய தில்லை. அப்போது அது நடந்தது. அன்று இரவில் அது நடந்தது.

அதிகாலையில் அவர் கண்களைத் திறந்தபோது வானில் இருந்த கடைசி நட்சத்திரமும் மறைந்து கொண்டிருந்தது. நட்சத்திரம் மறைந்ததுபோல அவரிடமிருந்த அகந்தையின் கடைசிச் சுவடு களும் மறைந்தன. மறைந்த நட்சத்திரம் அவருக்குள் ஏதோ ஒன்றை உசுப்பியது. அதன் இணை நிகழ்வாக, அகந்தையின் கடைசிச் சுவடு களும் அவரிடமிருந்து அகன்றன. செயல்படுபவர் என்று தனியாக இனி யாருமில்லை. இயற்கை முழுமையாகத் தனது ஆற்றலை அவர் மீது பொழிந்துவிட்டது.

வானத்திலிருந்து மலர் மாரி பொழிந்ததாக கதை சொல்லப் படுகிறது. தேவர்கள் அவரைச் சுற்றி நின்றுகொண்டு நடனமாடி னார்களாம். வானகத்து இசைவாணர்கள் கருவிகளை இசைத்தார்கள். அது பெரிய இயற்கையின் கொண்டாட்டமாக இருந்தது. புத்தர் ஏழு நாட்கள் அதே இடத்தில் மௌனமாக அசையாமல் உட்கார்ந் திருந்தார்.

இந்த செயல் நடந்தேற சக்தி தேவைப்பட்டது என்று நினைக் கிறீர்களா? சக்தி ஏன் வேண்டும்? எந்த காரியத்திலும் அவர் இறங்க வில்லை. காரியம் எதுவும் செய்யாத நிலை. நேரம் வந்ததும், வசந்தம் வந்ததும், புற்கள் தானே முளைத்தன. புற்களை மண் ணுக்குள் இருந்து மேலே பிடித்து இழுக்கத் தேவையில்லை.

சக்தி தேவையில்லை. விழிப்புணர்வு பெறுவதற்குத் தேவை யான சக்தியை முழுமையாக நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். சண்டை, சச்சரவு, போராட்டத்தில் ஈடுபடாமல் ஓய்வு கொள்ளும் வழிமுறை களைக் கற்று அதில் இறங்க வேண்டும்.

### ஐந்தாவது கேள்வி

**ஓஷோ,**

**நான் ஏன் எப்போதும் என்னைச் சுற்றித் துன்பங்களை உருவாக்கிக் கொள்கிறேன்? நான் தொடர்ந்து இந்த நச்சு வளையத்தைத் தேர்வுசெய்வதைக் கண்டுணரத் தொடங்கி விட்டேன். தேர்வு செய்வதுதான் துன்பமாக மாறுகிறதா?**

ஆம். தேர்வு செய்தல் என்பதே துன்பத்தின் அடிப்படையாக அமைகிறது. மற்ற எல்லாத் துன்பங்களும் அதிலிருந்தே எழுகின்றன.

ஒன்றை நீங்கள் தேர்வுசெய்யும் கணத்தில் முழுமையற்றவராக மாறுகிறீர்கள். ஏதோ ஒன்று நிராகரிக்கப்படுகிறது. ஏதோ ஒன்று தேர்வு செய்யப்படுகிறது. நீங்கள் ஒருதலைப்பட்சமாக இருக் கிறீர்கள். ஏதோ ஒன்றுக்கு எதிராக மாறுகிறீர்கள். அதன்பின்னர் நீங்கள் முழுமையானவராக இருப்பதில்லை.

"நான் தியானத்தைத் தேர்வுசெய்கிறேன். இனி நான் கோப முள்ளவனாக இருக்க முடியாது" என்கிறீர்கள். துன்பம் வந்து சேர்ந்து விடுகிறது. தியானம் கைகூடுவதில்லை. துன்பம் மட்டுமே ஏற்படு கிறது. தியானம் என்ற பெயரில் நீங்கள் துன்புறுகிறீர்கள். ஒருவர் தனது துன்பங்களுக்கு அழகான பெயர்கள் சூட்ட இயலும்.

தேர்வு செய்தல்தான் துன்பமாகும். தேர்வு செய்யாத நிலையில் இருப்பதே பேரின்பமாகும். அதைக் கவனியுங்கள்! நன்றாக உற்றுக் கவனியுங்கள். எவ்வளவு முடியுமோ அவ்வளவு ஆழமாக நோக்குங்கள். தேர்வு செய்தல் என்பதே துயரம் தருவதாகும். நீங்கள் பேரின்பத்தைத் தேர்வு செய்தாலும் துயரம் உருவாகிவிடும். எதையும் தேர்வு செய்யாமல் இருந்து என்ன நடக்கிறது என்று பாருங்கள்.

ஆனால் தேர்வுசெய்யாமல் இருப்பது மிகவும் சிரமமான காரியம். நாம் எப்போதும் தேர்வு செய்து கொண்டே இருக்கிறோம். நமது முழு வாழ்வும் தேர்வு செய்தலைப் பொறுத்தே அமைகிறது. நாம் தேர்வு செய்யாவிட்டால் வேறு யார் தேர்வு செய்து தருவார்கள் என்று எண்ணுகிறோம். நாம் முடிவெடுக்காது போனால், நமக்காக யார் முடிவெடுப்பார்கள் என்று யோசிக்கிறோம். நாம் போராடாது போனால் நமக்காக யார் போராடப் போகிறார்கள்? நாம் முட்டாள் தனமான கருத்து மீது நம்பிக்கை வைத்திருக்கிறோம். வாழ்க்கை நமக்கு எதிராக இருக்கிறது. நாம் போராடியாக வேண்டும். தொடர்ந்து நாம் வாழ்க்கைக்கு எதிராகப் போர்க்கோலம் பூணவேண்டும் என்று கருதுகிறோம்.

வாழ்க்கை உங்களுக்கு எதிராக இல்லை. கடலில் உள்ள ஒரு சிற்றலை நீங்கள். இயற்கையில் இருந்து நீங்கள் பிரிந்து தனித்திருக்க வில்லை. எப்படி வாழ்க்கை உங்களுக்கு எதிரானதாக இருக்க முடியும்? அதன் ஒரு அங்கமாக நீங்கள் இருக்கிறீர்கள். உங்களைப் பெற்றெடுத்த தாயார் அந்த குழந்தைக்கு எதிராக இருக்க முடியுமா?

இதையே நான் ஆன்மீக விழிப்புணர்வு என்று கூறுகிறேன். இக்கூற்றைப் புரிந்துகொள்வதற்கு ஆன்மீக உணர்வு வேண்டும்.

அதற்காக நீங்கள் ஒரு இந்துவாகவோ, முகமதியராகவோ அல்லது கிறிஸ்தவராகவோ இருக்கவேண்டிய அவசியமில்லை. ஆனால் ஆன்மீக உணர்வுள்ளவராக இருக்க வேண்டும். சொல்லப்போனால், நீங்கள் இந்துவாக, முஸ்லிமாக, கிறிஸ்தவராக இருந்தால் ஆன்மீக உணர்வுள்ளவராக இருக்க இயலாது. ஆன்மீக உணர்வுகளின் ஆழங் களை நீங்கள் புரிந்துகொண்டுவிட இயலாது.

ஆன்மீக உணர்வு என்பது என்ன?

இயற்கை என்பது நமது தாயகம். நாம் அதைச் சார்ந்திருக் கிறோம், அது நம்மைச் சார்ந்திருக்கிறது. எனவே கவலைப்பட அவசியமில்லை. தனிப்பட்ட முடிவுகள், தனிப்பட்ட இலக்கு களுக்காகப் போராட வேண்டியதில்லை. இயற்கையுடன் கலந்து அமைதிபெற முடியும். சூரியன், காற்று, மழை போன்றவற்றுடன் கலந்து அமைதி பெற முடியும். சூரியன் நம்மில் ஒரு அங்கம். நாம் சூரியனில் ஒரு அங்கம். மரங்கள் நம்மில் ஒரு அங்கம். நாம் மரங் களின் ஒரு அங்கம். இயற்கை ஒன்றுடன்ஒன்று சார்ந்து நிற்பதைக் கவனியுங்கள். அது பெரிதும் சிக்கலான ஒரு கட்டமைப்பு. ஒவ்வொன்றும் சகலத்துடனும் கலந்துகொள்கின்றன. எதுவும் தனித்து இல்லை. பிறகு தேர்வுசெய்வதில் என்ன அர்த்தம் இருக் கிறது? நீங்கள் எவ்விதம் இருந்தாலும் உங்கள் முழுமையும் ஒன்றி வாழுங்கள்.

உள்ளே இருக்கும் எதிர் துருவங்களை நீங்கள் கண்டறிவதால் தான் பிரச்சினை எழுகிறது. "இரண்டிலும் நீங்கள் எப்படி சேர்ந்திருக்க முடியும்?" என்று தர்க்கரீதியான மனம் கேட்கிறது. யாரோ ஒருவர் என்னிடம் கேட்டார்: "நான் பாலுறவில் ஈடுபடும்போது தியானம் தடைப்படுகிறது. தியானத்தில் ஈடுபடும்போது பாலுறவு ஆர்வத்தை இழந்துவிடுகிறேன். எனவே நான் என்ன செய்வது? எதைத் தேர்வு செய்வது?" எதிர்துருவ ஈர்ப்புகள் இருப்பதால் தேர்வு செய்தல் என்ற செயல் நிகழ்கிறது. ஆம், அது உண்மைதான். பாலுறவின்போது நீங்கள் தியானத்தை மறந்துவிட விருப்பம் கொள்கிறீர்கள். தியானத்தில் நுழையும்போது பாலுறவின்மீதான ஆர்வத்தை இழந்து விடு கிறீர்கள். ஏதேனும் ஒன்றையே தேர்வுசெய்ய வேண்டும் என்ற அவசியம் இல்லை. உடலுறவில் ஆர்வம் கொள்ள எண்ணும்போது உடலுறவில் ஈடுபடுங்கள். வேறு ஒன்றைத் தேர்வு செய்ய வேண்டாம். தியானத்தில் ஈடுபட விரும்பும்போது தியானத்தில் நுழையுங்கள். வேறு தேர்வு வேண்டாம். தேர்வு செய்யத் தேவையில்லை.

ஒரே நேரத்தில் இரண்டின்மீதும் இச்சை எழாது. மிகவும் முக்கியத்துவம் பெற்ற இதை கவனத்தில் கொள்ளவேண்டும். ஒரே நேரத்தில் இரண்டின்மீதும் இச்சை தோன்றாது. அது சாத்திய மில்லை. ஏனென்றால், யாரோ ஒருவருடன் உறவுகொள்வதே காதலாகும். அடுத்தவர்மீது கவனத்தைக் குவிப்பதே காதலாகும். தியானம் என்பது மற்றவர்களை மறந்துவிட்டு தன்மீது கவனத்தை வைப்பதாகும். இரண்டு விருப்பங்களும் ஒரே நேரத்தில் ஏற்பட இயலாது.

நீங்கள் யாரோ ஒருவருடன் உறவுகொள்ள விரும்பினால், உங்கள் மீது சலிப்படைந்துவிட்டீர்கள் என்று பொருள். உங்களுடனே சேர்ந்திருக்க விரும்பினால் மற்றவர்கள் மீது சலிப்புற்று விட்டீர்கள் என்றாகிறது. இது ஒரு அழகான லயமாகும். மற்றவர்களிடம் கலந்திருக்க விருப்பம் கொள்வது, தனித்திருக்க வேண்டும் என்ற ஆழமான ஆசையை உங்களுக்குள் உருவாக்குகிறது. காதலர்களைக் கேட்டுப் பாருங்கள். எல்லாக் காதலர்களுக்கும் அந்த எண்ணம் பெரு மளவு எழுகிறது. ஆனால் அவர்கள் தனித்திருக்க அச்சப்படுகிறார்கள். காரணம், அது காதலுக்கு எதிராக மாறிவிடும் என்று எண்ணுகிறார்கள். பெண்ணோ, ஆணோ அப்போது என்ன சொல்வார்கள்? அவமதிக்கப் பட்டதாக நினைப்பார்கள். அவர்கள் பாசாங்கு செய்கிறார்கள். ஆனாலும் தனித்திருக்க விரும்புகிறார்கள். தனியே விட்டுவிட வேண்டும் என்று நினைக்கிறார்கள். தங்கள் சுய ஸ்தானத்தை விரும்பு கிறார்கள். ஆனால் மற்றவர்களுடன் சேர்ந்திருக்க எண்ணுவதுபோல நடிக்கிறார்கள். அவர்கள் நடிப்பு போலியானது. அது காதலை அழிக்கக்கூடியது. அது உங்கள் உறவை அற்பமானதாக்கி விடுகிறது.

நீங்கள் தனிமையில் இருக்க விருப்பம் கொள்ளும்போது மிகவும் மரியாதையுடனும், மிகுந்த அன்புடனும் மற்றவர்களிடம், "தனிமையில் இருக்க வேண்டுமென்ற பெருவிருப்பம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது. நான் அதில் ஈடுபட விரும்புகிறேன். எனவே, தேர்வுசெய்வது என்ற கேள்விக்கே இடமில்லை. தயவுசெய்து உதாசீனப்படுத்தப்பட்டதாக எண்ணவேண்டாம். உன்னை ஒதுக்கு வதாக அர்த்தமில்லை. அது எனது அக உணர்வின் லயமாகும்" என்று மற்றவர்களிடம் கூறுங்கள். இவ்வாறு செய்வது உங்கள்மீது மற்ற வர்களுக்கு நம்பிக்கை மற்றும் உண்மைத் தன்மையை தோற்றுவிக்க உதவும். நிஜமாக ஒரு நபரை நீங்கள் நேசித்தால் மெல்ல மெல்ல இருவர் லயமும் ஒன்றுபடத் தொடங்கும். அது அன்பின் விந்தை, அன்பின் அற்புதமாகும். அன்பு நிஜமாக இருவருக்கு இடையே

ஏற்படும்போது இந்த செயல்பாடு பூரணமாக அதன் தொடர் நிகழ்வாக அமையும். விருப்பம் இருவருக்கும் ஒரே நேரத்தில் எழுவதையும், அந்த உணர்வு தனித்தனியான வகையிலும் இருப்பதைக் காண்பார்கள். இருவரும் ஒரே லயத்தில் இணைகிறார்கள். சில சமயங்களில் இருவரும் ஒன்று சேர்கிறார்கள். ஒன்றாக இருக்கிறார்கள். ஒருவரில்ஒருவர் கலந்துவிடுகிறார்கள். தங்களைப் பற்றி மறந்துவிடுகிறார்கள். சிலசமயம் ஒருவரில் இருந்து ஒருவர் வெளிப்படுகிறார்கள், பயணிக்கிறார்கள், பின்வாங்குகிறார்கள், பிரிகிறார்கள். சுயஸ்தானங்களில் அமர்கிறார்கள். சுயத்தன்மை கொண்டவர்களாக மாறுகிறார்கள். ஒன்றுபட்ட சிந்தனையாளர்களாக இருக்கிறார்கள்.

காதலுக்கும், தியானத்திற்கும் நடுவே தேர்வுக்கு இடமில்லை. இரண்டும் இருந்தாக வேண்டும். ஏதாவது ஒன்று உங்கள் மனதில் எழும்போது எது ஆழமாக மனதில் விருப்பத்தை ஏற்படுத்துகிறதோ அந்த விருப்பத்தின் பக்கம் சென்றுவிடுங்கள்.

"என்னைச் சுற்றி ஏன் நான் துன்பத்தை உருவாக்கிக் கொள்கிறேன்?" என்று கேட்கிறீர்கள். கொடுத்துத் தீர்க்க வேண்டிய ஏதோ அதில் இருக்கிறது. அதிலிருந்து எதையோ பெற்றுக் கொண்டிருக்கிறீர்கள். இல்லாதுபோனால், ஒருவர் ஏன் துன்பங்களை உருவாக்கிக் கொள்கிறார்? சிலசமயங்களில் துயரம் நிறையப் பலன் தரும். உங்களுக்கு அவைகுறித்த விழிப்புணர்வு இல்லாது இருக்கலாம். எனவே நீங்கள், "நான் ஏன் துயரங்களை உருவாக்கிக்கொள்கிறேன்?" என்று கேட்கிறீர்கள். உங்களுக்குத் தேவையான ஏதோ ஒன்றைத் துன்பம் கொடுத்து உதவுகிறது என்ற விழிப்புணர்வு உங்களிடம் இல்லை.

உதாரணமாகப் பார்த்தால், நீங்கள் துயரப்படும் போது மக்கள் பரிவு காட்டுகிறார்கள். நீங்கள் துயரப்படும்போது மனைவி அருகில் வந்து உங்கள் தலையைப் பிடித்துவிடுகிறார். உடலைப் பிடித்துவிடுகிறாள். மிகமிக அன்புடன் அதைச் செய்யும்போது உங்களுக்கு தொந்தரவு தருவதில்லை. எந்த சிரமத்தையும் அப்போது அவள் ஏற்படுத்துவதில்லை. கூடுதலாக வைர நகைகளோ, காரோ கேட்பதில்லை. நீங்கள் துயரப்படும்போது பல ஆதாயங்கள் கிடைக்கின்றன. மனைவி கார் கேட்கப் போகிறாளோ என்று நீங்கள் அச்சப்படக்கூடும். புது வருடம் வரப்போகிறது. சந்தைக்கு புதிய மாடல்கள் வரப்போகின்றன என்பதால் நீங்கள் அச்சம் கொள்கிறீர்கள். துயரத்தில் இருப்பது பொருளாதாரச் சிக்கனம் தருகிறது. தலைவலியுடன் சேர்ந்த வயிற்றுவலியுடன் வாடிய முகத்துடன் வீடு

திரும்புகிறீர்கள். அப்போது மனைவி புதிய கார் கேட்கும் துணிவு பெற மாட்டாள். அந்த வகையான துன்பத்தில் நீங்கள் இருக்கிறீர்கள்.

அக்கம் பக்கத்தைப் பாருங்கள். பள்ளி வாகனம் வரும்போது குழந்தைகளுக்கு வயிற்று வலி தோன்றுகிறது. அது ஏன் என்று உங்களுக்குத் தெரியும். ஜானிக்கு ஏன் வயிறு வலிக்கிறது என்று உங்களுக்குத் தெரியும். நீங்களும் அப்படித்தான் நடந்து கொள்கிறீர்கள். பெரிய வித்தியாசம் எதுவுமில்லை. கொஞ்சம் நுட்பமாக, தந்திரமாக, அறிவுபூர்வமாக நடந்து கொள்கிறீர்கள். ஆனால் செய்கை என்னவோ ஒன்றுதான்.

வாழ்வில் தோல்வியடையும்போது ஜனங்கள் மாரடைப்பு, இரத்த அழுத்தம் போன்ற பல நோய்களுக்கு ஆளாகிறார்கள். அவை பகுத்தறிவு சார்ந்தவை. நீங்கள் என்ன செய்ய முடியும்? அதை நீங்கள் கவனித்ததுண்டா? மாரடைப்பு, இரத்த அழுத்தம் போன்றவை. ஏகதேசம் நாற்பத்து இரண்டாவது வயதில்தான் வருகின்றன. ஏன் அப்படி நாற்பத்து இரண்டை நெருங்கும்போது வருகின்றன? ஆரோக்கியமான ஒருவர் சட்டென்று மாரடைப்புக்கு ஆட்படுகிறார்.

குறிப்பிட்ட ஒரு தீர்மானத்துக்கு வரவேண்டிய வயதாக நாற்பத்து இரண்டு இருக்கிறது. நீங்கள் வெற்றி பெற்றீர்களா, தோற்றுப் போனீர்களா என்று முடிவு செய்யும் காலகட்டம். அதன் பிறகு நம்பிக்கை அதிகமில்லை. உங்களுக்கும் பணம் தேவை என்றால் அதை சம்பாதித்துவிட வேண்டும் என்று அர்த்தம். நாற்பத்து இரண்டு வயது நெருங்கும்போது சம்பாதித்துவிட வேண்டும். திறமையும், சக்தியும் நிறைந்த சிறந்த நாட்கள் கழிந்துபோய் விட்டன. முப்பத்து ஐந்து வயது உச்சகட்டம் ஆகும். இன்னும் ஏழு ஆண்டுகள் நன்கு செயல்பட முடியும். அந்த ஏழு ஆண்டுகளில் சக்தி மங்கிப்போகும் பாதையில் நடக்கத் துவங்கிவிட்டதாக அர்த்தம். ஆனாலும் உங்களால் முடிந்த எல்லாவற்றையும் செய்ய இயலும். நாற்பத்து இரண்டாவது வயது வந்ததும் சட்டென்று நீங்கள் தோற்று விட்டதைக் காண்பீர்கள்.

இப்போது அறிவுபூர்வமான சிந்தனை தேவை. திடீரென்று மாரடைப்பு வந்துவிட்டது. வாழ்க்கை தந்த பெரிய வரம், ஆசீர்வாதம் அது. படுக்கையில் விழுந்து விட்ட நீங்கள் இப்படிச் சொல்கிறீர்கள். "நான் என்ன செய்யட்டும்? மாரடைப்பு எல்லாவற்றிற்கும் இடையூறாக இருக்கிறது. சகலமும் சரியாக நடந்து கொண்டிருந்தன. நான் வெற்றி பெறும் சமயத்தில், பணமும், புகழும் சம்பாதிக்கும் நேரத்தில் இந்த மாரடைப்பு வந்துவிட்டது" இப்போது இந்த

மாரடைப்பு ஒரு அழகான பாதுகாப்புக் கவசம். இனி நீங்கள் தவறு செய்துவிட்டதாக யாரும் சொல்லமுடியாது. கஷ்டப்பட்டு இனி உழைக்கத் தேவையில்லை. போதுமான அளவு புத்திசாலித்தனத் துடன் நடந்து கொள்ளவும் வேண்டியதில்லை. இனி அப்படி யாரும் எதுவும் சொல்லமுடியாது. மக்கள் உங்கள் மீது இரக்கம் காட்டு வார்கள். அவர்கள் எல்லோரும் உங்களை மதிப்பார்கள். "நீங்கள் என்ன செய்யமுடியும். எல்லாம் தலைவிதி" என்பார்கள்.

துன்பத்தைத் திரும்பத் திரும்பத் தேர்வு செய்யக் காரணம், அது உங்களுக்கு எதையோ தருகிறது. அது எதைத் தருகிறது என்று நீங்கள் கண்டுகொள்ள வேண்டும். அப்போதுதான் அதை உதறித் தள்ள முடியும். இல்லாதுபோனால் உதற முடியாது. அது தரும் ஆதாயங் களை உதறித் தள்ள முடியாது போனால் துன்பங்களை உதறவும் உங்களால் இயலாது.

நவீனமான தடுப்புக் காவல் விடுதியின் காப்பாளரைச் சந்தித்தார் ஒரு பத்திரிகையாளர். தனது முன்மாதிரி விடுதிபற்றிக் காப்பாளர் கூறினார்.

"மகனே! சிறைச்சாலைகளில் இது புதுமையானது. இது வெற்றிகரமாக அமையுமானால் இந்த முறையை எல்லா சிறைச் சாலைகளும் பின்பற்றும்."

"பூப்பந்து விளையாடும் இடமும், நீச்சல் குளமும் இங்கே இருப்பதை நான் கவனித்தேன்" என்றார் பத்திரிகையாளர்.

"சுவரின் ஒரு கோடியில் இருந்து மறுகோடி வரையில் எல்லா அறைகளிலும் தரைவிரிப்புகள் போடப்பட்டுள்ளன. அவற்றை நாங்கள் சிறைக்கொட்டில் என்று கூறுவதில்லை. தனிஅறை என்று அழைக்கிறோம்."

"ஒவ்வொரு அறையிலும் அழகான வண்ணத் தொலைக்காட்சி பெட்டிகள் இருப்பதைக் கண்டேன்."

"அது மட்டுமல்ல. பிரும்மாண்டமான ஒரு கலையரங்கமும் உள்ளது. ஒவ்வொரு வாரமும் புகழ்பெற்ற மனிதர்கள் வந்து நிகழ்ச்சிகள் நடத்துகிறார்கள்."

"உணவுக்கூடத்தின் சுவர்களில் வர்ண ஓவியங்கள் தீட்டப் பட்டுள்ளனவே?"

"உணவுவிடுதியின் வரவேற்பறையைச் சொல்கிறீர்கள். சிறைக் கைதி வறுத்த இறைச்சி வேண்டும் என்று உத்தரவிட்டால்

அது உடனே கிடைக்கும். சமையல் கலைஞரின் உணவுகள் நேர்த்தியாக இருக்கும்."

"நான் இங்கே கவனித்த வியப்பான விஷயம் என்னவென்றால், கைதிகளை அடைத்துவைக்க கம்பிக் கதவுகளோ, வேலிகளோ இல்லை. காவலர்களும் இல்லை என்றே கூறலாம்" என்றார் பத்திரிகையாளர்.

"யாரும் தப்பிச் செல்ல விரும்புவதில்லை என்பதால் அவ்வாறு உள்ளது" என்று புன்னகைத்தார் விடுதிக் காப்பாளர்.

"நான் இந்த ஓய்வு இல்லத்திற்கு வந்து தங்க வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்?" என்று வினவினார் பத்திரிகையாளர்.

சிறைச்சாலைகள் அருமையான வகையில் இருந்தால் யார் தப்பியோட எண்ணுவார்கள்? நீங்கள் உங்களது சிறைகளில் இருந்து தப்பிவிட விரும்பவில்லை என்றால், கவனியுங்கள். அங்கே ஏதோ இருக்கிறது. மறுகோடி வரையிலும் விரிக்கப்பட்ட தரைவிரிப்பு, வண்ணத் தொலைக்காட்சிப் பெட்டி, குளிர்சாதனப் பெட்டி, அழகான ஓவியங்கள் உள்ளன. கம்பிக் கதவு, காவலர்கள் இல்லை. இது முழுமையான சுதந்திர உணர்வைத் தருகிறது. அதன் பிறகு ஏன் நீங்கள் தப்ப விரும்புவீர்கள்?

பத்திரிகையாளர் சொன்னது சரிதான். "இந்த ஓய்வு இல்லத்திற்கு வருவதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று அவர் கேட்கிறார். இங்கிருந்து எப்படி வெளியேறுவது என்று அவர் கேட்கவில்லை. உள்ளே வருவது எப்படி என்று கேட்கிறார். உங்கள் துன்பங்களை மறுபடியும் கவனித்து உணருங்கள். ஆரம்பம் முதலே அவற்றை நிந்திக்காதீர்கள். அவ்வாறு குற்றம் சொன்னால் உங்களால் கவனித்துப் பார்க்க இயலாது. உள்வாங்கிக்கொள்ள முடியாது. சொல்லப்போனால், அதை துயரம் என்று கூறவும் வேண்டாம். நமது சொற்களில் மறைபொருளான அர்த்தங்கள் இருக்கின்றன.

அதைத் துன்பம் என்று கூறினால் நீங்கள் ஏற்கனவே குற்றம் சாட்டிவிட்டதாக ஆகிறது. குற்றம் சாட்டும்போது நீங்கள் அதன் அருகே போகிறீர்கள். ஆனால் அதைக் கவனிப்பதில்லை. அதை துன்பம் என்று கூறவேண்டாம். வேறு ஏதாவது ஒரு பெயர் சொல்லுங்கள். அவ்வாறு புதிய பெயரில் அழைக்கும்போது அது பெரிய வித்தியாசத்தை ஏற்படுத்துகிறது. கணிதக் குறியீடு போல அதனை எக்ஸ் x என்று சொல்லுங்கள். எப்படிப்பட்ட சூழ்நிலையாக இருந்தாலும் அதில் நுழைந்து என்ன இருக்கிறது என்று பாருங்கள்.

அதன் ஆதாயங்கள் என்ன என்று கவனியுங்கள். முக்கியச் செயல் பாடுகள் என்ன? அவற்றை ஏன் உருவாக்குகிறீர்கள்? ஏன் அவற்றைப் பிடித்துக் கொண்டு தொங்குகிறீர்கள்? பார்த்து நீங்கள் வியந்து போவீர்கள். துன்பம் என்று சொல்லப்படுவதில் நீங்கள் நேசிக்கும் பல விஷயங்கள் இருப்பதைக் காண்பீர்கள்.

இதை நீங்கள் கவனித்து அறியாதுபோனால் நீங்கள் விரும்பும் பல விஷயங்கள் அங்கு இருப்பதை உணராது போனால் உங்களால் எதையும் மாற்றிக் கொண்டுவிட முடியாது. அதன் பிறகு இரண்டு சாத்தியங்கள்தான் இருக்கின்றன. ஒரு சாத்தியக்கூறு, நீங்கள் துன்பங்களில் இருந்து விடுபடுவது பற்றிய எண்ணத்தை நிறுத்திக் கொள்வது. ஏனென்றால், நீங்கள் பெறும் ஆதாயங்கள் அபார மானவை. அவற்றை ஏற்றுக் கொள்கிறீர்கள். துயரங்களை நீங்கள் ஏற்றுக் கொள்வது அதன் மறுவிளைவுதான். இரண்டாவது சாத்தியம், துயரங்களை நீங்கள் உருவாக்குகிறீர்கள் என்பதைக் கண்டறிவதாகும். விழிப்புணர்வற்ற விருப்பங்களால் அவை ஏற்படுகின்றன. அந்த விழிப்புணர்வற்ற ஆசைகள் முட்டாள்தனமானவை. அதில் உள்ள முட்டாள்தனம் முழுவதையும் கண்டுகொண்டு விட்டால் அதன் பின்னர் அதற்கு ஆதரவு அளிக்கமாட்டீர்கள். அது தானே மறைந்து விடும். இரண்டு வகை சாத்தியங்கள் உள்ளன. உங்கள் ஒத்துழைப்பு அகலும்போது துயரம் மறைகிறது. அல்லது துயரங்களை அங்கீகரிக் கலாம். அது உங்களுக்கு அளிப்பவற்றை நீங்கள் விரும்புகிறீர்கள். அதை வரவேற்கிறீர்கள். அந்த வரவேற்பின்போது துயரம் மீண்டும் காணாமல் மறைகிறது.

ஒரு நாணயத்துக்கு இரண்டு பக்கங்கள் இருக்கின்றன. ஆனால் புரிதல் வேண்டும். உங்கள் துயரங்களை முழுமையாகப் புரிந்து கொள்ளும்போது நீங்கள் மாற்றம் பெறுகிறீர்கள். அந்த புரிதல் மூலமாக சகலத்தையும் உதறித் தள்ளுகிறீர்கள் அல்லது எல்லா வற்றையும் அங்கீகரிக்கிறீர்கள். இவையே இரண்டு வகையான வழி முறைகளாகும். மாற்றம் ஏற்படுவதற்கான எதிர்மறை, நேர்மறை வழிகளாகும்.

**ம**த்திய மேற்குப் பிரதேசத்தில் இருந்த டாக்ஸோனியா என்ற சிறிய நகருக்குச் சென்ற பெர்னி அங்கு வசித்த தனது உறவினர் டெல்பர்டைச் சந்தித்துப் பேசினார்.

"நான் இந்த நகரை வெறுக்கிறேன். வெறுப்பின் மீது பிரியம் காட்டுகிறேன்" என் கூறினார் டெல்பர்ட்.

"என்ன காரணம்?" என்று கேட்டார் பெர்னி.

"வரிவிதிப்பு முறைதான். மற்ற நகரங்களைக் காட்டிலும் நாங்கள் அதிகமாக வரிகட்ட வேண்டியுள்ளது. அந்த வரிவிதிப்பை நான் வெறுக்கிறேன்" என்று விளக்கம் தந்தார் டெல்பர்ட்.

"அரசாங்கத்தை நடத்த வரிகள் தேவைதான்" என்று வாதிட்டார் பெர்னி.

"இங்கே வரி மிகவும் அதிகம். பெரும்பாலும் நகரில் ஒற்றை மாடிக் கட்டிடங்கள் மட்டுமே இருப்பதை நீங்கள் கவனித்தீர்களா? ஒரு மாடிக்கும் மேலே போனால் கூடுதல் வரி கட்ட வேண்டும்."

"அதெல்லாம் மோசமான விஷயம் என்று சொல்ல முடியாது" என்று வாதிட்டார் பெர்னி.

"மேலும் வீடுகளின் முன்புறம் புல்வெளி இருப்பதைக் கண்டீர்களா?"

"ஆம். வெகுசில வீடுகளில்தான் இருக்கிறது என்பதை ஒப்புக் கொள்கிறேன்.

"காரணம், புல்வெளிகளுக்கும் வரி உண்டு.

"அடுக்குமாடிக் கட்டிடங்களுக்குக் கீழே ஆங்காங்கே புல்வெளிகள் தென்படுகின்றனவே அவை என்ன?"

"மரணவரி கட்டியவர்களைப் புதைக்கும் கல்லறைத் தோட்டம் அது."

"நீங்கள் இந்த நகரை அதிகம் வெறுக்கிறீர்கள் என்றால் ஏன் வெளியேறிவிடக் கூடாது?"

"நான் குடிப்பெயர்வு மற்றும் போக்குவரத்து வரிகள் கட்ட இஷ்டப்படவில்லை."

உங்கள் துயரங்களைக் கவனித்துப் பாருங்கள். அவற்றை தக்க வைத்துக் கொள்வது நல்லது என்றால் அவற்றை அங்கீகரியுங்கள். முழுமனதுடன் ஏற்றுக் கொள்ளுங்கள். இல்லாதுபோனால் அவற்றைத் தக்கவைத்துக் கொள்வதில் பயனில்லை. அந்த தெளிவான உணர்தல் மூலம் அது அகல்கிறது.

**கடைசிக் கேள்வி**

**ஓஷோ,**

**பெண் பாலுறவு இச்சைகளைத் தீவிரமாக ஆட்சேபித்தாலும் ஆண்களைக் கவரும் வகையில் நடந்துகொள்ள ஏன் முயல் கிறார்கள்?**

அதில் ஒரு அரசியல் சாணக்கியத்தனம் இருக்கிறது. பெண்கள் கவர்ச்சியாக விளங்க விரும்புகிறார்கள். காரணம், அது ஆற்றல் தருகிறது. எந்த அளவு கவர்ச்சியாக இருக்கிறார்களோ அந்த அளவுக்கு ஆண்கள்மீது ஆதிக்கம் செலுத்தமுடியும். ஆதிக்கம் செலுத்த விரும்பாதவர் யார் இருக்கிறார்கள்? ஜனங்கள் ஆதிக்கம் பெறுவதற் காகவே வாழ்நாள் முழுவதும் போராடுகிறார்கள்.

நீங்கள் ஏன் பணத்தை விரும்புகிறீர்கள்? அது அதிகாரம் தருகிறது. நீங்கள் ஏன் பிரதமராகவோ அல்லது ஜனாதிபதியாகவோ பதவிபெற்றிட விரும்புகிறீர்கள்? அது அதிகாரம் தருகிறது. நீங்கள் ஏன் மரியாதையை, கௌரவத்தை விரும்புகிறீர்கள்? அது அதிகாரம் அளிக்கிறது. நீங்கள் ஏன் துறவியாக மாறிட விரும்புகிறீர்கள்? அது அதிகாரம் தருகிறது.

மக்கள் பல்வேறு வழிகளில் அதிகாரத்தைத் தேடியலை கிறார்கள். பெண்கள் அதிகாரம் பெறுவதற்கான எந்த ஆதார ஊற்றுக் கண்ணையும் நீங்கள் விட்டுவைக்கவில்லை. அவர்களுக்கு ஒரே வடிகால்தான் இருக்கிறது. அது அவர்கள் உடல்தான். அதனால்தான் அவர்கள் தொடர்ந்து கவர்ச்சிகரமாக இருப்பதில் ஆர்வம் காட்டு கிறார்கள். நவீனகாலத்துப் பெண்கள் கவர்ச்சியாக இருப்பதில் அதிக அக்கறை காட்டுவதில்லை என்பதை நீங்கள் கண்டதில்லையா? அது ஏன்? ஏனென்றால், அவர்கள் வேறுவிதமான அதிகார அரசியலில் இறங்கிவிட்டார்கள். நவீனப் பெண்மணி பழமைத் தளைகளில் இருந்து விடுபட்டுக் கொண்டிருக்கிறாள். பல்கலைக் கழகங்களில் பட்டம் பெறுவதற்காக அவள் ஆண்களுடன் போராடு கிறாள். சந்தைகளில் போட்டியிடுகிறாள். அரசியலில் போட்டி போடுகிறாள். கவர்ச்சியாகக் காட்சியளிக்க வேண்டும் என்பதில் அதிக அக்கறை கொள்வதில்லை.

ஆண்கள் அழகாகத் தெரியவேண்டும் என்பதற்காக அதிகம் அலட்டிக் கொள்வதில்லை. ஏன்? அது முற்றிலும் பெண்களுக்காக ஒதுக்கப்பட்ட ஒரு விஷயம். அதிகாரம் சிறிது பெறுவதற்கான

பெண்களின் ஆதார ஊற்றுக்கண் அது. ஆண்களுக்கு வேறு ஆதார ஊற்றுக்கண் உள்ளன. கவர்ச்சி தேடுவது பெண்மைத்தன்மை கொண்ட சிறுபிள்ளை விளையாட்டு. அது பெண்களுக்கானது.

இதுபோலவே எப்போதும் இருந்ததில்லை. ஆண்களைப் போலவே பெண்களும் முன்னொரு காலத்தில் சுதந்திரமாக இருந் தார்கள். கவர்ச்சிகரமாகக் காட்சியளிப்பதில் பெண்களை விடவும் ஆண்கள் அதிகம் அக்கறை எடுத்துக் கொண்டார்கள். கிருஷ்ணரைப் பாருங்கள். அவரது படங்களில் அழகான பட்டாடை அணிந்து, கையில் புல்லாங்குழலுடன், எல்லா வகையான அலங்கார ஆபரணங் களையும் தரித்துக்கொண்டு, காதணிகள் ஊசலாட, மயிலிறகுக் கிரீடம் சூடிக்கொண்டு இருப்பார். அவரைப் பாருங்கள்! மிகவும் அழகாகக் காட்சியளிப்பார்.

ஆண்களும், பெண்களும் தாங்கள் விரும்பியதைச் செய்யும் சுதந்திரம் பெற்றிருந்த நாட்களாக அவை இருந்தன. அதன் பிறகு ஒரு நீண்ட இருண்ட காலம் வந்தது. பெண்கள் அடக்கி வைக்கப் பட்டார்கள். நீங்கள் துறவிகள், மதகுருக்கள் என்று அழைக்கும் மனிதர்களின் கைங்கரியத்தால் அவ்விதம் நடந்தது. உங்கள் துறவிகள் எப்போதும் பெண்களைக் கண்டு அச்சம் கொள்கிறார்கள். காரணம், பெண்கள் அதிகாரம் பெற்றவர்களாகக் காட்சியளிக் கிறார்கள். பெண்கள் அதிக அளவில் அதிகாரம் பெற்றிருந்ததால், துறவிகளின் துறவறத்தை அவர்களால் சில நிமிடங்களில் அழித்து விட முடியும் என்று கருதினார்கள்.

ஒரு தாய் தனது மகனை அறிவாளியாக்க இருபத்தைந்து ஆண்டுகள் பாடுபடுகிறாள். ஒரு பெண்பிள்ளை வந்து அவனை இரண்டே நிமிடத்தில் முட்டாளாக்கி விடுகிறாள் என்று சொல்லப் படுகிறது. அதனால்தான் மருமகள்களைத் தாயால் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை. அது ஒருபோதும் முடியாது! வயதான அந்த எளியவள் மகனுக்கு இருபத்தைந்து வருடம் பாடுபட்டுச் சிறிது அறிவூட்டுகிறாள். ஆனால் இரண்டே நிமிடங்களில் எல்லாம் காணாமல் போய்விடுகிறது. அந்த பெண்ணை அவளால் எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்?

அதனால்தான் உங்கள் துறவிகள் பெண்களை நிந்திக்கிறார்கள். பெண்களைக் கண்டு அவர்கள் அச்சம் கொள்கிறார்கள். பெண்கள் அடக்கி வைக்கப்பட வேண்டும் என்று நினைக்கிறார்கள். வாழ்க்கை போராட்டத்தின் அனைத்து ஊற்றுக் கண்களும் அடைக்கப்படு கின்றன. வாழ்க்கை நீரோட்டம் தடுக்கப்படுகிறது. பெண்கள் அடக்கி

வைக்கப்பட்டு விடுகிறார்கள். அதன் பிறகு ஒரு விஷயம் மட்டுமே மிச்சமிருக்கிறது. அதுதான் பெண்களின் உடல் அழகு. அதை வைத்துக் கொண்டு அவர்கள் களத்தில் இறங்குகிறார்கள்.

"ஆண்கள் பார்வையில் அழகாகத் தெரிய வேண்டும் என்று ஏன் பெண்கள் விரும்புகிறார்கள்?" என்று கேட்கிறீர்கள். அவர்களிடம் உள்ள ஒரே அதிகாரப் பாதை அதுதான். எனவே அப்படிச் செய்கிறார்கள். அதிகாரம் பெற்றிட யார்தான் விரும்பமாட்டார்கள்? அதிகாரம் பெறுவதே துயரத்தைக் கொண்டுவருகிறது, அதிகாரம் அழிவைத் தரக்கூடியது, வன்முறையானது என்று புரிந்து கொள்ளாத வரையில், புரிதல் மூலமே அதிகாரம் தேடும் ஆசை அகலும் என்று உணராத வகையில், யார்தான் அதிகாரம் பெற்றிட ஆசைப்பட மாட்டார்கள்?

"ஆண்களின் கண்களுக்கு அழகாகத் தோன்ற விரும்பும் பெண்கள் ஏன் பாலுறவு இச்சையை மட்டும் தீவிரமாக ஆட்சேபிக்கிறார்கள்?" என்று கேட்கிறீர்கள். பழைய அதே காரணம்தான். குதிரைக்கு முன்னால் காரட் கிழங்கை வைத்து ஆசை காட்டுவது போல உங்களுக்கு முன்னால் அவள் தோன்றுகிறாள். கையில் அகப்படுவது போலிருக்கும். ஆனால் அகப்படுவதில்லை. அருகில் செல்லச்செல்ல விலகிப் போய்விடுவாள். அப்போதுதான் அவள் அதிகாரம் படைத்து வாழ முடியும். அவள் உடனே உங்கள் மடியில் விழுந்துவிட்டால், அதிகாரம் காணாமல் போய்விடும். அவளது காமஇச்சையை நீங்கள் சுயநலத்திற்குப் பயன்படுத்திக் கொண்டால், ஒருமுறை அவளைப் பயன்படுத்திக்கொண்டபிறகு அவள் விஷயம் முடிந்து போய்விடுகிறது. உங்கள்மீது அவளுக்கு எந்த அதிகாரமும் இருப்பதில்லை. எனவே அவள் உங்களைக் கவர்கிறாள். ஆனாலும் விலகி நிற்கிறாள். அவள் உங்களைக் கவர்கிறாள். உசுப்புகிறாள். மயக்குகிறாள். நீங்கள் நெருங்கிச் செல்லும் சமயத்தில் அலட்சியமாக மறுத்துவிடுகிறாள்.

அந்தத் தர்க்கம் எளிமையானது. அவள் ஒப்புதல் தந்தால், அவளை ஒரு இயந்திர நிலைக்குத் தரம் தாழ்த்தி விடுகிறீர்கள். நீங்கள் அவளைப் பயன்படுத்திக் கொள்கிறீர்கள். வேறுயாரும் அவளைப் பயன்படுத்தச் சம்மதிப்பதில்லை. அதிகார அரசியலின் மறுபக்கம் இது. அதிகாரம் என்பது பிறரைப் பயன்படுத்திக் கொள்வதாகும். வேறு யாராவது உங்களைப் பயன்படுத்தும்போது உங்கள் அதிகாரம் பறிபோகிறது. அதிகாரமற்றவராகத் தாழ்ந்து போகிறீர்கள்.

தன்னைப் பிறர் பயன்படுத்திக் கொள்வதைப் பெண் விரும்புவதில்லை. காலங்காலமாக இந்த காரியத்தைத்தான் நீங்கள் செய்து கொண்டிருக்கிறீர்கள். காதல் என்பது ஒரு அசிங்கமான விஷயமாகி விடுகிறது. அது பெரும் மகிமை பொருந்தியதாக இருக்க வேண்டும். ஆனால் அப்படி இல்லை. ஏனென்றால், ஆண் அந்தப் பெண்ணைப் பயன்படுத்துகிறான். அதை அவள் ஆட்சேபிக்கிறாள். எதிர்க்கிறாள். ஒரு போகப்பொருளாக மாறுவதை அவள் விரும்பவில்லை.

அதனால்தான் ஆண்கள் தங்கள் மனைவியிடம் வாலைக் குழைக்கிறார்கள். பெண்கள் இந்த அசட்டுத்தனத்திலிருந்து மேம்பட்டவர்கள், உயர்ந்தவர்கள் என்பது போல காட்டிக் கொள்கிறார்கள். அசிங்கமான அந்த உடல் உறவில் தங்களுக்கு ஆர்வமில்லை என்பது போல நடிக்கிறார்கள். உங்களைப் போலவே அதில் அவர்களுக்கும் ஆர்வம் இருக்கிறது. பிரச்சினை என்னவென்றால், அவர்கள் தங்கள் ஆர்வத்தை வெளிக்காட்டுவதில்லை. காட்டினால், உடனே நீங்கள் அவர்களை அதிகாரமற்றவர்களாக்கிக் கீழே இறக்கிவிடுவீர்கள். அவர்களைப் பயன்படுத்தத் தொடங்கிவிடுவீர்கள்.

அவர்கள் எல்லாவற்றின் மீதும் ஆசை வைக்கிறார்கள். உங்கள் கண்களுக்குக் கவர்ச்சிகரமாகத் தோன்றியும், உங்களை நிராகரித்தும் அதைச் செய்கிறார்கள். அதிகார ருசி அதுதான். உங்களைக் கவர்கிறார்கள். கயிறுகட்டி இழுப்பதுபோல இழுபடுகிறீர்கள். அதன் பிறகு உங்களை நிராகரிக்கிறார்கள். உங்களை முற்றிலும் அதிகாரமற்றவராகத் தரம் தாழ்த்துகிறார்கள். பிறகு நீங்கள் நாய்போல வாலாட்டுகிறீர்கள். பெண் அதில் மகிழ்ச்சி கொள்கிறாள்.

அது ஒரு அசிங்கமான நிலை. அது அப்படித்தான் இருக்க முடியும். அது அசிங்கமானது ஏன் என்றால், காதல் என்பது அதிகார அரசியல் நிலைக்கு தாழ்ந்துவிட்டது. அது மாறவேண்டும். நாம் புதிய ஒரு மனித சமுதாயத்தை உருவாக்க வேண்டும், புதிய உலகத்தைப் படைக்கவேண்டும். அங்கு அதிகாரத்தின்முன்னே காதல் ஒரு கேள்விக்குறியாக இருந்திடலாகாது. குறைந்தபட்சம் அதிகார அரசியலில் இருந்து காதலை விடுபட வையுங்கள். பணத்தை விட்டு விடுங்கள். அரசியலை விட்டுவிடுங்கள். எல்லாம் அங்கே இருக்கட்டும். அங்கிருந்து காதலை மட்டும் அகற்றிவிடுங்கள்.

காதல் என்பது பெருமதிப்புக் கொண்டது. சந்தைக் கடைப் பொருளாக அதை மாற்றாதீர்கள். ஆனால் அதுதான் நடந்து கொண்டிருக்கிறது.

**அ**யல்தேசத்துப் பாலைவனத்தில் முகாமிட்டிருந்த படைப் பிரிவில் வந்து சேர்ந்த ஒரு புதிய ராணுவ வீரன் தனது குழுவின் அதிகாரியிடம், பொழுதுபோக்கிற்கு ஆண்கள் என்ன செய்கிறார்கள் என்று கேட்டான்.

அதிகாரி புன்னகைத்தார். "நீயே பார்க்கப் போகிறாய்" என்றார்.

புதிய வீரன் குழம்பிப் போனான். "இந்த முகாமில் நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் இருக்கிறார்கள். ஒரு பெண்ணும் கண்ணில் தட்டுப்படவே இல்லை" என்றான்.

"பொறுத்திருந்து பார்" என்று பதில் தந்தார் அதிகாரி மீண்டும்.

அன்று பிற்பலில் முன்நூறு ஒட்டகங்கள் ஆடுமாடுகள் அடைக்கும் பட்டியில் அடைக்கப்பட்டன. சமிக்ஞை கிடைத்ததும் வீரர்கள் வீறுகொண்டனர். பட்டிக்குள் நுழைந்து ஒட்டகங்களுடன் உறவுகொள்ளத் தொடங்கினார்கள்.

அணித்தலைவர் வேகமாக செல்வதைக் கண்ட புதிய வீரன் அவர் கையைப் பிடித்து இழுத்து நிறுத்தினான். "நீங்கள் சொன்னதன் அர்த்தம் புரிந்தது. முன்நூறு ஒட்டகங்கள் உள்ளன. மனிதர்கள் நூறு பேர்தான் இருக்கிறார்கள். பிறகு ஏன் எல்லோரும் அவசரமாக ஓடுகிறார்கள்? நிதானமாகப் போகலாம் அல்லவா? அவசரம் ஏன் என்றுதான் புரியவில்லை" என்றான்.

படைத்தலைவர் திகைப்புடன், "என்ன? அசிங்கப்பட்டுப் போன ஒன்றை யார் பயன்படுத்துவார்கள்?" என்று கேட்டார்.

**அ**சிங்கமான ஒன்றில் சிக்கிக்கொள்ள யாரும் விரும்புவதில்லை. அது ஒட்டகமாக இருந்தாலும் சரி. எனவே அசிங்கப்பட்ட பெண்ணிடம் அகப்பட யார்தான் விருப்பம் கொள்வார்கள்? பெண் அழகாக இருக்க எல்லா வகையிலும் முயல்கிறாள். குறைந்தபட்சம் அழகாகக் காட்டிக் கொள்ளவேண்டும் எண்ணுகிறாள். ஒருமுறை அவள் கவர்ச்சியில் அகப்பட்டுக் கொண்டால், அவள் உங்களிடமிருந்து தப்பிச் செல்லத் துவங்கிவிடுவாள். காரணம், விளையாட்டே அதுதான். நீங்கள் அவளிடமிருந்து தப்பிச் செல்லத் தொடங்கினால் அவள் உங்களிடம் நெருங்கி வருவாள். உங்களைப் பின்தொடர்வாள். அவளை நீங்கள் பின்பற்றும் தருணத்தில் அவள் தப்பிச் செல்ல ஆரம்பிப்பாள். அது ஒரு விளையாட்டு. அது காதல் அல்ல. அது மனிதத்தன்மையற்ற செயல். ஆனால் அப்படித்தான் நடந்து

கொண்டிருக்கிறது. காலங்காலமாக நடந்துவருகிறது. எனவே எச்சரிக்கையாக இருங்கள்.

குறைந்தபட்சம் எனது கருத்துப் பரிமாற்றக் குழுவிலாவது அது மறைய வேண்டும். ஒவ்வொரு மனிதருக்கும் கௌரவம் உண்டு. யாரும் அதை விற்பனைப்பொருளாக மாற்றக்கூடாது. ஆணை மதியுங்கள். பெண்ணையும் மதியுங்கள். அவர்கள் எல்லோரும் தெய்வீகமானவர்கள்.

ஆண் என்பவன் பெண்ணிடம் உறவு கொள்ளவேண்டும் என்ற பழைய கருத்தை மறந்துவிடுங்கள். அது மிகவும் முட்டாள் தனமானது. ஆண் என்பவன் ஆதிக்கவாதியாகவும், பெண் அவன் செயலுக்கு உடன்படும் பொருளாகவும் இருப்பதுபோல அது அமைகிறது. மொழிசார்ந்த வார்த்தை அமைப்பு உறவில் ஈடுபடும் ஆண் ஆதிக்கப் பங்களிப்பாளராக இருக்கிறான். பெண் அதற்கு இணங்கி அடங்கிப்போகிறவளாக இருக்கிறாள். அது உண்மை அல்ல. இருவரும் ஒருவருடன்ஒருவர் உறவு கொள்கிறார்கள். இருவரும் ஆதிக்கவாதிகளாக இருக்கிறார்கள். இருவரும் பங்களிப் பாளர்கள். பெண் தனது சுயமான வழியில் செயல்படுகிறாள். அடங்கி நடத்தல் அவளது பங்களிப்பு முறையாகும். ஆனால் அது ஆணைவிடவும் அதிகமான பங்களிப்பாகும்.

பெண்ணுக்காகப் பெரிதாக ஏதோ செய்வதாக எண்ணிக் கொள்ள வேண்டாம். அவளும் உங்களுக்காக ஏதோ பதிலுக்குச் செய்கிறாள். இருவரும் ஒருவருக்கொருவர் மதிப்புமிக்க ஒன்றைத் தருகிறார்கள். மற்றவருக்கு நீங்கள் உங்களைத் தருகிறீர்கள். ஒருவருக்கு ஒருவர் தந்து கொள்கிறார்கள். ஒருவர் சக்தியை ஒருவர் பகிர்ந்து கொள்கிறார்கள். நீங்கள் இருவரும் காதல் கோவிலில் தங்களை அர்ப்பணித்துக் கொள்கிறார்கள். காதல் கடவுள் சந்நிதானத் தில் அர்ப்பணித்துக் கொள்கிறார்கள். அந்த காதல் கடவுள் இருவரை யும் வசப்படுத்தி வைத்திருக்கிறது. அது ஒரு புனிதமான தருணம். நீங்கள் புனித பூமியில் நடந்துகொண்டிருக்கிறீர்கள். மனிதர்களின் நடவடிக்கைகளில் முற்றிலும் வித்தியாசமான தன்மைகள் அமைந் துள்ளன.

அழகாக இருப்பது நல்லதுதான். அழகாகக் காட்சியளிப்பது அசிங்கமானது. கவர்ச்சியாக இருப்பது நல்லது. கவர்ச்சி காட்ட முயல்வது அசிங்கமானது. முயற்சிசெய்வது தந்திரச் செயல். மனிதர்கள் இயல்பாகவே அழகானவர்கள். மேற்பூச்சு அலங்காரங்கள்

தேவையில்லை. மேற்பூச்சுகள் எல்லாம் அசிங்கமானவை. அது உங்களை மேலும் மேலும் அசிங்கமாக மாற்றுகிறது. எளிமையும், கபடமற்ற குணமும் அழகானவை. இயல்பாகவும், தன்னிச்சை யாகவும் இருப்பது அழகானது. நீங்கள் அழகாக இருந்தால் அந்த அழகை அதிகார அரசியலாக்காதீர்கள். அது அபச்சாரமானது. தெய்வ நிந்தனை போன்றது.

அழகு என்பது இயற்கையின் கொடை. அதைப் பகிர்ந்து கொள்ளுங்கள். ஆதிக்கம் செலுத்த அதை எந்த வழியிலும் பயன் படுத்த வேண்டாம். உங்கள் அழகு தெய்வீகமானதாக மாறவேண்டும். உங்கள் அழகு இயற்கையின் சமர்ப்பணமாகும்.

இன்று இவ்வளவு போதும்.

## அத்தியாயம் - 5

### முதல் கேள்வி

**ஓஷோ,**

**உங்கள் முக்கியமான தீர்மானம் ஆன்மீக வளர்ச்சிதான்; மனோ வளர்ச்சியல்ல என்கிறீர்கள். அவை இரண்டுக்கும் இடையிலுள்ள வேறுபாடு என்ன?**

மனிதன் ஒரு மூன்று மாடிக்கட்டிடம் போன்றவன். உடல், மனம், ஆன்மா ஆகியவையே அந்த மாடிகள். உடலுக்கு உடல் மட்டுமே சொந்தம். மனதிற்கு உடலும், மனமும் உண்டு. ஆன்மாவுக்கு உடல், மனம், ஆன்மா என்ற மூன்றும் உண்டு. உயர்நிலை கொண்டவை கீழே உள்ளவற்றையும் குறிப்பால் உணர்த்தும். கீழ்நிலையில் உள்ளவை உயர்நிலையில் உள்ளவற்றைக் குறிப்பால் உணர்த்த இயலாது.

இது நினைவில் கொள்ள வேண்டிய அடிப்படை விதிகளில் ஒன்றாகும். நீங்கள் உயர்நிலையில் இருந்து செயல்பட்டால் கீழ் நிலையில் உள்ளவை தானே தீர்க்கப்பட்டுவிடும். நீங்கள் கீழ்நிலையில் இருந்து செயல்பட்டால் உயர்நிலைச் சிக்கல்கள் தானே தீர்வு பெறாது.

உங்கள் உடல் ஆற்றல் இந்த மூன்று நிலைகளிலும் தங்கியுள்ளது. அதனால்தான் எனது தீர்மானமான கருத்து உங்கள் ஆன்மீக வளர்ச்சி என்று கூறுகிறேன். அதில் உங்கள் அம்சங்கள் எல்லாம் முழுமையாக அடங்கியுள்ளன. மனோரீதியான வளர்ச்சி என்று பார்த்தால், உயர் சாராம்சங்களும் உங்கள் புறப்பகுதியின் உயர் அங்கங்களும் விடுபட்டுப் போய் விடுகின்றன. அதன் பின்னர் பல பிரச்சினைகள் தலையெடுக்கின்றன.

மனம் என்பது பன்முகம் கொண்டது. லட்சக்கணக்கில் பிரச்சினைகள் உள்ளன. ஒரு பிரச்சினையை நீங்கள் தீர்க்க முயன்றால், லட்சம் பிரச்சினைகளை அது எடுத்து வரும். மனம்சார்ந்த பிரச்சினைகளைத் தீர்த்துவிட்டோம் என்று நம்பிக்கை கொண்டிட உங்களால் இயலாது.

அங்கு பேராசை இருக்கிறது. கோபம் இருக்கிறது. காமம் இருக்கிறது. பொறாமை இருக்கிறது. இப்படிப் பற்பல இருக்கின்றன. ஏதாவது ஒன்றுக்குத் தீர்வு காணவே வருடக்கணக்கில் ஆகும். அப்போதும் பெரிதாக எதையும் தீர்த்துவிட முடியாது. உங்கள் கோபத்துக்குத் தீர்வுகாண நீங்கள் முயன்றால், உங்கள் கோபத்தைத் தாண்டி நீங்கள் வளர்ச்சிபெற்றிட முயன்றால் மனோரீதியான நிலையில் என்ன செய்திட இயலும்? முடிந்தவரை அதை அடக்கி வைக்கலாம். காரணம், விழிப்புணர்வு என்பது ஆன்மீகப் பிரதேசம் சார்ந்தது. மனோரீதியான நிலையில் உங்களால் போராட மட்டுமே இயலும். நீங்கள் தேர்வு செய்யலாம். ஒரு பகுதியை மற்றதற்கு எதிராக அடக்கினால் அந்த அடக்கப்பட்ட பகுதி மரித்துப் போவதில்லை. சொல்லப்போனால் அடக்கப்படும் அளவுக்கு அதிகமாக அது உயிர்பெற்று எழுகிறது. காரணம், அது உங்கள் சக்தி ஆதார மையத்துக்கு மிகவும் நெருக்கமாகச் செல்கிறது. கூடுதல் ஊட்டம் பெறுகிறது. கோபத்தை நீங்கள் அடக்கலாம். அது பின்புற வாயில் வழியாக வேறு வடிகாலைத் தேடிக்கொண்டுவிடும். இந்த வழிமுறையை உங்களால் மாற்ற இயலாது.

இந்த இடத்தில்தான் மேற்கத்திய மனோதத்துவ சாஸ்திரம் தொலைந்து போகிறது. குழப்பத்தில் அகப்பட்டு இடம் தெரியாது போய்விடுகிறது. சிறிய பிரச்சினைகளும் தீர்க்கப்படுவதில்லை. மிகவும் சிறிய பிரச்சினைகளாக இருந்தால் ஆண்டுக் கணக்கில் பகுப்பாய்வு செய்யப்படுகின்றன. ஆனால் எதுவும் தீர்க்கப்படுவதில்லை. ஜன்னலுக்குத் திரைச்சீலை மாட்டுவது போல, சுவரில் சுண்ணாம்பு பூசுவதுபோல மேற்பூச்சு வேலைகள் மட்டுமே

செய்கிறீர்கள். நோயாளி அணிந்துகொள்ள சிறப்பான முகமூடியைக் கொடுக்கிறீர்கள். அவரது உண்மையான முகம் அப்படியே இருக்கிறது. மேற்கத்திய மனோதத்துவம் தோல்வியடைந்துவிட்டது.

கிழக்குநாடுகளின் அணுகுமுறை மிகவும் ஆழமானது. மரத்தின் தளிர்களை வெட்ட அது முயற்சி செய்வதில்லை. ஆணி வேரை அது வெட்டுகிறது. ஆணிவேர் வெட்டுப்பட்டால் மரம் காய்ந்துபோகும். நீங்கள் இலைகளை மட்டும் கத்தரிக்கிறீர்கள். மனோதத்துவத்தின் பணி அதுதான். இலைகளைக் கத்திரிக்கிறீர்கள். மரத்தை அழிக்கவில்லை. இலைகளைக் கத்தரிக்கும் அளவுக்குக் கிளைகள் செழித்து வளரும். ஒரு கிளையை வெட்டினால் மூன்று கிளைகள் வளரும். நீங்கள் மேற்கொள்ளும் அழிவு முயற்சியைச் சவாலாக ஏற்றுக்கொண்டு மரம் செயல்படுகிறது. ஒவ்வொரு பொருளும், உயிரும் பிழைத்திருக்கவே முயற்சி செய்கின்றன. ஆபத்து ஏற்படும்போது அது சகலவழிகளையும் கையாண்டு உயிர் பிழைத்திருக்க முயல்கிறது. அதுதான் இங்கும் நடக்கிறது.

உங்கள் கோபத்தை உதறிட விரும்பினால், முன்பை விடவும் கோபக்காரராக மாறுகிறீர்கள். உங்கள் காமஉணர்வை விலக்கிட விரும்பினால், ஏற்கனவே இருந்ததை விடவும் கூடுதல் காமவசப் படுகிறீர்கள். லட்சக்கணக்கான மக்களுக்கு இதுதான் நடந்து வருகிறது. காமச்சிறையில் இருந்து விடுபட அவர்கள் விரும்புகிறார்கள். எல்லா விதமான முயற்சிகளும் செய்கிறார்கள். அவர்கள் ஆசை நல்லது தான். அவர்கள் நேர்மையான மனிதர்கள். ஆனால் தவறாக வழி நடத்தப்படுகிறார்கள். காமத்துடன் போராடத் துவங்குகிறார்கள். அதற்குப் பழிவாங்கும் முயற்சியில் காமம் இறங்கிவிடுகிறது. அந்த மனிதர்கள் சாதாரண மக்களைவிடக் கூடுதல் காமஉணர்வு பெறுகிறார்கள். மனம் முழுவதும் காமஇச்சை நிரம்பிவிடுகிறது. காமம் பற்றிச் சிந்திக்கிறார்கள். காமம்குறித்துக் கனவு காண்கிறார்கள். தொடர்ந்து போராடிக்கொண்டே இருக்கிறார்கள். எந்த அளவு போராடுகிறார்களோ அந்த அளவு எதிரியிடம் சக்தியை இழந்து விடுகிறார்கள். காரணம், மேலும்மேலும் அவர்கள் எதிரியின்மீது கவனத்தைக் குவிக்கிறார்கள். அவர்களால் பாதுகாப்புடன் இருக்க முடியாது.

நூற்றாண்டுக் காலமாக இதுதான் நடந்து கொண்டிருக்கிறது. நீங்கள் மகாத்மாக்கள் என்றும், துறவிகள் என்றும், சாமியார்கள் என்றும் அழைக்கும் மனிதர்களைக் கவனியுங்கள். அவர்கள் மனம் அசிங்கப்பட்டுக்கிடக்கிறது. அவர்கள் நேர்மையற்ற மனிதர்கள்

என்பதல்ல காரணம். தவறான திசையில் இருந்து செயலைத் துவங்கி னார்கள் என்பதே காரணமாகும்.

"நோய்க் குறிகளுக்கு வைத்தியம் செய்வதைக் காட்டிலும் உண்மையான பிரச்சினையைக் கண்டறிந்து அதை நீக்க வேண்டும்" உள்நாட்டுப் போருக்கு பிறகு வாழ்ந்த ஒரு தென்பிராந்தியப் பண்ணை முதலாளியின் கருத்து இது. பழமையில் நம்பிக்கை கொண்ட அந்த மனிதரின் மனைவி தனது காதலனுடன் இழைந்து கொண்டிருப் பதைக் கண்டதும் கோபத்தில் துப்பாக்கியை எடுத்து மனைவியைச் சுட்டுக் கொன்றுவிட்டார்.

நீதி விசாரணைக்காக கொண்டுவந்து நிறுத்தப்பட்ட அவரைச் சிறைக்கு அழைத்துச் செல்லவிருந்த சமயத்தில் விசாரணைக் குழு உறுப்பினர்களில் ஒருவர் கேட்டார். "சும்மா தெரிந்து கொள்ள வேண்டும் என்ற தனிப்பட்ட விருப்பத்தினால் கேட்கிறேன். இஷ்ட மிருந்தால் அதைத் தெளிவுபடுத்தலாம்."

பண்ணைப் பெரிய மனிதர் ஒப்புக் கொண்டார்.

"அந்த காதலனைச் சுடுவதற்குப் பதிலாக ஏன் உங்கள் மனைவியைச் சுட்டீர்கள்?"

"ஒவ்வொரு வாரமும் வெவ்வேறு ஆணைச் சுட்டுத் தள்ளு வதற்குப் பதிலாக ஒரே பெண்ணைச் சுட்டுவிடுவது நல்லது என்று நான் தீர்மானித்தேன் ஐயா!" என்றார் அவர்.

உங்கள் மனதை மாற்றிக்கொள்ள விரும்பினால், வாரம் ஒரு வெவ்வேறு மனிதரைச் சுட வேண்டியிருக்கும். பெண்ணைச் சுட்டுத் தள்ளிக் காரியத்தை முடித்துவிடுவது நல்லது.

அதனால்தான் எனது தீர்மானமான கருத்து உங்களுடைய மனோரீதியான வளர்ச்சி அல்ல, ஆன்மீக வளர்ச்சியே என்று கூறு கிறேன். ஆன்மீக வளர்ச்சி என்பது விழிப்புணர்வு மேம்பாடு அடைவதாகும். அதுதவிர வேறு எதையும் அது அர்த்தப்படுத்த வில்லை. உங்களுக்குள் ஒளி பெறுதல், மேலும்மேலும் விழிப்புடன் இருத்தல் என்பதே அதன் பொருளாகும். உங்களுக்குள் ஒளி இருக்கு மானால் இருள் தானே விலகிவிடும்.

விழிப்புணர்வு கொண்ட மனிதரால் சினம் கொள்ள இயலாது. அது சாத்தியமில்லை. கோபப்பட அடிப்படைத் தேவையாக இருப்பது விழிப்புணர்வற்ற நிலையாகும். முயன்று பாருங்கள். வியந்து போவீர்கள். கோபப்பட முயலுங்கள். விழிப்புடன் இருங்கள்.

உங்களால் செயல்படுத்த இயலாது. யாராலும் அதை செயல்படுத்த முடியாது. அது சாத்தியமற்றது. இயற்கையின் குணம் அது அல்ல.

விழிப்புடன் இருக்கும்போது கோபம் அகன்றுவிடும். விழிப் புணர்வை நீங்கள் இழந்துவிட்டால் கோபம் தலைதூக்கும். இரண்டும் ஒன்றாக இருப்பது சாத்தியமில்லை. இருளும், ஒளியும் ஒன்றாக இருந்திட இயலாது. அவை ஒன்று சேர்ந்து தங்கியிருக்க முடியாது. ஏன் இருளும், ஒளியும் ஒன்றிணைய முடியவில்லை? காரணம், இருளிடம் விஷயம் இல்லை. இருளுக்கு உயிர்ப்பு இல்லை. இருள் என்பது ஒளி அகன்றுபோன நிலை என்பது தவிர வேறு எதுவும் அல்ல. அகன்று போதலும், வந்து சேர்தலும் ஒரே சமயம் எப்படி நிகழமுடியும்? ஒளி அங்கிருக்குமானால் அது வெளியேறிப் போதல் நடக்காது. வெளியேறல் நடந்தால், தங்கி யிருந்தால் இயலாது.

விழிப்புணர்வே எல்லாப் பிரச்சினைக்கும் ஒரே தீர்வாக அமைகிறது.

நீங்கள் விழிப்புடன் இருக்கும்போது பேராசை தோன்றாது. ஏன்? ஏனென்றால், விழிப்புடன் இருக்கும்போது பேரின்ப நிலை யில் இருக்கும் விழிப்பைப் பெற்றிருப்பீர்கள். கடவுளின் சாம்ராஜ் ஜியம் உங்களுடன் நிறைந்து நிற்கும். அதன் பிறகு பேராசைப்பட, ஆசைப்பட என்ன இருக்கிறது? அப்படி ஆசைப்படுவது முட்டாள் தனமாக அமையும். தனது ராஜ்ஜியம் குறித்த விழிப்புணர்வு இல்லாத மனிதரிடம்தான் பேராசை தோன்றும். தான் ஒரு சக்ரவர்த்தியாகப் பிறந்திருக்கிறோம் என்ற விழிப்பு இல்லாததால், பிச்சைக்காரன் போல வாழ்கிறார்.

உங்களுக்குள் இருக்கும் உலகிலுள்ள எல்லா பொக்கிஷங் களையும் பெற்றிருக்கிறீர்கள் என்ற உணர்வு எழும்போது, எதுவும் விட்டுப்போகவில்லை என்று உணரும்போது எப்படிப் பேராசை தோன்றும்? உங்கள் அகவறுமையை உணர்தலே பேராசையாகும். அப்போது அதை அதிகரித்துக் கொள்கிறீர்கள். நீங்கள் ஏழையாக இருக்கிறீர்கள் என்றும், பணக்காரராக மாறவேண்டும் என்றும் நினைப்பதே பேராசையாகும்.

விழிப்புணர்வு பெற்ற மனிதர் எச்சரிக்கை அடைகிறார். தான் ஏற்கனவே செல்வந்தராக இருப்பதால் பணக்காரராக மாறுவதற்கு வாய்ப்பு இல்லை என்று அறிகிறார். அவர் தெய்வீகமானவர். நீங்கள் தெய்வீகமானவர் என்று உணரும்போது பேராசை எப்படி அங்கு தங்கியிருக்க முடியும்?

ஒருவர் விழிப்புடன் இருக்கும்போது எப்படிக் கோபம் தோன்ற முடியும்? எங்கிருந்து கோபம் புறப்படுகிறது? அகந்தை உணர்வு மீது உண்டாகும் காயமே கோபமாக மாறுகிறது. உங்கள் அகந்தை காயப்படும்போது நீங்கள் சினம் கொள்கிறீர்கள். ஆனால் விழிப்புணர்வு அடைந்த மனிதன் அகந்தை என்ற ஒன்று கிடையாது என்று அறிவான். இல்லாத ஒன்று எப்படி காயத்தை ஏற்படுத்தும்? ஏற்படுத்த முடியாது.

இரவு வேளையில் வழியில் கிடக்கும் கயிற்றைப் பார்த்துப் பாம்பு என்று நினைத்து அப்பால் ஓடுகிறீர்கள். நீங்கள் மரணத்தைக் கண்டு அஞ்சுகிறீர்கள். யாரோ ஒருவர் சிரிக்கிறார். உங்களைப் பிடித்து நிறுத்துகிறார். "அது பாம்பு அல்ல, கயிறு. என்னுடன் வாருங்கள். விளக்கை எடுத்துக்கொண்டு போய் பார்க்கலாம்" என்கிறார். அந்த மனிதருடன் நீங்கள் செல்கிறீர்கள். அது கயிறாக இல்லாமல் பாம்பாக இருந்தால் தப்பியோடத் தயாராக இருக்கிறீர்கள். நன்றாகப் பார்க்கும் அளவுக்கு நெருங்கிச் சென்றதும் நீங்கள் சிரிக்கத் தொடங்குகிறீர்கள். அந்த கயிற்றைப் பார்த்துவிட்டு பயப்படவா போகிறீர்கள்?

அது பாம்பு என்று நீங்கள் கருதியபோது ஏற்பட்ட பயம் பொய்யானது அல்ல. அது முற்றிலும் நிஜமானது. கிட்டத்தட்ட அது மாரடைப்பு போன்றது. நீங்கள் நடுங்குகிறீர்கள். சுவாசிக்க முடியாமல் மூச்சுத் திணறுகிறீர்கள். பயத்தில் செத்துக் கொண்டிருந்தீர்கள். அது நிஜமானது. ஆனால் நிஜப் பாம்பு அங்கு இல்லை.

பொய்யான ஒரு பாம்பு நிஜமான பயத்தை உருவாக்க முடிகிறது. அப்படித்தான் அதுவும் நடக்கிறது. பொய்யான அகந்தை நிஜமான கோபத்தை உருவாக்குகிறது. உங்களுக்குத் தீங்கிழைக்கப் பட்டதாக எண்ணிக் கோபம் கொள்கிறீர்கள். விழிப்புணர்வு என்ற ஒளி உங்களுக்குள் இருக்கும்போது அங்கு அகந்தை இல்லை, அங்கு பாம்பு இல்லை என்று அறிகிறீர்கள். எளிதாகச் சினம் அகன்று விடுகிறது. விழிப்புணர்வுடன் இருக்கும்போது எப்படி பயப்பட முடியும்? நீங்கள் ஒருபோதும் இறப்பதில்லை என்பதை விழிப் புணர்வுடன் இருக்கும் போது அறிந்துகொள்ள முடிகிறது. காரணம் நீங்கள் ஒருபோதும் பிறப்பதில்லை. பிறப்பு, இறப்பு என்பவை எல்லாம் மேலோட்டமானவை. உள் ஆழத்தின் மையத்தில் உங்கள் ஆன்மா மரணமற்று இருக்கிறது. எனவே உங்கள் அச்சம் அகன்று போகிறது.

எனது தீர்மானமான கருத்து உங்களுடைய மனோரீதியான வளர்ச்சி அல்ல என்று நான் கூறும்போது உங்களுக்குக் கவலை

ஏற்பட்டு விடுகிறது. மனோரீதியான வளர்ச்சி என்றால் என்ன? நீங்கள் கோபப்பட்டாமல் இருக்க, அகந்தை கொள்ளாமல் இருக்க, அச்சப்படாமல் இருக்க உதவுதல் ஆகும். அதுவே மனோரீதியான வளர்ச்சியாகும்.

உங்களை விழிப்புணர்வுடன் இருக்கச் செய்வதே ஆன்மீக வளர்ச்சி. ஒரே மருந்து எல்லா நோய்களையும் நீக்கிவிடுகிறது.

நீங்கள் மேலோட்டமாகப் பணியாற்றத் துவங்கினால், நீங்கள் மாறிவிட்டது போன்ற தோற்றம் ஏற்படலாம். ஆனால் உள்ளே மாற்றமின்றி அப்படியே இருப்பீர்கள். கொஞ்சம் மனமுதிர்ச்சி பெற்றுவிட்டது போல் தோன்றலாம். அது மேல்தோலைத் தாண்டி உள்ளே போகவில்லை. கொஞ்சம் சுரண்டிப் பார்த்தால் உள்ளே பழைய அதே மனிதர் இருப்பதைக் காணலாம்.

நோயாளி ஒருவருக்கு மனோதத்துவ நிபுணர் சிகிச்சை அளித்து வந்தார். நோயாளி தன்னை ஒரு சோளப் பொறி என்று எண்ணிக் குழம்பிப் போயிருந்தார். பல ஆண்டுகள் தீவிர சிகிச்சைக்குப் பிறகு வெற்றி கிடைத்து. கடைசி சிகிச்சையின்போது நோயாளியைப் பார்த்து மருத்துவர் 'நீங்கள் யார்' என்று கேட்டார். "நான் ஒரு மனிதன் தான்" என்று அவர் பதில் தந்தார்.

அலுவலகத்தை விட்டு வெளியே சென்ற நோயாளி ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு திகிலுடன் ஓடிவந்தார். "டாக்டர், டாக்டர்! கோழிக்குஞ்சுகள் வெளியே நிற்பதை நீங்கள் எனக்குச் சொல்லி யிருக்க வேண்டும். எப்படியோ அவைகளிடமிருந்து தப்பி விட்டேன்" என்றார்.

"நீங்கள் சோளப்பொறி அல்ல என்று உங்களுக்குத் தெரியும் அல்லவா?"

"நிச்சயமாக எனக்குத் தெரியும்! ஆனால் அந்த கோழிக் குஞ்சுகள் எப்படி நினைக்கின்றனவோ?" என்றார்.

உங்கள் மனோதத்துவப் பணிகள் எல்லாம் இதுபோல மேலோட்டமானவைதான். நீங்கள் மாறிவிட்டது போலத் தோன்ற லாம். அது வெறும் வெளித்தோற்றம் தான். நிஜமான சம்பவம் ஏதாவது நடக்கும்போது உங்கள் உண்மையான முகம் மீண்டும் வெளிப்பட்டுவிடும். அது மாறுதல் அடைதல் அல்ல, சமாதானப் படுத்திக் கொள்வதாகும். எனது பணி சமாதானப்பட்டுப் போவது பற்றியது அல்ல.

எனது முயற்சிகள் எல்லாம் உங்களை மாற்றுவதற்காகவே நடக்கின்றன. நீங்கள் கற்பனை செய்து பார்த்திராத அளவுக்கு முற்றிலும் மாறுதல் பெறவேண்டும். மதிப்புமிக்க ஏதோ ஒன்று உங்களுக்குள் மறைந்திருக்கிறது. அதைக் கண்டறிய வேண்டும். உங்கள் ஆன்மாதான் அது.

உங்கள் வாழ்வின் ஆதார ஊற்றுக்கண்ணைக் கண்டறியா விட்டால் உங்கள் செயல்கள் விளையாட்டுப் போலாகிவிடும். மனோதத்துவ விளையாட்டுப் போலாகிவிடும், உடல் சார்ந்த விளையாட்டுப் போலாகிவிடும். உடல் விளையாட்டில் யோகக்கலை காணாமல் போய்விடுகிறது. யோகிகள் என்று நீங்கள் அழைக்கும் மனிதர்கள் எல்லாம் உடற்பயிற்சிகளில் ஈடுபட்டவர்களாக இருக் கிறார்கள். யோகாவுக்குக்கென்று தனிப்பட்ட பலன்கள் உள்ளன. அதை நான் மறுக்க முடியாது. அவை உங்களை ஆரோக்கியமான மனிதர்களாக மாற்றும். அது உடல்சார்ந்த ஆரோக்கியம்தான். மரணம் வரும்போது உடல் அகன்றுவிடும். உங்கள் யோகக் கலைப் பயிற்சி களும் போய்விடும். நீங்கள் செய்த சகல முயற்சிகளும் மறைந்து போகும்.

மனோதத்துவமும், மனோவியல் பகுப்பாய்வுகளும் மனித மனத்தைப் பிரதானப்படுத்துகின்றன. மனம் உங்கள் நிஜமான மையம் அல்ல. அது உடல் மற்றும் ஆன்மாவுக்கு இடையிலான பாலமாக இருக்கிறது. அது பருப்பொருளற்ற நிகழ்வு. ஏனெனில் அது எண்ணங்களால் ஆனது. மனதிற்குப் பின்னால் உங்கள் நிஜத்தன்மை இருக்கிறது. அதை நீங்கள் உயிர், ஆன்மா, கடவுள் என்று எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம்.

எனது கருத்து உங்கள் அடியாழத்தில் கருத்து ஊடுருவ உதவுவதே ஆகும். ஒருமுறை அதை நீங்கள் அறிந்துகொண்டால், உங்கள் வாழ்வில் அனைத்தும் நிலைப்பட்டு விடும். அந்த விழிப் புணர்வு காரணமாக உங்கள் உடலையும், மனதையும் கவனிப்பவராக மாறுகிறீர்கள். அதன் மூலம் அசிங்கங்கள் எல்லாம் மறைகின்றன.

அதுவே ஆன்மீக அனுபவத்தின் விந்தையாகும். அசிங்கங்கள் எல்லாம் மறைகின்றன. அழகுகள் எல்லாம் செழுமை பெறுகின்றன. கெட்டவை மறைகின்றன. நல்லவை மேம்படுகின்றன. உலகமும், லௌகீக ஆசைகளும் உங்களிடம் பொருந்தி இருக்காது. முற்றிலும் புதிய பரிமாணம் தலையெடுக்கிறது.

## இரண்டாவது கேள்வி

**ஓஷோ,**

**தியானம் என்றால் என்ன?**

தியானம் என்பது மனமற்ற நிலையாகும். தியானம் என்பது எண்ணங்களற்ற பூரண விழிப்பு நிலையாகும். பொதுவாக, உங்கள் எண்ணங்கள் கண்ணாடியில் தூசு படிந்ததுபோல குப்பைகள் சூழ்ந்து கிடக்கும். மனம் தொடர்ந்து அலைபாயும் தன்மை கொண்டது. எண்ணங்கள் தோன்றும், ஆசைகள் தோன்றும், நினைவுகள் எழும், விருப்பங்கள் தலையெடுக்கும். மனம் சதா அலைபாய்கிறது. இரவும், பகலும் அது நடக்கிறது. நீங்கள் உறங்கும் சமயத்திலும் மனம் செயல்பட்டுக் கொண்டே இருக்கிறது. மனம் கனவு காண்கிறது, சிந்தனை செய்கிறது. அது கவலைகளும், துயரங்களும் நிறைந்ததாக இருக்கிறது. மனம் மறுநாளுக்காகத் தன்னைத் தயார்செய்து கொள்கிறது. மறைமுகமான ஆயத்தம் நடைபெறுகிறது.

இதுவே தியானமற்ற நிலை. தியானம் என்பது இதற்கு எதிரானது. எண்ணவோட்டம் இல்லாமல் சிந்தனைகள் மறையும் போது நினைவுகள் தோன்றாது. ஆசைகள் மனதில் சுழன்றடிக்காது. நீங்கள் முற்றிலும் அமைதியடைவீர்கள். அந்த அமைதி தியானமாகிறது. அந்த அமைதியில் உண்மைநிலை வெளிப்படுகிறது. வேறு எப்போதும் அது வெளிப்படாது. தியானம் என்பது மனமற்ற நிலையாகும்.

மனதின் மூலம் நீங்கள் தியானத்தைக் கண்டறிய முடியாது. மனம் ஞாபகசக்தி கொண்டதாக உள்ளது. மனதை அப்பால் தள்ளி வைத்தால் மட்டுமே தியானத்தைக் கண்டறிய முடியும். அமைதியுடனும், வேறுபாடு காட்டாதவராகவும், மனதுடன் தன்னை அடையாளப்படுத்திக் கொள்ளாதவராகவும் இருக்கவேண்டும். மனம் அகல்வதைக் காணும்போது, மனதுடன் தன்னை அடையாளப்படுத்திக் கொள்ளாமல், "நான் அதுவாக இருக்கிறேன்" என்று எண்ணாது இருக்கும்போது தியானம் வசப்படும்.

"நான் மனமல்ல" என்ற விழிப்புணர்வு கொள்வதே தியானமாகும். அந்த விழிப்புணர்வு உங்களுக்குள் ஆழமமாகச் செல்லும் போது மெல்ல மெல்லச் சில தருணங்கள் தலையெடுக்கும். அமைதியின் தருணங்கள், தூய்மையின் தருணங்கள், ஒளிவுமறைவற்ற தருணங்கள், உங்களுக்குள் எதுவும் சுழன்றடிக்காத தருணங்கள், சலனமின்றி அனைத்தும் இருக்கும் தருணங்கள் போன்றவை

தோன்றும். அந்த சலனமற்ற தருணங்களில் நீங்கள் யார் என்பதை உணர்வீர்கள். இந்த வாழ்வின் விநோதங்கள்பற்றி அறிந்துகொள் வீர்கள்.

இந்த அமுதத்துளிகள் சிலவற்றை நீங்கள் ஒருமுறை சுவைத்து விட்டால், உங்களுக்குள் ஆழமாகப் பயணிக்கும் விருப்பம் ஏற்பட்டு விடும். தடுக்கமுடியாத பயணத் தாகம் உங்களுக்குள் எழும். நீங்கள் ஜுவாலையாக மாறுவீர்கள்.

சந்நியாசிகள் எல்லோரும் அப்படித்தான் இருக்கிறார்கள். சில கணங்களின் அமைதியை, சந்தோஷத்தை தியானத்தைச் சுவைக்கும் போது அந்த நிலை உங்களது நித்தியமான கணமாக மாறுகிறது. தியானம் செய்யவேண்டும் என்ற விருப்பம் வாழ்க்கைமுறையாக மாறுவதே சந்நியாசிகளின் இயல்பாகும்.

சில கணங்கள் தியானிப்பது சாத்தியம் என்றால், அதன்பிறகு பிரச்சினை இல்லை. மெல்ல மெல்ல நேரம் அதிகரிக்கிறது. நீங்கள் திறமைசாலியாக மாறுகிறீர்கள். மனதுடன் சம்பந்தப்பட்டுப் போகாமல் இருக்கும் சாமர்த்தியம் ஏற்படும்போது, விலகியிருக்கும் கலையைக் கற்றுக் கொள்ளும்போது, உங்களுக்கும், உங்களுடைய எண்ணங்களுக்கும் இடையே இடைவெளியை உருவாக்கத் தெரிந்து கொள்ளும்போது மென்மேலும் தியானத்திறமை உங்கள்மீது வர்ஷிக்கும். எந்த அளவுக்கு அந்த பொழிவு இருக்கிறதோ அந்த அளவுக்கு நீங்கள் மாறுதல் அடைவீர்கள்.

ஆசீர்வதிக்கப்பட்ட ஒருநாள் வரும். அப்போது தியானம் என்பது உங்கள் இயல்பு நிலையாக மாறிவிடும்.

மனம் என்பது இயல்புக்கு மாறானது. அது எப்போதும் உங்கள் இயல்புநிலையாக இருந்திடஇயலாது. ஆனால் தியானம் நமது இயல்புநிலை. அதை நாம் தொலைத்துவிட்டோம். அது கைதவறிப் போன சொர்க்கம். அதை நாம் மீண்டும் பெறமுடியும். குழந்தைகளின் கண்களைப் பாருங்கள். அதில் அதீதமான அமைதி யையும், பேதைமையையும் காணலாம். ஒவ்வொரு குழந்தையும் தியான நிலையுடன் வந்து பிறக்கிறது. பிறகு சமூக வாழ்க்கை முறைகள் போதிக்கப்படுகின்றன. எப்படிச் சிந்திப்பது, எவ்விதம் மதிப்பீடு செய்வது, எப்படிக் காரணகாரியங்களை ஆராய்வது, எவ்விதம் விவாதிப்பது என்று சொல்லித் தரப்படுகின்றன. வார்த் தைகள், மொழி, கருத்து போன்றவை கற்பிக்கப்படுகின்றன. மெல்ல மெல்ல குழந்தை தனது கபடமற்ற தன்மையை இழந்து

விடுகிறது. மாசு, கசடுகள் போன்றவை சமூகத்தால் திணிக்கப்படு கின்றன. குழந்தை திறமையான இயந்திரச் செயல்பாட்டைப் பெறு கிறது. அதன் பிறகு மனிதனாக இருப்பதில்லை.

அந்த இடத்தை மீண்டும் பெறுவது இப்போது அவசியம். அதை முன்பே அறிந்திருக்கிறீர்கள். முதல்முறையாக தியானத்தை அறியும்போது வியந்து போவீர்கள். முன்பே அறிந்த ஒன்று என்பது போன்ற உணர்வை அடைவீர்கள். அந்த உணர்வு நிஜமானது. அதை முன்பே அறிந்திருக்கிறீர்கள். ஆனால் மறந்துவிட்டீர்கள். குப்பைக் குவியலில் வைரம் தொலைந்துவிட்டது. அதைக் கிளறிப்பார்க்க முடியுமானால் வைரத்தைக் கண்டறிய முடியும். அது உங்களுடையது.

உண்மையில் அதை தொலைக்கமுடியாது. மறந்துபோக மட்டுமே முடியும். நாம் தியானிப்பவர்களாய் பிறப்பெடுத்தோம். பிறகு மனம் சார்ந்த பாதைகளைக் கற்றுக் கொண்டோம். மறைவாகக் கீழே ஓடும் நீரோட்டம் போல நமது உண்மை இயல்பு எங்கோ மறைந்திருக்கிறது. ஒருநாள் எப்போதாவது கொஞ்சம் தோண்டினால் அந்த நீரோட்டம் பிரவாகித்துக் கொண்டிருப்பதைக் காண்பீர்கள். அது நன்னீர் ஆதாரமாகும். அதைக் கண்டறிவது வாழ்வின் மிகப் பெரிய மகிழச்சியாக அமையும.

விழிப்புணர்வற்ற நிலை என்ற கனமான அடுக்குகளின் கீழே ஆழத்தில் மனிதவாழ்வின் ஊற்று என்ற மாபெரும் மனோசக்தி தங்கிக் கிடக்கிறது. மனிதன் வளர்ச்சி பெறும்போது எல்லைகள் விரிவதால், அந்த மாசற்ற சக்தி ஆவலாய் அலைந்து திரியும் அனுபவத்தை அடைகிறது. குழந்தையாக இருக்கும்போது தனது அங்கமாக இல்லாதிருக்கும் தாயின் மார்பு தனக்கு சகாயம் செய்வதை கண்டு வியப்படைகிறது. அந்தக் கணத்திலிருந்து ஆசை மனித மனதை உந்தித் தள்ளி எதையும் தன்னுடன் சம்பந்தப்படுத்திப் பார்க்கிறது. விலாவாரியாக ஆராய்கிறது. தீவிர விருப்பம் அடியில் தங்கியிருக்கிறது. அந்த விருப்பம் பலவகை இலக்குகள், தொழில் களுடன் சம்பந்தப்பட்டு நிற்கிறது. ஆனால் ஆவலின் தூய்மை நிலையை உணர வேண்டும். எந்த திட்டமும் இல்லாது வாழ்க்கை என்றால் என்ன என்பதைமட்டும் அறியவேண்டும். அந்த விருப்பமே கடவுள் நிலையாகும். அந்த விருப்பத்துடன் கலந்து தூய்மையாக, எளிமையாக, திருப்தியுடன் இணைவதே தியான மாகும்.

ஒரு குழந்தை பிறக்கிறது. பேராற்றலுடன் அந்தக் குழந்தை தயார் நிலையில் வந்து சேர்கிறது. அது கலப்பற்ற பேராற்றலின்

உருவமின்றி வேறல்ல. குழந்தையின் முதல் தேடலும் விருப்பமும் தாயின் மார்பகமாகவே இருக்கிறது. குழந்தை பசியோடு இருக்கிறது. ஒன்பது மாதங்கள் தாயின் கருவில் இருக்கும்போது தானே உணவு கிடைத்து வந்தது. தாயின் ஒரு அங்கமாகவே அது வளர்ந்து வந்தது. இப்போது தாயிடமிருந்து பிரிக்கப்பட்டுவிட்டது. அது இப்போது ஒரு தனிப்பட்ட முழுமை அம்சமாகிவிட்டது. அதன் முதல் விஷயம், முதல் தேவை உணவு தேடலே ஆகும். இவ்வாறுதான் வெளியுலகப் பயணம் துவங்குகிறது.

ஆற்றல் அங்கு இருக்கிறது. ஆற்றல் வெளிப்பட்டதும் முதலில் உணவுக்கான ஆதாரத்தை அது பெற்றிட விரும்புகிறது. தாயின் மார்பைக் கண்டறிகிறது. மனித இனத்தின் மாபெரும் அடையாளங்களில் ஒன்றாக பெண்ணின் மார்பு அமைந்திருப்பது தற்செயலான நிகழ்வு அல்ல. அதை ஓவியம், சிற்பங்களில் காணலாம். கவிதைகளில் காணலாம். எல்லா இடங்களிலும் அதைக் காணலாம்!

பெண்ணின் மார்பு கவனத்தை ஈர்க்கும் ஒன்றாக உள்ளது. அது ஏன்? என்ன காரணம்? அடிப்படையில் அது ஒரு சுரப்பி அவ்வளவு தான். குழந்தைக்கு உணவு தரும் செயல்பாட்டு அமைப்பு. ஆனால் ஏன் அது மனிதர்களை அலைபாய வைக்கிறது. ஆண்கள் அதன் மீது ஆர்வம் காட்டுகிறார்கள். பெண்களும் ஆர்வம் கொள்கிறார்கள். மார்புமீது பெருவிருப்பம் கொள்ள என்ன காரணம்? காரணம் எளிமையானது. அதுதான் குழந்தைக்கு உலகத்துடன் ஏற்படும் முதல் தொடர்பாக இருக்கிறது. முதல் அனுபவமாக, அடிப்படை அனுபவமாக அமைகிறது. மற்றவை எல்லாம் இரண்டாம் பட்சம்தான்.

மார்புடன் ஏற்படுவதே முதல் அனுபவமாக அமைகிறது. அதனால் அது ஓவியம், கவிதை, சிற்பம் போன்ற கலைகளில் ஆதிக்கம் செலுத்துகிறது. ஆண் மார்புமீது தீவிர ஆர்வம் கொள்கிறான். பெண்ணும் அவ்விதமே செய்கிறாள். பெண்கள் தங்கள் மார்பை மறைக்கிறார்கள். அல்லது வெளிக்காட்டிக் கவர்ச்சி செய்கிறார்கள். இரண்டு செயல்களுக்கும் பெரிய வித்தியாசம் இல்லை. மார்பை மறைப்பது என்பதும் ஒருவகையில் வெளிக்காட்டுவது போன்றதுதான். அதன்மீது கூடுதல் ஆவலைத் தூண்டுகிறார்கள். சதி செய்கிறார்கள். மார்பை மறைத்துக் கொள்ளும்போது, ஆண் அது என்ன, எப்படி இருக்கிறது என்று அறிய ஆசை கொள்கிறான். திறந்த மார்பை விடவும் மூடிய மார்பு மிகவும் அழகாகத் தோன்றுகிறது. திறந்துகிடக்கும் மார்பு உடலின் ஒரு அங்கமாக இருக்கிறது. ஏன் மார்பு மீது தீவிர இச்சை தோன்றுகிறது? காரணம் எளிமையானது.

அதுதான் மனிதனுக்கு ஏற்படும் முதல் அனுபவத்துக்கு, அடிப்படை அனுபவத்துக்கு வழிசெய்கிறது.

மார்பு வழியாகவே உலகில் பிரவேசிக்க வேண்டியிருக்கிறது. மார்பு இரண்டு காரியங்கள் செய்து குழந்தையைப் போஷிக்கிறது. முதலில், உயிர்வாழ வைக்கிறது. உணவு அளிக்கிறது. மார்பே வாழ்வாக அமைகிறது. இரண்டாவதாக, மார்பு குழந்தைக்கு வெது வெதுப்பு தருகிறது. புகலிடம் தருகிறது. அன்பு காட்டுகிறது. உணவும், அன்பும் கலந்திருப்பதால் அது தீவிரம் பெறுகிறது.

மனைவி உங்களை நேசிக்கும்போது அவள் அருமையான உணவு தயாரித்துத் தருகிறாள். அது வரவேற்பின் குறியீடு ஆகும். யாராவது ஒருவர் உங்களை நேசித்தால் அவர் உங்களை விருந்துக்கு அழைக்கிறார். அது ஏன்? உணவு என்பது மார்பின் சூட்சும வழி முறையாக உள்ளது. உணவும், அன்பும் ஒன்றுசேர்கின்றன. அந்த இரண்டும் மார்பிலிருந்து குழந்தைக்காக வெளிப்படுகின்றன.

வெகுசில மனிதர்கள் பெரியவர்களாக இருந்தாலும் அவர் களிடம் குழந்தைத்தனம் எஞ்சியிருக்கும். அதனால்தான் மார்பு பெரிதாக இருக்கும் அளவுக்கு அதன்மீது ஆசை அதிகரிக்கிறது. ஏன்? அதற்கு எளிமையான ஒரு உடலியல் காரணம் உள்ளது. பெரிய மார்பு பெருமளவு உணவுக்கு ஆதாரமாக அமைகிறது. மார்பு மிகவும் சிறியதாக இருந்தால் குழந்தையால் பிழைத்திருக்க முடியாது என்பது தெளிவாகிறது. அதனால்தான் தட்டையான மார்பு கொண்ட பெண்கள் கவர்ச்சியற்றுப் போகிறார்கள். கவர்ச்சியற்றுப் போக அது தவிர வேறு எந்த ஆதாரப்பூர்வமான காரணமும் கிடையாது. ஏதாவது உடல் சார்ந்த காரணங்கள் இருக்கலாம். உங்கள் குழந்தைக்கு அவள் தாயாக முடியாமல் போகலாம். மார்பு பெரிதாக இருக்கும் அளவுக்கு அவள் ஒரு தாய் போன்ற தோற்றத்தைக் கூடுதலாகப் பெறுகிறாள். அதிகத் தாய்மையுடன் இருக்க இயலும் என்று தோன்றுகிறது. குழந்தையை அவளால் பெற்றெடுக்க முடியும், ஆரோக்கியமாக அது பிழைத்து உயிர்வாழ உதவிட முடியும்.

அதனால்தான் நீங்கள் நேசிக்கப்படாத உணர்வைப் பெறும் போது அதிகமாக உண்ணத் தொடங்குகிறீர்கள். உணவுக்கு அடிமைப் பட்டுப் போகும் ஒருவர் அன்பைத் தவறவிட்டவராக இருப்பார். அன்புக்குப் பதிலாக உணவைச் சுவைக்கிறார்கள். நீங்கள் நிஜ மாகவே நேசிக்கப்பட்டால், அதிகமான உணவு உண்ணமாட்டீர்கள். இந்த மனோதத்துவக் கண்டுபிடிப்பைக் கேட்டு வியந்து போவீர்கள்.

அதிகம் நேசிக்கப்படுவோர் குறைவாக உண்பார்கள். அவர்கள் விகிதாச்சார முறைப்படி உணவு உண்கிறார்கள்.

நேசிக்கப்படாத மனிதர்கள் அல்லது காதல் வசப்பட்டவர்கள் அதிகம் உணவு அருந்துவார்கள். காரணம், உணவு இரண்டு காரியங்கள் செய்கிறது. அது நிறைவு தருகிறது. நிறைவுபெற்ற உணர்வை அளிக்கிறது. அவர்கள் வெறுமை உணர்வைப் பெறுகிறார்கள். ஏனென்றால், நேசம் தவறவிட்டது. நீங்கள் அதைக் கவனிக்க வில்லையா? திருமணமாகாத பெண்கள் குண்டாக இருப்பதில்லை. திருமணமானதும் குண்டாகத் தொடங்குகிறார்கள். அசிங்கமாகத் தோற்றமளிக்கத் தொடங்குகிறார்கள். இது ஏன்? இப்போது எந்தப் பிரச்சினையும் இல்லை. அவர்கள் வேண்டியதைப் பெற்றுவிட்டார்கள். திருமணம் முடிந்ததும் காதலிக்கும் ஆசை மறைகிறது. வாழ்வின் தினசரிப் பணிகளில் முடங்கிப் போகிறார்கள். அனுமதிக்கப்பட்ட சகலத்தையும் ஏற்றுக்கொள்கிறார்கள். அந்த நெருக்கம் அலட்சியத்தை ஏற்படுத்துகிறது. கணவன் மனைவி இருவரும் ஒருவரை யொருவர் வெறுக்கத் தொடங்கிவிடுகிறார்கள். ஆனாலும் "நாங்கள் ஒருவரையொருவர் நேசிக்கிறோம்" என்று சொல்லிக் கொள் கிறார்கள். ஒருவரை ஒருவர் வெறுக்கிறார்கள். உள்ளே அடியாழத்தில் ஒருவரிடம் ஒருவர் சிறைப்பட்டிருப்பதாக எண்ணுகிறார்கள். காதல் மறைகிறது. மனிதர்கள் அதிகமாக உண்ணத் தொடங்குகிறார்கள்.

அன்புக்கும், உணவுக்கும் இடையே உள்ள உறவை எண்ணிப் பாருங்கள். அதற்குக் காரணம், அதுதான் குழந்தையின் முதல் அனுபவம். ஒரே ஆதார மையத்திலிருந்து குழந்தை உணவையும், அன்பையும் பெற்றுக் கொள்கிறது. அவை பழக்கப்பட்ட உணர்வுகள் போன்ற ஒருங்கிணைப்பைப் பெற்றுள்ளன.

குழந்தை தாயின் மார்பைத் தடவித் தேடத் துவங்கும்போது புறஉலகப் பயணம் ஆரம்பிக்கிறது. குழந்தை ஒரு விஷயத்தை அறிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. தனது வாழ்வின் ஆதாரம் தனக்கு வெளியே இருக்கிறது என்பதுதான் அது. அதுவே நிஜமான வீழ்ச்சியாகிறது. அதன் பிறகு அவன் எப்போதும் நிறையப் பணம், கூடுதல் அதிகாரம், அதிகமான கௌரவம், மக்களின் கவனத்தை மேலும் மேலும் தன் பக்கம் ஈர்த்தல் போன்ற விஷயங்கள் குறித்துச் சிந்திக்கிறார்கள். காரணம் வாழ்வின் ஆதாரம் வெளியே இருக்கிறது என்று எண்ணுகிறான். உண்மையில் வாழ்வின் ஆதாரம் உள்ளே இருக்கிறது.

வாழ்வின் ஆதாரம் உள்ளே இருக்கிறது என்ற விழிப்புணர்வை அடைவதே தியானமாகும். உடல் மட்டும் வெளியுலகைச் சார்ந்திருக்கிறது. நீங்கள் வெறுமனே உடலால் மட்டும் ஆனவரல்ல. வெளியுலகைச் சார்ந்து நீங்கள் இல்லை. அக உலகைச் சார்ந்திருக்கிறீர்கள். உள்முகமாகப் பயணித்தல், வெளிமுகமாகப் பயணித்தல் என்ற இரண்டும் இரண்டு திசைகளாக இருக்கின்றன. மனம் வெளிமுகமாகப் பயணிக்கும் செயல்பாடு உடையது. மனம் அன்றைய தினத்தைத் துவங்கும்போது குழந்தை தாயின் மார்பைத் தேடுகிறது. அதுவே மனதின் துவக்கம். அது உங்களை, உங்களிடமிருந்து வெகு தூரம் அப்பால் விலகி அழைத்துச் சென்றுவிடுகிறது.

"அக உலகம் என்ற ஒன்றும் உள்ளது. அதை நான் தேடிப் பார்க்க வேண்டும்" என்று ஒப்புக் கொள்ளலே தியானமாகும்.

மனம் சில இலக்குகள், குறிக்கோள்களின் மீது கவனம் வைக்கிறது. நிஜமான விருப்பம் என்பது எது என்று தேடியலைவதே தியானம். இலக்கைத் தேடாமல் நிஜமான இலக்கு எது என்று தேடுவதே தியானமாகும். நிறையப் பணம் வேண்டும் என்ற என்னுடைய ஆசை மூலம் எதை சாதிக்கப் போகிறேன்? அதிகாரம் பெற்று என்ன செய்யப் போகிறேன்? புகழ்பெற்றவனாக உயர்ந்து என்ன செய்யப் போகிறேன்? எனக்கு ஏன் இந்த ஆவல்? என்னுள் ஆவலைத் தூண்டுவது எது? அதன் நிஜஇயல்பு என்ன?"

இந்த விருப்பங்களின் தன்மையைக் கண்டறிவதே தியானமாகும். அதன் தூய்மையைக் கண்டறிதலே தெய்வீகத்தைக் கண்டறிதலாகும். உள்நோக்கமில்லாத தேடல், உண்மையான தேடல் புகையில்லாத நெருப்பு போன்றது. அதுவே தெய்வீகமாகும். தியானம் தெய்வீகத்தை அளிக்கிறது. ஏனென்றால், அது உங்கள் அடியாழத்து மையத்தை வெளிக்கொண்டு வருகிறது. நீங்கள் உள்முகமாகச் செல்லும்போது வட்டம் முழுமைபெறுகிறது.

தியானம் ஆரம்பமான பிறகுதான் நீங்கள் மனமுதிர்ச்சி பெற்றவராகிறீர்கள். இல்லாதுபோனால் நீங்கள் குழந்தைத்தனமானவர்தான். நீங்கள் விளையாடும் பொம்மைகள் மாறிக்கொண்டிருக்கின்றன. குழந்தைகள் சிறிய பொம்மைகளை வைத்து விளையாடுகின்றன. பெரிய வளர்ந்த குழந்தைகள் பெரிய பொம்மைகளை வைத்து விளையாடுகின்றன. தரத்தில் பெரிய வித்தியாசம் இல்லை.

சில சமயம் உங்கள் குழந்தை செய்வதைப் பார்க்கலாம். நீங்கள் நாற்காலியில் உட்கார்ந்து இருக்கும்போது உங்கள் குழந்தை மேஜை

மீது ஏறி நின்றுகொண்டு, "அப்பா, பாருங்கள்! நான் உங்களைவிடப் பெரியவன்" என்று கூறும். உயரமான மேஜை மீது நின்றுகொண்டு குழந்தை "நான் உங்களைவிடப் பெரியவன்" என்கிறது. அதைப் பார்த்து நீங்கள் சிரிக்கிறீர்கள். ஆனால் நீங்கள் என்ன செய்கிறீர்கள்? உங்களிடம் நிறையப் பணம் இருக்கும்போது எப்படி நடந்து கொள்கிறீர்கள் என்று கவனியுங்கள். உங்கள் அருகில் உள்ளவர்கள் எல்லோரிடமும், "நான் உங்களைக் காட்டிலும் பெரியவன் என்று சொல்கிறீர்கள். ஒரு நாட்டின் ஜனாதிபதியாக அல்லது பிரதமராக இருக்கும்போது எப்படி நடப்பீர்கள் என்று கவனியுங்கள். இறுமாப்புடனும், அகந்தையுடனும் எப்படி நடக்கிறீர்கள் என்று பாருங்கள். நீங்கள் எல்லோரிடமும், "உங்கள் அனைவரையும் நான் தோற்கடித்து விட்டேன். பெரிய நாற்காலியில் நான் உட்கார்ந்திருக்கிறேன்" என்கிறீர்கள். இவை எல்லாம் ஒரேவிதமான விளையாட்டுகள். உங்கள் குழந்தைப்பருவம் முதல் முதுமைவரை அதே விளை யாட்டை விளையாடுகிறீர்கள். பங்குச் சந்தையில் புகுந்து தனிப்பட்ட விளையாட்டை நடத்துகிறீர்கள். அதில் வித்தியாசம் எதுவும் இல்லை. அதே விளையாட்டு பெரிய அளவில் விளையாடப் படுகிறது.

இதுவே உங்கள் குழந்தைத்தனத்தின் ஆணிவேர் என்றும் அலைபாயும் மனதின் செயல் என்றும் ஒருமுறை புரிந்து கொள் ளுங்கள்.... குழந்தைகள் நிலாவுக்குச் செல்ல விரும்புகிறார்கள். திறமையான விஞ்ஞானிகளும் சந்திரனை எட்ட விரும்புகிறார்கள். அதில் பெரிய எந்த வித்தியாசமும் இல்லை.

வெளிப்புறப் பயணத்தில் நீங்கள் நட்சத்திரங்களை அடையலாம். ஆனாலும் குழந்தைத்தனத்துடனே இருப்பீர்கள். நிலவுக்குப் போன நீங்கள் அங்கே என்ன செய்யப் போகிறீர்கள்? நீங்கள் பழையபடியே இருப்பீர்கள். குப்பைகளை மூளையில் சுமந்துகொண்டும், இதயத்தில் காமதேனுப் பசுவின் சாணத்தைச் சுமந்துகொண்டும், நிலவின் மீது நின்று கொண்டிருப்பீர்கள். இதனால் எல்லாம் எந்த பெரிய வித்தியாசமும் ஏற்பட்டுவிடப் போவதில்லை. நீங்கள் ஏழையாக இருக்கலாம், செல்வந்தராக இருக்கலாம். முகமறியாத மனிதராக இருக்கலாம். உலகப் புகழ்பெற்றவராக இருக்கலாம். இவை எதுவும் பெரிய வித்தியாசத்தை ஏற்படுத்தப் போவதில்லை. மனம் திசைதிரும்பி உள்முகமாகப் பயணம்செய்யத் துவங்காத வரை, மனம் புதிய பரிமாணம் எடுக்காதவரை, நீங்கள் தியானத்தில் இறங்காதவரை.....

தியானம் என்பது மனம் தனது சுய ஆதாரமையம் நோக்கிப் பயணிப்பதாகும்.

தியானம் உங்களை மனமுதிர்ச்சி அடைய வைக்கிறது. தியானம் உங்கள் நிஜமான வளர்ச்சிக்குத் துணை நிற்கிறது. குழந்தையாக இருக்கும் காலத்தில் வளர்வது நிஜமான வளர்ச்சி அல்ல. எண்பது வயதிலும் விளையாட்டில் ஈடுபடும் மனிதர்களை நான் கண்டிருக்கிறேன். அதிகார அரசியல் எனப்படும் மோசமான விளையாட்டில் எண்பத்து இரண்டு, எண்பத்து மூன்று, எண்பத்து நான்குகளிலும் ஈடுபடுகிறார்கள். அந்த உறக்கம் மிகவும் ஆழமானதாகத் தோன்றுகிறது. எப்போது அவர்கள் விழித்தெழப் போகிறார்கள்? அக உலகம் பற்றி எப்போது சிந்திக்கப் போகிறார்கள்?

நீங்கள் சம்பாதித்த அனைத்தையும் மரணம் அள்ளிக்கொண்டு போகப் போகிறது. உங்கள் அதிகாரம், உங்கள் பணம், உங்கள் கௌரவம் அனைத்தும் போய்விடும். எதுவும் மிச்சம் இருக்காது. அதன் சுவடும் தென்படாது. உங்கள் முழு வாழ்வும் பயனற்றதாகி விடும். நீங்கள் உருவாக்கிய எல்லாவற்றையும் மரணம் வந்து சிதைத்துவிடும். நீங்கள் உருவக்கிய மாளிகைகள் எல்லாம் சீட்டுக் கட்டு மாளிகைகள் என்பதை மரணம் நிரூபணம் செய்துவிடும்.

மரணமற்ற நிலை உங்களுக்குள் இருக்கிறது என்பதை அறிவதே மனமுதிர்ச்சியாகும். மரணத்தை வெல்லும் ஒன்று உங்களிடம் உள்ளது. அது தியானம் என்று அறிவதாகும். மனம் உலகை அறிகிறது. தியானம் தெய்வீகத்தை அறிகிறது. மனம் விஷயங்களை அறிந்துகொள்கிறது. தியானம் இலக்கை அறிகிறது. மனம் பொருட்களின் உள்ளடக்கங்கள் சம்பந்தப்பட்டது. தியானம் தெய்வீகத்தை உள்ளடக்கிய பேழையுடன் சம்பந்தப்பட்டது. மனம் மேகங்களுடன் தொடர்பு கொண்டது. தியானம் ஆகாயத்தை தேடுகிறது. மேகங்கள் வரும், போகும். ஆகாயம் நிலைத்திருக்கும்.

அக ஆகாயத்தைத் தேடுங்கள். அது அகப்பட்டுவிட்டால் நீங்கள் ஒருபோதும் இறக்கமாட்டீர்கள். உடல் இறக்கும். மனம் இறக்கும். நீங்கள் ஒருபோதும் இறந்து போகமாட்டீர்கள். வாழ்வைப் புரிந்துகொள்ள வேண்டுமானால் இதைப் புரிந்துகொள்ள வேண்டும். நீங்கள் வாழ்க்கை என்று கூறுவது நிஜமான வாழ்க்கையல்ல. காரணம் அது அழியப் போகிறது. தியானம் கற்றவருக்குத்தான் வாழ்க்கை என்பது என்ன என்று தெரியும். காரணம், அவர் நித்தியத்தின் மையத்தை எட்டிப்பிடித்திருக்கிறார்.

**மூன்றாவது கேள்வி**

**ஓஷோ,**

**ஏசுநாதர் நிஜமாக ஒரு கன்னித் தாயிடம் பிறந்தவரா?**

ஒரு விஷயத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். பழங்கால மனிதர்கள் உருவக அணியிலும பேசினார்கள். பேசுவதற்குக் கவிதை நடையைப் பயன்படுத்தினார்கள். அது பெரிய அளவில் தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டுவிட்டது. நாம் அறிவியல் சார்ந்த வழியில் பேசுகிறோம். நம்முடைய மொழி பழங்காலத்தவர்களிடமிருந்து முற்றிலும் மாறுபட்டது. நீங்கள் சிந்திக்கும்போதும், கருத்துகள் பற்றி யோசிக்கும்போதும் வித்தியாசம் மிகப் பெரியதாக அமைந்த விடுகிறது. ஆனால் நீங்கள் கனவுகாணும்போது கருத்து சார்ந்து கனவு காண்பதில்லை. படங்கள் வடிவில் கனவுகாண்கிறீர்கள்.

நீங்கள் ஒரு கவிஞராகவோ, ஓவியராகவோ இருந்தால் கருப்பு வெள்ளைக் கனவுகள் காண்பதில்லை. வர்ணக் கனவு காண்கிறீர்கள். சாதாரண மனிதர்கள் கருப்பு வெள்ளை நிறத்தில் கனவு காண் கிறார்கள். கவிஞர்களுக்கும், ஓவியர்களுக்கும் வர்ணம் என்றால் என்னவென்று தெரியும். அவர்கள் வர்ணமயமான உலகுடன் நிஜமாகவே இணைந்திருக்கிறார்கள். உணர்ச்சிபூர்வமான அவர்கள் வர்ணக் கனவு காண்கிறார்கள்.

கனவு காணும்போது தர்க்கரீதியாக எண்ணங்களைப் பயன் படுத்துவதில்லை. படங்களைப் பயன்படுத்துகிறீர்கள். எனவே உங்கள் கனவுகளைப் பற்றி எடுத்துரைக்க ஒரு மனோதத்துவ ஆய்வாளர் தேவைப்படுகிறார். உருவக அணி சார்ந்த மொழியை நீங்கள் சுத்தமாக மறந்துவிட்டீர்கள். உதாரணமாக ஒரு மனிதன் தொடர்ந்து இரவில் பறவையாக மாறி வானில் பறப்பது போல் கனவு கண்டு குழம்பிப் போகிறார். அது ஏன்? அந்த கனவின் அர்த்தம் என்ன? கனவில் இருந்து விழித்தபிறகு அவரால் அதைப் புரிந்து கொள்ள முடிவதில்லை. அவர் மனோதத்துவ ஆய்வாளரிடம் செல்ல வேண்டியிருக்கிறது. வேறு எங்கும் செல்லவேண்டிய தில்லை.

பறவையாக மாறுவது என்பது உங்கள் ஆசைகள் படங்களின் மொழியில் மொழிபெயர்க்கப்படுகின்றன. நீங்கள் உயர்வு பெற்றிட விரும்புகிறீர்கள். அவ்வளவுதான்! சிறகுகள் பெறும்போதுதான் நீங்கள் உயர முடியும். உலகில் மேலே உயரும் ஆசை பெரும்

பாலோருக்கு உள்ளது. கனவில் நீங்கள் பறவையாக மாறுகிறீர்கள். கனவு ஒரு எளிமையான கவிதை மொழியைப் பயன்படுத்துகிறது.

கனவு மிகவும் பழமையானது. புராதனமானது. பழங்காலத் தவர் தர்க்கரீதியான கருத்தைப் பயன்படுத்தவில்லை. படங்கள் வடிவிலான கருத்தையே உபயோகித்தார்கள். இதன் காரணமாக, பெரிய அளவில் தவறான புரிதல் ஏற்பட்டுவிட்டது. நாம் விஞ்ஞான ரீதியாக, கணிதரீதியாக, வரலாற்றுரீதியாக சிந்திக்கக் கற்பிக்கப் பட்டிருக்கிறோம். பழங்காலத்தவர் இவற்றையெல்லாம் கொண் டிருக்கவில்லை. அவர்கள் சிந்தனை வரலாற்றுரீதியானதல்ல. புராண மரபு சார்ந்தது.

உதாரணமாக, கிழக்கு நாடுகளில் ராமர் எப்போது பிறந்தார் என்று நமக்குத் தெரியாது. பிறந்தாரா இல்லையா என்பதும் தெரியாது. அப்படி அறிந்ததும் உறுதியான செய்தியல்ல. ராமரைப் பற்றி அழகான கதைகளை எழுதி வைத்திருக்கிறோம். இவ்வளவு அழகான கதைகளை எழுதும்போது பிறந்த தேதியை எழுதவா முடியாது? அவர் பிறந்த நாளை எழுதுவது முடியாத காரியமா என்ன?

நிஜமாக கிருஷ்ணர் எப்போது பிறந்தார் என்று நமக்குத் தெரியாது. இதுபோன்ற பலரும் வரலாற்றுப் பாத்திரங்கள் அல்லாத வர்கள் போன்று காட்சியளிக்கிறார்கள். இது ஏன் நடந்தது? வேதங் களையும், அற்புதமான உபநிஷதங்களையும் எழுதியவர்கள் வைரம் போன்ற பகவத்கீதை, குரான், பைபிள் போன்றவற்றை எழுதியவர் களால் ஏன் வரலாற்றுரீதியாக எழுத முடியவில்லை?

அவர்கள் எண்ணம் அதுவல்ல. வாழ்க்கை குறித்து அவர்களுக்கு வித்தியாசமான அணுகுமுறை இருந்தது. வரலாறு லௌகீகம் கலந்தது. வரலாறு சாதாரணமானது. செய்தித்தாள்கள் சம்பந்தப் பட்டது. புராணவியல் புனிதமானது. அது பத்திரிகை சம்பந்தப் பட்டதல்ல. அது காலம் சார்ந்த ஏதோ ஒன்று. ஏதோ ஒருவகையில் காலத்துடன் ஆழ்ந்து கிடப்பதாகும். ஒருவித அற்புதம் ஆகும்.

ஜைனக் கோவிலுக்குச் சென்று பார்த்தால் வியந்து போவீர்கள். இருபத்து நான்கு **தீர்த்தங்கரர்கள்**, அவர்களின் ஞானம் பெற்ற உயர்ந்த குருநாதர்கள் எல்லாம் ஒரே சாயலில் இருப்பார்கள். உலகில் இரண்டு மனிதர்கள் ஒரே மாதிரி இருப்பதில்லை. ஆனால் எப்படி இந்த இருபத்து நான்கு பேரும் ஒரேவிதமாக இருக்கிறார்கள்? சொல்லி வைத்த மாதிரி ஒரேவிதமாக இருக்கிறார்கள்? ஜைனர்கள் உயர்வுதாழ்வு காட்டுவதில்லை. அடியில் உள்ள குறியீட்டைப்

பார்க்காவிட்டால் வித்தியாசம் கண்டறிய இயலாது. மகாவீரர் யார், நேமி நாதர் யார், பார்சுவநாதர் யார் என்று குறியீடுதான் வித்தியாசப் படுத்துகிறது. வெறுமனே தெரிந்துகொள்ள மட்டுமே அந்தக் குறியீடுகள். மற்றபடி தராதரத்தில் எந்த வேறுபாடும் இல்லை. எல்லோரும் சமம்தான்.

எல்லா இருபத்து நான்கு **தீர்த்தங்கரர்களின்** காதும் நீளமாகத் தோளைத் தொட்டுக் கொண்டிருப்பதை நீங்கள் காணலாம். என்ன நடந்தது? எப்போதாவது ஒரு மனிதருக்கு இப்படி நீளமான காது இருந்திருப்பது சாத்தியம். இருபத்து நான்கு பேருமா நீளமான காதுடன் இருந்தார்கள்? ஒரேவிதமான மூக்கு, ஒரேவிதமான கண்கள், ஒரேவிதமான உடலுடன் இருந்தார்கள்?

நாம் சரித்திர பாத்திரங்களுடன் சம்பந்தப்படவில்லை. நாம் அகத்துடன் சம்பந்தப்பட்டிருக்கிறோம். அதன் சாரத்துடன் சம்பந்தப் பட்டிருக்கிறோம். இந்த இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களும் உடல் அளவில் வேறுபட்டவர்களாகவே இருந்திருப்பார்கள். சிலர் உயர மாக இருந்திருக்கலாம். சிலர் குள்ளமாக இருந்திருக்கலாம். சிலர் சிவப்பு நிறத்துடனும், சிலர் கருப்பாகவும் இருந்திருக்கலாம். எல்லோரும் வேறுபட்டவர்களாகவே இருந்திருப்பார்கள் என்பது நிச்சயம். ஆனால் நாம் அவர்கள் வித்தியாசத்தைக் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. அவர்கள் எல்லோரிடமும் காணப்பட்ட ஒரு ஒற்றுமையை, அதன் சாரத்தைக் கணக்கில் கொள்கிறோம். அவர்கள் தியானநிலையைக் கணக்கில் கொள்கிறோம்.

காதுகள் ஏன் நீளமாக இருக்கின்றன? அது ஒரு குறியீடு. எதையும் கவனித்துக் கேட்டறியும் திறன் உள்ள மனிதர் என்பதை உணர்த்தும் ஒரு குறியீடு. கவனித்துக் கேட்டறியும் கலையின் குறியீடு. அவர் காதாகவே மாறிப் போனவர் போல் கேட்டறிகிறார். அமைதியாகக் கேட்கும் திறன் பெற்றுள்ளதால் சத்தியத்தை கேட் கிறார். இயற்கையின் குரலைக் கேட்கிறார். சன்னக் குரலில் அது அவருடன் பேசுகிறது. இது என்னுடைய விளக்கம். ஜைனர்கள் தங்களது முட்டாள்தனமான விளக்கங்களைக் கைவசம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

**தீர்த்தங்கரர்** எப்போதும் நீண்ட காதுகளுடன் பிறப்பதாகச் சொல்கிறார்கள். தீர்த்தங்கரர் என்ன கழுதையா அல்லது வேறு ஏதாவதா? அது ஒரு முட்டாள்தனமான விளக்கமாகும். **தீர்த்தங்கரர்** என்பவர் சத்தியத்தை கண்டு உணர்ந்தவர். **தீர்த்தங்கரர்** அமைதியாக இருப்பதால் அவர் முழுஉடலும் காதாக மாறுகிறது. உதாரணமாக,

சில கணங்கள்.... நீங்கள் சகலத்தையும் கேட்கலாம்! காகம் கரைகிறது. ரயில் கடந்துசெல்கிறது. எல்லாம் அமைதியடைந்தபிறகு நீங்கள் காதாக மாறிவிடுகிறீர்கள்.

இதை எப்படிச் சொல்ல முடியும்? பளிங்குச் சிலையில் இதை எப்படி விளக்கமுடியும்? நீளமான காதுகளை உருவாக்கியதன் மூலம் அதை நன்றாகச் செய்துவிட்டார்கள். அது முழுமையான குறியீடு. அது சரித்திர ரீதியானதல்ல.

அவர்கள் கண்கள் பாதி திறந்தும், பாதி மூடியும் உள்ள நிலையில் இருப்பதைக் காணலாம். அதுவும் ஒரு குறியீடு. அவர்கள் உள்ளும் இல்லை; புறத்திலும் இல்லை. அகம், புறம் போன்ற வேறுபாடுகள் மறைந்துபோகின்றன. இவையே மூன்று சாத்தியங்கள். புறம் என்பது மனம். அகம் என்பது தியானம். இந்த இரண்டையும் கடந்து செல்வது பேரின்பநிலை என்ற சமாதி நிலையாகும். அது உயர்ந்தது ஆகும்.

பதஞ்சலி மூன்று வார்த்தைகளைப் பயன்படுத்துகிறார். தாரணை என்பது புறம். தாயனை என்பது அகம். சமாதி என்பது இரண்டையும் கடந்த நிலை. அந்த தீர்த்தங்கரர்கள் அரைக் கண் மூடிய நிலையில் இருப்பதை நீங்கள் காணலாம். எப்போதும் அவர்கள் பாதி மூடிய நிலையில் இருப்பதாக அர்த்தமில்லை. சாலையில் நடந்து செல்லும்போது கண்களைத் திறந்தாக வேண்டும். சில சமயம் அமைதியாக உட்கார்ந்திருக்கும்போது கண்களை மூடிக் கொள்கிறார்கள். அதனால்தான் ஜைனர்களின் இரண்டு பிரிவினருக்கு இடையே பெரும் சச்சரவு நிகழ்கிறது.

திகம்பரர்கள் அவர் கண்மூடியிருப்பதாகக் கருதுகிறார்கள். ஸ்வேதம்பரர்கள் அவர் கண்திறந்திருப்பதாகக் கருதுகிறார்கள். இரண்டும் சரிதான். ஏனென்றால், சிலசமயம் மகாவீரர் கண்களை மூடிய நிலையில் இருந்ததைப் பார்த்திருக்கிறார்கள். சிலசமயம் கண்களைத் திறந்த நிலையில் இருந்ததைப் பார்த்திருக்கிறார்கள். மகாவீரர் சிலையை உருவாக்கிய சிற்பி கண்களைப் பாதி மூடிய நிலையிலும், பாதி திறந்தநிலையிலும் இருப்பதாக வடித்திருக்கிறார். அகம், புறம் என்ற இரண்டு நிலைகளும் மறைந்துவிட்டன. அவற்றைக் கடந்து சென்றாகிவிட்டது என்பதை உணர்த்த அவ்விதம் வடித்தார்.

இந்த பிரச்சினை எல்லா மதங்களிலும் உண்டு என்பதை நினைவில் கொள்ளுங்கள். கன்னித் தாயின் வயிற்றில் பிறப்பது

என்பது உயிரியல் சார்ந்த கன்னித்தன்மை பற்றியது அல்ல. கன்னித் தன்மை மாறாத ஒரு பெண்ணுக்கு ஏசுநாதர் பிறந்தார் என்பது முற்றிலும் அசட்டுத்தனம். அப்படியானால், மேரி ஒரு கன்னித்தாய் என்பதன் பொருள் என்ன? கன்னித்தன்மை என்பது புனிதமாகும். புனிதம் உள்ள மனதில் காமஇச்சை இருக்காது. அது உடல்சார்ந்தது அல்ல. மனம்சார்ந்தது ஆகும். புனிதம் உள்ள இடத்தில் காமம் தோன்றாது.

அக ஆழத்தின் மையத்தில் ஒவ்வொருவரும் கன்னிமை அழியாதவர்கள்தான். கன்னித்தன்மை என்பது தூய்மையான அன்பாகும். ஏசு உயர்ந்த அன்பினால் பிறந்திருக்க வேண்டும். அன்பு எப்போதும் கன்னித்தன்மை நிறைந்தது. அன்பு காமத்தை வென்று விடுகிறது. கன்னித்தாய் என்பதன் பொருள் இதுதான்.

ஆனால் முட்டாள் ஜனங்கள் எல்லா இடங்களிலும் இருக் கிறார்கள். "இல்லை. அவர் கன்னிகழியாத ஒரு பெண்ணுக்குப் பிறந்தார்" என்று வலியுறுத்திச் சொல்கிறார்கள். அவர்கள் ஏசுவை பரிகாசத்திற்குரிய ஒரு பொருளாக மாற்றுகிறார்கள். காரணம், அவர்கள் முட்டாள்தனத்தின்மூலம், குட்டிக் கதை மூலம், பெரிய உருவகம் மூலம் எல்லா அர்த்தங்களையும் தொலையச் செய் கிறார்கள்.

ஒரு தாயும், மகளும் மருத்துவரின் அலுவலகத்திற்குச் சென்றனர். அந்த தாய் மருத்துவரிடம் மகளைப் பரிசோதிக்கும்படி கூறினாள். "இவளிடம் சில வினோதமான நோய்குறிகள் தென்படு கின்றன. எனக்குக் கவலையாக இருக்கிறது" என்றாள்.

கவனமாக அவளைப் பரிசோதித்த மருத்துவர், அம்மா! உன் மகள் கர்ப்பமாக இருக்கிறாள் என்று நினைக்கிறேன்" என்றார்.

"என்ன முட்டாள்தனம்! என் மகள் சிறுமி. ஆண்களுடன் எந்தத் தொடர்பும் இல்லாதிருக்கும்போது அது எப்படி சாத்தியம்?" என்று படபடத்தாள் தாய். பிறகு மகள் பக்கம் திரும்பி, "அப்படி எதுவும் செய்துவிடவில்லையே அன்பே?" என்று கேட்டாள்.

"இல்லை அம்மா. நான் ஆணை முத்தமிட்டதுகூடக் கிடையாது" என்றாள் அவள்.

தாயையும், மகளையும் மாறி மாறிப் பார்த்த மருத்துவர் சில வினாடிகள் மௌனமாக இருந்துவிட்டு ஜன்னலை நோக்கி நடந்தார். வெளியே பார்க்கத் தொடங்கினார். "டாக்டர், வெளியே ஏதாவது

வித்தியாசமாகத் தெரிகிறதா?" தாயார் பொறுமையிழந்து கேட்கும் வரை பார்த்துக் கொண்டே இருந்தார்.

"எதுவும் இல்லை, அம்மா! கடந்த முறை இதுபோல நடந்த போது கிழக்கு வானில் ஒரு நட்சத்திரம் தோன்றியது. அது போல இன்னொன்று தோன்றுகிறதா என்று பார்க்கிறேன்" என்றார் மருத்துவர்.

மேரி அளவுகடந்த அன்பின் வசப்பட்டவளாக இருந்திருக்க வேண்டும். அதனால் கன்னித்தன்மையுடன் இருந்தாள். ஆழமான அன்பு இருந்ததால், காமம் முக்கியத்துவம் பெறவில்லை.

உங்கள் இதயத்தில் அன்பு இல்லாது ஒரு பெண்ணுடன் உங்களால் உறவு கொள்ள முடியும். அப்போது அது முழுமையான காமமாக, மிருகததனமாக மாறிவிடுகிறது. அது விபசாரமாகிறது. காமஉணர்வின்றி ஒரு பெண்ணுடன் இன்பம் துய்த்தால், அப்போது அன்பு இரு நபர்களின் சக்தி சங்கமமாக, பகிர்தலாக, நடனமாகக் கொண்டாட்டமாக மாறுகிறது. காமஇச்சையின்றி ஒரு பெண்ணுடன் உங்களால் உடலுறவு கொள்ள முடியும். காமம் பற்றிய சிந்தனை யின்றி ஒரு பெண்ணும் ஆணும் உறவு கொள்ள இயலும். உங்கள் மனம் எங்கே இருக்கிறது என்பதுதான் இதிலுள்ள முழுமையான விஷயமாகும். நீங்கள் காமம் பற்றி யோசித்தால், உங்கள் மனம் காமத்துடன் சம்பந்தப்பட்டிருந்தால் நீங்கள் அந்த பெண்ணைப் பயன்படுத்திக் கொள்பவராகிறீர்கள். அவள் உங்களை உபயோகிக் கிறாள். அது அசிங்கமானது. அதில் நிஜத்தன்மை இல்லை. கவித் துவம் இல்லை. காமத்தைத் தாண்டி அதில் ஒன்றும் இல்லை. அது தெளிவற்ற காரியம்.

அன்பான இருவர் உடலுறவு கொள்கிறார்கள். ஒரு ஆண் விபச்சாரியை தேடிச் செல்கிறார். உடல்ரீதியாக இரண்டு இடங் களிலும் நடக்கும் செயல் ஒன்றுதான். ஆனாலும் மனோரீதியாக நிறைய வேறுபாடு இருக்கிறது. காரியம் ஒன்றுதான் என்றாலும் வேறுபாடு உண்டு என்பதைக் கவனத்தில் கொள்ளுங்கள். விபச்சாரி யிடம் செல்பவர் காமம் பற்றி மட்டுமே யோசிக்கிறார். தன் மனதுக்கு இனிய பெண்ணிடம் உறவு கொள்பவர் காமம் பற்றிய உணர்வுடன் இருப்பதில்லை. அது ஒரு ஒருங்கிணைப்பு. ஒருவரை ஒருவர் மிகவும் நெருங்கிச் செல்லல் ஆகும். ஒருங்கிணைப்பு என்று பாவனை செய்து நடிக்கும்போதுதான் காமம் தலையெடுக்கிறது. அன்பு கன்னித்தன்மை கொண்டது. நேசம் மிகுந்தவர்கள் எப்போதும்

கன்னித்தன்மையுடன் இருக்கிறார்கள். அன்பானவர்கள் கன்னித் தன்மையை இழப்பதில்லை.

ஏசுவைப் போன்ற ஒரு மனிதர் பேரன்பில் இருந்து மட்டுமே வெளிப்பட முடியும். தயவுசெய்து பழங்கால மனிதர்களின் மொழியைப் புரிந்து கொள்ளுங்கள். அதை தவறாகப் புரிந்துகொள்வது எளிது. காரணம் நூற்றாண்டுகள் பல கடந்துவிட்டன. சொற்கள் தங்களின் அர்த்தங்களை மாற்றிக்கொண்டுவிட்டன. பழங்கால நாட்கள் அறிவியல் மொழியின் நாட்கள் அல்ல, அவை கவிதை மொழியின் நாட்கள் என்பதை நாம் மறந்துவிட்டோம்.

ஒவ்வொரு நாள் காலையிலும் சூரியன் தனது ரதத்தில் - தங்க ரதத்தில் அமர்ந்து வருவதாக வேதங்கள் கூறுகின்றன. உண்மையில் அது தங்கரதம்தான். தூய்மையான தங்கத்தை நீங்கள் எங்கு காணலாம்? அதிகாலையில் சூரிய உதயத்தின் போது காணலாம். அது ஒரு தங்க ரதம்தான்! ஒளி தங்க நிறமாக ஜொலிக்கிறது. அந்த ரதத்தில் ஏழு குதிரைகள் பூட்டப்பட்டிருப்பதாக வேதங்கள் கூறுகின்றன. **அஸ்வம்** என்ற சமஸ்கிருத வார்த்தைக்கு இரண்டு அர்த்தம் உண்டு. ஒரு அர்த்தம் குதிரை, மறு அர்த்தம் ஒளிக்கீற்று.

சமஸ்கிருதம் ஒரு கவிதை மொழி. ஒவ்வொரு சொல்லுக்கும் பல அர்த்தங்கள் உண்டு. அறிவியல் மொழியில் ஒரு சொல்லுக்கு ஒரு அர்த்தம்மட்டுமே இருக்கவேண்டும். அறிவியல் மொழி துல்லியமானதாக அமைய வேண்டும். கவிதைசார்ந்த மொழி பல பொருள் தருவதாக, பூடகமானதாக இருக்க வேண்டும். அப்போதுதான் ஒருவர் சொற்களைவைத்து விளையாடலாம். காரணம், கவிதை என்பது வார்த்தை விளையாட்டாகும். எல்லாம் திட்டமானதாக இருந்தால் கவிதை ஒருபோதும் ஜனிக்காது. அனைத்தும் நெகிழ்வுத்தன்மையுடன் இருக்க வேண்டும்.

எனவே சமஸ்கிருத மொழியிலோ அல்லது ஹிப்ரு, கிரேக்கம், லத்தீன், அரபு போன்ற பழைய மொழிகளில் ஒரு சொல்லுக்குப் பல அர்த்தங்கள் உள்ளன. **அஸ்வம்** என்ற சொல்லுக்கு பதினோரு அர்த்தங்கள் இருக்கின்றன. அதில் குதிரை என்பது ஒன்று. ஒளிக்கீற்று என்பது மற்றொன்று. சூரியனுக்கு ஏழு ஒளிக்கதிர்கள் உண்டு. அதைக் கவிதைநடையில் சூரியனுக்கு ஏழு குதிரைகள் பூட்டிய ரதம் என்று கூறுகிறார்கள். ஒவ்வொரு ஒளிக்கீற்றிலும் ஏழு நிறங்கள் இருப்பதை நாம் அறிவோம். ஒவ்வொரு ஒளிக்கீற்றிலும் ஏழு ஒளிக்கற்றைகள் இருக்கின்றன. அது ஒரு விஞ்ஞான விளக்கம். ஆனால்

வேதங்கள் விஞ்ஞானிகளால் எழுதப்படவில்லை. கற்பனை மனோ பாவம் கொண்ட கவிகளால் எழுதப்பட்டவை.

கவிகளும் அதே உண்மைகள்மீது இடறிவிழுகிறார்கள். அவற்றை விளக்கும்போது வித்தியாசமான முறையில் விளக்கு கிறார்கள். எதையும் அறிவியலாளர்கள் கண்டறிவதற்கு முன்னர் கவிஞர்கள் கண்டறிந்து விடுகிறார்கள். விஞ்ஞானிகள் மிகவும் எச்சரிக்கையுடன் அணுகுகிறார்கள். கவிஞர்கள் கவிதா மயக்கத் துடன் அணுகுகிறார்கள். கவிஞர்கள் தர்க்க சாஸ்திரம் பற்றிக் கவலைப்படுவதில்லை. அவர்கள் தர்க்கம், தர்க்கத்தின் வழி முறைகள் பற்றி யோசிப்பதில்லை. அவர்கள் சட்டென்று ஒரு விஷயத்திலிருந்து இன்னொன்றுக்குத் தாவி விடுகிறார்கள். மக்கள் நகைப்பார்கள் என்றோ, மக்கள் தங்களைப் பைத்தியம் என்று நினைப்பார்கள் என்றோ கவலைப்படுவதில்லை. எனவே அவர்கள் விஞ்ஞானிகள் கண்டுபிடிப்பதற்குமுன்னர் கண்டுபிடித்து விடு கிறார்கள். பல ஆயிரம் ஆண்டுகளுக்குமுன்பே கண்டுபிடித்து விடுகிறார்கள். காரணம், விஞ்ஞானிகள் மிகவும் எச்சரிக்கையுடன் விஷயங்களை அணுகுகிறார்கள். மெதுவாக, படிப்படியாக நெருங்கு கிறார்கள். அவர்கள் எல்லாவற்றையும் விரிவாக கவனிக்க வேண்டி யிருக்கிறது. அதை நிரூபிக்க வேண்டியிருக்கிறது. கவிஞர் எதையும் நிரூபிக்க வேண்டியதில்லை. சாதாரணமாக ஊர்ஜிதம் செய்கிறார். யாரும் எந்த நிரூபணமும் கேட்பது கிடையாது. அவர் உள்ளுணர் வின் மூலம் எல்லாம் நடக்கின்றன. அதைக் கவிதையாகப் பாடி விடுகிறார். அதன் நிச்சயம்பற்றி யாரும் கேட்பதில்லை. பருப் பொருள்ரீதியான நிரூபணம் கேட்பதில்லை. பரிசோதனைச் சாலைக்குச் சென்று ஆய்வின்மூலம் அதை நிரூபிக்கும்படி யாரும் கேட்பதில்லை. விஞ்ஞானிகள் அதை அறிந்து கொள்வதற்கு நீண்ட காலத்துக்கு முன்பே கவிஞர்கள் சொல்லிவிடுகிறார்கள். அவை கவித்துவமான வெளிப்பாடுகள்.

கவிகளின் மொழியை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும்.

ஒரு தம்பதியர் தங்கள் தேனிலவைப் பண்ணை இல்லம் ஒன்றில் தங்கிக் கழிக்கத் தீர்மானித்தார்கள். அங்கே சென்றபோது விவசாயியையும், அவர் மனைவியையும் இடைஞ்சல் செய்யக் கூடாது என்று அவர்களுக்கு அறிவுரை தரப்பட்டது. இருவரும் நேராக தங்கள் அறைக்குச் சென்றார்கள்.

இரண்டு நாட்கள் கடந்துவிட்டன. அந்த அறையிலிருந்து அவர்கள் வெளியே வரவில்லை. ஆனாலும் விவசாயியின் மனைவி

பல தடவை உணவு தந்து உபசரித்தாள். ஒரு வாரம் கடந்தபிறகு வியப்பும், கோபமும் கொண்ட விவசாயி அவர்கள் தங்கள் அறைக் கதவைத்திறந்து வெளியேவந்து உணவைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்றார்.

அதற்கு அந்த கணவர், தாங்கள் இருவரும் பழங்களை விரும்பி உண்பதை வாழ்க்கைமுறையாகக் கொண்டிருப்பதால் உணவு அவசியமில்லை என்றான்.

"பழங்கள்மீது விருப்பமா? என்று திகைப்புடன் கேட்ட விவசாயி, "அதுதான் பிரச்சினை. பழத்தோல்களை ஜன்னல் வழியே நீங்கள் வீசுவதை நிறுத்துவது நல்லது. எனது கோழிக்குஞ்சுகள் அவற்றைக் கொத்தித் தின்கின்றன. அதில் இரண்டு குஞ்சுகள் ஏற்கனவே இறந்துவிட்டன" என்றார்.

நீங்கள் யாருடன் பேசுகிறீர்கள் என்பதை எப்போதும் கவனத்தில் கொள்ள வேண்டும். யாரிடமிருந்து சொற்கள் உங்களிடம் வந்து சேர்கின்றன என்பதைப் பார்க்க வேண்டும். ஏசு பற்றிய விவிலிய நற்செய்திகளை எழுதியவர்கள் அறிவியல் உணர்வு மிக்கவர்கள் அல்ல. அவர்கள் கவிதை உணர்வு கொண்டவர்கள். அவர்கள் தர்க்கவாதிகள் அல்ல. நேச உணர்வு கொண்டவர்கள். நீங்கள் ஒவ்வொன்றையும் அறிவியல்பூர்வமாக நிரூபிக்க விரும்பினால், ஏசு என்பவர் வரலாற்றுப் பாத்திரம் அல்ல என்பதாகவே முடிவு அமையும். காரணம், கிழக்கில் ஒரு வால் நட்சத்திரம் தோன்றியது என்று கதை கூறுகிறது. கிழக்குப் பகுதியிலிருந்த மூன்று அறிஞர்கள் அந்த நட்சத்திரத்தைப் பின்தொடர்ந்து சென்றனர். ஏசு பிறந்திருந்த இடத்திற்கு நட்சத்திரம் அவர்களை வழிநடத்திச் சென்றது. இன்று நட்சத்திரங்கள் அவ்வாறெல்லாம் செய்வதில்லை. நட்சத்திரங்கள் சுற்றிச் சுற்றி வருகின்றன. நட்சத்திரங்கள் நேர் கோட்டில் பயணிப்பதில்லை. அதை நீங்கள் நிரூபிக்க முயன்றால் விஞ்ஞானிகள் உங்களைப் பார்த்துச் சிரிப்பார்கள். அப்படியெல்லாம் நட்சத்திரங்கள் தோன்றுவதும் இல்லை.

ஒரு நட்சத்திரம் தோன்ற மில்லியன் கணக்கான வருடங்கள் பிடிக்கும். சிறியதாகத் தோன்றும் நட்சத்திரங்கள் உண்மையில் சிறியன அல்ல. அவை பெரியவை. மிகப் பெரியவை. அதன் பிரும்மாண்டத்தை உங்களால் கற்பனைசெய்யவும் இயலாது. நட்சத்திரங்களுடன் ஒப்பிட்டால் பூமியின் அளவு ஒரு தூசுத் துகளுக்குச் சமம். சூரியன் நமது பூமியைக் காட்டிலும் அறுபதாயிரம் மடங்கு பெரியது. நட்சத்திரத்துடன் ஒப்பிடும்போது சூரியன் மிகவும்

அற்பமானது. சூரியனைக் காட்டிலும் பத்துலட்சம் மடங்கு பெரிய அளவு நட்சத்திரங்களும் உள்ளன. வெகு தொலைவில் இருப்பதால் அவை சிறியதாகத் தெரிகின்றன. வெகுதூரத்தில் இருப்பதால் அந்த தூரத்தை மைல் கணக்கில் அளவிட்டுக் கூற இயலாது.

விஞ்ஞானிகள் தூரத்தை அளக்கப் புதிய ஒரு முறையைக் கண்டறிய வேண்டியிருந்தது. அதை அவர்கள் "ஒளியாண்டு" என்று கூறுகிறார்கள். வினாடிக்கு 186,000 மைல் தூரம் ஒளி பயணிக்கிறது. ஒரு வினாடியில் இவ்வளவு தூரம் செல்கிறது. ஒரு ஒளியாண்டு என்றால் எவ்வளவு என்று தெரிய விரும்பினால் கணக்குப் போட்டுப் பார்க்க வேண்டும். 186,000 மைல்களை அறுபதால் பெருக்க வேண்டும். அப்போது ஒரு நிமிடம் ஒளி பயணிக்கும் தொலைவு கிடைக்கும். அதை மீண்டும் அறுபதால் பெருக்கினால் ஒரு மணி நேரம் பயணிக்கும் தூரம் கிடைக்கும். மீண்டும் அதை இருபத்து நான்கால் பெருக்கினால் ஒருநாளில் ஒளி பயணிக்கும் தூரம் கிடைக்கும். அதை 365ஆல் பெருக்கினால் ஒரு ஒளியாண்டுத் தொலைவு கிடைக்கும். ஒளியாண்டு என்றால் எந்த அபாரமான வேகத்துடன் ஒரு வருடம் ஒளி பயணிக்கும் தூரமாகும். நமக்கு மிகவும் அருகில் இருக்கும் நட்சத்திரம் நான்கு ஒளியாண்டுத் தொலைவில் இருக்கிறது. மற்ற நட்சத்திரங்கள் மிகமிகத் தொலை தூரத்தில் உள்ளன.

இன்றுவரை மில்லியன் கணக்கான நட்சத்திரங்கள் கண்டறியப் பட்டுள்ளன. இது முடிவு அல்ல, தொடக்கம் தான். நட்சத்திரங்களின் சரியான எண்ணிக்கை என்ன என்பதை கண்டறிவது ஒருபோதும் சாத்தியமில்லை என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். காரணம், கண்டுபிடிக்கும் கருவிகளை மேம்படுத்தும் அளவுக்கு ஏற்ப மேலும் மேலும் நட்சத்திரங்கள் கண்டறியப்பட்ட வண்ணம் உள்ளன. இது தொடர்ந்துகொண்டே இருக்கும். இதற்கு முடிவு இருக்காது.

அப்படியெல்லாம் நட்சத்திரங்கள் தோன்றுவதில்லை. மூன்று அறிஞர்களுக்கு வழிகாட்டுவதுபோல நடந்து கொள்ளாது. கிழக்கில் இருந்து வந்த அந்த மூன்று மனிதர்கள் யார்? அவை குறியீடுகள். ஏன் அவர்கள் கிழக்கில் இருந்து வந்தார்கள்? அதுவும் ஒரு குறியீடு. ஒருநாள் யாரோ ஒருவர் என்னிடம், "ஏசு இன்றைய அமெரிக்காவில் ஏன் பிறக்கவில்லை?" என்று கேட்டார்.

நான் அதற்கு, "இரண்டு காரணங்கள் உள்ளன. ஒன்று, அமெரிக்காவில் ஒரு கன்னிப்பெண்ணைக் காணமுடியாது. இரண்டாவது, மூன்று அறிஞர்களை எங்கே கண்டுபிடிப்பீர்கள்?" என்றேன்.

அது மிகவும் சிரமமானதாக இருக்கும். அவர் சரியான காலத்தைத் தேர்வு செய்திருந்தார். அன்று கன்னிகளும் இருந்தார்கள், அறிஞர்களும் இருந்தார்கள். கிழக்கிலிருந்து மூன்று அறிஞர்கள் வந்தார்கள் என்பது, கிழக்கு நாடு எப்போதும் சகல ஞானங்களுக்கும் ஊற்றுக்கண்ணாக இருந்தது என்று பொருளாகும். அக உலகமும் கணக்கில் கொள்ளப்பட்டிருந்தது. மூன்று பேர் என்பது ஏன்? அவை மனிதனின் மூன்று பரிமாணங்களைச் சுட்டுகின்றன. மும்மை நிலை. திரிமூர்த்தி. கடவுளின் மூன்று முகங்கள். எனவே மூன்று என்ற எண் பயன்படத்தப்பட்டது.

ஏன் ஒரு நட்சத்திரம் அவர்களுக்கு வழிகாட்டிற்று? ஏதோ வினோதமான உள்ளுணர்வு.... நட்சத்திரம் அப்படி வானில் தோன்ற வில்லை. நட்சத்திரம் அவர்கள் மனதில் தோன்றியது. அவர்கள் பெரும் ஈர்ப்புக்கு ஆளானார்கள். ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலிருந்து இங்கு எப்படி வந்தீர்கள்? ஒரு நட்சத்திரம் உங்க ளுக்குள் எழுந்திருக்கிறது. உங்கள் உள்ளுணர்வின் ஆழத்தில் ஏதோ கிளர்ச்சி ஏற்பட்டது. அது குறித்த விழிப்பு உங்களுக்கு உருவாக வில்லை. ஒரு நட்சத்திரம் தோன்றியது. நட்சத்திரம் உங்களை வழி நடத்தி இங்கே அழைத்து வந்துவிட்டது. அது தர்க்கரீதியான செயல்பாடு அல்ல. அது உள்ளுணர்வு சார்ந்த நிகழ்வாகும். நட்சத்திரம் வெளிவானில் தோன்றவில்லை. அகவானில் தோன்றியதாகும். ஏதோ ஒரு முக்கியமான சம்பவம் நடந்திருக்கிறது என்று உள் ளுணர்வு உணர்த்தியிருக்கிறது. எப்போதெல்லாம் ஏசு போன்ற ஒருவர் பிறக்கிறாரோ அப்போதெல்லாம் நாலாபுறம இருந்தும் மனிதர்கள் வந்து கூடிவிடுவார்கள்.

புத்தர் பிறந்தபோது மிகவும் வயதான ஒரு துறவி - நூற்று இருபது வயது நிறைந்தவர் - இமயமலையில் இருந்து உடனடியாக வந்துசேர்ந்தார் என்று கூறுவார்கள். அவரது சீடர்கள், "எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டார்கள். ஆனால் அவர் ஓடினார். சீடர்கள் அவர் நடந்ததையே பார்த்ததில்லை. அவ்வளவு முதியவர். ஆனால் இப்போது ஓடுகிறார்.

அவர்கள் கேள்விக்கு அவர் பதில் சொல்லவில்லை. அதற்கு நேரமில்லை. "பதிலளிக்க நேரமில்லை" என்றார். சீடர்கள் அவரைப் பின்தொடர்ந்தார்கள். மலையில் இருந்து அவர் சமவெளிப் பகுதிக்கு இறங்கினார். புத்தர் இமயமலைப் பகுதிக்கு மிக அருகில் பிறந்தவர். இந்திய-நேபாள எல்லைப் பகுதி அது. அவர் வேகமாக மன்னரின் அரண்மனையை அடைந்தார். அரசரால் தனது கண்களை நம்ப

முடியவில்லை. அந்தத் துறவி எந்த வெளியிடத்துக்கும் போனதாக யாரும் கேள்விப்பட்டதில்லை. சுமார் ஐம்பது ஆண்டுகளாக ஒரு குகையில் வாழ்ந்து வருகிறார். அவர் என்னைப் போன்றவராக இருக்கலாம்! இங்கு நானே ஒரு குகையை ஏற்படுத்திக் கொண்டு விட்டேன். அது இருபதாம் நூற்றாண்டுக் குகை. குளிர்சாதன வசதி கொண்டது. நான் அதில் வருடக் கணக்கில் வசிக்கிறேன்.

புத்தரின் தந்தையால் அதை நம்ப முடியவில்லை. துறவியின் பாதத்தைத் தொட்டு வணங்கினார். "என்ன நடந்தது? எதற்காக இங்கு வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

துறவி அதற்கு, "எனக்கு அதிக நேரமில்லை. காரணம், என்னை மரணம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. அதனால் ஓடி வந்தேன். உங்கள் குழந்தை எங்கே? நான் அதைப் பார்க்க வந்திருக் கிறேன்" என்றார்.

புத்தர் பிறந்து ஒருநாள் தான் ஆகிறது. புத்தர் பிறந்த அந்த தருணத்தில் துறவி ஓடத் துவங்கினார். அவர் சமவெளியை வந்து அடைய ஒருநாள் பிடித்தது. அரசரால் அதை நம்பமுடியவில்லை. ஏனென்றால், அந்த முதியவர் மிகவும் புகழ்பெற்றவர். குருவுக் கெல்லாம் குருவாக இருப்பவர். எதற்காக இந்த குழந்தை மீது ஆர்வம் காட்டுகிறார்?

ஒருநாள் வயதே ஆன புத்தர் உடனே எடுத்து வரப்பட்டார். நூற்று இருபது வயதான அந்த முதியவர் புத்தரின் பாதத்தைத் தொட்டு வணங்கிவிட்டு அழத் தொடங்கினார். குழந்தையின் தந்தை திகைத்துப் போனார். தாய் அதிர்ந்து போனாள். "அவர் ஏன் அழுகிறார்? ஏதாவது தவறாகி விட்டதா?" அவர்கள் துறவியிடம், "ஏன் அழுகிறீர்கள்? குழந்தை பிழைத்திருக்காதா? அல்லது ஏதாவது ஆபத்து நிகழப்போகிறதா? விளக்கமாகச் சொல்லுங்கள். ஏன் அழுகிறீர்கள்?" என்று கேட்டனர்.

அதற்கு அவர், "இல்லை. நான் எந்த ஆபத்து குறித்தும் அழவில்லை. இது ஆனந்த அழுகை. நான் பார்த்ததை எண்ணி அழுகிறேன். இந்த மனிதனின் மலர்ச்சியை பார்த்து ரசிக்க முடியாத வனாக இருப்பதை நினைத்து அழுகிறேன். நான் இவன் மொட்டாக இருக்கும் பருவத்தை மட்டும் கண்டேன். அதுவே அதிகம்! ஒரு புத்தரை பூந்தளிர் பருவத்தில் காண்பதே அதிகம். மகிழ்ச்சியால் நான் அழுகிறேன். காரணம், கடவுள் வந்து குழந்தையாக உங்களுக்குப் பிறந்திருக்கிறார். துயரத்தாலும் நான் அழுகிறேன். அவரை என்னால்

காணமுடியாதே என்று அழுகிறேன். எனது நாட்கள் எண்ணப்படு கின்றன. விரைவில் நான் எனது உடலைத் துறந்துவிடுவேன். உலகிற்கு அவர் என்னவிதமான மலர்ச்சியைக் கொண்டு வந்திருக் கிறார் என்று என்னால் காணமுடியாது. எந்த நறுமணத்தை அவர் உலகிற்குக் கொண்டு வந்திருக்கிறார் என்று தெரியாது. தர்ம சக்கரம் சுழல்வதைக் கண்டு மகிழ என்னால் இயலாது. லட்சோப லட்சம் மக்கள் அவரால் ஞானம் பெறுவார்கள். அவர் ஒரு ஒளியைக் கொண்டு வந்திருக்கிறார். உலகிற்கு அவர் ஒரு புரட்சியைக் கொண்டு வந்திருக்கிறார். அதற்காகவும் நான் அழுகிறேன்.

"ஆனால் கவலைப்படவேண்டாம். ஆனந்தமாய் மகிழ்ந்திரு" என்றார்.

ஆனால் இப்போது அவை நீதிக்கதைகள் என்று மாறி விட்டன. அவை வரலாற்றுப்பூர்வமாக நடக்கவில்லை. வரலாறு நமது நோக்கமல்ல. நமது நோக்கம் முக்கியத்துவம் பெற்ற ஒன்று. சிறந்த சாராம்சமாகக் கொண்ட ஒன்று நித்தியமான ஒன்று ஆகும். வரலாறு என்பது காலம்சார்ந்த நிகழ்வு. சரித்திரபூர்வமாக அது நிகழாதுபோனால் அது பெரிய விஷயமல்ல. நீதிக்கதை அழகானது, நூற்று இருபது வயதுள்ள முதியவர் ஒருநாள் வயதுள்ள புத்தரை வணங்குகிறார். வயது முக்கியமில்லை. விழிப்புணர்வுக்கு வயது இல்லை. சாதாரண நடைமுறைகள் களையப்படவேண்டும். வயது முதிர்ந்தவர் குழந்தையின் பாதம்தொட்டு வணங்குகிறார். மகிழ்ச்சிக் கூச்சலிடுகிறார். புரிந்துகொண்டவர்கள் மகிழ்ந்து குரல் கொடுப் பார்கள். மதிப்புமிக்க நிகழ்வு உலகில் நடக்கும்போது மகிழ்வார்கள். அதை வெகுசிலர் மட்டுமே காணமுடியும். தந்தையால் காண முடியவில்லை. தாயாலும் காணமுடியவில்லை. கண்ணுள்ளவர் களால் மட்டுமே காணமுடியும்.

அதைப் பார்க்க மூன்று அறிஞர்கள் பல்லாயிரம் மைல்கள் பயணம் செய்ய வேண்டியிருந்தது. ஆனால் ஏசுவின் சொந்த நாட்டைச் சேர்ந்தவர்களால் அதைக் காணமுடியவில்லை. ஏசுவின் பெற்றோர் ஜெருசலேமில் இருந்து தப்பியோட வேண்டியிருந்தது. எகிப்து நாட்டிற்குத் தப்பியோட வேண்டியிருந்தது. ஏசு ஜெருசலேம் திரும்பி வரமுடியவில்லை. முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு அவரைப் பற்றி நாம் மீண்டும் கேள்விப்படுகிறோம். அதன் பிறகு அவர் மூன்று ஆண்டுகளே உயிர்வாழ முடிந்தது. அவருடைய தேசத்து மக்களே அவரைக் கொன்று விட்டார்கள். பார்வையுள்ள மனிதரைக் குருடர்கள் கொன்றுவிட்டார்கள். தெளிவான மனிதரைப் பைத்தியக்கார மனிதர்கள் கொன்றுவிட்டார்கள்.

என்ன நடந்தது என்று ஏசுவின் பெற்றோர்களாலும் விழிப்புடன் இருந்து புரிந்துகொள்ள முடியவில்லை. கிழக்கில் இருந்து வந்த மூன்று அறிஞர்கள் அவரை அங்கீகரிக்க வேண்டியிருந்தது. தியானம் கற்ற ஒருவரே புத்தரை அங்கீகரிக்க முடியும். நீங்கள் புத்தரைக் காணநேர்ந்தால் அவரை உங்களால் அங்கீகரிக்க முடியாது. எதிர்ப்பு காட்டுவது எளிது. கோபம் கொள்வது எளிது. அவரைக் குற்றம் சாட்டுவது எளிது. ஏனென்றால் அவர் எதிரில் நீங்கள் அற்பமாகிப் போவதால் குறைகூறுகிறீர்கள். அவர் எதிரில் நீங்கள் வெறுமையாகிப் போவதால் இழிவுபடுத்துகிறீர்கள். மற்றபடி அவர் குற்றமுள்ளவர் அல்ல. அதற்கு உங்கள் ஆணவமே காரணம். அதனால்தான் நீங்கள் அற்ப உணர்வு பெறுகிறீர்கள். உங்கள் மனம் பழிவாங்க விரும்புகிறது. அதனால்தான் சாக்ரட்டீஸ் விஷமிட்டுக் கொல்லப்பட்டார். மன்சூர் கொல்லப்பட்டார். ஏசு சிலுவையில் அறையப்பட்டார். இப்படித்தான் எப்போதும் நடந்து கொண்டிருக்கிறது. எப்போதெல்லாம் புத்தர் இருக்கிறாரோ அந்த சமயத்தில் சமூகம் அவரிடம் குரோத உணர்வுடன் நடந்து கொள்கிறது. இந்தியாவானாலும், கிழக்குநாடுகளானாலும் எங்கும் இப்படித்தான் நடக்கிறது.

புத்தர் இங்கு வாழ்ந்தார். இங்கு போதனைகள் செய்தார். பல்லாயிரம் மக்களை ஒளியுலகிற்கு இட்டுச் சென்றார். ஆனால் புத்தமதம் இந்தியாவிலிருந்து மறைந்துவிட்டது. அது அழிக்கப்பட்டுவிட்டது. புத்தரின் மரணத்துக்குப் பிறகு ஐந்து நூற்றாண்டுக் காலத்தில் அந்த மதம் இங்கிருந்து அடியோடு வேரறுக்கப்பட்டுவிட்டது. அவரது கருத்தைப் பிராமணர்கள் விரும்பவில்லை. பண்டிதர்களும், அறிவாளிகளும் அவர் கருத்தை விரும்பவில்லை. அது அவர்கள் தொழிலுக்கு ஆபத்தை விளைவிக்கக்கூடியது என்று கருதினார்கள். புத்தரின் கருத்து சரியானது என்றால், மதவாதிகளின் கருத்து தவறாகிப் போகும்.

எனது கருத்து சரியானது என்றால் மதகுருமார்களின் கருத்து தவறு என்றாகிறது. எனது கருத்து சரி என்றால், பல்லாயிரம் பேர் குற்றச்சாட்டுக்கு ஆளாவார்கள். சரியான எனது கருத்து அவர்கள் கருத்தைத் தவறான இடத்துக்குத் தள்ளிவிடுகிறது. அவர்களால் என்னை மன்னிக்க இயலாது.

ஒன்று நினைவில் இருக்கட்டும். இந்த அழகான உருவணிகள் மிகவும் பரிவுடன் புரிந்துகொள்ளப்பட வேண்டியவை. சிறந்த உள்ளுணர்வுடன், பேரன்புடன், கவித்துவத்துடன் அணுக

வேண்டியவை. அவ்வாறு இல்லாது போனால் அவற்றை அழித்து விடுகிறீர்கள். கொன்றுவிடுகிறீர்கள். சிலசமயம் அழகான உரு வணிகள் பயன்படுத்தப்படுகின்றன. மதங்களும், அதைப் பின்பற்று வோரும் தங்களைத் தாங்களே கொன்று கொள்கிறார்கள்.

முகமது நபிகள் பாலைவனப் பகுதிக்குச் செல்லும் போதெல்லாம் வானில் ஒரு மேகம் குடைபிடித்து நிழல் தருவது போல கூடவே நகர்ந்து செல்லும் என்று சொல்லப்பட்டது. இன்று அரபுப் பாலைவனத்தில் இருப்பது நெருப்பில் இருப்பதற்கு நிகரானது. அது வரலாற்றுச் செய்தி அல்ல. எந்த மேகமும் அவ்வாறு கூடவே நகராது. முகமது நபியை மனிதர்களாலும் புரிந்துகொள்ள இயலவில்லை. அந்த எளிய, அற்ப மேகம் எப்படி அவரைப் புரிந்து கொண்டிருக்க இயலும்? நபிகள் நாயகத்தின் காலத்துக்குப் பிறகு தான் மக்கள் அவரைப் புரிந்துகொண்டார்கள். தனது வாழ்நாள் முழுவதும் அவர் ஒரு நகரத்திலிருந்து மற்றொரு நகருக்குத் தப்பி ஓடியபடி இருந்தார். தனது வாழ்நாள் முழுவதும் ஆபத்து சூழ்ந்த வராகவே இருந்தார். அச்சப்பட்டுக் கொண்டே உயிர் வாழ வேண்டி யிருந்தது. மனிதர்களே அவரைப் புரிந்து கொள்ளாதபோது அற்ப மேகம் எப்படிப் புரிந்து கொண்டிருக்க இயலும்? எனவே வரலாற்று செய்தி அல்ல. ஆனாலும் நான் அதை ரசிக்கிறேன். அந்த உருவணி அழகானது.

மனிதர்களைவிடவும் அந்த மேகம் அறிவுள்ளதாக இருந்தது என்று உருவணி விளக்குகிறது. அந்த மனிதரின் மேன்மையை மேகங்களும் புரிந்துகொண்டு இயற்கை விதிகளுக்கு எதிராகச் செயல்பட்டு அவரைக் காத்தன என்று கூறுகிறது. நபிகள் செல்லும் போதெல்லாம் அந்த மேகமும் புறப்பட்டுவிடும். காற்று அந்தத் திசையில் வீசாது இருந்தாலும் மேகம் அவருக்குப் பாதுகாப்பளிக்கக் கிளம்பிவிடும். மனிதர்களின் முட்டாள்தனத்தை விடவும் மேகத்தின் புத்திசாலித்தனம் அதிகமாக இருந்தது என்று உருவணி தெரிவிக் கிறது.

எங்கெல்லாம் புத்தர் செல்கிறாரோ அப்பகுதிகளில் உள்ள மரங்கள் பருவகாலம் பற்றிக் கவலைப்படாது பூக்கத் தொடங்கி விடும் என்று சொல்லப்பட்டது. வெகுகாலம் காய்ந்துகிடந்த மரங்கள் துளிர்க்க ஆரம்பித்தன. அழகான கவிதை, சிறப்பான கவிதை, அற்புதமான கவிதை எடுத்துரைக்கப்பட்டது. அது வரலாற்று நிகழ்வு என்று நான் கருதவில்லை. ஆனாலும் அது முக்கியத்துவம் கொண்டது. அது உண்மையாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் சத்தியம் நிறைந்தது.

உண்மை சாதாரணச் சம்பவங்களைச் சார்ந்திருக்கிறது. புத்தரின் சித்தப்பா மகன் தேவதத்தன் அவரைக் கொல்லப் பலதடவை முயன்றான் என்பது நிஜம். ஒருமுறை புத்தர் தியானம் செய்து கொண்டிருந்தபோது தேவதத்தன் குன்றின் மீதிருந்த பாறையை உருட்டித் தள்ளி அவரைக் கொல்ல முயன்றான். அது உண்மை.

தேவதத்தனால் புத்தரை நம்பமுடியவில்லை. அதனால் கொல்ல முயன்றான். "புத்தர் எப்படி ஞானம் பெற்றிருக்க முடியும்? நாங்கள் இருவரும் ஒன்றாக விளையாடினோம். குழந்தைப் பருவத்தில் நாங்கள் இருவரும் ஒன்றாகச் சுற்றித் திரிந்தோம். இருவரும் ஒன்றாகவே கல்வி பயின்றோம். என்னால் ஞானம் பெற முடியாதபோது அவர் மட்டும் எப்படி ஞானம் பெற்றார்?" என்று எண்ணிய தேவதத்தன் தானும் ஞானம் பெற்றுவிட்டதாகக் கூறிக் கொண்டான். ஆனால் உண்மையில் அவன் ஞானமடையவில்லை. புத்தர் இல்லாத இடங்களில் அவன் ஞானம் பெற்றதாக ஒப்புக் கொள்ளப்பட்டான். புத்தரின் எதிரில் இருக்கும்போது நீங்கள் ஞானம் பெற்றுவிட்டதாக எப்படி கூறிக்கொள்ள முடியும்? அது சாத்தியமில்லை. புத்தரை அழிப்பது எப்படி என்பதுதான் ஒரே ஒரு பிரச்சினையாக இருந்தது.

அவன் பாறையை உருட்டித் தள்ளினான். பாறை புத்தரின் அருகில் சென்றதும் தனது பாதையை மாற்றிக் கொண்டுவிட்டதாகக் கதை சொல்லப்படுகிறது. அது உண்மையாக இருக்காது. ஆனால் அது சத்திய நிலையாகும்.

தேவதத்தன் புத்தரைக் கொல்ல ஒரு மதம் பிடித்த யானையை ஏவினான். ஆக்ரோஷத்துடன் புத்தரை நெருங்கிய யானை அவர் பாதங்களைத் தொட்டு வணங்கியது. தேவதத்தன் ஒரு மத யானையை ஏவியது நிஜம். அடுத்த விஷயம் உண்மையல்ல. அடுத்தது ஒரு கவிதை. முழுமையான கவிதை. அதில் பெருமளவு சத்தியம் உள்ளது.

சத்தியம் பற்றி மதநூல்கள் பேசுகின்றன என்பது ஞாபகம் இருக்கட்டும். அவை வரலாற்று நூல்கள் அல்ல. வரலாற்று நூல்கள் உண்மை பற்றிப் பேசுகின்றன. அதனால்தான் மாவீரன் அலெக் ஸாண்டர், பயங்கரமான இவான், அடால்ஃப் ஹிட்லர் போன்ற பைத்தியங்களை வரலாற்று நூலில் நீங்கள் பார்க்கலாம். ஆனால் மகாவீரர், புத்தர், ஏசு போன்றவர்கள் புத்தகத்தின் ஒரு அங்கமாக இருப்பதில்லை. அதற்காக நாம் நமக்கு முற்றிலும் வித்தியாசமான அணுகுமுறை தேவை. அவர் சரித்திர நூலின் ஒரு அங்கமாக இல்லா

திருப்பது நல்லதுதான். அவர்கள் வரலாற்றின் அங்கம் அல்ல. அதற்கு அப்பாலிருந்து அவர்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் அந்த தொலைதூரத்தைச் சேர்ந்தவர்கள். மேலே எழுந்து உயர்ந்து அந்தத் தொலைவை எட்டத் தயாராக இருப்பவர்களுக்காக இங்கு வந்தவர்கள் அவர்கள்.

அந்த அழகான சத்தியத்தைப் பற்றிச் சிந்தித்ததன் காரணமாக கன்னித் தாய்க்கு ஏசு பிறந்தார். ஆனால் அது உண்மை அல்ல. ஆனால் நிச்சயம் அது சத்தியமானது. அவர் முற்றிலும் பேதமை நிறைந்த ஒரு பெண்ணுக்குப் பிறந்தார். அபரிமிதமான அன்புள்ளம் கொண்ட பெண்ணுக்கு அவர் பிறந்தார். அன்பு கன்னித்தன்மை கொண்டது. அன்பு எப்போதும் கன்னித்தன்மை கொண்டது.

இன்று இவ்வளவு போதும்.

# ஞானம் பெறுதல்
# உங்கள் பிறப்புரிமை

அத்தியாயம் - 6

முதல் கேள்வி

"நான் ஒதுக்கித் தள்ளிய காரியம் எது? செய்து முடித்தது எது?" என்று உங்களை நீங்களே கேட்டுக் கொள்ளாது சோர்வுடன் இமைமூடி ஒருபோதும் உறங்காதீர்கள்.

தீயது என்று கருதுவதை நிராகரியுங்கள். நல்லதை விடாமுயற்சியுடன் மேற்கொள்ளுங்கள்
எனது ஆலோசனைகள் குறித்து நன்கு யோசியுங்கள்
அவற்றை நேசியுங்கள். அவற்றைப் பின்பற்றுங்கள்.
உங்களை எப்படி வழிநடத்தவேண்டும் என்று
இறைப் பண்புக்குத் தெரியும்.

நமது இதயத்தில் நிறைந்திருப்பவர் பெயரால் உறுதி கூறுகிறேன்
நான்கு நிலைகளும், குறியீடுகளும் நிகரற்றவை, புனிதமானவை
இயற்கையின் ஆதார ஊற்றும், தெய்வ வடிங்களும் அங்கு உள்ளன
இவை அனைத்திற்கும் முன்னர் உங்கள் ஆன்மா
விசுவாசமாகப் பணியாற்றி

**அந்தக் கடவுள்களைத் தூண்டி ஊக்கப்படுத்த வேண்டும்**
**அவற்றின் உதவியுடன் மட்டும் உங்கள் பணி துவங்கி நிறைவுபெற இயலும்**
**அவற்றின் வழிகாட்டுதலுடன் நடக்கும்போது நீங்கள் ஏமாற்றமடைய மாட்டீர்கள்**
**பலவகைப்பட்ட மனிதர்களின் உண்மையான சாரத்தை உணர முடியும்**
**சகல விதிமுறைகளையும், அவற்றின் முடிவையும் நீங்கள் அறிந்துகொள்ள முடியும்**
**வானகம் மனது வைத்தால் நீங்கள் இயற்கையை அறியலாம்**
**ஒவ்வொன்றிலும் ஒரேமாதிரியாக இருப்பதுபோல், எல்லா இடங்களிலும் இயற்கை அவ்விதமே இருக்கும்**
**ஞானமடைவதே உங்கள் பிறப்புரிமையாக இருப்பதால்**
**வீணான ஆசைகள் மனதில் தோன்றாது**
**பேராசை காரணமாக எழும் தீமைகள் மனிதர்களைக்**
**கடைசியில் கபளீகரம் செய்துவிடுகின்றன**
**அவை ஆசையின் பலாபலன்கள்**

மேற்கு நாட்டுத் தத்துவ உலகிற்கு பிதாகோரஸின் பங்களிப்பு மிக அதிகம். அது அளவிட இயலாதது. சைவ உணவு முறையை மேற்கு நாடுகளுக்கு முதல் முறையாக அறிமுகப்படுத்தினார். சைவ உணவு முறை மிகவும் மதிப்புமிக்கது. பிறஉயிர்களுக்கு மரியாதை தருவதை அது அடிப்படையாகக் கொண்டதாகும்.

இன்றைய நவீன சிந்தனையாளர்கள் அதை நன்கு புரிந்து கொள்ள முடியும். வாழ்வின் எல்லா வடிவங்களும் ஒன்றுடன் ஒன்று கலந்துள்ளன, ஒன்றையொன்று சார்ந்து உள்ளன என்று நாம் அறிவோம். மனிதன் தனித் தீர்வு அல்ல. அவன் லட்சக்கணக்கான உயிர் வடிவங்களின், இயற்கையின் வலைப்பின்னல் தொகுப்பு. நாம் ஒரு நீண்ட சங்கிலியாக இணைந்திருக்கிறோம். தனிக் கண்ணிகள் அல்ல. மற்ற மிருகங்களைக் கொல்வது அசிங்கமானது, கலாரசனை யற்ற செயல், மனிதத்தன்மை இல்லாத காரியம் என்பது மட்டுமல்ல, அது அறிவியல்பூர்வமற்ற ஒன்றும் ஆகும். நமது அடிப்படையை நாமே அழித்துக் கொள்கிறோம்.

உடல் உறுப்புகளின் பிணைப்புபோல வாழ்க்கை அமைந் திருக்கிறது. இந்த வாத்தியக் குழுவின் ஒரு அங்கமாக இருந்தால் மட்டுமே மனிதன் பிழைத்திருக்க இயலும். பறவைகள் இல்லாத, மிருகங்கள் இல்லாத, மீன் இனங்கள் இல்லாத மனிதனை நினைத்துப்

பாருங்கள். அந்த வாழ்க்கை மிகமிகச் சலிப்பூட்டுவதாக அமைந்து விடும். அது சகலவிதமான செழுமை, நிறம், கூட்டுக் கலப்பு, வகைப்பாடுகளையும் இழந்துவிடும். காடுகள் முற்றிலும் வெறுமை யாகிவிடும். குயில் கூவாது, பறவைகள் பறக்காது, மீன்கள் இல்லாத தால் தண்ணீர் மிகவும் வருத்தம் கொண்டிருப்பதாகத் தோன்றும்.

உலக உயிர்களின் எல்லையற்ற வடிவங்கள் உடல் உறுப்பு களின் பிணைப்பு போன்று ஒருங்கிணைந்துள்ளன. நாம் அதன் ஒரு அங்கமாக இருக்கிறோம். முழுமையின் மரியாதைக்கு உரியதாக அந்த அங்கம் இருப்பதாக உணர வேண்டும். அதுவே சைவ உணவு என்பதன் உட்கருத்து ஆகும். உயிர்களை அழிக்கலாகாது என்பதே அதன் பொருள். வாழ்க்கை என்பது இயற்கையுடன் இணைந்தது. அதை அழிக்க வேண்டாம். அவ்வாறு செய்தால் சுற்றுச்சூழல் சார்ந்த உயிர்களை அழிப்பது போலாகிவிடும். உயிர் காப்பு என்பதன் பின்னால் அறிவியல் இருக்கிறது.

இந்தியாவில் தோன்றிய மதங்கள் எல்லாம் அடிப்படையில் சைவ உணவு நெறி சார்ந்தவைகளாக இருப்பது தற்செயலான ஒன்று அல்ல. இந்தியாவுக்கு வெளியே தோன்றிய மதங்கள் எல்லாம் அசைவ உணவு நெறியைச் சார்ந்திருப்பதும் தற்செயலானது அல்ல. ஆன்மீக விழிப்பின் உச்சத்தை இந்தியா பெற்றிருந்தது. வேறு எங்கும் அது இல்லை.

சைவ உணவு முறை தூய்மைப்படுத்தும் செயல்பாட்டை மேற்கொள்கிறது. நீங்கள் மிருக இறைச்சி சாப்பிடும்போது தேவை சார்ந்த விதிமுறையின் கட்டுப்பாட்டில் வருகிறீர்கள். நீங்கள் பருமனாகி விடுகிறீர்கள். பூமியின் புவியீர்ப்பு விசையால் அதிகம் ஈர்க்கப்படுகிறீர்கள். நீங்கள் சைவ உணவுக்காரராக இருக்கும்போது எடை குறைந்தவராக இருக்கிறீர்கள். நளினம், சக்தி போன்ற விதி முறைகளின் கட்டுப்பாட்டில் இருக்கிறீர்கள். எனவே வானம் நோக்கி ஈர்க்கப்படுகிறீர்கள்.

உங்கள் உணவு வெறும் உணவல்ல. அது நீங்கள்தான். உணவு உண்ணும்போது நீங்கள் உருப்பெருகிறீர்கள். நீங்கள் சிலவகை உணவுகளை உண்ணும்போது அடிப்படையில் அவை கொலை, வன்முறை சார்ந்ததாக உள்ளன. அதனால் உங்களால் தேவை சார்ந்த விதிமுறையைத் தாண்டி மேலே எழ முடியாது. நீங்கள் ஒரு மிருக நிலைக்குக் கூடுதல் குறைச்சலாக இருப்பீர்கள். மிருக நிலை தாண்டி மேலே உயரும் போதுதான் மனிதன் பிறக்கிறான். உங்களுக்காகச்

சில காரியங்களைச் செய்யத் தொடங்கினால், அதை மிருகங்களால் செய்ய இயலாது.

சைவ உணவு முறை என்பது ஒரு விழிப்புணர்வுள்ள முயற்சி. சுமையிலிருந்து விடுபட எடுக்கும் ஜாக்கிரதையான முயற்சி. அது உங்களை மண்ணுடன் பிணைத்திருக்கும் தளையில் இருந்து விடுபட வைப்பதால், நீங்கள் வானில் பறக்கலாம். தனிமையில் இருந்து கொண்டு தனிமை நோக்கிப் பறக்கும் பயணம் சாத்தியப் படும்.

உணவு எளிமையானதாக இருந்தால் தியானத்தில் ஆழ்ந்து சென்றிட இயலும். கடினமான உணவுக்குப் பின்னால் தியானித்தால் அது மிகவும் சிரமமான காரியமாக அமையும். அசைவ உணவுக்காரர் ஒருவருக்கு தியானம் சாத்தியமல்ல என்று நான் கூறவில்லை. அது முடியாத காரியம் அல்ல. அது தேவையற்ற சிரமப்படுதல் ஆகும்.

அது ஒரு மனிதன் மலைமீது ஏறுவது போன்றதாகும். அவன் கைகளில் பாறைக் கற்களைச் சுமந்துகொண்டு மலையேறுகிறான். கற்களைச் சுமந்துகொண்டும் உங்களால் மேலே ஏறி மலை உச்சியை அடைய இயலும். ஆனால் அது தேவையற்ற சிரமங்களை ஏற்படுத்தும். கற்களை நீங்கள் வீசியெறிந்தால் சுமையைக் குறைத்து கொள்ளலாம். பிறகு மலையேற்றம் எளிமையாக இருக்கும். சந்தோஷமானதாகவும் இருக்கும்.

அறிவுள்ள மனிதன் மலையேறும்போது கற்களைச் சுமந்து கொண்டு ஏறமாட்டான். தேவையற்ற எதையும் சுமந்துசெல்ல மாட்டான். உயரே செல்லச்செல்ல எடையை மேலும்மேலும் குறைத்துக்கொள்ளவே விரும்புவான். அப்படி ஏதாவது ஒன்றைச் சுமந்துசென்றாலும் அதை அவன் எறிந்துவிடுவான்.

முதல்முறையாக எட்மண்ட் ஹிலாரியும், டென்சிங்கும் எவரெஸ்ட் உச்சியை அடைந்தபோது வழியில் எல்லாச் சுமைகளை யும் எறிந்துவிட நேர்ந்தது. உயரே செல்லச் செல்ல, எதையும் சுமந்து மேலேறுவது கடினம். அவசியமான பொருட்களும் வீசப்பட்டன. உங்களை நீங்கள் சுமந்து செல்வதே போதும்.

சைவ உணவு முறை அபரிமிதமான வகையில் உதவி செய்ய வல்லது. உங்கள் இரசாயன இயல்பை அது மாற்றுகிறது. பிற உயிர் களின் மாமிசத்தை உண்டு நீங்கள் வாழ்ந்தால், எப்போதெல்லாம் ஒரு மிருகம் சொல்லப்படுகிறதோ அப்போதெல்லாம் இயல்பாகவே அது சினம் கொள்கிறது, அச்சம் கொள்கிறது என்பது முதல் விஷயம்.

ஒரு மிருகத்தை நீங்கள் கொல்லும்போது உங்களைக் கொல்வது போல ஒரு கணம் சிந்தித்துப் பாருங்கள். அப்போது உங்கள் மன நிலை எப்படியிருக்கும்? உங்கள் உணர்வு நிலை எப்படியிருக்கும்? எல்லாவகையான விஷச் சுரப்பிகளும் உடலில் பரவத் தொடங்கி விடும். நீங்கள் கோபப்படும்போது ஒரு விஷத் திரவம் உங்கள் உடலில் உற்பத்தியாகி ரத்தத்தில் பரவத் தொடங்குகிறது.

நீங்கள் சுயமாகவே சாகத் தொடங்குகிறீர்கள். அதிகபட்ச கோபம், பயம் ஏற்படும்போது இது நடக்கிறது. எல்லா சுரப்பிகளும் தங்கள் விஷத்தை உடலில் பரவச் செய்துவிடுகின்றன.

விஷத்தன்மை கொண்ட உடலோடு மனிதன் வாழத் தொடங்கு கிறான். அது அவனைக் கோபம், மூர்க்கம், எதிர்ப்புணர்வு போன்றவை கொண்டவனாக மாற்றுவது இயல்புதான். அதில் ஏதும் வினோத மில்லை. இவ்வாறு கொலைத் தொழில் சார்ந்து நீங்கள் வாழ்ந்தால் உயிர்மீது உங்களுக்கு எந்த மரியாதையும் இருக்காது. வாழ்வுடன் பகையுணர்வு கொண்டவராக இருக்கிறீர்கள். வாழ்க்கையுடன் பகை யுணர்வு கொள்ளும் மனிதன் தெய்வீகத்தில் நுழையமுடியாது. காரணம் தெய்வீகம் என்பது வாழ்வை மதிப்பதாகும்.

இயற்கையின் படைப்பில் உள்ள உயிரினங்களை யார் ஒருவர் விரோதிக்கிறாரோ அவர் உலகிலுள்ள யாருடனும் நட்புடன் இருக்க மாட்டார். நீங்கள் பிக்காஸோவின் ஓவியத்தை அழித்தால், நீங்கள் பிக்காஸோவை மதிக்கமாட்டீர்கள். மதிப்பளிப்பது சாத்தியம் அல்ல. எல்லா உயிரினங்களும் இயற்கையுடன் இணைந்து வாழ்கின்றன. இயற்கையுடன் கலந்து உயிர்வாழ்கின்றன. அவை உங்களைப் போலவே இயற்கையின் வெளிப்பாடுகள் ஆகும். அவை சகோதர, சகோதரிகள்.

சகோதர உணர்வு உங்களிடம் எழவில்லை என்றால், ஒரு மிருகத்தைப் பார்க்கும்போது அந்த எண்ணம் வரவில்லை என்றால், உங்களுக்கு தெய்வீகம் என்றால் என்னவென்று தெரியாது. உங்க ளுக்குத் தெய்வீகம்பற்றி ஒருபோதும் புரிந்துகொள்ள இயலாது. வெறுமனே உணவுக்காகவும், சுவைக்காகவும் நீங்கள் உயிர்களை அழிப்பது அசிங்கமான செயல். மனிதன் அதைச் செய்யலாம் என்று நம்புவது சரியல்ல.

மேற்கு நாட்டில் சைவ உணவுமுறையை அறிமுகம் செய்த முதல் மனிதர் பிதாகோரஸ் ஆவார். உயிரினங்களுடன் நட்பாக இருத்தல், இயற்கையுடன் நட்புகொள்ளல் போன்ற காரியங்களை

மனிதன் அதன் மூலம் கற்றுக் கொள்கிறான் என்பது வெளிப்படை யான ஆழமான உண்மை. அது அடிப்படை அம்சமாக மாறுகிறது. அந்த அடிப்படையே உங்கள் தெய்வீகத்துக்கான, தியானத்துக்கான தளமாக அமைகிறது. அதை நீங்களே உங்களுக்குள் கவனித்து அமைகிறது. அதை நீங்களே உங்களுக்குள் கவனித்து உணரலாம். நீங்கள் இறைச்சி உண்ணும்போது தியானம் செய்வது மிகவும் சிரமம் தருவதாக மாறுகிறது.

புத்தர் அசைவ உணவுக் குடும்பத்தில் பிறந்தார். அவர் சத்திரியர் எனப்படும் போர்வீரர்கள் குலத்தில் பிறந்தார். ஆனால் தியான அனுபவம் அவரை மெல்ல மெல்ல சைவ உணவுக்காரராக மாற்றிவிட்டது. அது அவரது உள்முகப் புரிதலாகும். எப்போ தெல்லாம் மாமிசம் உண்டாரோ அப்போதெல்லாம் தியானத்தில் ஒன்றுவது சிரமமாக இருந்ததைக் கண்டார். எப்போதெல்லாம் மாமிசத்தைத் தவிர்த்தாரோ அப்போதெல்லாம் தியானம் எளிமை யாக வசப்பட்டதை உணர்ந்தார். அது ஒரு எளிய புரிதலாகும்.

உலகின் மிகச் சிறந்த சைவ உணவுக்காரர்கள் ஜைனர்களாக இருக்கும்போது அவர்களின் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களும் அசைவ உணவுக் குடும்பத்தில் பிறந்தவர்கள் என்று அறிந்தால் வியந்து போவீர்கள். எல்லோரும் போர்த் தொழில் புரியும் வம்சத்தில் வந்தவர்கள். போர்வீரர்களாகவே அவர்கள் வளர்க்கப்பட்டனர். இருபத்து நான்கு ஜைன் குருமார்களும் சத்திரிய குலத்தவர்கள்.

என்ன நடந்தது? ஆரம்பம் முதலே மாமிசம் உண்ணும் சூழ்நிலையில் வளர்ந்த அவர்கள் ஒருநாள் திடீரென்று எப்படி சைவ உணவு இயக்கத்தைத் துவக்கினார்கள்? தியானம் மூலம் நடத்தப் பட்ட ஆய்வுகளின் விளைவுதான் அது.

நீங்கள் தியானம் செய்ய அது தவிர்க்க முடியாத அம்சமாக இருக்கிறது. நீங்கள் எண்ணங்கள் அற்ற மனம் கொண்டவராக இருக்க வேண்டுமானால், எடை குறைந்த உடலுடன் இருக்க விரும்பினால், பூமிக் கவர்ச்சி உங்களை கீழ்நோக்கி இருக்காது இருக்கும். எடையற்று இருந்தால் மேலே உயர்ந்து மிதக்கலாம். எடையற்று இருந்தால் வானம் வசப்படும். அதன் பின்னர் நீங்கள் அசைவத்திலிருந்து சைவ உணவு முறைக்குத் தானே மாறிவிடுவீர்கள்.

சைவ உணவு என்பது மதம் சார்ந்தது அல்ல. அது அடிப்படை யில் அறிவியல் சார்ந்ததாகும். அது தர்மநெறி சார்ந்தது அல்ல. பெரிதும் கலாபூர்வமானதாகும். உணர்வுபூர்வமான, விழிப்புணர்வு

நிறைந்த, புரிதல் கொண்ட, அன்புள்ளம் கொண்ட ஒருவர் மாமிசம் சாப்பிடுவார் என்பது நம்ப இயலாத ஒன்றாகும். அப்படி அவர் சாப்பிட்டால் ஏதோ ஒன்று விடுபட்டுப் போய்விட்டது என்று பொருள். தான் என்ன செய்கிறோம் என்ற விழிப்புணர்வு அவருக்கு இன்னும் இல்லை. தனது செயல்களின் தாத்பரியம் குறித்து விழிப் புணர்வு பெறாமல் இருக்கிறார் என்றாகிறது.

பிதாகோரஸ் சொன்னதை யாரும் கேட்கவில்லை. அவர் கருத்தை நம்பவில்லை. மாறாக அவர் கேலி செய்யப்பட்டார். தண்டிக்கப்பட்டார். கிழக்கு நாட்டிலிருந்து மிகச் சிறந்த பொக்கிஷங் களில் ஒன்றை மேற்கு நாட்டிற்கு எடுத்து வந்திருந்தார். அவர் ஒரு பெரிய பரிசோதனையை எடுத்து வந்திருந்தார். அவர் சொன்னதை மக்கள் கேட்டிருந்தால் மேற்கு நாடு முற்றிலும் மாறுபட்ட உலகமாக மாறியிருக்கும். நாம் இயற்கையை அழித்துக்கொண்டிருக்கிறோம். அது ஒரு பிரச்சினையாக இன்று எழுந்துள்ளது. அவர் பேச்சை கேட்டிருந்தால் பிரச்சினை தோன்றியிருக்காது.

மேற்கு நாட்டு உணர்வோட்டத்திற்கு பிதாகோரஸ் அடித்தள மாக அமைந்திருந்தால், பெரிய உலகப் போர்கள் வந்திருக்காது. சரித்திரத்தின் போக்கை முழுமையாக மாற்றியிருப்பார். அவர் கடுமையாக முயன்றார், தன்னால் முடிந்ததை எல்லாம் செய்து பார்த்தார். அது அவர் தவறு அல்ல. ஜனங்கள் குருடர்களாக, செவிடர் களாக இருந்துவிட்டனர். எதையும் அவர்களால் கேட்க முடிய வில்லை. புரிந்துகொள்ள முடியவில்லை. தங்கள் பழக்கங்களை மாற்றிக்கொள்ள அவர்கள் தயாராக இல்லை. மக்கள் பழக்கங்கள் சார்ந்து வாழ்கிறார்கள். இயந்திரத்தனமாக வாழ்கிறார்கள்.

விழிப்புணர்வு பெறுதற்கான ஒரு செய்தியை பிதாகோரஸ் கொண்டு வந்தார். சிறப்பான தியான ஆற்றல் மேற்கு நாட்டில் வெளிப்பட்டிருக்கும். அதனால் அடால்ஃப் ஹிட்லர், முஸோலினி, ஸ்டாலின் போன்றவர்கள் உருவாகச் சாத்தியமில்லாது போயிருக்கும். முற்றிலும் மாறுபட்ட உலகமாக அது மாறியிருக்கும். ஆனால் மக்கள் பழைய பழக்கவழக்கங்களில் இன்னும் பிடிவாதமாக இருக் கிறார்கள்.

மனித உடலை மாற்றாமல் மனிதனின் உணர்வுகளை நம்மால் மாற்ற இயலாது. நீங்கள் மாமிசம் உண்ணும்போது மிருகத்தை முழுமையாக உட்கிரகிக்கிறீர்கள். அந்த மிருகத்தை வென்று அடக்க வேண்டும். மாமிசம் உண்பதைத் தவிர்த்திடுங்கள்! நீங்கள் நிஜ மாகவே உயர்நிலை பெற்றிட விரும்பினால், சூரியஒளி பிரகாசிக்கும்

உங்கள் உணர்வுச் சிகரங்களை நிஜமாக எட்ட விரும்பினால், நிஜமாக தெய்வீகத்தை அறியவிரும்பினால், சாத்தியமான வழிகளில் எல்லாம் உங்களை மாற்றிக் கொண்டாக வேண்டும்.

உங்கள் முழு வாழ்க்கையையும் கவனத்தில் கொள்ள வேண்டும். உங்களுடைய ஒவ்வொரு சிறிய பழக்கவழக்கத்தையும் பரிசீலிக்க வேண்டும். சில சமயம் உங்கள் சிறிய ஒரு பழக்கவழக்கம் முழு வாழ்வையும் மாற்றிவிடக்கூடும். அது சிறிய விஷயமாக இருக்கலாம். ஆனால் அது வாழ்க்கையை முழுமையாக மாற்றி யமைத்து விடவும் கூடும். அது நம்பமுடியாத ஒன்றாகவும் தோன்றலாம்.

சைவ உணவு முறையை முயன்று பாருங்கள். பிரமித்துப் போவீர்கள். தியானம் எளிதாக வசப்படும். நேசம் மிகவும் நுட்ப மானதாக அமையும். உடல் எடை குறையும். உணர்வுபூர்வமான வராக மாறுவீர்கள். ஆனால் புலனடக்கம் அதிகரிக்கும். வழிபாட்டு உணர்வு அதிகரிக்கும். காமம் குறையும். உங்கள் உடல் வித்தியாச மான அதிர்வலைகளை உள்வாங்கும். நீங்கள் கூடுதல் நளினம் கொண்டவராக, மென்மையானவராக, கூடுதல் பெண்மைத் தன்மை யுடன், குறைவான எதிர்ப்புணர்வுடன், நிறைய அனுசரித்துப் போகும் நபராக மாறுவீர்கள்.

சைவ உணவு முறை ஒரு ரசவாத மாற்றத்தை உங்களிடம் ஏற்படுத்தி விடுகிறது. அது ஒரு இடைவெளியை ஏற்படுத்துகிறது. அங்கே மட்டமான உலோகம் தங்கமாக மாறிவிடுகிறது.

மேற்குநாட்டுச் சிந்தனையாளர்களுக்குப் பிதாகோரஸ் அறிமுகப்படுத்திய இன்னொரு விஷயம் மறுபிறப்பு பற்றியதாகும். அதுவும் ஒருவகையில் சைவ உணவுடன் சம்பந்தம் கொண்டது தான். உங்களுக்கு மறுபடியும் வியப்பு ஏற்படலாம். சைவ உணவு குறித்த நம்பிக்கை கொண்ட எல்லா மதங்களும் மறுபிறப்பை நம்புகின்றன. அசைவ உணவு சார்ந்த மதங்கள் மறுபிறப்பு இல்லை, ஒரே பிறப்புதான் என்று கருதுகின்றன. இதுவும் தற்செயலான விஷயம் அல்ல.

இந்தியாவில் பிராமணீயம், ஜைனம், புத்தமதம் என்ற மூன்றும் பெரிய மதங்களாக உள்ளன. அவை ஒவ்வொன்றும் பல்வேறு விதங் களில் வேறுபட்டவை. அவற்றின் கொள்கைகள் வெவ்வேறானவை. இந்துமதம் கடவுள் நம்பிக்கை கொண்டது. ஆன்மாவை நம்புகிறது. ஜைனர்களுக்கு இறை நம்பிக்கை இல்லை. அவர்களின் அடிப்படை

அம்சம், கடவுள் இல்லாத மதம் என்பதாகும். புத்தமதத்தில் கடவுளும் இல்லை, ஆன்மாவும் இல்லை. ஆன்மா நம்பிக்கையும், கடவுள் நம்பிக்கையும் இல்லாத மதம் உண்டு என்று உங்களால் கற்பனைசெய்து பார்க்கவும் இயலாது. இவை எல்லாம் அந்த மதங்களில் வேறுபட்ட அம்சங்கள்.

ஆனால் ஒரு விஷயத்தை எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். அதுதான் மறுபிறப்பு. ஆன்மா என்ற ஒன்று உண்டு என்று நம்பாத புத்தரும் மறுபிறப்பை ஏற்றுக் கொள்கிறார். அது அபத்தமாகத் தோன்றலாம். ஆன்மா இல்லாதபோது மறுபிறப்பு எப்படி சாத்தியம்? புத்தர் ஆன்மாவை நம்பவில்லை. ஆனால் மறுபிறப்பை நம்பினார். நீங்கள் மாலைவேளையில் ஒரு மெழுகுவர்த்தியை ஏற்றுகிறீர்கள். காலையில் விடிந்தபிறகு அதை அணைக்கிறீர்கள். மாலையில் நீங்கள் ஏற்றிய அதே தீபச் சுடர்தான் இன்னும் திரியில் எரிகிறது என்று உங்களால் கூறமுடியுமா? அது அதே சுடர் அல்ல. ஏதோ ஒன்று அதனுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. சுடர் இரவை மாற்றுகிறது. இரவில் சுடர் மறைகிறது. அது புகையாக மாறுகிறது. புதிய சுடர் ஒவ்வொரு கணமும் புதுப்பிக்கப்படுகிறது. அந்த இயக்கம் மிகவும் வேகமாக நடப்பதால் உங்களால் மாறும் இடைவெளியைக் கண்டுணர முடியவில்லை. தொடர்ச்சியாக ஒரு மாற்றம் நடந்த படியே இருக்கிறது. வேகமாகவும், விரைந்தும் அது நடக்கிறது. இரவு முழுவதும் சுடர் மாறிக்கொண்டே இருக்கிறது என்கிறார் புத்தர்.

காலையில் நீங்கள் மெழுகுவர்த்தியை அணைக்கும் சமயத்தில் அதில் இருப்பது நீங்கள் மாலையில் ஏற்றிய அதே சுடர் அல்ல. ஆனால் பார்வைக்கு அதுபோலவே தோற்றமளிக்கிறது. முதல் சுடரும், கடைசிச் சுடரும் ஒன்றுடன்ஒன்று தொடர்புள்ளவை. அவை ஒரு சங்கிலியின் அங்கங்கள். செயல்பாட்டின் அங்கங்கள். அதனால் நீங்கள் அதில் ஒரே சுடரும், ஒரே ஆன்மாவும் இருப்பதாகக் கூறமுடியாது.

இதுவே புத்தரின் மறுபிறப்பு குறித்த தாத்பரியம் ஆகும். தொடர் நிகழ்வு நடக்கிறது. அதில் மனிதன் மறைந்து விடுகிறான். மனித ஆன்மா என்று ஒன்று கிடையாது. ஆனாலும் புத்தர் மறுபிறப்பு உண்டு என்று நம்புகிறார். ஜைனர்கள் மறுபிறப்பில் நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். பிராமணர்கள் மறுபிறப்பை நம்புகிறார்கள்.

ஆனால் யூதர்கள், கிறிஸ்தவர்கள், முகமதியர்கள் போன்றோர் மறுபிறப்பை நம்பவில்லை. இவை இந்தியாவுக்கு வெளியில்

தோன்றிய மூன்று பெரிய மதங்கள் ஆகும். இந்திய மதங்கள் மூன்றும் மறுபிறப்புக் கோட்பாட்டின்மீது எப்படி இடறிவிழும் காரியம் நிகழ்ந்தது? ஆனாலும் அவை மற்ற விஷயங்களில் ஒத்துப் போக வில்லை. இந்த ஒன்றில் மட்டும் ஏன் ஒத்துப் போகிறார்கள்? அவர்களிடம் நிராகரிப்பு இல்லை. அவர்களுக்கு இந்த அனுபவம் எப்படி ஏற்பட்டது? அதற்கான விடை சைவஉணவு என்று கூறினால் நீங்கள் வியந்து போவீர்கள்.

ஒருவர் முழுமையான சைவ உணவுக்காரர் என்றால் அவரால் எளிதாகத் தனது கடந்த பிறவிகளை நினைவுகொள்ள இயலும். அவருக்கு உள்ள தெளிவின் காரணமாக கடந்த பிறவிகளையும் திரும்பிப் பார்க்க முடியும். அவர் அதிக உடல் எடையுடன் இல்லை. அவரது ஆற்றல் தடைப்படவில்லை. ஆற்றல் எளிதாகச் செயல்படுகிறது. நினைவு நீரோட்டம் பழங்காலத்தையும் ஊடுருவிப் பாய்கிறது. தேவைப்பட்டால் அவரால் பின்னோக்கியும் பயணிக்க முடியும்.

அசைவ உணவுக்காரரின் நினைவோட்டம் பல வழிகளில் தடைப்படுகிறது. பருப்பொருட்களை அவர் தன்னுள் சேகரம் செய்து கொள்கிறார். அப்பருப்பொருட்கள் ஒரு தடை போன்று செயல்படுகின்றன. அதனால்தான் இந்தியாவுக்கு வெளியில் தோன்றிய அந்த மூன்று மதங்களும் அசைவ உணவு சார்ந்து இருக்கின்றன. அவற்றால் மறுபிறவிக் கோட்பாட்டைக் கொள்ளமுடியவில்லை. அதை அனுபவித்து அறிய இயலவில்லை.

பிதாகோரஸ் இந்தியாவில் வாழ்ந்தார். சைவ உணவு நெறியைக் கடைப்பிடித்தார். ஆழ்ந்து தியானித்தார். கடந்த பிறவிகள் பற்றிய விழிப்புணர்வு பெற்றார். தன்னால் பின்நோக்கியும் பயணிக்க முடியும் என்று கண்டு கொண்டார். "ஒரு பிறவியில் நான் யானையாக இருந்தேன்; ஒரு பிறவியில் நான் மீனாக இருந்தேன்; ஒரு பிறவியில் நான் மரமாக இருந்தேன்" என்று புத்தர் சொன்னதை அவரால் புரிந்து கொள்ள முடிந்தது.

அறிவியல்சார்ந்த பரிணாம தத்துவம் கிழக்குநாடுகளில் எப்போதும் இருந்து வருகிறது. மேற்கு நாட்டு டார்வின் அளித்ததை விடவும் சூட்சுமமான முறையில் அது இருந்துகொண்டிருக்கிறது. டார்வினின் கோட்பாடு பக்குவப்படாத ஒன்று. அவர் குரங்குகளே மனிதர்களாக மாறின என்கிறார். டார்வின் கோட்பாட்டாளர்கள் அதை இன்றுவரை நிரூபணம் செய்யவில்லை. காரணம், குரங்குக்கும், மனிதனுக்கும் இடையில் உள்ள தொடர்புக் கண்ணியைத்

தேடியலைந்துகொண்டு இருக்கிறார்கள். ஒருசில குரங்குகள் மட்டும் எப்படி மனிதனாக மாறின என்று ஒரு பிரச்சினை எழுகிறது. மற்ற குரங்குகளுக்கு என்ன ஆயிற்று? அடிப்படையில் குரங்குகள் பிறரைப் பார்த்து அதை அப்படியே செய்யக்கூடியவை. சில குரங்குகள் மட்டும் மனிதர்களாக மாறினால் எல்லா குரங்குகளும் அதை காப்பியடித்துப் பின்பற்றியிருக்கும். மற்ற குரங்குகளுக்கு என்ன ஆயிற்று? அவை நன்றாகக் காப்பியடிக்க வல்லவை. அப்படி யிருக்கையில் சில குரங்குகள் மட்டும் எப்படி மனிதர்களாயின?

குரங்குகள் இன்னும் அதே நிலையில் இருக்கின்றன. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் கடந்துவிட்டன. குரங்குகள் இன்னும் குரங்கு களாகவே இருக்கின்றன. குரங்குகளை அணுகிப் பார்த்தால், சட்டென்று அவை மனிதனாக மாறக் காணோம். ஒரு காலை வேளையில் எழுந்து நின்றதும் அது மனிதனாக மாறிவிடவில்லை. யாரும் அப்படி ஒரு விந்தை நடந்து பார்த்ததில்லை. மனிதனுக்கும் குரங்குக்கும் இடையே உள்ள கண்ணி எங்குள்ளது என்பது கேள்வி யாகும். அந்த வித்தியாசம் மிகப்பெரியது. சிறிய ஒன்றல்ல.

அன்றொரு நாள் யாரோ ஒருவர் கேட்டார். "பூமியில் மனிதன் ஒருவன் மட்டுமே மனம்சார்ந்த உணர்வுகொண்டவனல்ல. மனிதனைக் காட்டிலும் உணர்வு பூர்வமான உயிர்கள் பூமியில் உண்டு என்று ஜான் லில்லி கூறுகிறார். அது உண்மையா? ஜான்லில்லியின் கருத்து சரியா?" என்று அவர் வினவினார்.

அந்த மிருகங்களை மனிதன் இன்னும் கண்டறியவில்லை. ஜான் லில்லி அந்த மிருகங்களைக் கண்டறிந்திருந்தார். மனிதன் இப்போது கண்டறிந்து கொண்டிருக்கிறான். நிச்சயம் அந்தக் கண்டு பிடிப்பு மற்ற கண்டுபிடிப்புகளைவிடச் சிறப்பு பெற்றதாக இருக்கும் சில மிருகங்கள் பெரிய, பரிணாம வளர்ச்சி பெற்ற மூளையைக் கொண்டிருப்பதாகக் கண்டறிந்தால், நாம் கண்டுபிடிக்கப்பட்டவர் களாக மாறுவோம். அந்தப் பெரிய மூளை இன்னும் நம்மை கண்டறியவில்லை.

பரிணாமவளர்ச்சி பெற்ற மிருகங்கள் பல உள்ளன. ஆனால் மனிதனைப்போல வளர்ச்சிபெற்றவை எதுவும் இல்லை. இடையில் உள்ள வித்தியாசம் மிகப்பெரியது! ஜான் லில்லி டால்பின் எனப்படும் கடல்மீன்கள் பற்றி ஆராய்ந்து வருகிறார். டால்பின்களுக்கு மனிதனைக் காட்டிலும் மேலான வளர்ச்சி பெற்ற சிந்தனைத் திறன் இருப்பதாக அவர் நம்புகிறார். எப்போதாவது ஜான் லில்லியை நீங்கள் சந்திக்கநேர்ந்தால், டால்பின்கள் அவரைக்

கண்டறியவில்லை, அவர்தான் டால்பின் பற்றிக் கண்டறிந்து உள்ளார் என்று கூறுங்கள். அந்த கண்டுபிடிப்பாளர் அதிகம் சிந்தனையாற்றல் பெற்றவர் என்பது வெளிப்படை.

டால்பின்கள் தங்களைப் பற்றி எதுவும் கூறவில்லை. ஒரு மனிதர் டால்பின்கள் பற்றிக் கூறுகிறார். அவை தங்களைப் பற்றி நிரூபித்துக் கொள்ள இயலாது இருக்கின்றன. டால்பின்கள் அருமை யானவை. லில்லி சரியான பாதையில் செல்கிறார். ஆனால் அவை மனிதனைக் காட்டிலும் உயர்ந்த சிந்தனைத் திறன் பெற்றிருக்க வில்லை. அவை ஒரு புத்தரை, பதஞ்சலியை, பிதாகோரஸை உருவாக்கவில்லை. ஒரு ஜான் லில்லியையும் தோற்றுவிக்கவில்லை.

மேற்கு நாட்டவரின், டார்வின் தத்துவவாதிகளின் கருத்து மேலோட்டமானது. கிழக்கு நாட்டவரின் பரிணாமக் கோட்பாடு நுட்பமானது. அது ஒரு குரங்கின் உடல் மனித உடலாக மாறியதா என்ற கேள்வி சார்ந்தது அல்ல. அப்படி ஒருபோதும் நேர்வதில்லை. மீனின் உடல் மனித உடலாக மாறியதில்லை. அப்படி ஒரு போதும் நேர்வதில்லை. ஆனால் மீனின் உள்பகுதியில் வளர்ச்சி ஏற்படுகிறது. அது ஒரு உடலில் இருந்து வேறு உடலுக்கு மாறுகிறது.

பரிணாம வளர்ச்சி ஒரு உடலில் இருந்து இன்னொரு உடலாக மாறுவதில்லை. வளர்ச்சி மனநிலையில் ஏற்படுகிறது. ஒரு குரங்கு குறிப்பிட்ட மனவளர்ச்சி பெறும்போது அதன் மறுபிறப்பு ஒரு மனிதனாக அமையும். குரங்காக இருக்காது. அது குரங்காகப் பிறந்து மனிதனாக பிறப்பெடுக்கிறது. குரங்கின் உடலில் பரிணாம வளர்ச்சி தோன்றுவதில்லை. ஆன்மாவால் அந்த உடல் உபயோகப்படுத்திக் கொள்ளப்படுகிறது. வாழ்வின் தொடர்ச்சி என்று எப்படி வேண்டு மானாலும் நீங்கள் அதை அழைக்கலாம். குரங்கின் உடல் பயன் படுத்தப்படுகிறது. இப்போது ஆன்மா ஒரு சிறந்த உடலாக வடிவெடுக்கத் தயாராக உள்ளது. அந்த உடலில் வளர்ச்சிக்கான சாத்தியங்கள் கிடைக்கின்றன.

உயிர் ஒரு மிருக உடலில் இருந்து மற்றொன்றுக்கு மாறுகிறது. உடல் அதில் வளர்வதில்லை. உயிர்கள் வளர்கின்றன. மெழுகு வர்த்திகள் வளர்ச்சி பெறுவதில்லை. ஆனால் ஒளிச்சுடர் ஒரு மெழுகு வர்த்தியில் இருந்து மற்றொன்றுக்குத் தாவுகிறது. சுடர் மேலும் மேலும் உயர்கிறது. விழிப்புணர்வு நிலை என்பது பருப்பொருளுக்கு பூதஉடலுக்கு இல்லை. இங்குதான் டார்வின் விஷயத்தை முழுமை யாகத் தவறவிட்டுவிட்டார். கிழக்கு நாடுகளில் குறைந்தபட்சம்

பத்தாயிரம் ஆண்டுகளாக நமக்கு விழிப்பு இது குறித்து ஏற்பட்டிருக்கிறது.

தியானத்தின் வாயிலாக இந்த விழிப்புணர்வு வருகிறது. இந்த விழிப்புணர்வு சைவஉணவை அடிப்படையாகக்கொண்டது. மக்கள் தங்கள் கடந்த பிறவிகளை நினைவில் கொள்ளத் தொடங்கினார்கள்.

புத்தர் மற்றும் மகாவீரரிடம் அது அடிப்படை உத்தியாக அமைந்திருந்தது. எப்போதெல்லாம் ஒரு சீடர் தீட்சை பெறுகிறாரோ அப்போதெல்லாம் புத்தரும், மகாவீரரும் அந்த சீடர் தனது கடந்த பிறவிகள்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்வார்கள். அதற்காக சிறந்த வழிமுறைகள் உருவாக்கப் பட்டிருந்தன. எனவே ஒருவர் தனது கடந்த பிறவிகளுக்குள் நுழைந்து பார்க்க முடியும்.

உங்கள் கடந்த பிறவிகளுக்குள் ஒருமுறை நுழைந்து பார்த்தால் உங்கள் வாழ்க்கை முற்றிலும் மாறுதல் அடைந்துவிடும். அது ஏன்? இப்போது நீங்கள் செய்துகொண்டிருக்கும் முட்டாள்தனங்களை அறிய முடியும் அல்லது செய்ய விரும்பும் முட்டாள்தனத்தை உணர முடியும். பற்பல பிறவிகளில் செய்து வந்ததையும் அறியலாம். அதே செயலை பலதடவை செய்திருக்கிறீர்கள். ஒவ்வொரு தடவையும் எதையும் அடைந்திடவில்லை.

உதாரணமாக, நீங்கள் பணப் பைத்தியமாக இருந்தால், கடந்த பிறவியிலும் பணப்பித்தாக இருந்ததை நினைவுபடுத்திக் கொள்ள முடியும். அதில் வெற்றி பெற்று செல்வந்தராக மாறினீர்கள். பெரும் தலைவனாக உயர்ந்தீர்கள். பிறகு செத்துப்போனீர்கள். அந்த செழிப்பும், பொருள்வளமும் எந்தப் பயனையும் தரவில்லை... மரணம் அவற்றை எடுத்துக் கொண்டுவிட்டது. எப்போதும் போல நீங்கள் வெறுமையில் இறந்துபோனீர்கள். வறியவராக மரித்தீர்கள். முன் பிறப்பில் நீங்கள் ஒரு அரசனாக, பெரிய தேசத்தின் அதிபதியாக இருந்ததை ஞாபகம் கொள்கிறீர்கள். ஆனாலும் ஏமாற்றம் மற்றும் துயரத்தில் வாழ்ந்து இறந்தீர்கள். இப்போது மீண்டும் அதையே செய்கிறீர்கள். பணத்தின் மீது இச்சை வைக்கிறீர்கள். அதனால் எதுவும் பயனில்லை. அந்த இச்சை தரையில் மல்லாந்து விழுந்து விடும். உங்களுக்கு நினைவு இருக்கும்போது அதே முட்டாள் தனத்தை மீண்டும்மீண்டும் எப்படிச் செய்ய இயலும்? நினைவு இல்லாதுபோனால் அந்த முட்டாள்தனத்தை மீண்டும்மீண்டும் செய்வீர்கள்.

மறுபிறவி என்பது தத்துவார்த்தம் சார்ந்த கருத்து அல்ல. அது ஒரு அனுபவம். முற்றிலும் அறிவியல்பூர்வமானது. மனிதர்கள் தங்கள் பிறவிகளை நினைவில் கொள்கிறார்கள்.

தியானத்தில் நல்ல ஆழமான தேர்ச்சி பெற்றால் அந்த உத்திகளை இங்கும் செயல்படுத்தலாம். நீங்கள் சுத்த சைவ உணவுக்காரராக இருப்பது அவசியம். இல்லாதுபோனால் இந்த பிறவியைத் தாண்டி உங்களால் அப்பால் செல்ல முடியாது. மனம் நகர மறுக்கிறது. அது பறவையின் சிறகுபோல மிகவும் எடையற்று இருக்க வேண்டும். அப்போதுதான் ஒரு பிறவியில் இருந்து அடுத்த பிறவி நோக்கிச் செல்லமுடியும். எவ்வளவு கனமின்றி இருக்கிறதோ அவ்வளவு ஆழமாகப் பயணிக்க முடியும்.

நீங்கள் கடந்த பிறவியில் மனிதராக இருந்த ஒன்றை மட்டும் நினைவில் கொள்ளப் போவதில்லை. மெல்ல மெல்ல மிருகங்களாக இருந்ததையும் ஞாபகப்படுத்திக் கொள்வீர்கள். சிலசமயம் ஆழம் அதிகரிக்கும்போது நீங்கள் மரமாக, பாறையாகப் பல ஆயிரம் ஆண்டுகள் இருந்ததையும் அறிவீர்கள். நீங்கள் மீனாக இருந்ததை அறிந்த பின்னர், மீன் இறைச்சி உண்பது கடினமாகிவிடும்.

சைவ உணவு நெறி உங்களை கடந்த கால நினைவுகளுக்கு அழைத்துச் செல்கிறது. கடந்த பிறவிகளை அறியும்போது நீங்கள் மேலும் மேலும் சைவ உணவுக்காரராக மாறுகிறீர்கள். எல்லோரையும் சகோதர, சகோதரிகளாகப் பார்க்கும்போது இயற்கையை, மிருகங்களை உங்களால் கொல்லமுடியாது. கொல்வது முடியாததாகி விடுகிறது. நீங்கள் அதைத் தவிர்க்கத் தேவையில்லை. அது முடியாத செயலாகிவிடும்.

பிதாகோரஸ் உண்மையான ஒரு சாகஸப் பயணி. பேரரசர் அலெக்ஸாண்டரும் இந்தியாவுக்கு வந்தார். இந்தியாவிலிருந்து பல பொருட்களை எடுத்துச் சென்றார். அவை எல்லாம் பயனற்ற பொருட்கள் வைரங்கள், மரகதம், தங்கம் போன்றவை அவை. பேரரசர் அலெக்ஸாண்டர் இந்தியாவிலிருந்து எடுத்துச்சென்ற அவை பிரயோஜனம் இல்லாதவை. பிதாகோரஸ் உண்மையான தேடல் கொண்டவர். அவர் நிஜமான வைரங்களை, மரகதங்களைச் சேகரித்தார். விழிப்புணர்வு என்ற வைரம், விழிப்புணர்வு என்ற மரகதம் போன்றவற்றைச் சேகரித்தார். அவை இரண்டும் மிகவும் முக்கியத்துவம் பெற்ற, மிகவும் பொருட்செறிவு கொண்ட அணுகு முறைகளாகும். சைவ உணவு நெறி, மறுபிறப்பு நம்பிக்கை என்பனவே அவைகளாகும்.

யாரோ ஒருவர் நாயை அடித்துக்கொண்டு இருப்பதை பிதாகோரஸ் பார்த்தார். "அதை அடிக்காதே" என்று அவனிடம் சொன்னார் பிதாகோரஸ். "இது எனது நண்பன் ஒருவனின் ஆன்மா. அது குரைக்கும்போது நான் குரலை அடையாளம் கண்டு கொண்டேன்" என்றான் அவன்.

மேற்கு நாட்டுச் சிந்தனையாளர்களுக்கு இது நகைப்புக்குரிய விஷயமாகத் தெரியும். மேற்கு நாட்டவரின் அறிவியல் பார்வை அது. ஆனால் பழைய நாட்களிலும் மக்கள் அதைக் கேட்டுச் சிரித்திருப் பார்கள். "நாயை அடிக்காதே என்று சொன்னால் அது என் நண்பனின் ஆன்மா என்கிறானே. என்ன இப்படி உளறுகிறான்?" என்று கேலி செய்திருப்பார்கள். சாத்தியமான வழிகளில் எல்லாம் அவர் மறு பிறப்புக் கருத்தைப் போதிக்க முயன்றார்.

மூன்றாவது விஷயம் என்னவென்றால், வாழ்க்கை ஒரு சக்கரம் போன்றது என்ற செய்தியை அறிமுகப்படுத்திய முதல் மனிதரும் அவர்தான். பிறப்பு, இறப்பு என்ற சக்கரம் சுழன்று கொண் டிருக்கிறது. நாம் அதைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறோம். சக்கரம் திரும்பத் திரும்ப அதே தடத்தில் சுழல்கிறது. புதிதாக எதுவும் எப்போதும் நேர்வதில்லை. பிறப்பு ஏற்படுகிறது. நீங்கள் இளைஞராக மாறுகிறீர்கள். காமமும், நிறைய ஆசைகளும் உங்களிடம் காணப்படுகின்றன. எல்லாம் ஓய்ந்த பிறகு முதுமை அடைகிறீர்கள். நோய்வாய்ப்பட்டு, சுகவீனத்துடன், ஏமாற்றத்துடன், தளர்ந்து கிடக்கிறீர்கள். அதன் பின்னர் மரணம்... மீண்டும் பிறப்பு ... அதன் தொடர் நிகழ்வுகள்.

ஒவ்வொரு பிறப்பும் ஒரு இறப்பைக் கொண்டுவருகிறது. அது ஒரு மாயச் சுழல். சக்கரம் சுழன்றுகொண்டே இருக்கிறது. இந்தியாவில் உலகம் என்ற சொல்லுக்கு **சம்சாரா** என்ற வார்த்தையை உபயோகிக்கிறார்கள். சக்கரம் என்பதே அதன் அர்த்தமாகும். குழந்தைப் பருவம், இளமை, முதுமை போன்றவை எல்லாம் அந்த சக்கரத்தின் ஆரக்கால்கள். அதை நீங்கள் இறுகப் பிடித்திருக்கிறீர்கள். சக்கரம் சுழன்றுகொண்டிருக்கிறது. சகலமும் உலகில் நகர்ந்து கொண்டே இருக்கிறது. பூமி சூரியனைச் சுற்றி வருகிறது. சூரியனும் பெயர் தெரியாத வேறு சூரியனைச் சுற்றி வருகிறது. சந்திரனும் பூமியைச் சுற்றிவருகிறது. பூமியும், சந்திரனும் சூரியனைச் சுற்றி வருகின்றன. சூரியன் வேறு சூரியனைச் சுற்றுகிறது. இப்படி ஒன்றை யொன்று சுற்றுகின்றன. எல்லா நட்சத்திரங்களும் நகர்ந்து கொண் டிருக்கின்றன. **அனைத்தும்** ஒரு வட்டப் பாதையில் சுற்றுகின்றன.

பருவ காலங்களும் வட்டப்பாதையில் திரும்பத்திரும்பத் தோன்றுகின்றன.

வாழ்க்கை ஒரு சக்கரம். அதன் செயல்கள் தொடர் நிகழ்வாக அமைகின்றன. சக்கரத்தை இறுகப் பிடித்திருக்கும் நீங்கள் வேறு எங்கும் செல்ல இயலாது. சுழலும் சக்கரத்தை உதறிவிட்டு எட்டிக் குதித்துவிட வேண்டும். அப்போதுதான் நாம் விடுதலை பெற முடியும் என்பது கிழக்கு நாட்டவர் கருத்து. அப்போது மட்டுமே விடுதலை அடைய இயலும். பிறப்பு, இறப்பு என்ற வாழ்க்கைச் சக்கரத்திலிருந்து விடுபடுவதே விடுதலையாகும். அதன்பிறகு நிலையாக இருப்பீர்கள். நகர்ந்துகொண்டிருப்பதில்லை. அப்போது கடந்தகாலமும் இல்லை, எதிர்காலமும் இல்லை. நிகழ்காலம் மட்டுமே இருக்கிறது. இப்போது ஒரே காலம். ஒரே நேரம் என்று அமைந்து விடுகிறது.

அதுவே மோட்சம் என்ற நிர்வாண நிலை, விடுதலை நிலையாகும். அதுவே உண்மையான கடவுளின் பேரரசு ஆகும். ஒருவர் எளிமையுடன் வாழும்போது, எல்லா ஆபத்துகளும் நீங்கிவிடுகின்றன. சூறாவளிகள் முடிவுக்கு வருகின்றன. முழுமையான அமைதி ஏற்படுகிறது. அந்த அமைதியில் ஒரு பாடல் எழுகிறது. ஒரு இன்னிசை எழுகிறது. கேட்டறியாத இன்னிசை, தடையற்ற இன்னிசை அது. அந்த அமைதியே ஆனந்தம். அந்த அமைதியே பேரின்பம். அந்தப் பேரின்பம் நித்தியமானது. அது மாறுவதே இல்லை.

நீங்கள் சக்கரத்தைப் பற்றிக்கொண்டு இருந்தால் அனைத்தும் மாற்றம் அடையும். சக்கரத்தை உதறித் தள்ளிவிட்டால் மாற்றங்கள் மறைந்துபோகும். எப்போதும் இங்கு நிகழ்காலத்தில் தங்கியிருப்பீர்கள்.

நிஜமான தேடல் கொண்டவர்கள் விரும்பும் உண்மையான தேடல் இதுதான். பிறப்பு, இறப்பு என்ற சக்கரத்தில் இருந்து விடுபடுவது எப்படி, பிறப்பு என்ற ஒன்று நிகழாத நித்திய வாழ்வில் நுழைவது எப்படி, மரணமற்றுப் போவது எப்படி, எதுவும் தொடங்காத, எதுவும் முடிவுபெறாத நிலைபெறுவது எப்படி, எல்லாவற்றிலும் மேலானதான கடவுளின் பேரரசில் நுழைவது எப்படி? முன்பொரு நாள் கடவுள் என்பதன் பொருள், "நிகழ்காலத்தில் வாழ்தல்" என்று கூறினேன். அந்த நிகழ்காலத்தில் நுழைவது எப்படி? நிகழ்காலத்தில் நுழைவதற்கான சூத்திரங்கள் இவை.

மூன்றாம் அங்கம். நிறைவுபெற்ற நிலை.

**"நான் ஒதுக்கித் தள்ளிய காரியம் எது? செய்து முடித்தது எது?" என்று உங்களை நீங்களே கேட்டுக்கொள்ளாது சோர்வுடன் ஒருபோதும் இமைமூடி உறங்காதீர்கள்.**

மேலோட்டமாகப் பார்க்கும்போது இது எளிமையான நீதிபோதனைச் சூத்திரம் போல்தோன்றும். அப்படியல்ல. இது நிறைய அர்த்தம் செறிந்தது. ஆழமான மனோதத்துவம் முழுமையாக அமைந்துள்ளது. ஆனால் மொழி இருபத்தைந்து நூற்றாண்டுகள் பழமையானது. எந்த முழுமைபெறாத அனுபவமும் தலைவலியை ஏற்படுத்திவிடும் என்று நவீன சிகிச்சை முறைகள் தெரிவிக்கின்றன. நவீன மனோவியலில் இது புதிய நுட்பமான கண்டறிதல் ஆகும். கிழக்கத்திய மனோவியலுடன் ஒப்பிடும்போது இது ஒன்றும் புதிய செய்தி அல்ல.

நீங்கள் முழுமையான அனுபவம் பெற்று வாழ்ந்தால் அதை நிறைவு செய்து விடுகிறீர்கள். உங்களுக்குள் அது தங்கி இருக்காது. பாதி அனுபவம் மட்டுமே பெற்றிருந்தால் மீதமுள்ள பகுதி அங்கேயே சுற்றிக் கொண்டிருக்கும். மனோவியல் சிகிச்சை, மனோ வியல் நாடகம், பழங்கால வைத்தியம் போன்றவை இதை அடிப் படையாகக் கொண்டிருக்கின்றன.

மனோவியல் சிகிச்சை என்பது என்ன? கடந்த காலத்தில் வாழ்ந்து முடிக்காத அனுபவத்தைப் பெறுவதற்கு உதவுதல், அரை குறை அனுபவம் பெற்ற வாழ்வை மீண்டும் தொடங்குவது, முழுமை பெறாது இருப்பதாக நீங்கள் கருதும் கணங்களில் மீண்டும் வாழச் சந்தர்ப்பம் ஏற்படுத்துவதே அந்த சிகிச்சையாகும். ஒருமுறை அவை முடிவு பெறும்போது, நீங்கள் அதற்கு முற்றுப்புள்ளி வைத்து விடலாம். அவை முடிவுக்கு வந்துவிட்டன. நீங்கள் அவற்றிலிருந்து விடுதலை பெற்றுவிட்டீர்கள்.

இது பிரதான அடிப்படை விதி என்பது நினைவிருக்கட்டும். எந்த ஒரு அனுபவமும் முழுமை பெறும்போது அதனுடனான தொடர்பை முடித்துக்கொள்கிறீர்கள். அது கர்மாவை விட்டுச் செல்வதில்லை. கர்மாவை அது உருவாக்குவதில்லை. அது எந்த அடையாளத்தையும் விட்டுச் செல்வதில்லை. எந்த அடையாளத்தை யும் உங்களிடம் ஏற்படுத்துவதில்லை. காலடிச் சுவடுகளும் ஏற்படுவதில்லை. அதனுடைய எச்சம் எதுவும் இருப்பதில்லை. அது ஆவியாகி, மறைந்துபோகிறது.

நீங்கள் முழுமனதுடன் நேசித்த ஒரு பெண் இறந்து போனால், நீங்கள் சிறிது வருத்தம் கொள்வீர்கள். உங்களுக்குப் பைத்தியம் பிடிப்பதோ வேறு எதுவுமோ நேர்வதில்லை. உங்களுக்கு இது வியப்பைத் தரலாம். ஆனால் அதுதான் உண்மை. நீங்கள் மார்பில் அடித்துக்கொண்டு, "நான் தற்கொலை செய்துகொள்கிறேன். என்னால் இனி வாழமுடியாது" என்று கதறுவதில்லை. நீங்கள் முழுமையாக அன்பு செலுத்திய அந்தப் பெண் இறந்துபோனால் ஒரு சோகம் வரும். ஆனால் அந்த சோகமும் சுகமானது. அது அமைதி யான ஒரு வழியனுப்புதல் ஆகும். நீங்கள் தற்கொலை செய்து கொள்வது இல்லை. கதறியழுது மாதக்கணக்கில், வருடக்கணக்கில் கண்ணீர் விடுவதில்லை. சில துளிகள் கண்ணீர் வரலாம். அவை வருத்தம், துயரத்தினால் ஏற்பட்டவை அல்ல. அதற்குமாறாக நன்றி யுணர்வினால் ஏற்பட்டவை.

நீங்கள் அந்தப் பெண்ணுக்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறீர்கள். அவள் உங்களுக்கு நிறையக் கொடுத்திருக்கிறாள். உங்களை அவள் முதிர்ச்சி பெற்றவராக மாற்றினாள். நிறைய அன்பை உங்கள்மீது பொழிந்தாள். அதில் உங்களுக்குக் குற்றஉணர்வு ஏற்படவில்லை. நீங்களும் முடிந்த அளவு தந்திருக்கிறீர்கள்.

நீங்கள் அவளிடம் முழுமையான அன்புசெலுத்தாது இருந்தால் நீங்கள் குற்ற உணர்வு கொள்வீர்கள். அந்த குற்றஉணர்வு மூலம் வருத்தம் தோன்றும். அதன் பிறகு எல்லைமீறிச் செல்வீர்கள். அழுவீர்கள், விசும்புவீர்கள், உணவு உண்ணமாட்டீர்கள். மாதக் கணக்கில், வருடக் கணக்கில், ஏன் ஆயுள்முழுவதும் துயரம் கொள்வீர்கள். காரணம் அடியாழத்தில் இப்போது நீங்கள் பச்சாதாபம் கொள்கிறீர்கள். அந்தப் பெண் மறைந்துவிட்டாள். அவளிடம் நீங்கள் ஒருபோதும் காதல் கொண்டதில்லை. அவளை மீண்டும் பார்க்கும் வாய்ப்பு இல்லை. மன்னிப்புக் கோரவும் எந்த வாய்ப்பும் இல்லை. "என்னை மன்னித்துவிடு நான் உன்னை நேசிக்கவில்லை. ஆனால் நேசித்திருக்கலாம்" என்று உங்களால் கூற முடியாது. அந்த நிறைவு பெறாத அனுபவம் கருமேகம் போல உங்களைச் சூழ்ந்திருக்கிறது.

மனோவியல் நாடகம் என்பது அந்த அனுபவத்தில் நீங்கள் மீண்டும் வாழ்வதாகும். அந்தக் கனவை மறுபடியும் உருவாக்கு கிறீர்கள். அந்த கனவை ஒருமுறை மீண்டும் உருவாக்கினால் - அது உங்கள் கற்பனையாக இருந்தாலும் - நீங்கள் அதே காரியத்தை மீண்டும் செய்யமுடியும். வேறு ஒரு பெண்ணை அவளாக எண்ணினால் அச்செயலை மறுபடியும் செய்ய இயலும். அந்த

நாடகத்தை நீங்கள் தொடர்ந்தால் விடுதலை பெறுவீர்கள். அது முற்றுப்புள்ளியாக அமையும். கூண்டிலிருந்து நீங்கள் விடுபட்டு விடுவீர்கள்.

பழங்காலச் சிகிச்சையிலும் அதுதான் நடக்கிறது. பிறப்பின் வலியை நீங்கள் மீண்டும் அடைய வேண்டும். அந்த வலியில் ஒரு தடவை வாழ்ந்துவிட்டால், உங்கள் மார்பில் உள்ள அதிக கனம் மறைந்து விடுகிறது.

மனோவியல் சிகிச்சையிலும் அதுதான் நடக்கிறது. மனோ தத்துவ நிபுணரிடம் நீங்கள் உங்கள் மனதில் உறுத்தும் சகலத்தையும் சொல்ல வேண்டும். அறிவான செயல், முட்டாள்தனமான செயல், சார்புள்ளது, சார்பற்றது, நிலையானது, நிலையற்றது போன்ற எல்லா விஷயங்களும் அங்கு உறுத்தும். உங்கள் கவனத்தை ஈர்க்கும். அதற்கு நேரம் இல்லாதிருந்தது. நீங்கள் சொல்வதைக் கேட்க யாருக்கும் நேரம் இல்லாதிருந்தது.

மனோவியல் சிகிச்சை எளிமையானது. சிகிச்சை என்பதை விட அதைத் தந்திரம் என்று கூறலாம். மனோவியல் சிகிச்சையாளர் எதையும் செய்வதில்லை. வெறுமனே இருக்கையில் உட்கார்ந் திருக்கிறார். நீங்கள் சொல்வதை அவர் கேட்கவும் செய்வதில்லை. சகலவிதமான பைத்தியக்காரத்தனங்களையும் தினமும் யாரால் கேட்டுக்கொண்டிருக்க முடியும்? ஒருவர் தனது தெளிவான மன நிலையையும் காத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. உங்களைப் போலவே அவருக்கும் அசட்டுத்தனங்கள் இருக்கலாம். அவருக்கும் சொந்த விருப்பங்கள் இருக்கலாம். தனது அசட்டுத்தனங்களில் அவர் வாழ வேண்டியிருந்தது.

அவர் உங்கள் பேச்சைக் கேட்கிறார் என்று கருதுகிறீர்கள். நீங்கள் மனம் திறந்து கொட்டுகிறீர்கள். அப்படிக் கொட்டும்போது ஏதோ ஒன்று விடுபடுகிறது. மனஉணர்வுகள் குறைகின்றன.

பிதாகோரஸ் பழமையான ஒரு எளிய கருத்தைப் பயன்படுத்து கிறார். எதற்காக மனோவியல் சிகிச்சையாளருக்காகக் காத்திருக்க வேண்டும்? மனோவியல் நாடகம் அல்லது பழமையான சிகிச்சைக் காக எதற்குக் காத்திருக்கவேண்டும்? ஒவ்வொரு அனுபவத்தையும் தினமும் ஏன் முடித்துக்கொள்ளக் கூடாது?

இரவில் தூங்கப்போவதற்கு முன்னர் சற்று திரும்பிப் பாருங்கள். நீங்கள் வாழ்ந்த பனிரெண்டு மணிநேரத்தில் எல்லா வற்றையும் முடித்தீர்கள். பல ஆண்டுகளாக மிச்சம் வைத்து மனோ

வியல் சிகிச்சைக்குப் போவதை விடவும் அது எளிதானது. நீங்களே உங்களுக்குச் சிகிச்சையளிப்பவராக ஏன் மாறக்கூடாது? தினமும் அதைச் செய்வது எளிது. அது பெரிய பிரச்சினை அல்ல. சிறிய எச்சமே எஞ்சி நிற்கிறது. அதை முடித்துவிடலாம்.

**"நான் ஒதுக்கித் தள்ளிய காரியம் எது? செய்து முடித்தது எது?" என்று உங்களை நீங்களே கேட்டுக்கொள்ளாது சோர்வுடன் ஒருபோதும் இமைமூடி உறங்காதீர்கள்.**

"நான் செய்தது என்ன? செய்யாதது என்ன?" என்று யோசித்துப் பாருங்கள். இன்று செய்த காரியங்கள்பற்றித் தீவிரமாக யோசியுங்கள். மெதுவாகக் காலையில் இருந்து மீண்டும் ஒருமுறை வாழ்ந்து பாருங்கள். காலையில் கண்விழித்தது முதல் அனைத்தையும் நினைத்துப் பாருங்கள். நினைப்பதுடன் நில்லாது கண்விழித்த கணத்தை வாழ்ந்து பாருங்கள். வெளியே பறவைகள் குரல் கொடுக்கின்றன. சூரியன் உதித்துவிட்டது. மீண்டும் அந்த பறவைகளின் குரலைக் கேளுங்கள். திரைச்சீலை வழியே சூரியக் கதிர்கள் உள்ளே வருகின்றன. திரைச்சீலை தங்கம் போல் மின்னுகிறது. சற்று வாழ்ந்து பாருங்கள். உங்கள் மனைவி சமையலறையில் தேநீர் தயாரித்துக் கொண்டிருக்கிறாள். குழந்தைகள் பள்ளிசெல்லத் தயாராகிக் கொண்டிருக்கின்றன. அதை நினைத்துப் பாருங்கள். மறுபடியும் வாழுங்கள். முதல் கணத்திலிருந்து வாழுங்கள்.

மெதுவாகச் செல்லுங்கள். நாள் முழுவதும் என்ன செய்தீர்கள் என்று ஆழ்ந்து யோசியுங்கள். எதைச் செய்யாது விட்டுவிட்டீர்கள் என்று பாருங்கள். செய்யாமல் எவை பாக்கி உள்ளன என்று யோசியுங்கள். முடிவுபெறாமல் எவை உள்ளன என்று நினைத்துப் பாருங்கள். எதையாவது தவறாகச் செய்திருந்தால் குறைந்தபட்சம் கற்பனையிலிருந்து அதைச் சரி செய்யுங்கள். ஏதாவது ஒன்றைத் தவற விட்டிருந்தால் அல்லது ஒதுக்கியிருந்தால் கற்பனையிலாவது அதை நிறைவு செய்யுங்கள். பிறகு வியந்துபோவீர்கள். உங்களுக்கு எந்த சிகிச்சையும் தேவையில்லை. காரணம், ஒவ்வொரு நாளும் குப்பைகளை அகற்றிவிடுகிறீர்கள். காரியம் சரி செய்யப்படுகிறது.

பார்பிரியின் கருத்துப்படி தங்க வாக்கியங்களில் இரண்டு வரிகள் தவறிப்போய்விட்டன. சூத்திரத்தில் அதை இணைத்துத் தொடர்பைச் சீராக்கவேண்டும். இரண்டு வரிகள் தவறிவிட்டதாகவே நானும் எண்ணுகிறேன். அந்த வரிகள் இவைதான்.

**விழித்தெழும் தருணத்தில் உங்கள் கடமைகள், இலக்குகள் என்ன என்று அமைதியாக யோசியுங்கள்.**

இந்த இரண்டு வரிகள்தான் அங்கே இருந்திருக்க வேண்டும். எப்படியோ அவை தவறிவிட்டன. பின்னால் திரும்பிப் பார்த்து, நீங்கள் செய்தது என்ன, செய்யத் தவறியது என்ன என்று இரவில் சிந்திப்பது நல்லது என்றால், அதன் அடுத்த பகுதியும் முக்கியமானது தான். ஒரு நாணயத்தின் மறுபக்கமாக இருக்கிறது.

காலைவேளையில் எல்லாம் புதிதாக இருக்கும்போது முழு இரவு தந்த உறக்கம் உங்களுக்குப் புத்துணர்வு தருகிறது. தினசரிக் காரியங்களில் மனம் இன்னும் இறங்கவில்லை.... நீங்கள் கவனித்தது உண்டா? மனம் செயல்படத் துவங்கச் சிலநொடிகள் ஆகும். நீங்கள் விழித்து எழுந்துவிட்டீர்கள் என்ற தெளிவு தோன்றும். சற்று உள்ளே பாருங்கள். எல்லாம் அமைதியாக இருக்கும். சில கணங்களில், ஒன்றிரண்டு வினாடிகளில் மனம் விழித்தெழுந்து செயல்பட ஆரம்பிக்கும். அது நடப்பதற்குமுன்பு, அந்த அமைதியான கணத்தில், யோசிக்கும்வேளையில், நீங்கள் வாழப்போகும் இன்றைய நாளின்மீது ஒரு பார்வையை ஓடவிடுவது நல்லது.

**விழித்தெழும் தருணத்தில்....**

அதை உடனே செய்தாக வேண்டும். சில கணங்களை நீங்கள் தவறவிட்டால், அது அகன்றுவிடும். விழித்திருக்கும் அந்தக் கணத்தில் நீங்கள் கண்ணாடிபோன்று இருக்கிறீர்கள். எதிரே காத்திருக்கும் நாளை அந்தக் கண்ணாடி பார்க்கட்டும். அதற்கு அனுமதியுங்கள்.

**உங்கள் கடமைகள், இலக்குகள் என்ன என்று அமைதியாக யோசியுங்கள்.**

ஒரு விதை நிலத்தில் வீழ்வதுபோல இக்கருத்தை மனதில் விதைத்துக்கொள்ளுங்கள். இது திட்டமிடல் அல்ல என்பதை ஞாபகம் வையுங்கள். பிதாகோரஸைத் தவறாக அர்த்தம் செய்து கொள்ளாதீர்கள். அது திட்டமிட்ட செயல் அல்ல. ஒரு விதை மனதில் விழுவது போன்றதாகும். "இது எனது இன்றைய குறிக் கோள்". அந்த விதை அன்றைய முழுநாளின் செயல்பாடுகளையும், உங்கள் தரத்தையும் பாதிப்புக்கு உள்ளாக்கும்.

இரவில் மீண்டும் அந்தக் குறிக்கோளை எண்ணிப் பாருங்கள். செய்து முடிக்கப்பட்டது என்ன என்று ஞாபகப்படுத்திப் பாருங்கள். எது முடிக்கப்படவில்லை என்றும் யோசியுங்கள். மீண்டும் வாழ்ந்து பாருங்கள். வட்டம் பூர்த்தியாகும். ஒவ்வொரு நாளும், இவ்விதம்

வாழ்ந்தால் ஒருபோதும் உங்களுக்கு எந்த சிகிச்சையும் தேவைப் படாது.

**தீயது என்று கருதுவதை நிராகரியுங்கள். நல்லதை விடாமுயற்சியுடன் மேற்கொள்ளுங்கள்.**

இரவு வேளையில் சிந்திக்கும்போது, அந்த முழுநாளையும் மறுபடி வாழ்ந்து பார்க்கும்போது சில விஷயங்கள் தீயவை என்று உணர்ந்தால், அவற்றை மீண்டும் செய்யாதீர்கள். ஏதாவது நல்லதாக இருந்தால் தொடர்ந்து மேற்கொள்ளுங்கள்.

பிதாகோரஸும், நானும், எல்லா புத்தர்களும் தீயவை என்று எவற்றைக் கூறுகிறோம்? விழிப்புணர்வு இல்லாத நிலை தேவைப் படும் காரியங்கள் தீயவை எனப்படும். விழிப்புணர்வு இல்லாத நிலை இல்லை என்றால் அதைச் செய்ய முடியாது எனும்போது அது தீயது. எதைச் செய்ய விழிப்புணர்வு தேவையோ அது நல்லது. விழிப்புணர்வு இல்லாத நிலையில் செய்ய இயலாத காரியமானால், அது நல்லது ஆகும்.

எனவே திரும்பிப் பாருங்கள். நாள்முழுவதும் என்ன செய்தோம் என்று கவனியுங்கள். விழிப்புடன் என்ன செய்தோம், விழிப்புணர்வு இல்லாது என்ன செய்தோம் என்று பாருங்கள். நீங்கள் இயந்திரம் போல, இயந்திர மனிதன்போல எப்போது செயல் பட்டீர்கள், விழிப்புணர்வுடன் எப்போது செயல்பட்டீர்கள் என்று எண்ணிப்பாருங்கள். எப்போதெல்லாம் விழிப்புணர்வுடன் செயல் பட்டீர்களோ, அப்போது செய்தவை நல்ல காரியங்கள்.

விழிப்புணர்வுடன் செயல்படும்போது நல்லவை தானே நடந்தேறும் என்று அறியும்போது வியந்துபோவீர்கள். விழிப் புணர்வு இல்லாது செயல்படும்போது காரியம் தவறாகிப் போகும். விழிப்புணர்வற்ற நிலை கெட்டது. விழிப்புணர்வு உள்ள நிலை நல்லது.

**எனது ஆலோசனைகள் குறித்து நன்கு யோசியுங்கள்**
**அவற்றை நேசியுங்கள். அவற்றைப் பின்பற்றுங்கள்.**
**உங்களை எப்படி வழிநடத்த வேண்டும் என்று இறைப் பண்புக்குத் தெரியும்.**

**எனது ஆலோசனைகள் குறித்து நன்கு யோசியுங்கள்...**

அவற்றின்மீது நம்பிக்கை கொள்ளுங்கள் என்று அவர் கூற வில்லை. சிந்தியுங்கள் என்கிறார். "நான் சொல்லும்போது கண்ணாடி

யாக மாறுங்கள்" என்கிறார். அவை கட்டளைகள் என்று கூறவில்லை. ஆலோசனைகள் என்று தெரிவிக்கிறார். நீங்கள் அதைச் **செய்தாக வேண்டும்** என்று சொல்லவில்லை. அவை கட்டளைகள் அல்ல. அவை சிறிய அறிவுரைகள். நீங்கள் பேரின்பம் பெறவேண்டும் என்று விரும்பும் ஒரு நண்பனின் உதவிக்கரம்.

**எனது ஆலோசனைகள் குறித்து நன்கு யோசியுங்கள்....** அமைதியாகக் கவனியுங்கள், எவ்வித பாரபட்சமும் இல்லாது கவனியுங்கள். எது தவறு, எது சரி என்று முடிவெடுப்பதில் அவசரம் காட்ட வேண்டாம். அதை உங்கள் ஆழ்மனதில் ஊறப்போடுங்கள். சாட்சியாக இருந்து கவனியுங்கள். அது உங்கள் இதயத்தை ஊடுறுவட்டும். அதுவே தியானமாகும்.

தியான சிந்தனையுடன்.... **எனது ஆலோசனைகளை நன்கு யோசியுங்கள். அவற்றை நேசியுங்கள்.** யோசிக்கும்போது அன்பு தன்னிச்சையாக எழும். நீங்கள் சிந்திக்காவிட்டால் தர்க்கம் தன்னிச்சை யாகத் தலைதூக்கும். அவை இரண்டும் வெளிப்பாடுகள். நீங்கள் எப்படிக் கவனிக்கிறீர்கள் என்பதைப் பொறுத்தே எதுவும் அமைகிறது.

உதாரணமாக, நான் பேசுவதை நீங்கள் கேட்கிறீர்கள். என்னுடன் தொடர்பில் இருப்பவர்கள் முற்றிலும் வித்தியாசமான முறையில் கவனிக்கிறார்கள். அவர்கள் யோசிக்கிறார்கள். முழு அமைதியுடன் இருக்கிறார்கள். நான் எதைச் சொல்கிறேனோ அதை அவர்கள் பருகுகிறார்கள். நான் அவர்களின் நண்பன் என்று அவர் களுக்குத் தெரியும். நான் என்ன சொன்னாலும் அது கட்டளையல்ல, ஆலோசனை, அறிவுரை என்று அவர்களுக்குத் தெரியும்.

நான் சொல்வதை நீங்கள் சிந்திக்கும்போது உங்களிடம் அன்பு தோன்றும். நீங்கள் என்னுடன் வாதிட்டால், அது பற்றிச் சிந்திக்கா விட்டால், உங்களுடைய பாகுபாட்டுணர்வு, கொள்கைகள், மத நூல்கள் போன்றவற்றுடன் உங்கள் கடந்த காலமும் உள்ளே கூச்ச லிடுகிறது. நீங்கள் ஒப்பீடு செய்தால், தீர்ப்பு அளித்தால், விமர்சித்தால், விவாதித்தால் தர்க்கம் உங்களிடம் தோன்றும்.

பாகுபாட்டு உணர்வுடன் கவனித்தால்மட்டுமே தர்க்கம் தலையெடுக்கிறது. நீங்கள் உண்மையாகக் கவனிப்பதில்லை. விவாதிக்கிறீர்கள். நீங்கள் நிஜமாகவே சார்ந்திருந்தால், அச்சப் பட்டால், சண்டையிட்டால் அது உருவாகிறது. உங்களுக்குள் எது உருவாகிறதோ, அதைவைத்தே நீங்கள் யோசிக்கிறீர்களா இல்லையா என்பது முடிவுசெய்யப்படும். இதை ஒரு அளவீடாகக் கொள்

ளுங்கள். அன்பு தோன்றினால் நீங்கள் உண்மையாக கவனித்திருக் கிறீர்கள். தர்க்கம் தோன்றினால், முக்கியக் கருத்தைத் தவறவிட்டு விட்டீர்கள் என்றாகிறது. நீங்கள் வார்த்தைகளைக் கவனித்தீர்கள். அமைதியைத் தவறவிட்டுவிட்டீர்கள். நீங்கள் அறிவுசார்ந்ததை மட்டும் கவனித்தீர்கள். மனம் அசைவற்று இருந்துவிட்டது. மனம் நெகிழ இடம் கொடுக்கவில்லை.

**எனது ஆலோசனைகள்குறித்து நன்கு யோசியுங்கள். அவற்றை நேசியுங்கள்...** சிந்தனை என்பதே அடிப்படையாகும். பிறகு அன்பு தானே வந்து சேரும். அன்பு தோன்றினால் அதைப் பின்பற்றுங்கள். அதைக் காப்பியடித்தல் என்ற பேச்சுக்கே இடமில்லை. நம்புதல் என்ற பேச்சுக்கும் இடமில்லை. உங்கள் ஆழ்ந்த அன்பு, சார்ந்து இயங்கும் திறனை அளிக்கிறது. கட்டளையை பலவந்த மாகப் பின்பற்ற வேண்டும். உங்கள் மீது நீங்களே பலவந்தத்தைத் திணித்துக் கொள்கிறீர்கள். ஆலோசனை என்பது பலவந்தம் அல்ல. நீங்கள் அதைக் கேட்கிறீர்கள். அதை நேசிக்கிறீர்கள். நீங்கள் சுயமாக செயல்படுகிறீர்கள். சிந்தனையிலிருந்து அன்பு வெளிப்படுவது போல, அன்பிலிருந்து செயல் வெளிப்படுகிறது. சிந்தனை என்பது வேர். அன்பு என்பது விருட்சம். மலர்ச்சி அதைப் பின்தொடர்கிறது.

**உங்களை எப்படி வழிநடத்த வேண்டும் என்று இறைப் பண்புக்குத் தெரியும்.** நீங்கள் கவலைப்படத் தேவையில்லை. இயற்கையின் பரிசு போல இறைப்பண்பு உங்களிடம் எழும். ஒரு பண்பு மனிதத்தன்மை கொண்டது. ஒரு பண்பு இறைத்தன்மை பெற்றது. மனிதப் பண்பை நீங்கள் உங்கள் மீது திணித்துக்கொள்ள வேண்டும். அது மனிதனால் உருவாக்கப்படுவது. இறைப்பண்பு எங்கிருந்தோ வரும் தெய்வீகம். ஒரு தலையசைப்பு, ஒரு ஆம் மூலம் எங்கிருந்தோ வருகிறது.

தியானித்தல், அன்பு செலுத்துதல், பின்பற்றல் என்ற மூன்றையும் ஒரு குருவின் துணையுடன் மேற்கொண்டால் போதும். அவை உங்களை இறைப்பண்பின் ஆதாரமையத்திற்கு அழைத்துச் செல்லும். புனிதமானவனாக ஒருவன் மாறலாம். ஆனால் ஒரு போதும் நேர்மையானவனாக மாறமுடியாது. மனிதன் சாமியாராக லாம். துறவியாக முடியாது. மனிதன் மதப்பற்றுள்ளவனாக மாறலாம். அவன் முகமதியனாகவோ, இந்துவாகவோ, அல்லது கிறிஸ்தவ னாகவோ அதனால் மாறிவிட இயலாது. வெறுமனே மதவாதியாக மட்டுமே முடியும். தெய்வீகத்துடன் வாழும் ஒருவனிடம் இறைவன்

குடியிருக்கிறான். அவன் ஒரு கருவியாக, மூங்கிலாக இருக்கிறான். கடவுள் அவன் வாயிலாகப் பாடல் இசைக்கிறார்.

**நமது இதயத்தில் நிறைந்திருப்பவர் பெயரால் உறுதியாகக் கூறுகிறேன்**

**நான்கு நிலைகளும், குறியீடுகளும் நிகரற்றவை, புனிதமானவை**

**இயற்கையின் ஆதார ஊற்றும் தெய்வ வடிவங்களும் அங்கு உள்ளன**

நிலைகளைப் புரிந்துகொள்ள வேண்டும். அதன் எண்ணிக்கை நான்கு. இயற்கைக்கு மூன்று பரிமாணங்கள் உண்டு. நான்காவதாக ஒரு பரிமாணமும் உண்டு. அது வெளிப்படையாகத் தெரியாது. மூன்று பரிமாணங்கள் கண்ணால் காணக்கூடியவை. நான்காவது பரிமாணத்தைக் காண முடியாது. நான்கு பரிமாணங்களும் சேர்ந்து தொகுப்பு நிலைகளாகின்றன. நீங்கள் பி.டி. ஒவுஸ்பென்ஸ்கியின் சிறந்த புத்தகமான 'The Fourth way' படித்திருந்தால் நிலைகள் என்ன என்று புரிந்து கொள்ளலாம்.

குர்ட்ஜிஃப் தனது பாதை நான்காவது பாதை என்று கூறினார் என்பதாகச் சொல்லப்படகிறது. நான்கு சாத்தியங்கள் உள்ளன. காரணம் நான்கு பரிமாணங்கள் இருக்கின்றன. முதலாவது, உடல் சார்ந்த சாத்தியம். ஹடயோகம் என்ற சந்நியாசிகளின் பாதை. தலைகீழாக நிற்றல், உடலைக் கோணலாக்குதல், உடலை முறுக்கிக் கொள்ளுதல். அது தரம் தாழ்ந்த அசிங்கமான, முரட்டுத்தனமான, லௌகீகப் பாதை. அது தனது விஸ்தீரணத்தை அதிகரிக்கிறது.

இரண்டாவது பாதை மனம் சார்ந்தது. அது மனோதத்துவ சிகிச்சைகளில் பின்பற்றப்படுகிறது. முதலாவது முறையைக் காட்டிலும் மேலானது. ஆனாலும் ஒருவகையில் சூட்சுமமானது என்றாலும் முரட்டுத்தனமானது.

மூன்றாவது பாதை ஆன்மாவின் பாதை. அது தத்துவங்களில், மதங்களில் பயன்படுத்தப்படுகிறது. பொதுவாக அது உயர் சாத்தியம் பெற்றதாகத் தோன்றுகிறது. ஆனால் மேலும் ஒன்று இருக்கிறது. அது நான்காவது பாதையாகும்.

மூன்றாவது பாதை சிறந்த வெளிப்பாடாக கருதப்பட்டாலும் நான்காவதும் ஒன்று உள்ளது. அது அனைத்திலும் மேலானது. குர்ட்ஜிஃப் "எனது பாதை நான்காவது பாதை" என்றார்.

பதஞ்சலியும் நான்கு உணர்வு நிலைகள் உள்ளதாகத் தெரிவிக்கிறார். விழிப்பு என்ற **ஜக்ரத்**; கனவு என்ற **ஸ்வப்னம்**; உறக்கம் என்ற **சுசுப்தி**; அடுத்ததாக நான்காவது நிலை. அதற்கு அவர் பெயர் குறிப்பிடவில்லை. வெறுமனே **தூரியம்** என்கிறார். தூரியம் என்றால் நான்காவது என்று பொருள். அந்த நான்காவது நிலை முழுமையான விழிப்புணர்வு நிலை ஆகும்.

பொதுவாக நாம் விழிப்பு நிலை என்று அறிந்து வைத்துள்ளது சரியான விழிப்புநிலை அல்ல. காலையில் நீங்கள் விழித்து எழு கிறீர்கள். ஒரு கனவில் இருந்து விடுபட்டு அடுத்த கனவில் நுழை கிறீர்கள். ஒரு தனிப்பட்ட கனவிலிருந்து விழித்து, பெரிய ஒரு கனவுத் தொகுப்புக்குள் நுழைகிறீர்கள், அவ்வளவுதான்! சிறிய சிறையிலிருந்து விடுபட்டுப் பெரிய சிறைக்குப் போகிறீர்கள். அவ்வளவுதான். அது ஒரு பெரிய விழிப்பு அல்ல. ஏனென்றால், அதே விருப்பங்கள் பிடிவாதமாகத் தங்கியிருக்கின்றன. அதே கற்பனைகள் பிடிவாதமாகத் தங்கியிருக்கின்றன. அதே மனநிலை மீதமிருக்கிறது.

உங்கள் விழிப்பு நிஜமான விழிப்பு அல்ல. அது போலியானது. நான்காவது நிலையில்தான் உண்மையான விழிப்பு தோன்றும். அங்கு எல்லாக் கனவுகளும் மறைந்து போகின்றன. விழித்திருக்கும் போது நீங்கள் அறியும் முழு உலகமும் மறைந்து போகிறது. அதன் பிறகு அது தெரிவதில்லை. கனவில் தென்பட்டவை, பிறகு தென் படுவதில்லை. உங்கள் ஆழ்ந்த உறக்கத்தில், மகிழ்ச்சியான ஆழ்ந்த உறக்கத்தில் அந்த அமைதியில், புத்துணர்வு சக்தி தரும் ஆழ்ந்த உறக்கத்தில் தோன்றக் கூடியவைகளும் அகன்று போகின்றன. நீங்கள் இப்போது ஆதாரமையத்தை அடைந்துவிட்டீர்கள். அந்த ஆதார மையம் வெளியே தெரியாது. பார்க்க இயலாது. கடவுளின் காண முடியாத மையம் அது.

**நமது இதயத்தில் நிறைந்திருப்பவர்** பெயரால் **உறுதி கூறு கிறேன். நான்கு நிலைகளும்**, குறியீடுகளும் நிகரற்றவை, புனித **மானவை. இயற்கையின் ஆதார ஊற்றும்**, தெய்வ வடிவங்களும் **அங்கு உள்ளன** என்கிறார் பிதாகோரஸ். உங்களால் நான்காம் நிலையை அறிந்துகொள்ள முடிந்தால் இயற்கையின் சரியான முன் மாதிரியை அறிந்தவராகிறீர்கள். இயற்கையின் ஆதார ஊற்றை அறிந்தவராகிறீர்கள். நீங்கள் தாவோ, தர்மநெறி லாகோஸ் போன்ற வற்றை அறிந்தவர் ஆகிறீர்கள். அனைத்தும் எங்கிருந்து வருகின்றன.

எங்கு போகின்றன என்பதை அறிந்துகொள்கிறீர்கள். இலக்கை, ஆதி அந்தத்தை அறிந்தவராகிறீர்கள்.

**இவை அனைத்திற்கும் முன்னர் உங்கள் ஆன்மா**
**விசுவாசமாகப் பணியாற்றி**
**அந்தக் கடவுள்களைத் தூண்டி ஊக்கப்படுத்த வேண்டும்**
**அவற்றின் உதவியுடன் மட்டுமே உங்கள் பணி துவங்கி**
**நிறைவுபெற இயலும்**

கண்ணால் காணமுடியாத நான்காம் நிலை என்ற உலகில் நீங்கள் நுழைவதற்கு முன்னர், நிறைவு நிலை கொண்ட அகப் பயணத்தை நீங்கள் துவங்குவதற்கு முன்னர், முதலில், கடவுளின் உதவியை நாடுங்கள். அது இயற்கையின் உதவியை, சகலமும் உங்கள் முயற்சிக்கு நட்புக் கரம் நீட்ட வேண்டும் என்று கேட்டுக் கொள்வதன் வெளிப்பாடாகும். சுருங்கச் சொன்னால் அதுவே வழி பாடாகும் என்கிறார் பிதாகோரஸ்.

இதுபற்றி நீங்கள் கேள்விப்பட்டதுண்டா இல்லையா? உலகம் முழுவதும் ஆன்மீகவாதிகள் சிலர் வழிபாடு செய்து, அந்த வழிபட்ட கரத்தால் தண்ணீரைத் தொட்டார்கள். அதிர்வலைகள் கலந்த தண்ணீரை ஒரு குறிப்பிட்ட செடிக்கு ஊற்றினார்கள். அதே தண்ணீர், ஆனால் வழிபாடு செய்தவர் கரத்தால் தொடப்படாத நிலையில் மற்றொரு செடியில் ஊற்றப்பட்டது. இரண்டு செடி களும் ஒரே வகையானவை. ஒரே வயதுள்ளவை. பிரார்த்தனை செய்த கையால் தொடப்பட்ட தண்ணீர் ஊற்றிய செடி வேகமாக வளர்ந்தது. சாதாரணத் தண்ணீர் ஊற்றிய செடியைக் காட்டிலும் சில வாரங்களில் அது இரண்டு மடங்கு பெரிதாக வளர்ந்துவிட்டது. ஒரு விஷயம் அதில் விடுபட்டுவிட்டது. சாதாரணத் தண்ணீரில் வழிபட்டு அதிர்வலைகள் இல்லை. வழிபாட்டுத் தண்ணீர் பெற்ற செடி மற்றதைவிட விரைவாகவும், பெரியதாகவும் மலர்கள், பழங்களைத் தந்தது. மற்றதைக் காட்டிலும் அந்த மலர்கள் வாசனையாக இருந்தன. பழங்கள் நல்ல சுவையுடன் காணப்பட்டன.

அதுதான் இப்போது மீண்டும் சொல்லப்படுகிறது. கிட்டத் தட்ட அது ஒரு அறிவியல் விஷயம். அதை ஒதுக்கிவிட இயலாது. அதன் செயல்பாட்டு முறை என்ன என்று யாருக்கும் தெரியவில்லை. ஏன் வழிபாடு அதிக உதவிகரமாக இருக்கிறது? உதாரணமாக, யாராவது தலைவலியுடன் இருக்கும்போது நீங்கள் தலையைப் பிடித்து விடுகிறீர்கள். முதலில் வழிபாடு செய்துவிட்டு அந்த

அதிர்வலை நிறைந்த கரங்களால் தலையைப் பிடித்துவிடுவது சிறந்தது. அதில் பெரிய மாற்றத்தைக் காண்பீர்கள். உங்கள் கரங்கள் சக்திமிக்கவையாக இருக்கும்.

நீங்கள் கேட்டுக்கொண்டால் இயற்கை உங்களுக்கு உதவி புரியும். கேட்டுக்கொண்டால் மட்டுமே உதவி செய்யும். நீங்கள் கேட்காதுபோனால் அது விலகிநிற்கும். தலையிடாது. நீங்கள் கேட்டுக்கொண்டால், நீங்கள் வழிதிறந்து வைத்தால் இயற்கை உங்கள் மீது பொழியும். அந்தப் பகுதியானது மொத்தப் பகுதிகளைக் காட்டிலும் சக்தி நிறைந்ததாக இருக்கும். எவ்வளவு தூரம் திறந்து வைக்கிறீர்கள் என்பதைப் பொறுத்து அது அமையும். முழுமையாக நீங்கள் திறந்து வைத்தால், அப்பகுதியே முழுமையானதாக மாறி விடும். மந்திரம் போல மனிதன் முழுமை அடைந்து விடுவான்.

வழிபாட்டின் முழுமையான ரகசியம் இதுதான். அது இயற்கையின் உதவியை வேண்டலாகும். நீங்கள் மிகவும் ஆபத்தான பயணத்தில் இருக்கிறீர்கள். அங்கு பல புதைகுழிகள் உள்ளன. உயரே செல்லச் செல்ல பயணம் மேலும் ஆபத்தானதாக மாறுகிறது. காரணம், தவறிவிழுந்தால் ஒரேயடியாகத் தொலைந்துபோய் விடுவீர்கள்.

> **இவை அனைத்திற்கும் முன்னர் உங்கள் ஆன்மா விசுவாசமாகப் பணியாற்றி, அந்தக் கடவுள்களைத் தூண்டி ஊக்கப்படுத்த வேண்டும். அவற்றின் உதவியுடன் மட்டுமே உங்கள் பணி துவங்கி நிறைவுபெற இயலும்.**

உங்களால் தனியாக இலக்கை எட்ட முடியாது. முழுமையின் உதவி இருந்தால் மட்டுமே நீங்கள் இலக்கை எட்ட முடியும். முழுமை நிலையைத் தூண்டியெழுப்புங்கள்; "நான் நீண்ட பயணம் போகிறேன். என்னுடன் தயவுசெய்து நீயும் வா" என்று வேண்டிக் கொள்ளுங்கள். வழிபாடு என்பதன் அறிவியல் அர்த்தம் இதுதான். மெல்ல மெல்ல ஒரு பேராற்றல் உங்களைத் தொடர்வதை உணர்வீர்கள். நீங்கள் அதிகமாக எதுவும் செய்யத் தேவையில்லை என்ற வழிப்புணர்வை மெல்ல மெல்ல அடைவீர்கள். நீங்கள் ஓய்வாக இருந்து அந்த ஆற்றலை உள்வாங்கிக் கொள்வது மட்டுமே நீங்கள் செய்ய வேண்டியதாகும்.

அங்குள்ள பேராற்றல் வழிபாடுதான். ஏனெனில் செயல்படும் ஒரு பகுதியை அது முழுமைபெற்றதாக்குகிறது.

**அவற்றின் வழிகாட்டுதலுடன் நடக்கும்போது நீங்கள் ஏமாற்றமடையமாட்டீர்கள்.**

**பலவகைப்பட்ட மனிதர்கள் உண்மையான சாரத்தை உணர முடியும்.**

**சகலவிதிமுறைகளையும், அவற்றின் முடிவையும் நீங்கள் அறிந்துகொள்ள முடியும்.**

**அவற்றின் வழிகாட்டுதலுடன் நீங்கள்....**

வழிபாட்டின்மூலம் நீங்கள் முழுமையின் வசப்பட முடியு மானால் உங்களுக்குள் சில முணுமுணுப்பான குரல்களைக் கேட்க முடியும். அது இயற்கையின் வழிகாட்டலாகும்.

முதலில் உங்கள் குருவின் அறிவுரைகளை யோசித்துப் பாருங்கள். அவற்றை நேசியுங்கள். பின்பற்றுங்கள். அதன்பிறகு நீங்கள் வழிபாட்டில் ஈடுபடத் தகுதிபெற்றுவிடுவீர்கள். குரு கண்ணால் பார்க்கக்கூடியவர். கடவுளைக் காணமுடியாது. குரு வுடன் சேர்ந்து பங்குகொள்வது எப்படி என்று நீங்கள் கற்றுக் கொண்டீர்கள். காணமுடியாத கடவுளுடன் பங்குகொள்வது எப்படி என்று இப்போது கற்றுக்கொள்ளுங்கள். அது அனைத்தின் ஆதார மாகவும், அனைத்தின் முடிவாகவும் இருக்கிறது. அதுவே வழி பாடாகும். அந்த வழிபாட்டின்போது உங்களுக்குள் ஒலிக்கும் சிறிய குரலைக் கேட்க முடியும்.

ஒருமுறை அந்தக் குரலைத் தெளிவாகக் கேட்டு உணர்ந்து கொள்ள முடிந்தால், நீங்கள் வெளிப்புற குருவைச் சார்ந்திருக்க வேண்டியதில்லை. நீங்கள் அகக்குருவைக் கண்டுகொண்டு விட்டீர்கள். வெளிப்புற குருவின் அறிவுரைகளும், அகக்குருவின் அறிவுரைகளும் ஒரேவிதமாக இருப்பதைக்கண்டு வியந்து போவீர்கள். உங்கள் அகக்குரல் என்பது வெளிப்புற குருவின் பிரதி நிதியாக இருக்கிறது. வெளிப்புற குரு அவராக ஏதும் சொல்ல வேண்டியதில்லை. அவர் உங்களுக்குள் பார்க்கிறார். அவர் உங்கள் இதயத்தைப் பார்க்கிறார். அக இதயத்துடன் பேசுகிறார்.

அதனால்தான் குருவின் அறிக்கைகளில் ஒரு நிலையற்ற தன்மை இருப்பதை நீங்கள் அறியலாம். ஒரு சீடரிடம் ஒரு விதமாகச் சொல்கிறார். வேறு சீடரிடம் வேறுவிதமாகச் சொல்கிறார். தயார் நிலையில் உள்ள சூத்திரங்களை அவர் வெளியிடுவதில்லை. உங்கள் அகக்குரலைக் கவனித்து அதற்கேற்ப வெளியிடுகிறார். அவர் உங்களைப் பிரதிபலிக்க வேண்டியுள்ளது. உங்கள் அகக்குரு உங்களுக்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டியிருக்கிறது.

இதுவரை நீங்கள் அகக்குருவுடன் நேராகத் தொடர்பு கொள்ளவில்லை. அதனால் வெளிப்புற குரு தேவையாக இருந்தது. அவர் குறுக்கிட வேண்டியிருக்கவில்லை. அப்படிக் குறுக்கிட்டிருந்தால் அவர் குருவே அல்ல. அவர் தொடர்பு மட்டும் ஏற்படுத்துகிறார். உங்களுடன் உங்களது அகக்குரலுக்குத் தொடர்பு ஏற்படுத்துகிறார். உங்களுக்கு இதுவரை அதில் மூழ்கும்திறன் கைவரவில்லை. அகத்தின் அறிவுரைகளைக் கவனிக்கும்திறன் பெற்றுவிட்டால், எதுவும் உங்களுக்கு ஒருபோதும் ஏமாற்றம் தராது. முழு வாழ்க்கையும் தெளிவாக வெளிப்படும். எதுவும் ஏமாற்றம் அளிக்காது.

**பல மனிதர்களின் உண்மையின் சாரத்தை உணரமுடியும்** யார் ஒருவர் உங்களின் எதிரில் வந்தாலும் அவரது சாரத்தை நீங்கள் புரிந்துகொள்ள முடியும். அவர் யார், எதற்காக வந்திருக்கிறார் என்று அறிந்து கொள்வீர்கள். அவர் திட்டங்கள் என்ன, அவரது தந்திரங்கள் என்ன, எவ்விதம் செயல்பட விரும்புகிறார் என்றும் அறிவீர்கள். அவர் கூறும் முன்பே நீங்கள் அறிந்துகொள்வீர்கள்.

> **நீங்கள் ஏமாற்றமடைய மாட்டீர்கள். சகல விதிமுறைகளையும், அவற்றின் முடிவையும் நீங்கள் அறிந்துகொள்ள முடியும்.**

> **வானகம் மனது வைத்தால் நீங்கள் இயற்கையை அறியலாம்**
> **ஒவ்வொன்றிலும் ஒரே மாதிரியாக இருப்பதுபோல,**
> **எல்லா இடங்களிலும் இயற்கை அவ்விதமே இருக்கும்**

கவனித்துக் கேளுங்கள். **வானகம் மனது வைத்தால்...** எங்கு அகந்தையை உதறுவது என்று புரிந்து கொள்கிறீர்கள். ஆயத்தப்படும் போது அகந்தை அங்கு இருக்கிறது. தூய்மைப்படுத்தும்போது அகந்தை அங்கு இருக்கிறது. முழுமைநிலை என்ற பரிமாணத்தில் நீங்கள் நுழையும்போது அது அகல்கிறது. அதை அகற்ற வேண்டும் என்ற எண்ணம் ஏற்படவும் தேவையில்லாதபடி தானே அகல்கிறது.

**வானகம் மனது வைத்தால்...** அனைத்தும் இயற்கையின் விருப்பப்படியே நடக்கிறது. "உனது சாம்ராஜ்ஜியம் வரும். உனது எண்ணம் நிறைவேறும்." நீங்கள் முழுமையில் கலந்து ஓய்வு கொண்டால்போதும் **வானகம் மனது வைத்தால் நீங்கள் இயற்கையை அறியலாம்.** இயற்கை மனது வைத்தால் மட்டுமே நீங்கள் உண்மைநிலையை உணரமுடியும். ஓய்வு கொள்ளுங்கள். ஆழ்ந்த ஓய்வில் காத்திருங்கள். பொறுமையுடன் இருங்கள். ஒரு தடவை... **வானகம் மனது வைத்தால்....** நிகழ்வுக்கு வழி பிறக்கும். நிகழ்வு நடப்பதற்கான அருள் கிட்டும். நீங்கள் அகன்று

விட வேண்டும். ஒய்வில் இருக்கும் நான் என்ற உணர்வு மறைகிறது. நீங்கள் வெறுமையான காத்திருத்தலாக மாறுகிறீர்கள். வெறும் பாத்திரமாக, கருப்பையாக மாறுகிறீர்கள். எப்போது உங்கள் அகப் பாத்திரம் வெறுமை பெறுகிறதோ அப்போது இயற்கை உங்களுக்குள் பிரவேசிக்கிறது. விந்தை முழுமையாக வெளிப்படுகிறது. **ஒவ்வொன்றிலும் ஒரேமாதிரி இருப்பதுபோல இயற்கை எல்லா இடங்களிலும் அவ்விதமே இருக்கும்.** அனைத்திலும் கடவுள் இருக்கிறார். **ஒவ்வொன்றிலும் ஒரேமாதிரி இருப்பதுபோல....** கடவுள் மட்டுமே இருக்கிறார். வேறு எதுவும் கிடையாது. கடவுள் மட்டுமே வியாபித்திருக்கிறார். இயற்கையுடன் கடவுள் இணைந்து இருக்கிறார்.

**ஞானமடைவதே உங்கள் பிறப்புரிமையாக இருப்பதால் வீணான ஆசைகள் மனதில் தோன்றாது.**

இப்போது இறையருள் வந்துசேர்ந்துவிட்டது. நீங்கள் தேவையில்லாமல் யாசித்துக் கொண்டு, இச்சைப்பட்டுக் கொண்டு கிடக்கிறீர்கள் என்பதை மட்டும் அறிந்து கொண்டால் போதும். எல்லாப் பொக்கிஷங்களும் உங்களுடையவை. முழு ராஜ்ஜியமும் உங்களுடையது. முழு பிரபஞ்சமும் உங்களுடன் இருக்கிறது. எல்லா ஆனந்தங்களும், எல்லா ஆசீர்வாதங்களும் உங்களுடையவை.

**ஞானமடைவதே உங்கள் பிறப்புரிமையாக இருப்பதால் வீணான ஆசைகள் மனதில் தோன்றாது.** ஆனால் முழுமையாக ஞானம் பெற்ற பிறகே இது நிகழும். ஞானம் பெறுதல் என்றால் என்ன? அகந்தை அகன்று கடவுள் உங்களுக்குள் தோன்றுகிறார். அதுவே ஞானமடைதலாகும். அகந்தை என்பது இருள். கடவுள் என்பது ஒளி.

**ஞானமடைவதே உங்கள் பிறப்புரிமை....** அது உங்கள் உரிமை. ஞானம் அடைதல் உங்கள் பிறப்புரிமை. அதற்கு குறைவான ஒன்றுடன் சமரசம் செய்து கொள்ளாதீர்கள். அதைச் சாதிக்க வேண்டும். அதைச் சாதிக்கவே தோன்றியவர் நீங்கள். நீங்கள் அவ்விதம் மாறவேண்டும். அதற்கான முதலிடத்தில் நீங்கள் இருக்கிறீர்கள்.

**பேராசை காரணமாக எழும் தீமைகள் மனிதர்களைக்**
**கடைசியில் கபளீகரம் செய்துவிடுகின்றன.**
**அவை ஆசையின் பலாபலன்கள்**

இப்போது நீங்கள் இரண்டு விஷயங்களைப் பார்க்கிறீர்கள். ஒன்று, ஆசைப்படுவது அர்த்தமற்ற செயல். காரணம், கேட்காமலேயே எல்லாம் கொடுக்கப்படுகின்றன. எல்லாம் ஒரு கொடையாக அளிக்கப்படுகின்றன. நீங்கள் பிச்சைக்காரராக இருக்க வேண்டாம். நீங்கள் பேரரசராக இருக்கிறீர்கள். கடவுளின் பேரரசு உங்களின் பேரரசாக இருக்கிறது. அது ஏற்கனவே அளிக்கப்பட்டுவிட்டது. அதை அனுபவிக்க நீங்கள் விழிப்புணர்வோ, துணிவோ கொள்ள அவசியமில்லை.

ஒரு விஷயம் தெளிவாகிறது. ஆசை கொள்ளல் பயனற்றது. அது தேவையில்லை. உங்களுக்கு வழங்கப்பட்டுவிட்ட ஒன்றின் மீது ஆசை கொள்கிறீர்கள். அது ஏற்கனவே செயல்பாட்டில் உள்ளது. மனிதர்கள் துயரப்படுவது, துன்புறுவது, தீயவற்றால் விழுங்கப் படுவது போன்றவை எல்லாம் அவர்களின் சுயமான தேர்வாகும். துயரம் நாம் சுயமாகத் தேர்வு செய்வதால் வருகிறது. அருளாசி, ஆசீர்வாதம் ஒரு கொடை. துயரம் நமது தேர்வு. ஆசீர்வாதம் நமது இயல்பு. பேரின்பத்துடன் இருந்து ஆசீர்வாதம் பெறுவது நமது இயல்பாகும்.

துயரப்படுவது, துன்பத்தில் இருப்பது நமது சுயமுயற்சியால் வருவதாகும். அது நாமே உருவாக்கிக் கொள்வது ஆகும். துயரம் மனிதன் போடும் கையெழுத்து. ஆசீர்வாதம் இயற்கையின் கையெழுத்து. துயரத்தை முயன்று சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. உங்களால் அறிய முடியும்போது வியந்துபோவீர்கள். துயரப்பட நிறையக் கஷ்டப்பட வேண்டும். காரணம், சிரமம் முடியாததை முடித்து வைக்கிறது. துன்பப்படுவது உங்கள் இயற்கைக் குணமல்ல. அதை நீங்கள் உருவாக்கிக் கொள்கிறீர்கள். அதற்கு கடுமையான முயற்சி தேவை. இயற்கைக்கு எதிராகச் செயல்பட நிரம்பச் சிரமப்பட வேண்டும். மனிதர்கள் நாளும் பொழுதும், வருடமெல்லாம், வாழ்நாளெல்லாம் உழைக்கவேண்டியிருக்கிறது. தங்களுக்கு மேலும்மேலும் சிரமத்தை ஏற்படுத்திக் கொள்வதற்காக கடுமையாக உழைக்கிறார்கள்.

துன்பப்படும்போது அதை நீங்கள் உருவாக்கிக் கொள்கிறீர்கள். துயரப்பட அதுதவிர வேறுவழி கிடையாது.

நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்டதாக உணர்ந்தால் அது உங்கள் செயல் அல்ல. மேலிருந்து அது பொழிகிறது. துயரம், மனிதனே உருவாக்கிக் கொள்வதேயாகும். பேரின்பம், இயற்கையால் உருவான

தாகும். பேரின்பம் உங்கள் இயல்புக் குணம். உங்கள் ஆதார இயல்பு. இதை நீங்கள் கண்டுகொண்டால், தாயகம் திரும்பிவிட்டதாக அர்த்தம். **எனது ஆலோசனைகள்குறித்து நன்கு யோசியுங்கள். அவற்றை நேசியுங்கள். அவற்றைப் பின்பற்றுங்கள்.**

இன்று இவ்வளவு போதும்.

அத்தியாயம் - 7

முதல் கேள்வி

**ஓஷோ**

**நம்பிக்கை என்றால் என்ன? ஹெர்மன் ஹெஸ்ஸே சொல்லும் போது "நம்பிக்கையும், சந்தேகமும் ஒன்று சேர்ந்திருக்கின்றன, ஒன்றையொன்று ஆள்கின்றன. உள்மூச்சு, வெளிமூச்சுபோல அவை உள்ளன" என்கிறது. இதுபற்றிக் கருத்து கூறுங்கள்.**

நம்பிக்கை என்பதற்கு மூன்று அர்த்தங்கள் உண்டு. முதலாவது அர்த்தம் விசுவாசம். விசுவாசம் என்பது பொய்யான ஒன்று. கீழ்ப் படிதலற்றது. வஞ்சகம் நிறைந்தது. ஏதாவது ஒரு விஷயம் குறித்து உங்களுக்கு ஒன்றும் தெரியாதிருக்கலாம். ஆனால் அதில் நம்பிக்கை வைக்கிறீர்கள். அதுவே விசுவாசம் ஆகும். அது வேஷமிடும் செயல். விசுவாசம் என்பது பயம் அல்லது பேராசை காரணமாக எழுகிறது. மற்றவர்கள் உங்கள்மீது சிலவற்றைத் திணிப்பதால் விசுவாசம் தோன்றுகிறது. அது ஒரு அடிமைத்தனம்.

உண்மையான மதவாதி நம்பிக்கையாளராக இருக்கமாட்டார். அவநம்பிக்கையுடனும் இருக்கமாட்டார். நம்பாமை என்பது வேறு ஒன்றுமல்ல. நம்பிக்கையின் எதிர்மறை வடிவம்தான் அது.

கத்தோலிக்கர்களுக்கும், பொதுவுடமைவாதிகளுக்கும் பெரிய வித்தியாசம் கிடையாது. நாஸ்திகவாதிக்கும், மதநம்பிக்கை கொண்டவருக்கும் அதிக வித்தியாசம் இல்லை. கிட்டத்தட்ட வித்தியாசமே இல்லை என்று கூறலாம். ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் போன்றவை அவை. ஒருவர் கடவுளை நம்புகிறார். ஒருவர் கடவுளை நம்பவில்லை. ஒருவர் கடவுளை நேசிக்கிறார். அது சூழ்நிலைகளை அடிப்படையாகக் கொண்டது. அந்த நேசம் நிஜமானதல்ல. ஒருவர் கடவுளை வெறுக்கிறார். அந்த வெறுப்பும் சூழ்நிலைகளை அடிப்படையாகக் கொண்டதுதான், நிஜமானது அல்ல.

நம்பிக்கை சார்ந்து புறப்படும் ஒருவர் இலக்கைச் சென்றடைவதில்லை. சென்றடைய இயலாது. அவர்கள் எல்லோரும் சுற்றிச் சுற்றி வருவார்கள். இயற்கையின் உண்மை நிலைக்குள் ஊடுருவிச் செல்ல ஒருபோதும் இயலாது. துவக்கம் திறந்த நிலையில் அமைய வேண்டும். நம்பிக்கை, அவநம்பிக்கை என்ற இரண்டுமே இருக்கலாகாது. துவக்கம் ஒளிவுமறைவற்றதாக இருக்கவேண்டும். துவக்கம் ஒளிவுமறைவற்றதாக, களங்கமற்ற தன்மையுடன் இருந்தால் அதுவும் நம்பிக்கை சார்ந்ததுதான்.

நம்பிக்கை என்பது விசுவாசம் அல்ல. நிஜத்தின்மீது நம்பிக்கை வைப்பதாகும். "நிஜம் என்று தோன்றும்போது நம்பிக்கை வைக்க அவசியமில்லை. பைபிள், வேதங்கள், குரான் போன்றவற்றின் மீது விசுவாசம் கொள்ள அவசியமில்லை. அந்த சத்தியம் என்ற நிஜத்தன்மை ஏசு, நபிகள் நாயகம், கிருஷ்ணர் போன்றவர்கள் மூலம் வெளிப்பட்டபோது என் மூலமும் ஏன் வெளிப்படக் கூடாது?" என்று கருதுவதே நம்பிக்கையாகும்.

நம்பிக்கை என்பது ஒருவர் தன் மீது கொள்ளும் உறுதியாகும். நம்பிக்கை என்பது சுயநம்பிக்கை, தன்மானமாகும். விசுவாசம் என்பது மற்றவர் சார்ந்ததாகும். நம்பிக்கை சுயநிலை சார்ந்தது. அது முற்றிலும் புதிய உலகம். விசுவாசத்துடன் தொடர்புள்ளது அல்ல. விசுவாசம் மனிதர்களை கிறிஸ்தவர், முஸ்லிம், இந்து, புத்த மதத்தினர் என்று பாகுபாடு செய்கிறது.

உண்மையின்மீது நம்பிக்கை கொண்டவர் விசாரித்து அறிதல் தவிர வேறு மதம் கிடையாது என்று புரிந்திருக்கிறார். விசுவாசத்தின் மீது அவருக்கு நம்பிக்கை இல்லை. விசாரித்து அறிதல் மீதே நம்பிக்கை கொள்கிறார். தன்மீது அதிக நம்பிக்கை கொண்டிருப்பதால் பாதுகாப்பு இல்லாமல் தெரியாதவற்றினுள் நுழைகிறார்.

கண்டறியப்படாத பாதையில் அச்சமின்றிச் செல்கிறார். அவர் இயற்கைமீது கொண்ட நம்பிக்கை அதீதமானது. எனவே வேறு உதவிகள் தேவையில்லை. உண்மையின்மீதான நம்பிக்கை சுய நிலை சார்ந்தது. உண்மைக்கு அழகுண்டு. நம்பிக்கை அசிங்கமானது நம்புவதைத் தவிர்த்துவிடுங்கள். காரணம், நம்புதல் என்பது பொய் யானது. உண்மை என்பது தேடல், விசாரித்து அறிதல் ஆகும்.

விஞ்ஞானியிடம் உள்ளது உண்மைசார்ந்த நம்பிக்கை. மதவாதி என்று நீங்கள் அழைப்பவர்களிடம் உள்ளது விசுவாசம். விஞ்ஞானியிடம் உள்ள நம்பிக்கை எத்தகையது? இயற்கை என்பது பிரபஞ்சக் கட்டமைப்பு. அது குழப்படியானது அல்ல. இயற்கை சில அடிப்படை விதிகளைப் பின்பற்றி இயங்குகிறது என்று அவர் நம்புகிறார். அந்த விதியைக் கண்டறிய முடியும் என்பதே நம்பிக்கை. மனிதனின் அறிவு அந்த விதிமுறைக் கண்டறியக் கூடியது என்று எண்ணுவதே நம்பிக்கை. அது வாழ்க்கை, மற்றும் இயற்கையின் ஒழுங்குமுறைசார்ந்தது ஆகும். அந்த விஞ்ஞானி நம்பிக்கை கொள்கிறார். நீங்கள் மதவாதி என்று அழைப்பவரிடம் அந்த நம்பிக்கை இல்லை. ஏனென்றால், அதற்குப்பதிலாக அவர் பிளாஸ்டிக், சிந்தெடிக் பொருட்களின்மீது நம்பிக்கை வைக்கிறார். அவ்விதமான நம்பிக்கைகளைத் தவிர்த்துவிடுங்கள்.

நம்பிக்கை கொண்டால் அது இப்போது இருப்பதைவிடவும் கூடுதல் பிணைப்பை ஏற்படுத்தும். விசுவாசம், பிணைப்பு விலகிப் போகும் நிலையை அதிகரிக்கும். விசுவாசம் உங்களை அடிமையாக்கும். நம்பிக்கை உங்களை எஜமானராக்கும். விசுவாசமும் உதவி செய்யும். அது உங்களை கும்பலில் ஒருவராக, மந்தையின் ஒரு அங்கமாக மாற உதவும். அது ஒருவகை பாதுகாப்பு. வசதியானது. சௌகரியமானது. நம்பிக்கை ஆபத்தானது. அது உங்களை அறிமுகமற்ற பிரதேசங் களுக்குள் கொண்டு செல்லும். அது உங்களைத் தனிமைப்படுத்தும். கூட்டத்துடன் கலந்திருக்க முடியாது. கூட்டத்தினரும் உங்களுடன் இருக்கமாட்டார்கள். தனிமையில் இருப்பது பெரிய விஷயம். தனிமையில் இருப்பது தூய்மையானது. தனிமையில் இருக்கும் போது விழிப்புடன் இருக்கவேண்டும். எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

விசுவாசி தூங்கிப் போய்விடுகிறார். நம்பிக்கையாளர் விழிப் புடன் இருக்கிறார். அவருக்கு உதவ யாரும் இல்லை என்பதால் விழிப்புடன் இருந்தாக வேண்டும். அவர் கும்பல் மனோபாவத்தின் ஒரு அங்கமாக இல்லை. தனது காலில் நிற்கிறார். அவர் இயற்கையை

நம்புகிறார். எந்தக் கொள்கை, கோட்பாட்டையும் நம்பவில்லை. ஆனால் வெளியே சொல்லாத நம்பிக்கை ஒன்று உண்டு. இயற்கை ஒழுங்குமுறையற்றது அல்ல என்பதே ஆகும். இயற்கை ஒரு திட்டமான ஒழுங்கு பெற்றது. அந்த ஒழுங்கைக் கண்டறிய முடியும்.

"நம்பிக்கையும், சந்தேகமும் ஒன்று சேர்ந்துள்ளன. ஒன்றை யொன்று ஆள்கின்றன. உள்மூச்சு, வெளிமூச்சுபோல அவை உள்ளன" என்கிறார் ஹெர்மன் ஹெஸ்ஸே. அது விசுவாசத்தைப் பொறுத்தவரை நிஜம். நான் விவரித்த உண்மை நிலைக்கு அது நிஜமற்றது. கவனியுங்கள். நம்பிக்கையும், சந்தேகமும் ஒன்றை ஒன்று சார்ந்துள்ளன. ஒன்றையொன்று ஆட்சி செய்கின்றன. வெளி மூச்சு, உள்மூச்சு போல அவை உள்ளன.

நம்பிக்கை எப்போதும் சந்தேகத்தை அடக்கிவைக்கிறது. சந்தேகத்தை அடக்கி வைக்க உதவும் ஒரு தந்திரமாக நம்பிக்கை அமைந்திருக்கிறது. அதனால்தான் நம்பிக்கையாளர்கள், "நான் உறுதியாக நம்புகிறேன்" என்று கூறுகிறார்கள். எதற்கு உறுதி? பலமான சந்தேகம் அடியாழத்தில் இருக்கிறது. அதைப் பலவந்தப் படுத்த உறுதியான நம்பிக்கை தேவை. அதை விழிப்புணர்வற்ற நிலையில் அடக்கி வைக்கவேண்டும். உறுதியான நம்பிக்கை என்று கூறும்போது, பலமான சந்தேகம் உள்ளது என்பதே அர்த்தம். நீங்கள் போராட வேண்டும். போராடுவதற்கு உறுதியான நம்பிக்கை வேண்டும்.

அதனால்தான் நம்பிக்கையாளர்கள் மூடஅபிமானிகளாக இருக்கிறார்கள். மூட அபிமானம் என்றால் என்ன? பலமான சந்தேகத்தை உள்ளே வைத்திருப்பவர் மூட அபிமானியாக இல்லா விட்டால், தனது சந்தேகத்தை அடக்கி வைக்க முடியாது. தனது சந்தேகத்தைக் கண்டு அவர் அச்சம் கொள்கிறார். தனது சந்தேகத்தைக் கண்டு அவர் மிகவும் அச்சப்படுகிறார். உள்ளே அவர் ஒருபோதும் பார்ப்பதில்லை. மூட அபிமானத்தைத் தன்னைச் சுற்றி உருவாக்கிக் கொள்கிறார். மூட அபிமானம் என்ற புகையில் சந்தேகம் முழுமை யாக மறைந்துவிடுகிறது.

மூட அபிமானி கருத்துக் கூறமாட்டார். அவர் பயந்து போயிருக்கிறார். ஏதாவது ஒன்றைப் பற்றிக் கூறினால், அது அவரிடம் சந்தேகத்தை மேலே எழுப்புகிறது. மறுபக்கத்தை அவர் கவனிப்பதில்லை. அவர் விவாதம்செய்வது கத்திமூலம்தான். அவரால் விவாதிக்கமுடியாது. கொல்லவே முடியும். கொல்வது மூலம் தனது நம்பிக்கை சரி என்று அவர் நிரூபிக்கிறார். அதனால்

தான் கிறிஸ்தவர்கள், முகமதியர்கள் இன்னும் மற்றுமுள்ள எல்லோரும் ஒருவரைஒருவர் வெட்டிக் கொல்கிறார்கள். இவை யெல்லாம் மூட அபிமானம். உலகத்தை அவர்கள் அசிங்கப்படுத்து கிறார்கள். அழகுடன் இருப்பவற்றைப் பெருமளவு நாசம் செய் கிறார்கள். அதைத் தடுத்து அவற்றைப் பாதுகாக்க வேண்டும். மனித இனத்தை சுயஉணர்வற்ற நிலைக்குத் தரம் தாழ்த்திவிடுகிறார்கள். மனிதன் மலர்ச்சியும், பொலிவும் பெற்றிட அவர்கள் அனுமதிப்ப தில்லை. அவர்கள் அதிகம் நாசம் செய்பவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் ஆசீர்வாதங்களாக இல்லை. சாபங்களாக இருக்கிறார்கள்.

நம்பிக்கையுள்ள மனிதன் எப்போதும் மூட அபிமாமனியாக இருப்பதில்லை. அப்படி இருக்கவும் முடியாது. அவன் ஒளிவு மறைவற்றவனாக எளிதில் அணுக வல்லவனாக, பயன்படக் கூடிய வனாக இருப்பான். மென்மையானவனாக இருப்பான். கூறுவதைக் கேட்க ஆயத்தமாக இருப்பான். எதிர்நிலை அம்சங்கள் பற்றி எல்லா வகையிலும் புரிந்துகொள்ளத் தயாராக இருப்பான். யாருக்குத் தெரியும்? அந்த எதிர்நிலை அம்சங்கள் ஒருவேளை சரியானவை களாகவும் இருந்திடலாம். உண்மை நிலையை அறிந்த மனிதரிடம் பாகுபாட்டு உணர்வோ, எதிர்ப்போ இருக்காது. முன்னரே மனதில் உருவாக்கிக் கொண்ட எண்ணங்கள் இருக்காது. எந்த கொள்கையும் அவனிடம் வேறூன்றி இருக்காது. அவன் கபடமற்றவனாக, கேட்டு அறிபவனாக, தேடல் நிறைந்தவனாக, சிஷ்ய மனோபாவம் கொண்டவனாக இருப்பான். எதையும் கவனித்துக் கேட்டறிய ஆயத்தமாக இருப்பான். அவனுடைய கதவு, ஜன்னல்கள் திறந் திருக்கும். அவன் குப்பைக் குவியல் அல்ல. அவன் ஜன்னலற்றவன் அல்ல. சூரியன், மழை, காற்று போன்றவை அணுகும் வகையில் அவன் இருக்கிறான். எந்த வடிவில் இயற்கை வந்தாலும் அது நெருங்கும் வகையில் அவன் இருக்கிறான். உண்மையைத் தேடி யடைய அவன் தயாராக இருக்கிறான். உண்மை என்பது இப்படித் தான் இருக்கும் என்ற அனுமானம் அவனிடம் இல்லை. எந்த ஒரு கருத்துடனும் அவன் தேடலைத் துவங்கவில்லை. தெரிந்துகொள்ள வேண்டும் என்ற பெருவிருப்பத்துடன் அவன் துவங்கியிருக்கிறான். உண்மையின் மீது எந்த ஒரு கருத்தையும் திணிக்க விரும்பவில்லை.

நம்பிக்கை கொண்ட மனிதர் மூட அபிமானம் கொள்வ தில்லை. புத்தர் மூட அபிமானி அல்ல. நம்பிக்கை கொண்ட மனிதர் பகுத்தறிவுவாதி. விசுவாசம் கொண்ட மனிதர் பகுத்தறிவு இல்லாத வராக இருப்பார். காரணகாரியங்களுக்கு அவர் அனுமதி தரமாட்டார்.

ஏனென்றால், அவர் அச்சம் கொள்கிறார். காரணகாரியம் அவரது விசுவாசத்துக்கு இடையூறு செய்யும். எப்படியோ அவர் சௌகரிய மான விசுவாசத்தில் வாழ்வதற்குக் கற்றுக்கொண்டார். காரண காரியம் ஒரு புயல்போல வந்து சகலத்தையும் தாக்குகிறது. கதவு ஜன்னல்களை அவரால் திறக்க இயலாது. மூடிவைக்கப்பட்ட இருட்டறையில் அவர் வாழவேண்டியுள்ளது. அப்போதுதான் அவரால் விசுவாசம் கொள்ள முடியும். இசைக்குழுவினரைப் போல அவர் கண்களை மூடிக் கொள்கிறார். தனது விசுவாசத்தை அவர் மாற்றிக் கொள்வதில்லை. நம்பிக்கைகொண்ட மனிதர் திறந்த கண்களுடன் இருக்கிறார். விழிப்புடனும், ஜாக்கிரதையாகவும் இருக்கிறார்.

ஹெர்மன் ஹெஸ்ஸேயின் கருத்து விசுவாசம் என்ற விஷயத்தில் சரி. நம்பிக்கை என்பதைப் பொறுத்தவரை தவறு. அதில் மூன்றாவது விஷயம் ஒன்றும் உண்டு. அது நம்பகத்தன்மை. விசுவாசம் அசிங்க மானது. அதை தவிர்த்துவிடுங்கள். அடுத்தது, நம்பிக்கை. அது அழகானது. அதை கிரகித்துக்கொள்ள வேண்டும். மூன்றாவது அர்த்தம், நம்பகத்தன்மை, நம்பகத்தன்மை என்பது நம்பிக்கை தனது இலக்கை எட்டிய நிலை. நம்பிக்கை நிறைவு தருவதாக உள்ளது என்று அறியும்போது நம்பகத்தன்மை எழுகிறது.

நம்பகத்தன்மை என்பது "நான் அறிவேன்" என்று உணர்தல். விசுவாசம் கொள்வது அல்ல. ஒன்றைப் பற்றி நன்கு அறிந்தவர் விசுவாசம் கொள்ள அவசியம் இல்லை. எதற்காக விசுவாசிக்க வேண்டும்? அவருக்குத் தெரியும். எனவே விசுவாசம் கொள்ளத் தேவையில்லை. தெரியாதவர் விசுவாசம் கொள்கிறார். விசுவாசம் கொண்டிருப்பவர்கள் உச்சத்தை - நம்பகத் தன்மையை எட்ட மாட்டார். நம்பிக்கை கொண்டவர் மட்டுமே எட்டுவார். நம்பிக்கை என்பது புனிதப் பயணம். நம்பகத்தன்மை என்பது இலக்கு ஆகும். நம்பிக்கையில் துவங்கி நம்பகத்தன்மையில் முடியுங்கள்.

நம்பிக்கையில் மூன்று அர்த்தங்கள் இவைதான். வார்த்தை மேலோட்டமானது. மூன்று அர்த்தங்களை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். காரணம், சில நேரங்களில் அது முதலாவது அர்த்தத்தில் பயன்படுத்தப்படுகிறது. சில சமயம் இரண்டாவது அர்த்தத்திலும், சிலநேரம் மூன்றாவது அர்த்தத்திலும் பயன்படுத்தப்படுகிறது.

## இரண்டாவது கேள்வி

**ஓஷோ,**

**நரகம் என்பது நிஜமாகவே உண்டா?**

நீங்கள் அதில்தான் வாழ்ந்துகொண்டிருக்கிறீர்கள். நரகம் என்பது குறிப்பிட்ட ஒரு மனோநிலை. விஷயங்களைக் குறிப்பிட்ட கண்ணோட்டத்தில் பார்க்கும் விதம். நீங்கள் துன்பத்தில் இருந்தால், நரகத்தில் வாழ்கிறீர்கள். நரகம் என்பது புவியியல் சார்ந்த இடமல்ல. அது பாதாளத்தில் எங்கோ இல்லை. நீங்கள் விஷயங்களைப் பார்க்கும் விதத்தில்தான் இருக்கிறது. விழிப்புணர்வற்ற நிலையில் வாழும் ஒருவர் தன்னைச் சுற்றி நரகத்தை உருவாக்கிக் கொள்கிறார்.

சொர்க்கமும் அப்படிப்பட்டதுதான். அதுவும் ஒரு மனோ நிலைதான். புவியியல் சார்ந்தது அல்ல. அது மேகங்களுக்கு மேலே ஆகாயத்தில் இல்லை. அது உங்களிடமன்றி வேறு எங்கும் இல்லை. வாழ்வதற்கான இரண்டு மாற்று வழிமுறைகள் அவை. சொர்க்கத்தில் வாழவேண்டும். அல்லது நரகத்தில் வாழ வேண்டும். எங்கே வாழ வேண்டும் என்று முடிவு செய்வது உங்களைச் சார்ந்த விஷயம்.

நீங்கள் விழிப்புடன் வாழ்ந்தால், நீங்கள் ஈடுபடும் ஒவ்வொரு காரியத்திலும் விழிப்புணர்வுடன் இருந்தால் நீங்கள் அமைதி, பேரானந்தம், தெளிவு, மகிழ்ச்சி, அன்பு போன்வற்றுடன் கலந்து வாழ்கிறீர்கள். உங்கள் வாழ்க்கை கொண்டாட்டம், சுவை கொண்டதாக உள்ளது. சொர்க்கம் என்பதன் பொருள் இதுதான். உங்கள் வாழ்வில் நிறைய மலர்கள் இருக்கின்றன. அவை அவற்றின் வழியே இனிய நறுமணம் வீசுகிறது. ஆனந்த மணம் பெறுகிறீர்கள். உங்கள் வாழ்க்கை ஒப்புக்கொள்ளப்பட்ட வாழ்வியல் சங்கீதம் போலாகிறது. அது இயற்கையின் புனிதமான ஒப்புதல் ஆகிறது. நீங்கள் இயற்கையுடன் கூட்டுறவு கொள்கிறீர்கள். நட்சத்திரங்கள், மரங்கள், நதிகள், மலைகள், மனிதர்கள், மிருகங்களுடன் கூட்டுறவு கொள்கிறீர்கள். முழு இயற்கையும், முழு வாழ்க்கையும் முற்றிலும் வித்தியாசமான அர்த்தத்தை உங்களுக்கு அளிக்கிறது. ஒவ்வொரு மூலை முடுக்கில் இருந்தும் ஆனந்த நதிகள் உங்களை நோக்கிப் பாய்ந்து வருகின்றன.

அந்த மனநிலையின் ஒரு பெயர்தான் சொர்க்கம்.

நரகம் எனும்போது நீங்கள் விழிப்புணர்வற்ற, அபத்தமான வாழ்க்கை வாழ்கிறீர்கள். அந்த சூழ்நிலையில் நீங்கள் மேலும்

மேலும் துயரத்தை உங்களுக்கு ஏற்படுத்திக்கொள்கிறீர்கள். ஆனாலும் "நிஜமாகவே நரகம் இருக்கிறதா?" என்று கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் கேட்கக்கூடாது. அதில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள் என்பதை அறியவேண்டும்.

ஈரமான உடையுடன் அலங்கோலமாகக் கவலையோடு காணப்பட்டார் ஒரு யூதர். அவரைச் சுற்றி சின்னதும் பெரியதுமாக பல குழந்தைகள் கத்திக்கொண்டிருந்தன. நெடுந்தொலைவு செல்லும் விரைவுப் புகைவண்டியின் ஒரு பெட்டியில் ஒன்றரை வயதுக் குழந்தையுடன் அவர் அமர்ந்திருந்தார். குழந்தையை அடித்த அவர், "மறுபடியும் அதைச் செய்தால் உன்னை நொறுக்கிவிடுவேன். மறுபடியும் அதைச் செய்தால் உன்னை நொறுக்கிவிடுவேன். மறு படியும் அதைச் செய்தால் உன்னை நொறுக்கிவிடுவேன்" என்று முணுமுணுத்தபடி இருந்தார்.

பக்கத்து இருக்கையில் அமர்ந்திருந்த தாய்மையுள்ளம் கொண்ட ஒரு பெண்ணுக்கு அச்செயல் கொடூரமாகத் தோன்றியதால் சினம் பொங்கியது. அவள் எழுந்து நின்று முதியவரின் முகத்துக்கு நேரே விரல்நீட்டிப் பேசினாள். "இன்னும் ஒரு தடவை அந்தக் குழந்தையை நீங்கள் அடித்தால், நான் பெரிய அளவில் இடையூறு செய்வேன். அது உங்களால் ஒருபோதும் மறக்கமுடியாததாக அமைந்துவிடும்!"

சங்கடத்தை எதிர்கொண்ட அந்த முதியவர் ஓங்கிய கையை நிறுத்திவிட்டுத் தனது பார்வையை அந்த பெண்மணிமீது திருப் பினார். "பெருமாட்டி! முன்னால் சரக்கு வாகனத்தில் இருந்த என் மனைவி இறந்துவிட்டாள். அவளைப் புதைக்க எனக்கு இட மில்லை. எனது மகள் ரிஃப்கா இன்னொரு பெட்டியில் இருக்கிறாள். அவள் பிரசவிக்கப் போகிறாள். அவளுக்குக் கணவன் இல்லை. இந்தக் குழந்தை எனது தொப்பியை ஜன்னல் வழியே வீசி எறிந்து விட்டது. நான் தவறான வண்டியில் ஏறிவிட்டேன். நான் எங்கு போகிறேன் என்று எனக்குத் தெரியவில்லை. அந்தக் குழந்தை எனது ஆடைகளை நாசம் செய்துவிட்டது. எனது மூட்டைமுடிச்சுகள் தொலைந்துவிட்டன. ஏகப்பட்ட இடைஞ்சல்! பெருமாட்டி! எனக்கு நீங்கள் ஏன் தொல்லை தருகிறீர்கள்?"

நீங்கள் நரகத்தில் இருக்கிறீர்கள் என்பதற்கு இதைவிட வேறென்ன அத்தாட்சி வேண்டும்? உங்கள் வாழ்வைச் சற்று கவனி யுங்கள். உங்கள் முகத்தைக் கண்ணாடியில் பாருங்கள். உங்களுக்காக நீங்கள் என்ன செய்தீர்கள்? அது ஏற்கனவே நரகத்தில் இருக்கிறது.

நரகம் என்பது வேறு எங்கோ இருப்பதாக நாம் காலம்கால மாக எண்ணிக்கொண்டிருக்கிறோம். அது ஒரு போலித்தனத்தை உருவாக்குகிறது. நீங்கள் நரகத்தில் இல்லை என்ற உணர்வை அது ஏற்படுத்துகிறது. நீங்கள் அதில்தான் இருக்கிறீர்கள்! அது வேறு எங்கோ இல்லை. வேறு எங்கோ நரகம் இருக்கிறது என்ற கருத்து உங்களை ஏமாற்ற மதவாதிகள் உருவாக்கிய தந்திரம். நீங்கள் நரகத்தில் இல்லை என்ற உணர்வு ஏற்படுகிறது. நரகத்தைப் பற்றி அச்சத்தை உருவாக்குகிறது. சொர்க்கம் என்ற கருத்தையும் அவர்கள் தான் ஏற்படுத்தினார்கள். அதுவும் எங்கோ இருப்பதாகக் கூறி னார்கள். சண்டிக் குதிரைக்கு முன்னால் காரட் கிழங்கைக் காட்டுவது போல அக்கருத்து உங்கள் முன்னால் தொங்குகிறது. நீங்கள் இழுக்கப்படுகிறீர்கள், தள்ளப்படுகிறீர்கள், ஏமாற்றப்படுகிறீர்கள். பயம், அச்சம் போன்றவற்றின் துணையோடு மதவாதிகள் அதைச் செய்கிறார்கள்.

நரகம்குறித்து நீங்கள் அச்சமூட்டப்படுகிறீர்கள். சொர்க்கம் குறித்துப் பேராசையுடன் இருக்கிறீர்கள். அவை எங்கோ இருப்பதாக சதா நம்புகிறீர்கள். ஏமாற்றப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்.

எல்லாம் இங்குதான் இருக்கின்றன. இப்போது இங்குதான் இருக்கின்றன. அங்கு செல்ல வேறு நேரம் என்று ஒன்று கிடையாது. இதைத் தவிர வேறு இடம் என்று ஒன்றும் கிடையாது. தவறான மனோபாவத்துடன் வாழ்ந்தால் நரகம் இதுதான். சரியான மனோ பாவத்துடன் இருந்தால் இதுதான் சொர்க்கம். இன்னும் ஒரு விஷயத்தை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்று நான் விரும்பு கிறேன். சொர்க்கமும், நரகமும் உங்கள் மனதின் இரண்டு பக்கங்கள். இந்தியாவுக்கு வெளியே தோன்றிய மதங்கள் எல்லாம் அந்த இரண்டையும் வலியுறுத்துகின்றன. சொர்க்கம், நரகம். அதற்கு மேல் அவைகளால் உயர முடியவில்லை. யூதமதம், கிறிஸ்தவ மதம், இஸ்லாமிய மதம் என்ற இந்த மூன்றும் இந்தியாவுக்கு வெளியே பிறந்தவை. இவ்விஷயத்தில் அவற்றிடம் ஆழமான கருத்து இல்லை. இந்தியாவில் நாம் மூன்றாவதாக மோட்சம் என்ற ஒரு சொல்லைப் பயன்படுத்துகிறோம். அது நிர்வாணம் எனப்படுகிறது.

நரகம் என்பது தவறான மனோபாவம் சார்ந்தது. சிரம நிலை, அசாதாரண இயல்பு, மனநிலை பாதிப்பு, நோய்கள் போன்றவை அங்கு நிலவுகின்றன. சொர்க்கம் என்பது முறையான மனோபாவம் சார்ந்தது. இயல்புநிலை, ஆரோக்கியம் சார்ந்தது. ஆனால் அதற்கு அப்பாலும் ஒன்று உண்டு. அங்கு நீங்கள் மனமற்றவராக இருப்

பீர்கள். மனதின் இரண்டு பக்கங்களும் அகன்றுவிடும். மனமற்று இருப்பீர்கள். அங்கு நீங்கள் நேர்மறை, எதிர்மறை என்ற இரண்டும் இல்லாதிருப்பீர்கள். அங்கு ஒளியாகவும் இருக்கமாட்டீர்கள், இருளாகவும் இருக்கமாட்டீர்கள். அங்கு நீங்கள் இதுவாகவும் இருக்கமாட்டீர்கள், அதுவாகவும் இருக்கமாட்டீர்கள். அனைத்திற்கும் சாட்சியாக விலகி நிற்பீர்கள். துன்பமும் இல்லை பேரின்பமும் இல்லை. துன்பம் இன்பம் ஆகியவற்றால் அடையாளப்படுத்தப்பட மாட்டீர்கள். நரகம், சொர்க்கத்தை உருவாக்கும் மனம் இருக்காது. இரண்டுக்கும் அப்பால் குன்றின்மீது நின்று வேடிக்கை பார்ப்பவர் போலிருப்பீர்கள். அந்த சாட்சிநிலை, அந்த வெற்றி நிலையே மோட்சமாகும். அதுவே விடுதலை. முழுமையான விடுதலை. மனதின் பிடியிலிருந்து விடுபடலே நிஜமான விடுதலை ஆகும்.

நான் சொர்க்கம் குறித்து போதனை செய்யவில்லை. காரணம், சொர்க்கம் எப்போதும் நரகத்துடன் சேர்ந்தே இருக்கிறது. மறு பக்கத்தை உதறமுடியாது. நீங்கள் நாணயத்தின் ஒரு பக்கத்தை விரும்பினால் மறுபக்கத்தையும் பாதுகாத்தே தீர வேண்டும். மனதை நீங்கள் பாதுகாக்க விரும்பினால் அது சில கணங்களுக்கு உங்களுக்கு ஆனந்தம் தரும். ஆனால் மீண்டும் மீண்டும் கவலை தலைதூக்கும். மறுபக்கத்தையும் ஏற்றுக்கொண்டாக வேண்டும்.

அதனால்தான் மனம்சார்ந்து வாழ்பவர் ஒரு முனையில் இருந்து மறுமுனைக்கு நகர்ந்து கொண்டே இருக்கிறார். சிலசமயம் அவர் மகிழ்ச்சியுடன் இருக்கிறார். அதிக மகிழ்ச்சியுடன் இருக்கிறார். சொர்க்கத்தில் இருக்கிறார். சிலசமயம் அவர் மிகவும் துன்பத்தில் இருக்கிறார். நரகத்தில் இருக்கிறார். சிலசமயத்தில் சொர்க்கம், சில சமயத்தில் நரகம். சிலசமயம் அன்பு. சில சமயம் வெறுப்பு. அவை தொடர்ந்து எதிர்முனைகளை நோக்கி இழுக்கின்றன.

இதுதான் நிலைமை. மகிழ்ச்சி, அன்பு, சந்தோஷம் நிறைந்த சில கணங்களை நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள். அவை வரும், போகும். அவற்றில் தங்கிக் குடியிருக்க இயலாது. அவற்றை நிரந்தரமாக்க முடியாது. அவை சில கணங்களுக்கு மட்டும்தான். அவை போய்விடும்போது நீங்கள் சோர்வு, நம்பிக்கை, இழப்பு, வேதனை போன்றவற்றுக்கு ஆளாகிறீர்கள்.

மனிதன் சொர்க்கம், நரகம் இரண்டுக்கும் இடையே சதா அல்லாடிக் கொண்டிருக்கிறான். இதை ஆழமாக கவனித்து அறிந்த புத்தர்கள் மூன்றாவது நிலை ஒன்றைக் கண்டறிந்தார்கள். மனதிற்கு அப்பால் உள்ள மனமற்ற நிலை அது. இருமைநிலையிலிருந்து

விடுதலைபெறும் நிலை. பிதாகோரஸ் அதை தங்கக் குறியீடு என்றார். **தங்கக் குறியீடு** என்பதன் பொருள் நீங்கள் மையநிலையில் நிற்பதாகும். மகிழ்ச்சி, மகிழ்ச்சியற்ற நிலை இரண்டுக்கும் நடுவில் நிற்றலாகும். மகிழ்வுக்கும், கவலைக்கும் நடுவில் நிற்பதாகும். உங்களால் **சரியாக** மைய நிலையில் நிற்க முடிந்தால் அதன் பிறகு கவலையும் இல்லை, சந்தோஷமும் இல்லை, மகிழ்வும் இல்லை. மகிழ்வற்ற நிலையும் இல்லை. வலியும் இல்லை, ஆனந்தமும் இல்லை. சரியான மையத்தில் நீடித்த மகிழ்வு உள்ளது. நீங்கள் ஒரு சாட்சியாக, பார்வையாளராக மாறும்போது அது வருகிறது.

சாட்சியாக இருப்பதே இங்கு அடையும் குறிக்கோளாகும். எனது சந்நியாசிகள் எல்லோரும் சாட்சிகளாக மாறவேண்டும். அனைத்திலும் சாட்சியாக இருங்கள். எதிலும் கலந்து அடையாளப் படுத்திக்கொள்ள வேண்டாம். மகிழ்ச்சியான விஷயமாக இருந் தாலும், பேரின்பம் தருவதாக இருந்தாலும் அதில் அடையாளப்பட வேண்டாம். விலகி இருங்கள். இடைவெளி ஏற்படுத்திக் கொள் ளுங்கள். அதில் உங்களை இழந்துவிட வேண்டாம். அவை வந்து போக அனுமதியுங்கள். அனைத்தும் வருகின்றன. பிறந்தவை எல்லாம் மரிக்கின்றன. ஆனால் நீங்கள் எஞ்சியிருக்கிறீர்கள். சாட்சி யாக எப்போதும் எஞ்சியிருக்கிறீர்கள்.

நிலைத்த சாட்சியம் உங்களிடம் இருப்பதைக் கண்டு கொண்டால், கடவுளைக் காணலாம். கடவுள் ஒரு வஸ்து அல்ல. அது உங்கள் தூய்மையான உணர்வுதான்.

### மூன்றாவது கேள்வி

**ஓஷோ,**

**உங்கள் துணிச்சலான பரிசோதனைகள் விஞ்ஞானத் தெளி வுடன் எவ்விதம் இருக்கவேண்டும் என்று கருதுகிறீர்கள்? மேலும், குறிப்பிட்ட ஒரு மனநலப் பாதிப்புக்கு ஏற்ற குறிப் பிட்ட ஒரு தியானமுறை உள்ளதா?**

டாக்டர் மாலிக், அறிவியலுக்கு என்று சில சுயஎல்லைகள் உண்டு. நான் தயாராக இருக்கிறேன். நான் விஞ்ஞானிகளை வரவேற் கிறேன். இங்கே வந்து என்ன நடக்கிறது என்று பார்க்கட்டும். அவர்கள் வரவேற்கப்படுகிறார்கள். ஆனால் அவர்களால் இங்கே நடப்பதன் உண்மைநிலையைப் புரிந்துகொள்ள இயலாது. அவர்களால் மேலுடலை மட்டுமே பார்க்க முடியும். உயிரைத் தவற

விட்டுவிடுவார்கள். அவர்களின் வழிமுறைகள் அதைத் தவிர்த்து விடுகின்றன.

"தயவு செய்து அந்த ரோஜா மலரைப் பாருங்கள். அது மிகவும் அழகாக இருக்கிறது" என்று நீங்கள் விஞ்ஞானியிடம் கூறுவது போன்றதாகும். அவரால் மலரை ஆய்வுசெய்ய முடியும். அதன் உள்ளடக்கத்தை கூறுபோட முடியும். அதில் எவ்வளவு தண்ணீர் இருக்கிறது, எவ்வளவு நிறம் உள்ளது, எவ்வளவு நறுமணம் உள்ளது, எவ்வளவு மண், எவ்வளவு காற்று உள்ளது அளந்து சொல்ல முடியும். அவரது கண்ணில்படும் எல்லாவற்றையும் சொல்ல முடியும். ஆய்வு வழிமுறைகள் மூலம் அதை கண்டறியமுடியும். ஆனால் அவர் வழிமுறைகள் எல்லைக்கு உட்பட்டவை. மலரின் அழகை அவரால் கண்டறிந்துவிட முடியாது. நிச்சயம் முடியாது. விஞ்ஞானப் பூர்வமாக அதன் அழகைக் கண்டறிய இயலாது. உணர்வுள்ள ஒரு மனிதரால் மலர் அழகாக இருக்கிறது என்று சொல்லமுடியும். ஒரு விஞ்ஞானியால் சொல்லமுடியாது.

அவர் விஞ்ஞானப்பூர்வமாக மலரை அணுகினால், அதன் அழகைத் தவிர மற்ற அனைத்தையும் கண்டறிந்துவிடுவார். அழகைப் பற்றிச் சொல்லவேண்டும் என்றால் அதற்கு இரண்டு சாத்தியங்கள் மட்டுமே உண்டு. மலரில் அழகு என்பது இல்லை. அடுத்து அது கற்பனை உருவேற்றம். அழகு உங்கள் கண்களில் இருக்கிறது. மலரில் இல்லை. அது உங்கள் கனவு, கருத்து. அப்படி ஒரு எண்ணத்தைத் திணித்திருக்கிறீர்கள். அல்லது விஞ்ஞானப் பூர்வமாக, அழகு என்பது இயற்கைக்கு மாறானது என்பார்.

விஞ்ஞானிகளால் அழகைக் கண்டறிய முடியாது. நீங்கள் அவரிடம் எதைக் கொடுத்தாலும் அவர் பகுத்துத் தொகுத்து பருப் பொருளாக மாற்றிவிடுவார். மலரில் உள்ள சிறப்பு என்னவென்றால் கண்ணுக்குப் புலப்படாதவை பல உள்ளன. அவை எங்கோ உள்ள ஒன்றைச் சார்ந்து நிற்கின்றன. ஆய்வின்போது அவை தன்னால் மறைந்துபோய்விடுகின்றன.

நான் முழுமையான ஆயத்தத்துடன் இருக்கிறேன். விஞ்ஞானிகள் வரலாம். தியானம் வாயிலாக என்ன நடக்கிறது என்று கவனிக்கலாம். இசை மூலமாகவும், சிகிச்சைச் சூழல்களிலும் என்ன நடக்கிறது என்று கவனிக்கலாம். அவர்களால் வெளிப்புறத்தை மட்டுமே காணமுடியும். நிஜமான அதன் ஆன்மாவை அவர்கள் காண விரும்பினால், அவர்கள் பங்குகொள்பவர்களாக மாற

வேண்டும். பார்வையாளர்களாக இருக்கலாகாது. என்னுடன் தொடர்பில் இருக்க வேண்டும்.

தியானம் செய்யும் மற்றவர்களைப் பார்த்து, என்ன நடக்கிறது என்று தெரிந்துகொண்டுவிட முடியாது. அவர்களும் தியானிப்பவர்களாக மாறவேண்டும். விஞ்ஞான வழிமுறைகள் அதற்கு எதிராக உள்ளன. அதுதான் பிரச்சினை. விஞ்ஞானிகள் எதிலும் கலந்துகொள்ளாமல் பார்வையாளர்களாக இருக்க வேண்டும் என்பது விஞ்ஞான வழிமுறை அடிப்படையாக அமைந்திருக்கிறது. அவர் பங்குகொள்பவராக மாறுவதில்லை. அவர் அங்கே விலகி நின்று பார்வையாளராக இருக்கவேண்டியுள்ளது.

பங்குகொள்ளும்போது மட்டுமே அறிந்துகொள்ளக் கூடிய விஷயங்களும் உள்ளன. உதாரணமாக, பார்வையாளராக இருந்து கொண்டு காதலை அறியமுடியாது. காதலர்கள் ஒருவரை ஒருவர் முத்தமிட்டுக் கொள்வதைக் காண்கிறீர்கள். விஞ்ஞானபூர்வமாக அதிலிருந்து என்ன தெரிந்துகொண்டுவிட முடியும்? ஒருவர் உதட்டிலிருந்து மற்றவர் உதட்டுக்குச் சில கிருமிகள் பரவுகின்றன என்பதுதவிர வேறு என்ன தெரிந்துகொள்ள முடியும்? முத்தம் என்பது கிருமி பரவல் என்ற அளவுக்கு தரம் தாழ்த்தப்படுகிறது. முத்தத்தின் அழகு, ஆன்மா மறைந்து போகிறது. உண்மையில் அது மோசமான விஷயம் என்றாகும்போது அழகு மறைந்துபோகிறது.

விஞ்ஞானிகள் கையில் காதல் என்பது இரசாயன மாற்றம் என்றாகிவிடுகிறது. அது சுரப்பிகளின் மூலம் ஏற்படும் கவர்ச்சி. காம இச்சைச் சுரப்பிகளால் ஏற்படும் நிகழ்வு. தனிப்பட்ட எந்த விஷயமும் இல்லை. ஆணின் ஹார்மோனா, பெண்ணின் ஹார் மோனா என்பதே கேள்வி. அது உயிரியல் சார்ந்த கவர்ச்சி. காதல் தனது கவித்துவத்தை இழந்துவிடுகிறது. காதல் சாதாரண நிகழ் வாகிறது. அது லௌகிகமானது. எல்லா புனிதத்தையும் இழந்து விட்டது.

எனவே டாக்டர் மாலிக், நீங்கள் வரவேற்கப்படுகிறீர்கள். உங்கள் நண்பர்களும் வரவேற்கப்படுகிறார்கள். மாலிக், டெல்லி பல்கலைக்கழகத்தில் ஒரு மனோவியல் சிகிச்சை நிபுணர். நீங்கள் வரலாம். அவர் இங்கு இருக்கிறார். நீங்கள் உங்கள் நண்பர்களை அழைத்து வரலாம். விஞ்ஞானப் பணி, விஞ்ஞான நுட்பம் என்று நீங்கள் சொல்வதை எல்லாம் செய்யலாம். நீங்கள் வெளி வட்டத்தை மட்டும்தான் அறியமுடியும் என்று முன்கூட்டியே தெரிவித்துக் கொள்கிறேன். நிஜமாகவே நீங்கள் அதை அறிந்துகொள்ள விரும்

பினால் விஞ்ஞானியாக இங்கு வராமல், கவிஞராக, காதலராக, சிந்தனையாளராக, பங்கு கொள்பவராக வரவேண்டும். அப்போது தான் அதன் மையம் உங்களுக்கு வெளிப்படும்.

இன்று மனிதசமூகம் எதிர்கொள்ளும் அடிப்படைப் பிரச்சினைகளில் ஒன்றாக அது மாறுகிறது. அறிவியல் எங்கு செல்கிறதோ அங்கு எல்லாவற்றையும் தரம் தாழ்த்தி விடுகிறது. அது பொருட்களை அசிங்கப்படுத்தி விடுகிறது. நீங்கள் தாமரை பற்றிக் கேட்டால் விஞ்ஞானி சேற்றைத் தவிர வேறு எதையும் கண்டுபிடிக்க மாட்டார். தாமரை சேற்றிலிருந்து முளைக்கிறது என்பது உண்மைதான். ஆனால் அது சேறு தவிர வேறு எதுவுமல்ல என்பது சரியல்ல.

நீங்கள் ஒரு புத்தரிடம் கேட்டால், முற்றிலும் புதிய ஒரு பார்வை பெறுவீர்கள். புத்தரிடம் நீங்கள் கேட்டால் சேறு என்பது மறைந்திருக்கும் தாமரை வேறு எதுவுமல்ல என்பார்.

உண்மையான மதம் என்பது, மதம் சார்ந்த பார்வை என்பது அதுதான். பொருட்களை அது அழகுபடுத்துகிறது. அது எல்லாவற்றையும் உச்சரித்துக்கொண்டு செல்கிறது. ஆன்மீகத்தைப் பொறுத்தவரை அதன் அணுகுமுறை உயர்வை நம்புகிறது. தாழ்ந்த நிலை ஒரு கொள்கலமாக இருக்கிறது. விஞ்ஞானத்தைப் பொறுத்தவரை அதன் அணுகுமுறை தாழ்வு நிலையை நம்புகிறது. உயர்வு நிலை ஒரு துணைத் தயாரிப்பாக இருக்கிறது.

மனிதனின் உணர்வு ஒரு துணைத் தயாரிப்பு தவிர வேறில்லை என்றார் காரல் மார்க்ஸ். அது உடலியலின் துணைத் தயாரிப்பு. நிழல் போன்றது. அதை நிராகரிக்கலாம். அதைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை.

அதனால் காரல் மார்க்ஸ், ஜோஸப் ஸ்டாலின் போன்றவர்களால் ரஷ்யாவில் லட்சக்கணக்கானவர்களைக் கொல்ல முடிந்தது. உணர்வு என்பது வெறும் நிழல் என்றால் பிரச்சினை. நீங்கள் விரும்பும் பல நிழல்களை, விரும்பினால் கொல்லலாம். நீங்கள் எதையும் கொல்ல வில்லை. அவர்கள் வெறும் நிழல் என்றால், துணைத் தயாரிப்பு என்றால் ஏன் கவலைப்பட வேண்டும்? மனிதன் என்பது உடல் தவிர ஏதுமில்லை. நீங்கள் தெய்வீகத்தைத் தூசு போலாக்கி விட்டீர்கள்.

ஆன்மீகத்திடமிருந்து அறிவியல் சில விஷயங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும். அப்போதுதான் அறிவியலுக்கு எதிர்காலம் உண்டு. இல்லாவிட்டால் அறிவியல் மங்கிப்போய்விடும். அறிவியலோடு சேர்ந்து மனிதனின் எதிர்காலமும் இருண்டுவிடும்.

அடால்ஃப் ஹிட்லரின் அணுகுமுறை ஜோஸப் ஸ்டாலினைப் போலவே மிகவும் அறிவியல்பூர்வமானது. அறிவியல் அணுகுமுறையில் மனிதன் மறைந்துபோகிறான். அவனிடம் ஆன்மா இருப்பதில்லை. வெறும் இயந்திரம் போலாகி விடுகிறான். நீங்கள் இயந்திரங்களை அழிக்கலாம். அதில் ஒன்றும் பிரச்சினை இருக்காது. நீங்கள் குற்ற உணர்விற்கோ, மனஉறுத்தலுக்கோ ஆட்பட மாட்டீர்கள்.

தியானம் என்பது உள்முக நிகழ்வு. உங்கள் ஆழ்மனதில் ஏற்படும் அமைதி. அது பேரானந்தம். எல்லா சூழ்நிலைகளையும் வெற்றி கொண்ட உச்சநிலை. அது பூரண அமைதிநிலை. விஞ்ஞானத் தெளிவின்மூலம் அதை உங்களால் கண்டறிய இயலாது.

ஒரு புத்தர் அருகில் நீங்கள் சென்று பார்த்தால் என்ன கண்டறி வீர்கள்? அவரது அடியாழத்தை ஊடுருவிப் பார்க்க உங்களால் முடியாது. அது உங்களுக்கு அகப்படாது. அவரது நடவடிக்கைகளை நீங்கள் கவனிக்கலாம். நடவடிக்கைகள் என்பது மனிதனாகிவிடாது.

நவீன மனோவியல் சிகிச்சை மற்றும் ஆய்வுகள் பழக்க வழக்கங்களை அடிப்படையாகக் கொண்டவை. அவை பழக்க வழக்கங்களை மட்டுமே நம்புகின்றன. காரணம், பழக்கவழக்கங் களைக் கவனத்தில் கொள்ளலாம். ஆன்மாவை நம்புவது கிடையாது. ஏனெனில், ஆன்மாவைக் கண்டறிய இயலாது.

மனநோய் சிகிச்சை மற்றும் ஆய்வு, மனோதத்துவம், மன நோய் வைத்தியம் போன்ற வார்த்தைகளைப் பயன்படுத்தக்கூடாது. காரணம், இந்த சொற்களில் உள்ள **மனம்** என்ற சொல் ஆன்மாவைக் குறிக்கிறது. இங்கு ஆன்மா முற்றிலும் நிராகரிக்கப்படுகிறது. ஆன்மா என்ற ஒன்று இல்லை என்று மனோதத்துவ நிபுணர்கள் கண்டறிந்து விட்டதால் அது நிராகரிக்கப்படவில்லை. அவர்கள் உபயோகிக்கும் வழிமுறைகள் மேம்போக்கானவை.

உதாரணமாக, நீங்கள் இசையைக் கண்கள்மூலம் கண்டு ரசிக்க முயன்றால், இசையைக் கேட்கமுடியாது. "இசை என்ற ஒன்று கிடையாது. காரணம், என்னால் அதைப் பார்க்கமுடியவில்லை" என்று சொல்வீர்கள். கண்ணால் கண்டபிறகுதான் இசையை நம்புவேன் என்ற கருத்தைக் கொண்டால், உங்கள் அணுகுமுறை இசை என்பது நிஜமாகவே இல்லை முடிவையே அளிக்கும்.

இசையைக் கேட்கவேமுடியும். கண்ணால் காண்பது இயலாது. அழகை கண்டு ரசிக்கலாம். கேட்டு உணரமுடியாது. ஒவ்வொரு வழிமுறைக்கும் சுயமான எல்லைகள் உள்ளன. விஞ்ஞான

வழிமுறைகள் மிகவும் மேலோட்டமானவை. அதனால்தான் அவை பருப்பொருள் உலகை வெகு ஆழமாக ஊடுருவிச் செல்கின்றன. ஆன்மீக உலகம் போன்று இல்லாமல் அவை வெளிப்படையாகத் தெரிகின்றன. விஞ்ஞானிக்கு ஆன்மீக உலகம் என்பது, இல்லாத ஒன்றாகத் தோன்றுகிறது. அன்பு, கவிதை, இசை, அழகு, ஆனந்தம் போன்றவையும் கண்ணால் காணமுடியாதவை. எனவே, விஞ்ஞானிகளின் கருத்து பொருத்தமற்ற ஒன்றாகும்.

பிதாகோரஸ் கணிதம், இசை என்ற இரண்டைப் போலவும் இருக்கும் ஒரு அறிவியலுக்கு ஆசைப்பட்டார். இணக்கமாக அது இருக்க வேண்டும் என்று விரும்பினார். அதுவே எனது ஆசையும் கூட. உண்மையான அறிவியலுக்கு இரண்டு அம்சங்கள் தேவை. ஒன்று, பருப்பொருள் அம்சம், பருப்பொருள் அறிவியல். அடுத்தது, சூட்சும அம்சம், சூட்சும அறிவியல். ஆன்மீகமும், அறிவியலும் ஒன்று சேரும் புள்ளியாக அது அமைகிறது.

அறிவியல் என்பது பருப்பொருள் விஞ்ஞானம். ஆன்மீகம் என்பது சூட்சும விஞ்ஞானம். மனிதன் அந்த இரண்டும் சேர்ந்தவனாக இருக்கிறான். அகமும், புறமும் இணைந்துள்ளன.

டாக்டர் மாலிக், **"உங்கள் துணிச்சலான பரிசோதனைகள் விஞ்ஞானத் தெளிவுடன் எவ்விதம் இருக்கவேண்டும் என்று கருதுகிறீர்கள்?"** என்று நீங்கள் கேட்கிறீர்கள். நீங்கள் இங்கு வருவது குறித்து எனக்கு மிகவும் மகிழ்ச்சி. ஆனால் நீங்கள் உடலை மட்டும் அறிந்துகொள்வீர்கள். ஆன்மாவைத் தவறவிட்டுவிடுவீர்கள். இங்கு எங்களுடன் பங்குகொள்ளாதவரை, எங்களுடன் சேர்ந்து நடனமாடத் தைரியம் கொள்ளாதவரை, எங்கள் மனிதர்களுடன் சேர்ந்து பாடவும், கொண்டாடிக் களிக்கவும் துணியாதவரை, ஒதுங்கி இருப்பதை ஒதுக்கித் தள்ளாதவரை, கூட்டமைப்பில் கலந்து கரையாதவரை ஆன்மாவைக் கண்டறிய முடியாது. இணைந்தால், அகம், புறம் இரண்டையும் காணலாம். தனி மனிதன் என்ற வகையில்தான் நீங்கள் அகத்தைக் காண்பீர்கள். விஞ்ஞானியாகக் காணமாட்டீர்கள். புறத்தை விஞ்ஞானியாகவே அறியலாம்.

இரண்டாவதாக நீங்கள், குறிப்பிட்ட ஒரு மனநலப் பாதிப்புக்கு ஏற்ற குறிப்பிட்ட ஒரு தியான முறை உண்டா என்று கேட்கிறீர்கள். நவீன மனோவியல் சிகிச்சைமுறைகள் நோயுற்ற நிலை என்ற தளத்தில் வேரோடி நிற்கின்றன என்ற அடிப்படையை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். நல்லாரோக்கியம் பற்றி அதற்கு எதுவும் தெரியாது. நவீன மனோதத்துவமும் அதன் கிளைகளும் அடிப்படை

யாகவே மருத்துவ முறைகளையே பின்பற்றுகின்றன. அது முற்றிலும் தவறானது. ஏனென்றால், ஒருவரின் உள்ளே புகுந்து நோயை அறிவது சரியல்ல.

அதைத்தான் சிக்மெண்ட் ஃபிராய்டு தவறவிட்டார். அவர் ஏதோ ஒரு சிறந்த மதிப்புமிக்க பங்களிப்பு செய்திருக்கிறார். ஆனால் முழுமை என்பதை அது தவறவிட்டு விட்டது. அசாதாரண நிலை மீது அவர் பெருவிருப்பம் கொண்டிருந்தார். நோய்களின்மீது ஆர்வம் காட்டினார். மெல்ல மெல்ல அவர் நோயைத் தவிர வேறு எதையும் கற்றுக்கொள்ளவில்லை என்றாகிவிட்டது. மனிதன் நம்பிக்கைகொள்ள வாய்ப்பு இல்லை என்று கருதத் துவங்கி விட்டார்.

நோய்கள்பற்றிய ஆய்வு தேவைதான். நோயுற்றவர்களுக்கு உதவவேண்டியுள்ளது. ஆரோக்கியம் என்பது என்ன என்று தெரிந்து கொள்ளாமல் அவர்களுக்கு உதவிசெய்ய முடியாது. எப்படியோ அவர்களை சமூகத்தில் அனுசரித்துப் போகும்படி செய்துவிடலாம். ஆனால் அந்த சமூகமே நோய்வாய்ப்பட்டுக் கிடக்கிறது.

இதைத்தான் மனோதத்துவம், மனநோய் சிகிச்சை, மனநோய் வைத்தியர்கள் போன்றோர் செய்து கொண்டிருக்கிறார்கள். சற்று அனுசரித்துப் போக முடியாதவர்கள் வந்தால், மனநோய் சிகிச்சை யாளர் அவரை அனுசரிப்பு நிலைக்கு மீண்டும் கொண்டு செல்கிறார். அனுசரிப்பு மூலம் இயல்புநிலைக்குப் போக வேண்டும். ஆனால் அதற்கு இந்த விஷயத்தில் அவசியமில்லை. காரணம், சமூகமே அசாதாரண நிலையில் இருக்கும்போது அனுசரித்துப் போதலும் அசாதாரண நிலைதான். அது இயல்பு நிலை அல்ல.

நவீன காலத்தில் பெரிய சந்தேகம் எழுந்துள்ளது. ஆர்.டி. லெய்ங் மற்றும் பலர் முழுத்திட்டம் பற்றிய சந்தேகம் எழுப்பு கிறார்கள். சமூகம் அசாதாரண நிலையில் இருக்கிறது. நீங்கள் அதற்கு அனுசரித்துப்போகும் விதமாக மக்களுக்கு உதவி செய்கிறீர்கள்! நீங்கள் சமூகத்திற்குச் சேவை செய்கிறீர்கள். மக்களுக்குச் சேவை புரியவில்லை. நீங்கள் சமூகத்தின் தரகர்களாக இருக்கிறீர்கள். சமூகக் கட்டமைப்பு, அந்தஸ்தின் தரகர்களாக இருக்கிறார்கள். மனிதர்களை அவர்கள் மருந்து, மின் அதிர்ச்சி, மனோவியல் சிகிச்சை போன்ற ஆயிரத்தொரு வழிமுறைகள் மூலம் பலவந்தப்படுத்தி இயல்பு நிலை மனிதர்களாக மாற்றமுயல்கிறார்கள். மனிதன் இயல் பானவன். அவன் சமூகத்தின் அசாதாரண நிலையுடன் அனுசரிக்கத் தேவையில்லை.

புத்தரை யோசித்துப் பாருங்கள். புத்தரால் சமூகத்தை அனுசரிக்கமுடியாது. புத்தர்கள் எப்போதும் புரட்சிக்காரர்களாக இருக்கிறார்கள். அவர்களால் சமூகத்தைக் கண்டு பணிந்துபோக முடியாது. சமூகத்திடம் சரணடைய முடியாது. சமூகம் நோயுற்றுக் கிடக்கிறது. சமூகம் பெரிய சாபத்தின் பிடியில் சிக்கியிருக்கிறது. அந்த சாபம் மதவாதிகள், அரசியல்வாதிகளால் உருவாக்கப்பட்டது ஆகும். சமூகம் ரகசியச் சதியின் பிடியில் சிக்கியிருக்கிறது.

ஆரோக்கியமாக இருக்க மனிதர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. காரணம், ஆரோக்கியமான மனிதர்கள் ஆபத்தானவர்கள். அனுமதிக்கப்படாத மனிதர்கள் புத்திசாலிகள். காரணம், புத்திசாலிகள் ஆபத்தானவர்கள். உங்கள் கல்விமுறை அமைப்பு மக்களுக்கு உதவி செய்ய ஏற்பட்டவை அல்ல. அவர்களை அறிவாளிகளாக மாற்ற ஏற்பட்டவையல்ல. புத்திசாலித்தனம் பெறாமல் தடுக்க ஏற்பட்டவை. அவை அங்கே செயல்பட்டுக் கொண்டிருப்பதால் மனிதர்கள் இரண்டாந்தரமானவர்களாக தரம் தாழ்த்தப்படுகிறார்கள். எனவே ஒவ்வொரு முட்டாளும் அறிவாளிகளாகிறார்கள்.

மழலையர் பள்ளி தொடங்கி பல்கலைக்கழகம் வரையிலான இருபத்தைந்து ஆண்டுக் காலச் சூழ்நிலைகள் யாரையும் முட்டாள் அறிவாளிகளாக தரம்தாழ்த்த வல்லவை. இரண்டாம் தரமானவர்களாக மாற்றவல்லவை. உங்களுக்கு என்ன கற்றுத்தரப்பட்டதோ அதை மறு உற்பத்தி செய்யும் திறனை மக்கள் பெறவேண்டும் என்று கல்விமுறைகள் விரும்புகின்றன. அதுவே அவர்கள் அறிவுக்கான அளவீட்டு அலகு ஆகும்.

அது அவர்களின் கிளிப்பிள்ளை நினைவாற்றலுக்கான அலகு என்றாலும், அவர்களின் அறிவுக்கான அலகு அல்ல. அறிவு என்பது முற்றிலும் வித்தியாசமானது. சொன்னதைத் திருப்பிச் சொல்வது அறிவாகாது. உண்மையில் அது திருப்பிச் சொல்வதை வெறுக்கிறது. வாழ்வைச் சுயமான முறையில் வாழ்வதை அறிவு விரும்புகிறது. தனது காரியத்தைச் சொந்தமாகச் செய்ய எண்ணுகிறது. அறிவு, வாழ்வின் வினோதங்களுக்குள் நுழைய விரும்புகிறது. சூத்திரங்களை அமைக்க விரும்புவதில்லை. எழுதித் தரப்பட்ட தந்திரங்களைப் பிரயோகிக்க நினைப்பதில்லை. அறிவு என்பது எப்போதும் நிஜமானது.

நிஜமான சிந்தனையுள்ள மனிதர்கள் தங்கியிருக்கப் பல்கலைக் கழகங்கள் அனுமதி தருவதில்லை. அப்படிப்பட்டவர்களைக் களையெடுத்து அகற்றிவிடுகிறார்கள். நிஜத்தன்மையை அழிப்பதே

அவர்களின் முழுமுயற்சியாக இருக்கிறது. காரணம், தனித்துவமான மனிதர்கள் சமூகத்திற்கு இடையூறு ஏற்படுத்துகிறார்கள். அவர்களை எளிதாக ஏமாற்ற முடியாது. அவர்களை எளிதாக குமாஸ்தாவாகவோ, துணை ஆட்சியாளராகவோ, புகைவண்டி நிலைய அதிகாரியாகவோ பள்ளி ஆசிரியராகவோ மாற்றிவிட முடியாது. திறமையாக வேலை செய்யும் இயந்திரமாக அவர்களை எளிதில் மாற்றிவிட முடியாது. தங்கள் உரிமையை உறுதிப்படுத்திக் கொள்வார்கள். வாழ்வை பழைய வடிவில் வாழ முயற்சிக்கமாட்டார்கள். தங்கள் நுண்ணறிவின் துணையுடன் வாழ்வார்கள்.

இசையின்மீது விருப்பம் உள்ள ஒருவன் பிச்சைக்காரனாக இருந்தாலும், இசையமைப்பாளனாக வாழ்ந்து பார்க்கும் பிடிவாதம் அவனிடம் இருக்கும். அவனுக்கு பிரதமராகும் வாய்ப்பு கிடைத்தாலும், பிச்சைக்காரனாக வாழ்ந்து கருவியை இசைத்துக் கொண்டிருக்கவே ஆசைப்படுவான். அதுதான் தனித்துவமான அறிவு. உங்களுடைய ஒளியில் நீங்கள் வாழவிரும்பினால், உங்கள் நுண்ணறிவுப்படி வாழ விரும்பினால், உங்கள் அகக் குரலின் வழிகாட்டல்படி வாழ விரும்பினால், நீங்கள் நிறைவை, பேரின்பத்தை எட்டலாம்.

பிரதமராவதற்கு அறிவு தேவையில்லை. நீங்கள் அறிவுடன் இருந்தால் பிரதமராக முடியாது. அறிவோடு இருக்கும்போது, பிரதமராக இருக்க யார்தான் விரும்புவார்கள்? அசிங்கமான விளையாட்டில் இறங்க யார்தான் விரும்புவார்கள்? கவியாகவோ, ஓவியராகவோ, நடனக் கலைஞராகவோ மாறவிரும்பலாம். அரசியல்வாதியாக யார் விரும்புவார்கள்? அறிவுள்ள மனிதர் விரும்பமாட்டார். யார் ஒருவர் காட்டுமிராண்டித்தனம் கொண்டவரோ, யார் ஒருவர் வன்முறையை ரசிக்கிறாரோ, யார் ஒருவர் மற்றவர்மீது ஆதிக்கம் செலுத்த விரும்புகிறாரோ அவரே அரசியல்வாதியாக விரும்புவார்.

பல்கலைக்கழகங்கள் புத்திசாலித்தனத்தை அழிக்கின்றன. உங்கள் கல்வி அறிவைப் பெருமளவு அழிப்பதாக அது இருக்கிறது. அது சமூகத்திற்குச் சேவை செய்கிறது. சமூகம் அசாதாரண நிலையில் இருந்து வருகிறது. மூவாயிரம் ஆண்டுகளில் ஐயாயிரம் யுத்தங்கள் நடந்திருக்கின்றன. சமூகம் ஆரோக்கியமாக இருக்கிறது என்று உங்களால் சொல்ல முடியுமா?.... இந்த சமூகம் அறிவுத் தெளிவுடன் இருக்கிறதா?

மனிதன் எப்போதும் கொலை செய்ய அல்லது தற்கொலை செய்துகொள்ளத் தயாராக இருக்கிறான். இது என்ன வகையான

சமூகம்? மனோதத்துவ சிகிச்சையும், மனோவியல் ஆய்வுகளும் மனிதர்களை அதற்கு இசைந்து போகும்படி செய்ய முயற்சிக்கின்றன. அனுசரித்துப் போகாத மனிதர்களை, மக்கள் இயல்புக்கு மாறான வர்கள் என்று குறிப்பிடுகிறார்கள். அதனால்தான் மனோதத்துவ நிபுணர்கள் ஏசுவை இயல்புக்கு மாறானவர் என்று கூறுகிறார்கள். அவரை மனநோயாளி என்கிறார்கள். ஏசு மன நோயாளியாம்! ஏசுவைக் கொன்ற யூத மதபோதகர்கள் ஆரோக்கியமான மனநிலை பெற்றவர்களாம். போன்டியஸ் பிலாத்து ஆரோக்கியமானவராம்.

ஏசு மனநோயாளி என்றால், புத்தரும் நோயாளிதான். மகா வீரரும் மனநோயாளி. பதஞ்சலி, பிதாகோரஸ், லாவோட்ஸு, ஜோராதிஸ்திரர் போன்ற எல்லோரும் மனநோயாளிகள்தான். சாக்ரட்டீஸ் ஒரு மனநோயாளி. அவர் விஷம் அருந்திச் சாகவேண்டும் என்று முடிவுசெய்த நீதிபதிகள் ஆரோக்கியமான மனநிலை கொண்டவர்கள்.

இந்த முழு உலகமும் ஒரு பைத்தியக்கார விடுதியாக இருக்கிறது, டாக்டர் மாலிக். டெல்லியில் டாக்டர் மாலிக் வசிக் கிறார். டெல்லி எல்லா வகையான மனநோயாளிகளையும் ஈர்க்கிறது என்று அவர் அறிவார்.

நோயுற்று இருப்பவர் யார்? ஆரோக்கியம் பற்றி அறியாதவரை நீங்கள் நோயுற்ற நிலை என்று முடிவுசெய்து எப்படி விவரிக்க முடியும்? சிக்மெண்ட் ஃபிராய்டு நோயுற்ற மக்களைப் பற்றி மட்டுமே ஆராய்ந்தார். அதனால் ஆரோக்கியத்தைத் தவறவிட்டு விட்டார். நோயுற்ற மனிதர்கள்பற்றி ஆராயவேண்டும். நோய் எப்போதும் வெளிப்புறத்தில் ஏற்படுகிறது. நலமாக இருக்கும் மனிதர்கள்பற்றி ஆய்வுநடத்தப்படுவதில்லை. ஆரோக்கியம் மையத்தில் ஏற்படுகிறது. அது உங்கள் உடல்வரை எழுகிறது. நோயுற்ற நிலை மேலோட்டமானது. ஆரோக்கியம் ஆழமானது. சிக்மெண்ட் ஃபிராய்டால் ஒரு புத்தரை ஆராயமுடியாது. எந்த நோய்க்குறிகளையும் அவரால் கண்டறிய முடியாது.

நீங்கள் மருத்துவரிடம் சென்று "ஆரோக்கியம் என்பதன் விளக்கம் என்ன?" என்று கேட்கலாம். எந்த மருத்துவரும் அதற்கு பதில் சொல்ல முடியாது என்று அறியும்போது வியந்து போவீர்கள். கடைசியாக அவர், "மனிதன் நோயற்று இருக்கும் போது அவன் ஆரோக்கியமாகக் காணப்படுகிறான்," என்று கூறலாம். ஆனால் அது எப்படிப்பட்ட விளக்கம்? ஆரோக்கியம் என்பது நேர்மறையான

விஷயம். ஆனால் அதை எதிர்மறையில் விளக்குகிறீர்கள். நோயை அவர்கள் விளக்கலாம். அவர்களால் புற்றுநோயை விளக்க முடியும். காசநோயை விளக்கமுடியும். எல்லாவிதமான நோய்களையும் விளக்கமுடியும். லட்சக்கணக்கான நோய்களை விளக்கமுடியும். ஆனால் ஒரு ஒற்றைக் காரியம், ஆரோக்கியம். விளக்கப்படாமல் எஞ்சி அது நிற்கிறது. அதுகுறித்து ஆய்வுசெய்யப்படவில்லை.

மனோதத்துவம் உங்களிடம் வேரோடிப் போகாமல் இருந் திருந்தால் நீங்கள் முழுமையும், புனிதமும் பெற்றிருப்பீர்கள். ஞானம் பெற்றவராக, எச்சரிக்கையுள்ளவராக, விழிப்புணர்வு பெற்ற வராக, எல்லாவித அடையாளங்களையும் வெற்றிகொண்டவராக மாறுவீர்கள். தூய்மையான உணர்வு கொண்டவராவீர்கள்... மனோ வியல் தனது வழிமுறைகளை மாற்றிக்கொள்ள வேண்டும். பிறகு அது உடற்கூறு சாஸ்திரம், இயற்பியல், வேதியியல், இயற்கை அறிவியல் போன்றவற்றை காப்பியடிக்க வேண்டியதில்லை. பிறகு அது இலக்கியம், கவிதை, இசை போன்றவற்றிலிருந்து நிறையக் கற்றுக்கொள்ள வேண்டும். அதன் பிறகு அது அறிவியலை நெருங்கிச்செல்வதற்குப் பதிலாக கலைகளின் பக்கம் செல்ல வேண்டும்.

சிக்மெண்ட் ஃபிராய்டு அடிப்படையில் ஒரு உடல்நோய் மருத்துவர். அதுதான் துரதிருஷ்டம். அவர் மனோதத்துவ அறிவியல் கருத்தை உருவாக்கினார். அது மருத்துவ அறிவியல் கருத்தாக அமைந்துவிட்டது. அவர் நோயுற்ற மனிதர்களை ஆராயத் தொடங் கினார். நோய்நிலையை ஆதாரமாகக் கொண்டே அவரது புரிதல்கள் அமைந்துவிட்டன. நீங்கள் நோயுற்றவர்களுக்கு வைத்தியம் செய்தால், நோயாளிகள்தான் உங்களிடம் வருவார்கள். மெல்ல மெல்ல நீங்கள் மனிதர்கள்பற்றி அறிந்துகொள்வது நோயாளி களிடமிருந்து அறிந்ததாகவே இருக்கும். அதுவே மனிதர்கள் பற்றிய உங்கள் புரிதலாக அமைகிறது.

அதனால்தான் எப்போதெல்லாம் ஃபிராய்டு மனிதர்கள் பற்றிப் பேசுகிறாரோ அதெல்லாம் தவறாகவே இருக்கிறன. அவை எல்லாம் நோயுற்றவர்கள் பற்றியவை. அவை மனிதர்களைப் பற்றியவை அல்ல. அவை மனித சமுதாயம் பற்றியவை அல்ல. அவை உண்மையான மனிதரைப் பற்றியவை அல்ல. நோயுற்ற மனிதரைப் பற்றியவை.

உதாரணமாக நீங்கள் பார்வையற்ற மனிதர்கள் பற்றி ஆராய்நது விட்டு, மனிதனுக்கு கண் கிடையாது முடிவு செய்தால் அது என்ன

விதமான புரிதல்? அவை நிஜமான மனிதனைப் பற்றிய செய்தி அல்ல. குருடனைப் பற்றியவை.

மனோதத்துவ சிகிச்சையாளர்கள் நோயுற்ற மக்களை மட்டுமே சந்திக்கிறார்கள். பிறகு மனிதர்களைப் பற்றி முடிவெடுக்கிறார்கள். மனிதர்களைப் பற்றி விளக்கத் தொடங்குகிறார்கள். அது அவர்களின் எல்லை மீறிய செயலாகும். முழுமை நிலை குறித்து நீங்கள் முதலில் புரிந்து கொள்ள வேண்டும். நோயுற்றவர் - ஆரோக்கியமானவர் என்ற இருவர்பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டும். பூரண ஆரோக்கியத்துடன் இருப்பவரை அளவுகோலாக எடுத்துக் கொள்ள வேண்டும். அவரே இறுதியான விளக்கமாக இருக்கவேண்டும். மனோதத்துவம் புத்தர்களின் மனோதத்துவமாக மாறவேண்டும். அதன்பிறகுதான் அது நிஜமானதாக, நம்பகமானதாக அமையும்.

இங்கு எனது முயற்சி மனோவியல் ஆய்வாளர், மனோதத்துவ சிகிச்சையாளர்கள் சார்ந்தது அல்ல. நான் இங்கு நோயுற்றவர்களுக்குச் சிகிச்சை அளிப்பதில்லை. உங்களுக்குள் இருக்கும் ஆரோக்கிய நிலையை வெளிப்படுத்தும் முயற்சியை இங்கு நான் செய்கிறேன். உங்களுக்குச் சிகிச்சை தருவதில் எனக்கு ஆர்வமில்லை. உங்களுக்கு விடுதலை தருவதில் ஆர்வம் காட்டுகிறேன்.

நீங்கள் என்னிடம், "குறிப்பிட்ட ஒரு மனநிலை பாதிப்புக்கு ஏற்ற குறிப்பிட்ட ஒரு தியான முறை உண்டா?" என்று கேட்பீர்கள். அப்படி எதுவும் இல்லை. தியானம் அப்படி எந்த உதவியும் செய்யாது என்று அர்த்தம் அல்ல. அது உதவும். அது தற்செயலான நிகழ்வாகவே இருக்கும். அது தியானத்தின் துணைத் தயாரிப்பாக இருக்கும்.

இங்கு எனது பிரதான முயற்சி புத்தர்களை உருவாக்குவதே ஆகும். அவர்கள் முழுமைபெற்ற மனிதர்கள். நோயாளிகளுக்கு நான் இங்கு சிகிச்சை தருவதில்லை. ஆனாலும் சில நோயாளிகள் வருகிறார்கள். அவர்களுக்கு உதவி அளிக்கப்படுகிறது. இங்கு நான் அவ்வாறு செய்வதை எனது நோக்கமாகக் கொண்டிருக்கவில்லை. இது ஒரு சிகிச்சை நிலையம் அல்ல. ஆன்மீகக் கூட்டமைப்பு. ஆனால் சிகிச்சை தருவதும் இங்கு நடக்கிறது. பொதுவாக அது நோயுற்றவர் களுக்கானது அல்ல. எனது பார்வையில் சமூகம் முழுவதும் நோயுற்றுக் கிடக்கிறது. அசாதாரண நிலையில் இருக்கிறது.

இங்கு நடத்தப்படும் சிகிச்சைகள் குறிப்பிட்ட எந்த ஒரு வியாதிக்கானவை அல்ல. இயல்பான மனிதர்கள் எனப்படுவோரை

மேலும் இயல்பானவர்களாக மாற்ற அவை உதவுகின்றன. ஒவ்வொரு மனிதனும் நோய்பீடித்த மனிதர்களால் வளர்க்கப்படு கிறான் என்பதாக நான் பார்க்கிறேன். பெற்றோர், ஆசிரியர்கள் போன்றவர்கள் அசாதாரண நிலையில், நோயுற்று இருக்கிறார்கள். தங்கள் நோயைக் குழந்தைகளுக்கு அளிக்கிறார்கள். தனக்கு என்ன அளிக்கப்படுகிறது என்ற விழிப்புணர்வு ஒருவருக்கு இல்லாதவரை ஒருவர் துணிவு கொள்ளாதவரை, சூழ்நிலைகளை உதறாதவரை இயல்பான மனிதராக மாறமுடியாது.

இயல்பான மனிதர்கள் எனப்படும் சாதாரண மனிதர்களுக்கு உதவிசெய்வதற்கு இங்கு அறுபது சிகிச்சையளிக்கும் குழுக்கள் உள்ளன. அவர்கள் இயல்பாக இல்லை என்ற விழிப்புணர்வுதான் இயல்புநிலைக்குச் செல்வதற்கான முதல்படியாகும். நீங்கள் இயல்பாக இல்லை என்று ஒருதடவை புரிந்துகொண்டால், விஷயங்கள் மாறத்தொடங்கிவிடும். உயர்ந்த விழிப்புணர்வு உங்களிடம் தலையெடுக்கும். ஏதாவது ஒன்றைச் செய்யவேண்டும். உடனே செய்யவேண்டும்.

இந்து, கிறிஸ்தவர், முகமதியர், கம்யூனிஸ்ட் என்ற நம்பிக்கை சார்ந்த பழக்கவழக்கங்களை உதற மக்களுக்கு நாங்கள் உதவி செய்கிறோம். பழக்கம் சார்ந்த அடிமைத்தனங்கள் எல்லாவற்றையும் உதறித்தள்ள மக்களுக்கு உதவுகிறோம். பழக்கச் சூழல்களுக்கு அடிமைப்படாத ஒருவர்தான் இயல்பான மனிதராகவும், இயற்கை யானவராகவும் இருக்க முடியும். பழக்கச் சூழல்கள் என்பவை தக்க வைத்துக் கொள்ளப்படுபவை. எனவே நோயுற்றவர்கள் எனப்படு வோருக்கு உதவ நாங்கள் விருப்பம் கொள்வதில்லை. இயல்பாக இருக்கும் நபர்களுக்கு உதவி செய்யவே நாங்கள் ஆர்வம் காட்டு கிறோம். சில வேளைகளில் நோயுற்றவர்களும் வந்து பலன் பெறுகிறார்கள். அவை வெறும் விளிம்புநிலை நிகழ்வுகளாகும்.

எனவே, எந்தக் குறிப்பிட்ட மனநோய்க்கு எந்த தியானம் பலன் தரும் என்று என்னால் கூற முடியாது. ஒவ்வொரு தியானமும் ஏதோ ஒரு வகையில் உதவுகிறது. அடிப்படையில் எல்லா தியான உத்தி களும் அக அமைதி என்ற விஷயத்தை நோக்கியே நகர வைக்கின்றன. வழிமுறை வேண்டுமானால் செயல்வேகம் தரலாம், மந்தமாக இருக்கலாம். அது பிரச்சினை இல்லை. ஆனால் இலக்கு ஒன்று தான். அது சூஃபி வழிமுறையாக இருக்கலாம், ஜென் வழிமுறை யாக இருக்கலாம். எப்படியிருந்தாலும் இலக்கு ஒன்றுதான். உங்களை எப்படி ஆழ்ந்த அமைதிக்குக் கொண்டு செல்வது, எப்படி

எண்ணங்களை மறையச் செய்வது, கண்ணாடியாக இருந்து, எதிரில் இருப்பதைப் பிரதிபலிக்க வைப்பது எப்படி என்பதுதான் இலக்கு ஆகும்.

கடவுள் என்பதற்கு எனது விளக்கம், நிகழ்காலத்துடன் ஒன்றியிருப்பதாகும். நிகழ்காலத்தைக் கண்டறிந்துவிட்டால், அதனுடன் இசைந்து போக ஆரம்பித்து விடுவீர்கள். உடல்நலம் தலையெடுக்க துவங்கும். அற்புதமான அழகுபடைத்த பிரபஞ்சத்தின் ஒரு அங்கமாக மாறிவிடுகிறீர்கள்.

டாக்டர் மாலிக், நீங்களும் உங்கள் நண்பர்களும் இங்கு வந்தால், அவர்கள் இதை கவனிக்கலாம். எந்த வகை நோய்க்கு எந்த தியானம் பயன்படுகிறது, எப்படி அதிகப் பலன் தருகிறது என்று பார்த்தறியலாம்.

மனோவியல் ஆய்வு, மனோவியல் சிகிச்சை போன்றவை நோயாளிகளுக்கு உதவுகின்றன. ஆன்மீகம் ஏற்கனவே நலமாக இருக்கும் மக்களுக்கு உதவுகிறது. ஆரோக்கியத்தின் சிகரத்தைக் காட்ட ஆரோக்கிய எவரெஸ்ட்டை உதவுகின்றன. இதையே ஆபிரஹாம் மாஸ்லோ 'உச்சநிலை அனுபவம்' என்று கூறினார். அந்த உச்சநிலை அனுபவம் ஒவ்வொரு மனிதனுக்கும் உள்ள பிறப்புரிமை. நீங்கள் அந்த அனுபவத்தைப் பெறவில்லை என்றால், மதிப்புமிக்க ஒன்றை இழந்துவிட்டதாக அர்த்தம்.

ஆனால் ஆன்மீகம் இன்னும் ஒருபடி மேலே செல்கிறது. ஆபிரஹாம் மாஸ்லோ, சமூக மனோவியலாளர்களையும் கடந்து அப்பால் செல்கிறது. அந்த உச்சநிலை அனுபவம் என்பது பெரிய விஷயம் அல்ல. உச்சநிலை அனுபவம் வரும், போகும். எப்போதும் அந்த உச்சநிலையில் நீங்கள் தங்கியிருக்க முடியாது. நீங்கள் ஆழமான உடலுறவு அனுபவம்மூலம் உச்சத்தை எட்டமுடியும். அதை எட்டும் அந்த கணத்தில் அதிலிருந்து கீழே இறங்கவும் துவங்கி விடுகிறீர்கள். உச்சத்தில் தங்கியிருக்க உங்களால் முடியாது. தங்க இடமில்லை.

எல்லா உச்சநிலைகளும் சிஸிபஸ் என்ற பழங்காலப் புராணக் கதையைத் தழுவித் திரும்பத் திரும்பக் கூறப்படுகின்றன. அவன் தெய்வங்களால் தண்டிக்கப்பட்டான். காரணம், அவன் கடவுள்களுக்கு எதிராகக் கலகம் செய்தான். பெரிய பாறை ஒன்றைக் குன்றின் உச்சிக்குச் சுமந்து செல்லுமாறு பணிக்கப்பட்டான். பாறை பெரியதாக இருந்தது. குன்றும் செங்குத்தாக அமைந்திருந்தது.

குன்றின் உச்சியை அவன் அடைந்த சமயத்தில் தவறிக் கீழே விழுந்து அடிவாரத்துக்கு வந்துசேர்ந்துவிட்டான்.

எல்லா மனிதர்கள் கதையும் இதுதான். உச்சியில் உங்களால் தங்கியிருக்க முடியாது. நீங்கள் பயணம் மேற்கொள்கிறீர்கள். உச்சியை அடைவதற்கான நீண்ட பயணம் அது. உச்சியை அடைந்ததும் பயணம் முடிந்துவிடும். உச்சி பற்றிய விழிப்புணர்வு ஏற்பட்ட பிறகு எல்லாம் முடிந்தது. பிறகு ஒன்றுமில்லை. கீழே இறங்கத் தொடங்குகிறீர்கள். அங்கே தங்கியிருக்க இடமில்லை.

ஆன்மீகம் உச்சிநிலை அனுபவத்தை மட்டும் தருவதுடன் நின்று விடுவதில்லை. உச்சிநிலை அனுபவம் துவக்கநிலையில் இருப்பவர்களுக்கு மட்டுமானது. அழகான அனுபவத்தை வழங்குவதுடன் மட்டும் ஆன்மீகம் நின்று விடுவதில்லை. முழுமையான உச்சபட்ச ஆனந்த விழிப்பு நிலையை அளிக்கிறது. உச்சநிலை அனுபவத்தை மட்டுமே, உச்சநிலை இன்பத்தைமட்டுமே அது தருவதில்லை. ஆனந்த விழிப்புநிலையை அளிக்கிறது. எனவே நீங்கள் இருபத்து நான்கு மணிநேரமும் ஆனந்த விழிப்புநிலையில் இருக்கிறீர்கள். உங்கள் முழு வாழ்க்கையும், கணத்துக்குக் கணம் கொண்டாட்டமாக மாறுகிறது.

அந்த ஆன்மீகத்தை உங்களுக்கு அளிப்பதே எனது முயற்சியாகும். மக்களுக்கு நான் முதலில் உச்சநிலை அனுபவத்தை அளிக்கிறேன். உச்சியில் தங்கியிருக்கும் ஆசை அவர்களுக்கு எழுகிறது. யாராலும் உச்சியில் தங்கமுடியாது. ஆனந்த விழிப்பு நிலையை அடைவது எப்படி என்ற அடுத்த முயற்சி உங்களிடம் துவங்குகிறது. உச்சம் என்பது அனுபவம். அது வரும், போகும். ஆனந்த விழிப்புநிலை உங்களை மலர்ச்சியடையச் செய்யும். அது மறுபிறவி. ஆனால் உச்சநிலை பல நோயாளிகளுக்கு உதவி செய்திருக்கிறது. நான் அதை ஆதரிக்கவில்லை. ஆனால் அது உதவவே செய்கிறது.

டாக்டர் மாலிக், நீங்களும் உங்கள் நண்பர்களும் இங்கு வருவது மிகவும் சிறப்பானது. வாருங்கள் ஆராயுங்கள். விஞ்ஞான பூர்வமாக ஆராயுங்கள். பங்குகொள்பவராக இருந்து ஆராயுங்கள். என்னவிதமான நோய்களுக்கு தியானம் பயன் தருகிறது என்று கண்டு பிடியுங்கள்.

இங்கு நடந்துகொண்டிருப்பது எனது பணி அல்ல. எனது இலக்கு முற்றிலும் வித்தியாசமானது. விளிம்புநிலையில் வேறு

பல காரியங்களும் நடக்கும். விளிம்புநிலை விஷயங்களில் நீங்கள் ஆர்வம் காட்டினால் அது மிகவும் நல்லது. இங்கு நடந்து வரும் விஷயங்கள் யாருக்காவது உதவிகரமாக இருந்தால் நான் மகிழ்ச்சி யடைவேன்.

**கடைசி கேள்வி**

**ஓஷோ,**

**வாழ்க்கை ஏன் மிகவும் சலிப்பூட்டுவதாக உள்ளது?**

வாழ்க்கை சலிப்பூட்டுவதாகவா இருக்கிறது? ஐயா, நீங்கள் என்ன பேசுகிறீர்கள்? நீங்கள் ஒருவித உயிரற்ற வாழ்க்கை வாழ் கிறீர்கள். வாழ்க்கை சலிப்பூட்டுவதாக இருக்கவில்லை. நீங்கள் உயிரற்றுப் போய்விட்டீர்கள்! அதனால் உங்கள் உணர்வு சலிப்பூட்டு வதாக அமைந்திருக்கிறது. பொறுப்பை உங்கள் தோள்களில் சுமப்பதற்குப்பதிலாக அதை வாழ்வின்மீது சுமத்திவிட்டீர்கள். இவ்விதம்தான் மனிதன் தொடர்ந்து விளையாடிக் கொண்டிருக் கிறான். எப்போதும் பொறுப்பு பிறர்மீது சுமத்தப்படுகிறது. எப்போதும் ஒரு பலியாடு தேடப்படுகிறது. அது மிகவும் பொறுப் பற்ற செயல். பொறுப்பற்றவர் ஒருபோதும் தன்னை மாற்றிக் கொள்ளமாட்டார்.

வாழ்க்கை சலிப்பூட்டுகிறது என்று ஒருபோதும் சொல்லா தீர்கள். வாழ்வது எப்படியென்று நீங்கள் அறிந்து கொள்ளவில்லை என்பதை உணருங்கள். தவறான வழியில் வாழ்ந்துகொண்டிருக் கிறீர்கள். எதிர்மறைத் திசையில் வாழ்ந்துகொண்டிருக்கிறீர்கள். குறைந்தபட்ச வாழ்க்கை வாழ்கிறீர்கள். ஆர்வமற்ற வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். அதனால் அது சலிப்பூட்டுகிறது.

வாழ்க்கை நம்பமுடியாத அளவுக்கு இன்ப வெள்ளம் நிரம்பியது. அதை நம்பிக்கையோடு வாழவேண்டும். அப்போது தான் அதிகபட்ச அளவில் வாழ முடியும். சலிப்பூட்டும் வகையில் வாழக்கூடாது. நீங்கள் துடிப்புடன், செயல்வேகத்துடன், உயிரோட் டத்துடன் வாழவேண்டும். ஆர்வம் உங்கள் வாழ்வில் தவறிப் போகிறது. அதன் பிறகு அது சலிப்பூட்டுவதாக உள்ளது. அதற்கு நீங்கள்தான் காரணம். வாழ்க்கை காரணமல்ல.

எந்த மிருகத்துக்கும் சலிப்பு ஏற்படுவதில்லை. எந்தப் பறவைக்கும் சலிப்பு தோன்றுவதில்லை. மனிதனைத் தவிர,

மரங்கள், நதிகள், மலைகள், நட்சத்திரங்கள் போன்ற எவற்றுக்கும் சலிப்பு ஏற்படுவதில்லை. சலிப்பு அடையும் குணம் ஒரு சாபமாக மாறவேண்டிய அவசியமில்லை. அது மாறுவேடத்தில் வரும் ஆசிர்வாதம். மனிதன் சலிப்பு, ஆனந்தம் போன்றவற்றில் விரும்பியதைத் தேர்வுசெய்யும் சுதந்திரம் பெற்றிருக்கிறான் என்று அது கூறுகிறது. ஆனந்தம் அதனுள்ளே வைக்கப்பட்டுள்ளது. பறவைகள் குரல் எழுப்புகின்றன, இசைக்கின்றன. மரங்கள் மலர்கின்றன. நட்சத்திரங்கள் மின்னுகின்றன. அவை எல்லாம் அதனுள்ளே அமைந்திருக்கின்றன.

மனிதனுக்குத் தேர்வுசெய்யும் வாய்ப்பு உள்ளது. அது இயற்கையின் மிகப்பெரிய பரிசு. மனிதன் தேர்வு செய்யும் சுதந்திரம் பெற்றிருக்கிறான். நன்றாக நினைவில் கொள்ளுங்கள். சலிப்பூட்டும் ஒரு வாழ்வைத் தேர்வுசெய்தால் அதற்கு நீங்களே பொறுப்பு. ஆனந்தம் தரும் வாழ்வையும் நீங்கள் தேர்வுசெய்யலாம்.

நான் இரண்டு விதமாகவும் வாழ்கிறேன். அதனால் அது பற்றி என்னால் ஆதாரப்பூர்வமாகப் பேசமுடியும். பல பிறவிகளில் நான் உங்களைப் போலவே வாழ்ந்தேன். நானும் சலிப்படைந்து போனேன். இப்போது பறவைகள், மரங்கள் போல ஆனந்த வாழ்வு வாழ்கிறேன். ஒரே ஒரு வித்தியாசம். இது எனது தேர்வு. எனது சுதந்திரம். அந்த சுதந்திரத்தினால் நீங்கள் ஆனந்தம் அடைந்தால் அந்த ஆனந்தம் ஆழமானது. பறவைகள், மிருகங்களுக்கு இல்லாத சிறப்பை அது பெறுகிறது. அவற்றின் ஆனந்தம் அவற்றின்மீது திணிக்கப்பட்டதாகும்.

சுதந்திரம் உங்கள்மீது திணிக்கப்பட்டால் அது எல்லா அர்த்தங்களையும் இழந்துவிடுகிறது என்பதை நினைவில் வையுங்கள். நீங்கள் சொர்க்கத்தில் வாழவேண்டும் என்று வற்புறுத்தப்பட்டால், அங்கிருந்து வெளியேறக்கூடாது என்று வற்புறுத்தப்பட்டால், வாசலில் உருவிய வாளுடன் ஆட்கள் காவல் நின்றால், உங்களுக்கு சலிப்பு ஏற்பட்டுவிடும்.

அதுதான் ஆதாம் ஏவாளுக்கு ஏற்பட்டது. சொர்க்கம் அவர்களுக்குச் சலிப்பைத் தந்தது. அவர்கள் புதிதாக ஏதாவது செய்ய விரும்பினார்கள். சலிப்பு உண்டான காரணத்தால் அறிவு விருட்சத்தின் கனியைச் சாப்பிட்டார்கள். சலிப்பு உணர்வு ஏற்படுவதை உணர்ந்தார்கள். எல்லாம் நன்றாகவே இருந்தன. எல்லாம் அழகாக இருந்தன. ஆனால் அவை அவர்கள்மீது திணிக்கப்பட்டிருந்தன. அவர்களால் அவை தேர்வுசெய்யப்படவில்லை.

ஒருவர் ஒன்றைத் தேர்வு செய்தால், ஒரு சிறையை அவர் தேர்வு செய்தால், அங்கும் அவர் மகிழ்ச்சியாக இருப்பார். சுதந்திரம் ஒரு பரிசு. சுதந்திரமான மனிதருக்கு அது பரிசு. அது அவரின் பெருமை யாகிறது. ஆனால் நாம் அதை துயரமாக மாற்றிவிடுகிறோம். காரணம் நாம் சலிப்பூட்டும் வாழ்வைத் தேர்வுசெய்கிறோம். ஏன் நாம் எப்போதும் சலிப்பூட்டும் வாழ்வைத் தேர்ந்தெடுக்கிறோம்? காரணம், சலிப்பூட்டும் வாழ்வு பாதுகாப்பானது, சௌகரியமானது. நீங்கள் நிஜமான விருப்பத்துடன் கூடிய வாழ்வு வாழவிரும்பினால் பாதுகாப்பற்று வாழவேண்டியிருக்கும். ஆபத்தில் வாழ வேண்டி யிருக்கும். எப்போதும் ஆபத்தில் இருக்க வேண்டியிருக்கும். பல அசௌகரியங்களுக்கு நடுவே நீங்கள் வாழவேண்டும். நீங்கள் சௌகரியமாக வாழமுடியாது. சுகமாக வாழமுடியாது. நீங்கள் எப்போதும் எல்லாவித ஆபத்துகளையும் எதிர்கொள்ளத் தயாராக இருக்க வேண்டும்.

அதனால்தான் மக்கள் சலிப்பூட்டும் வாழ்வை வாழ்கிறார்கள். விருப்பமான வாழ்வை வாழ்வதைக் காட்டிலும், உச்சபட்ச வாழ்வை வாழ்வதைக் காட்டிலும் சலிப்பைத் தேர்வு செய்கிறார்கள். உச்சபட்ச வாழ்வு என்றால், உச்சபட்சமான ஆபத்துகளையும் எதிர்கொள்ள வேண்டும். வாழ்க்கை ஒவ்வொரு கணமும் பெருவியப்பு அளிக்கும். நீங்கள் தெளிவான பார்வையுடன், விருப்பத்துடன், அறிவுபூர்வ மாக, ஆபத்தை எதிர்கொண்டாக வேண்டும். அதையே ஃபிரிட்ரிக் நியாட்சே "ஆபத்தை எதிர்கொண்டு வாழுங்கள்" என்று கூறுகிறார்.

சந்நியாசிகள்பற்றிக் குறிப்பிடும்போது நான் இதையே கூறுகிறேன்... ஆபத்தை எதிர்கொண்டு வாழ்கிறார்கள். கணத்துக்குக் கணம் வாழ்கிறார்கள். என்ன நிகழ்கிறது என்ற விழிப்புணர்வுடன் வாழ்கிறார்கள். கடந்த காலத்தில் வாழவில்லை. மாறாக, நிகழ் காலத்தில் வாழ்கிறார்கள். ஆபத்தை எதிர்கொள்ளத் தயாராக இருக் கிறார்கள். அதன்பிறகு முற்றிலும் வித்தியாசமான நிலை உங்களைச் சுற்றி ஏற்படுவதைக் காண்பீர்கள். வாழ்க்கை விதவிதமான வடிவங்கள், வர்ணஜாலங்களுடன் ஆழமும், அர்த்தமும் கொள்ளத் துவங்குகிறது. அற்புதமானதாக, போதையூட்டுவதாக அது மாறு கிறது.

கணத்துக்குக் கணம் நீங்கள் வாழும்போது அறிவுபூர்வமாக வாழமுடியாது. காரணம், அறிவு என்பது கடந்தகாலத்திலிருந்து வருகிறது. கணத்துக்குக் கணம் நீங்கள் வாழும்போது கடந்த காலத்தை உதறும்போது, கணத்துக்குக் கணம் கடந்தகாலத்தில்

மரணிக்கும்போது நீங்கள் ஒரு குழந்தைபோல் கபடமற்று வாழ் கிறீர்கள்.

"நீங்கள் குழந்தைகள் போல் வாழ்ந்திருக்காது போனால் எனது கடவுள் ராஜ்ஜியத்துக்குள் உங்களால் நுழைய முடியாது" என்று ஏசு கூறினார். நீங்கள் அறிவுத்திறன் இல்லாது வாழ வேண்டும். பேதைமையுடன் வாழவேண்டும். வியப்போடு வாழவேண்டும். வியப்பூட்டும் விழிகளுடன் வாழவேண்டும். வியப்படையத் தயாராக வாழ வேண்டும்.

வாழ்க்கை ஆச்சரியங்கள் நிறைந்தது! அறிவு என்ற புழுதி கண்களை மறைத்திருப்பதால் ஆச்சரியத்தை உங்களால் கண்டறிய முடியவில்லை. அவை நாலாபுறமும் நடந்து கொண்டுதான் இருக் கின்றன. கணத்துக்குக் கணம் விந்தைகள் நடந்தபடி இருக்கின்றன. வாழ்க்கை விந்தைமயமானது. நீங்கள் எப்படிச் சலிப்படைய முடியும்? வாழ்க்கை இப்படி விந்தையுடன், பல ஆச்சரியங்களுடன், பல யூகிக்கமுடியாத விஷயங்களுடன், பல கோமாளித்தனங் களுடன், பல அசட்டுத்தனங்களுடன் இருக்கும்போது எப்படி சலிப்பூட்டுவதாக இருக்க முடியும்?

இப்படிச் சொல்வதுண்டு...

போதிதர்மர் ஞானம் பெற்றபோது பலநாட்கள் அவரால் சிரிப்பை அடக்கமுடியவில்லை. சிரிப்பை அடக்க முடியாது போனதால் தூங்கவும் முடியவில்லை. எல்லோரும் கவலை கொண் டார்கள். சீடர்களும், நண்பர்களும், "என்ன நடந்தது? ஏன் சிரிப்பை நிறுத்த முடியவில்லை? உங்களுக்குப் பைத்தியம் பிடிக்கிறதா? அல்லது பிடித்துவிட்டதா?" என்று கேட்டார்கள்.

அவர்கள் இப்படிச் சொன்னதும் போதிதர்மர் இன்னும் பலமாகச் சிரிக்கத்தொடங்கினார். நிலத்தில் விழுந்து புரண்டு புரண்டு சிரித்தார். பிறகு மெதுவாக அது அடங்கிவிட்டது. ஆனால் அந்த தன்மை எப்போதும் அவரிடம் நீடித்திருந்தது. சிரிப்பு அவரது அடையாளமாகிவிட்டது.

அவர் சிறிது அமைதிப்பட்டதும், ஞானம் பெற்ற அதிர்வு உள்வாங்கிக் கொள்ளப்பட்ட பிறகு, அந்த மின்னல் அனுபவம் ஜீரணிக்கப்பட்ட பிறகு அவர் கூறினார்: அது கோமாளித்தனமாக இருந்ததால் நான் சிரித்தேன். நான் பெறுவதற்கு முயன்றது ஏற்கனவே என்னிடம் இருந்து வந்தது. நான் அடைய விரும்பியது ஏற்கனவே என்னிடம் இருக்கவே செய்தது. நான் அதை ஒருபோதும் தொலைத்

திருக்கவில்லை. பேரின்பத்தைக் கண்டறிய விரும்பினேன். பேரின்பமே எனது இயல்பாக இருந்து கொண்டிருக்கிறது. சத்திய நிலையைக் கண்டறிய விரும்பினேன். நானே சத்திய நிலையாக இருந்துகொண்டிருக்கிறேன்."

ஏசு கூறும்போது, "நானே பாதையாக இருக்கிறேன் நானே வாயிலாக இருக்கிறேன். நானே சத்தியமாக இருக்கிறேன்" என்றார். அவர் தன்னைப் பற்றி மட்டும் சொல்லவில்லை. "நான்" என்று அவர் சொல்வது நம் எல்லோரையும் தான். யார் ஒருவரும் நானே பாதை யாக இருக்கிறேன், நான் வாயிலாக இருக்கிறேன். நானே சத்தியமாக இருக்கிறேன் என்று கூறலாம். அந்தக் கூற்று ஏசு என்ற தனி மனித ருடையது அல்ல. நான் என்ற உணர்வுள்ள எல்லோருக்கும் பொருந்த கூடியது.

காலங்காலமாகப் பிறவிகள் தோறும் நீங்கள் தேடிக் கொண் டிருப்பது ஏற்கனவே உங்களிடம் இருந்து வருகிறது என்று புரியும் போது எப்படி உங்களால் சிரிக்காமல் இருக்க முடியும்? ஆனால் வெகு சீக்கிரம் நீங்கள் ஒரு போதிதர்மராகிவிட முடியாது. வாழ்க்கை சலிப்பூட்டுவதாக இல்லாதிருக்க வேண்டியுள்ளது. உங்களுக்கு நான் சில கதைகள் சொல்கிறேன்.

முதல் கதை.

மனச்சோர்வுடன் இருந்த ஒருவர் தனது நண்பர் ஜெர்ரி ஜூனியரைச் சந்தித்தார். அந்த நண்பர் மதிநுட்பம் நிறைந்த சிந்தனை யாளர்.

"என்ன பிரச்சினை?" என்று ஜெர்ரி ஜூனியர் கேட்டார்.

"நான் மனமுடைந்து கிடக்கிறேன். எனக்கு மூன்று விதைகள் இருக்கின்றன என்பதை என்னால் ஜீரணித்துக்கொள்ள முடிய வில்லை.

அறிவுக்கூர்மை நிறைந்த ஜெர்ரி, "மூன்று விதைகளா? நாம் இருவரும் சேர்ந்து அதை அதிர்ஷ்டமாக மாற்றலாம்!" என்றார்.

முகமலர்ச்சியுடன் அடுத்த நபர் "எப்படி?" என்று கேட்டார்.

நாம் ஒவ்வொரு மதுச் சாலைக்கும் செல்வோம். மதுச்சாலைப் பணியாளருடன் சேர்ந்துகொண்டு அங்குள்ளவர்களிடம் பந்தயம் வைப்போம். உங்கள் இருவரிடமும் சேர்ந்து ஐந்து விதைகள் இருப்பதாகச் சொல்வோம். அந்தத் திட்டம் பலன் தராது போகாது."

"புறப்படலாம்" என்றார் அந்த மனிதர்.

அவர்கள் ஒரு மதுச்சாலைக்கு முதலில் சென்றனர். ஜெர்ரி ஜூனியர் அங்கிருந்த வேற்று மனிதர்களிடம் அறிமுகம் செய்து கொண்டார். பிறகு இப்படி ஒரு அறிவிப்பு செய்தார். "எனது நண்பருக்கும், இந்த மதுச்சாலைப் பணியாளருக்கும் சேர்த்து மொத்தம் ஐந்து விதைகள் இருக்கின்றன என்று இங்குள்ள எல்லோரிடமும் பந்தயம் வைக்கிறேன்" என்றார்.

பந்தயம் கட்ட கிட்டத்தட்ட எல்லோருமே ஆவலாக ஓடி வந்தார்கள். மதுச்சாலைப் பணியாளர் தலையை அசைப்பதை ஜெர்ரி கண்டார்.

"பந்தயத்தில் கலந்துகொள்ள உங்களுக்கு எதுவும் தடையுண்டா?"

"அப்படி ஒன்றுமில்லை. எனக்கு ஒரே வியப்பு."

"என்ன சொல்கிறீர்கள்?"

"இதுவரை நான் நான்கு விதைகள் உள்ள மனிதனைச் சந்தித்தது இல்லை. எனக்கு ஒரு விதைதான் இருக்கிறது."

இனி இரண்டாவது கதை.

**பா**ரீஸ் நகரில் ஒரு வசந்த காலத்தில் இது நடந்தது. மே மாதம் சூரிய ஒளி பிரகாசமாக இருந்த நாளில், சீனாக்காரன் ஒருவன் சாம்ப்ஸ் எலிஸீஸ் பகுதியில் இருந்து ஒரு விபச்சாரியை அழைத்துக்கொண்டு மெரூஸி ஹோட்டலுக்குச் சென்றான். அவர்கள் ஜன்னல்களைத் திறந்ததும் உள்ளே தென்றல் நுழைந்தது. அனைத்தும் அழகாக இருந்தன. சீனாக்காரன் விபச்சாரியுடன் கட்டிலுக்குச் சென்றான். சற்று நேரம் அவளுடன் உறவுகொண்ட பிறகு "என்னை மன்னித்துவிடு. எனக்குக் களைப்பாக இருக்கிறது" என்று கூறினான்.

அவ்வாறு சொன்ன அவன் ஜன்னல் அருகே சென்று பலமாக மூச்சுவிட்டான். அப்புறம் கட்டிலுக்கு அடியில் சென்று மறுபக்கம் வழியே வெளியே வந்து கட்டிலில் ஏறி மீண்டும் உறவுகொள்ளத் துவங்கினான். சற்று நேரம் கழித்து "என்னை மன்னித்துவிடு. எனக்குக் களைப்பாக இருக்கிறது" என்றான். மறுபடியும் ஜன்னல் அருகே சென்று ஆழ்ந்து மூச்சிழுத்தான். அப்புறம் கட்டிலுக்கு அடியில் சென்று மறுபக்கம் வழியே வந்து உறவு கொண்டான்.

ஆறாவது தடவை இவ்வாறு நடந்தபோது விபச்சாரி மிகவும் சோர்ந்துபோனாள். படுக்கையைவிட்டு எழுந்து, "என்னை மன்னித்து விடு. எனக்குக் களைப்பாக இருக்கிறது" என்றாள்.

ஜன்னல் அருகே பலமாக மூச்சுவிட்டாள். பின்னர் கட்டிலுக்குக் கீழே பார்த்தாள். மீதமிருந்த நான்கு சீனர்கள் அங்கு படுத்திருப்பதைக் கண்டாள்.

இனி மூன்றாவது கதை.

**மு**தியவர் ஒருவர் மா அக்னியூஸின் விபச்சார விடுதிக்குச் சென்று, "கேளுங்கள் மா! வெட்டை நோயுள்ள ஒரு பெண் எனக்கு வேண்டும்" என்றார்.

சரி என்று தலையசைத்த மாது அவரை மேல்மாடியில் இருந்த ஒரு அறைக்கு அனுப்பினாள். பிறகு அவளுக்குப் பிரியான ஒருத்தியை அழைத்தாள். அந்தப் பெண் பெரியவரின் அறைக்குச் சென்று ஆடையை அவிழ்த்தபோது அவர் "உனக்கு வெட்டை நோய் இருக்கிறதா?" என்று வினவினார்.

"வெட்டையா? அது எனக்கு இல்லை" என்றாள்.

பெரியவர் அவளைத் திருப்பி அனுப்பிவிட்டார். விபச்சார விடுதி மாது வேறு பெண்ணிடம், "ஷெர்லி, மாடிக்குச் சென்று உனக்கு பெண் சீக்கு இருப்பதாக அந்தக் கிழவரிடம் சொல்ல வேண்டும். அவருக்கு மகிழ்ச்சி அளிக்க நம்மால் முடிந்ததைச் செய்ய வேண்டும்" என்றாள்.

அதை ஏற்றுக்கொண்ட அப்பெண் மாடிக்குச் சென்றாள். முதியவர் அவளிடம் உனக்கு "வெட்டை நோய் இருக்கிறதா?" என்று கேட்டார். அவள் சிரித்தபடி ஆமாம்! இருக்கிறது" என்றாள்.

"நல்லது. நாம் காரியத்தில் இறங்கலாம்" என்றார்.

இருவரும் படுக்கைக்குச் சென்று பத்து நிமிடம் உறவு கொண்டார்கள். பிறகு இருவரும் அருகருகில் படுத்துக் கொண் டனர். ஷெர்லி என்ற அந்த பெண் "கேளுங்கள் தாத்தா! நான் செய்த குற்றத்தை ஒப்புக்கொள்கிறேன். எனக்கு வெட்டை நோய் கிடையாது" என்றாள்.

கிழவர் புன்னகைத்தார். "இப்போது உனக்கு இருக்கிறது" என்றார்.

இன்று இவ்வளவு போதும்.

# அனைத்துப் புரட்சிகளும் தோற்றுவிட்டன

அத்தியாயம் - 8

## முதல் கேள்வி

**ஓஷோ**

**சமூகத்தின் பழக்கவழக்கங்கள் குறித்து உங்கள் இயக்கம் என்ன கூறுகிறது? அது பொறுப்புகளில் இருந்து தப்பித்துக் கொள்ளும் சுயநலக் கலாச்சாரமா? அல்லது மனித இயல்பை மாற்றுவதன்மூலம் சமூகத்தையும், உலகையும் மாற்ற முடியும் என்று நீங்கள் தெரிவிக்கிறீர்களா?**

இங்கே செயல்பட்டுக் கொண்டிருப்பது ஒரு இயக்கம் அல்ல. அது மாற்றம் சார்ந்தது. அது சமூகத்துடன் தொடர்புடையது அல்ல. முழுமையாகத் தனிமனிதனுடன் சம்பந்தப்பட்டது. புரட்சி என்ற சொல்லுக்கு நிஜமான அர்த்தம் தரும் வகையிலானது.

சமூகத்தையோ உலகத்தையோ மாற்றும் அபிப்பிராயம் கிடையாது. காரணம், சமூகம் என்ற ஒன்று இல்லை. தனி மனிதர்கள் மட்டுமே இருக்கிறார்கள். சமூகம் என்பது ஒரு மாயை. நாம் சமூகத்தின் மீது நம்பிக்கை கொண்டிருந்ததால் எல்லாப் புரட்சிகளும் தோற்றுப்போய் விட்டன. சமூகம் என்ற ஒன்று இருப்பதாக நம்பியதால், மனிதனை மாற்றுவதற்காகச் செய்த முயற்சிகளை எல்லாம்

அது நாசப்படுத்தி விடுகிறது. காரணம், நம்பிக்கை மாயையில் வேரோடிக் கிடக்கிறது.

விஞ்ஞானியிடம் கேட்டுப் பாருங்கள். பருப்பொருள் என்று ஒன்றும் கிடையாது. எல்லாம் எலெக்ட்ரான் என்ற மின்னணுத் துகள்கள் என்பார். பருப்பொருள் என்பது மாயை. மனித உணர்வு களைப் புரிந்துகொண்டவர்கள் பருப்பொருள் ஒரு மாயை என்பது போல, சமூகமும் மாயை என்று அறிந்துகொள்வார்கள். எலெக்ட் ரான்கள் போலவே தனிமனிதர்களும் நிஜமானவர்கள்.

தனிமனிதனுக்கு மாற்றம் தேவைப்படுகிறது. இங்கே நாம் செய்து கொண்டிருப்பவை எல்லாம் முற்றிலும் தனிமனிதர் சார்ந்தவை. சமூகம் சார்ந்தவை அல்ல. அது பொறுப்பிலிருந்து நழுவித் தப்பித்தல் போல் தோன்றலாம். **தப்பித்தல்** என்ற வார்த்தை அதனளவில் தவறு இல்லாதது ஆகும். வீடு தீப்பற்றி எறியும்போது நீங்கள் தப்பியோடுகிறீர்கள். யாரும் அப்போது உங்களைப் பொறுப் பேற்காது நழுவி ஓடுபவர் என்று கூறுவதில்லை. நீங்கள் புத்தி யுள்ளவர் என்றே கூறுவார்கள்.

நாம் தப்பியோடவில்லை. விஷயம் என்ன என்று புரிந்து கொள்ள முயற்சி செய்கிறோம். நாம் பிரச்சினைகளைத் தவிர்க்க வில்லை. அதற்கு எதிராக இருக்கிறோம். சமூகம் தவிர்த்துவிட்ட எல்லாப் பிரச்சினைகளையும் நாம் எதிர்கொள்கிறோம். அடக்கி வைக்க சமூகம் நமக்கு கற்றுத்தந்த எல்லாப் பிரச்சினைகளையும் எதிர்த்துப் போராட முயல்கிறோம்.

மனிதன் விழிப்புணர்வு இல்லாதவனாக இருக்கத் தேவை யில்லை. விழிப்புணர்வு, விழிப்புணர்வின்மை என்ற இரண்டுக்கும் நடுவே பிரிவுபட்டு அடக்கிவைக்கப்பட்டு இருப்பதால் அது நேர்கிறது. உங்கள் சமூகத்தின் மிகப்பெரிய பணி அதுதான். அது மனிதனுக்கு எதிரான சதியாகும். மனிதன் பிரிவுபடும்போது அவன் பலவீனப்படுகிறான். காரணம் அவன் தன்னுடனே சண்டையிடத் துவங்குகிறான். அவன் பிளவுபட்டுப் போகிறான். உண்மை நிகழ்வு சாராத மனக்குழப்பம் கொண்டவனாக மாறுகிறான். பிளவுபட்ட மனிதன் தன்னை அடக்கி ஆள்பவனாக இருக்க முடியாது.

உங்கள் சமூகம் ஒவ்வொருவரும் இவ்விதம்தான் இருக்க வேண்டும் என்று விரும்புகிறது. எஜமானாக இருக்கக் கூடாது. அடிமையாக இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறது. சமூகத் திற்கு அடிமைகள் தேவைப்படுகிறார்கள். சமூகம் என்று நான்

கூறுவது மதவாதிகள், அரசியல்வாதிகள், அதிகார வேட்கை கொண்டவர்கள் போன்றோர் உருவாக்கிய சதியாகும். சமூகம் அதிகார வேட்கை கொண்டவர்களின் சதியாகும். ஆரம்பத்திலேயே மனிதனைப் பிளவுபடுத்தி விடுவது அவர்களின் அடிப்படைத் தந்திர மாகும்.

மனிதர்களை அவர்கள் எவ்வாறு பிளவுபடுத்துகிறார்கள்? உங்கள் முழுமையில் உங்களை அங்கீகரிக்க வேண்டாம் என்று சொல்லித் தரப்படுகிறீர்கள். நிறையத் தவறு உங்களிடம் இருக்கிறது என்று சொல்லி வைக்கப்பட்டிருக்கிறீர்கள். உங்களின் பெரும் பகுதி, உங்கள் முழுமை தவறானது. தவறான பகுதி வெளிப்படாமல் நிராகரிக்கப்பட வேண்டும். தவறான பகுதி அடக்கி வைக்கப்பட வேண்டும். உங்களுக்குள் ஏதாவது ஒன்றை நீங்கள் அடக்கி வைத்தால் ஒரு பிளவு உருவாகிறது. நீங்கள் எல்லாப் பிரச்சினை களை அடக்கி வைக்கிறீர்கள். எரிமலைமீது உட்கார்ந்து கொள் கிறீர்கள். எல்லாம் சரியாக இருப்பதாக நினைக்கிறீர்கள். எல்லாம் சரியாக இருப்பதாக நம்புகிறீர்கள். எதுவும் சரியில்லை என்று சதா உள்ளே ஒன்று தெரிவிக்கிறது. அடியாழத்தில் ஒரு நெருப்பு எரிகிறது. எந்த நிமிடமும் அது பொங்கி வெளிப்படலாம்.

அதன்பின்னர் மக்கள் பித்தர்களாக, மனநோய் பிடித்தவர் களாக மாறுகிறார்கள். மக்கள் தேவையின்றி லட்சக்கணக்கான நோய்களுக்கு ஆட்படுகிறற்கள். அது உரிமை எடுத்துக்கொண்டு பணிபுரிகிறது. முதலாளித்துவ சமுதாயத்துக்குச் சேவை செய்கிறது. பொதுவுடமைச் சமுதாயத்துக்கு சேவை செய்கிறது. அது கத்தோலிக்க தேவாலயங்களுக்குச் சேவைசெய்கிறது. அது இந்து, முகமதிய மதாச்சாரங்களுக்குச் சேவைசெய்கிறது. அதிகாரத்தில் உள்ள எல்லோருக்கும் சேவைசெய்கிறது.

மனிதன் பிளவுபட்டு நடுங்கியபடி, பலவீனமாக, தடுமாறிக் கொண்டிருக்கிறான். தனது உரிமைகளை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ள அவனால் முடியாது. தனது காலில் நிற்க முடியாது. சார்ந்து நிற்க யாராவது ஒருவர் தேவைப்படுகிறார். அவருக்கு முரட்டு எஜமானர் தேவைப்படுகிறார். அந்த எஜமானரை அவர் விரும்புகிறார், தேடி யலைகிறார். அவர் இல்லாமல் வாழமுடியாது. அவரால் அரசாங்கம் இல்லாமல், தலைவர்கள் இல்லாமல் வாழ்ந்திட இயலாது. உங்கள் தலைவர்களும், உங்கள் அரசாங்கமும், உங்கள் தேவாலயங்களும், உங்கள் மதவாதிகளும் என்ன செய்தார்கள் என்று கவனியுங்கள். வரலாற்றைப் பாருங்கள். முழு மனித வரலாறும் இன்றுவரை

மிகவும் மோசமாக இருந்து வருவதைக் காண்பீர்கள். இன்றுவரை மனிதனாக இல்லை.

இங்கு எனது முயற்சி சமூகத்தை மாற்றுவதற்கு அல்ல. மனிதனை மலர்ச்சியுற வைப்பதற்காகும். மனிதன் முழுமைபெற உதவ வேண்டும். தனிமனிதரின் விழிப்பு, விழிப்புணர்வு இல்லாத நிலை என்ற இரண்டுக்கும் இடையே உள்ள இடைவெளியை உதற உதவுதல் வேண்டும். ஒருவர் தன்னை அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டும். உணர்வுகளை அடக்கிவைக்காது இருக்க உதவ வேண்டும். தன்னை நேசிக்கவேண்டும். குறைசொல்லக்கூடாது.

ஒருவர் தன்னைத்தானே நேசிக்கவேண்டும் என்று நான் போதிப்பதால் அது சுயநலக் கலாச்சாரம் என்று பெயரிடுகிறீர்கள். சுயநேசிப்பு பற்றி யாரோ உங்களுக்குத் தவறாகச் சொல்லியிருக் கிறார்கள். "பிறரை நேசியுங்கள். உங்களை நேசிக்காதீர்கள்" என்று சொல்லித் தரப்பட்டிருக்கிறது. உங்களையே நீங்கள் நேசிக்காதபோது மற்றவர்களை எப்படி உங்களால் நேசிக்க முடியும்?

"நீங்கள் உங்களை நேசிப்பதுபோலவே பிறரையும் நேசி யுங்கள்" என்ற ஏசுவின் சிறப்பான கூற்றை யோசித்துப் பாருங்கள்.

நேசம் முதலில் உங்களிடமிருந்து வெளிப்படவேண்டும். இல்லாதுபோனால் யாரையும் உங்களால் நேசிக்கஇயலாது. உங்களுக்கு மிகவும் நெருக்கமாக இருப்பவர் நீங்கள்தான். உங்களை நீங்கள் அயலாரையும் வெறுக்கவே செய்வீர்கள். மதவாதிகளும், தலைவர்களும் சொல்பவை எதுவாக இருந்தாலும் அவை எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தாது. உங்கள் அயலாரை வெறுப்பீர்கள். நீங்கள் சமூகத்தை வெறுப்பீர்கள். பூமியை வெறுப்பீர்கள். காரணம் உங்களை நீங்கள் வெறுக்கிறீர்கள்.

உங்களை நேசியுங்கள். அதிலிருந்து பிறரை நேசித்தல் துளிர்க்கும்.

சுயநலத்தோடு இருங்கள் என்று நான் போதிக்கிறேன். நிஜமான சுயநலத்தில் இருந்துதான் பிறர்நலம் பேணல் பிறக்கிறது. நிஜமான சுயநலவாதி யாருக்கும் எதிராக இருக்கமாட்டார். நிஜமான சுய நலவாதி யாருக்கும் தீங்கு செய்யமாட்டார். பிறருக்குத் தீங்கு செய்ய வேண்டுமானால் முதலில் உங்களுக்குத் தீங்கு செய்துகொள்ள வேண்டும். யாராவது ஒருவர்மீது கோபப்படுவதற்கு முன்னர் உங்கள் மீதே நீங்கள் கோபப்பட்டு கொள்ள வேண்டும். யாராவது

ஒருவர் மீது மூர்க்கம் காட்டுவதற்கு முன்னர் மூச்சுத் திணற வைக்கும் பல கொடுங்கனவுகளைக் கடந்துசெல்ல வேண்டும்.

நிஜமாகவே தன்னை நேசிக்கும் ஒருவர், தன் மீது அபரிமித மான நேசம் கொண்டுள்ள ஒருவர் யாருக்கும் தீங்கு செய்யமாட்டார். காரணம், தனக்கு எந்த தீங்கும் செய்து கொள்ள அவரால் முடியாது.

எனவே ஒருவகையில் நாம் எல்லோரும் பொறுப்பிலிருந்து தழுவித் தப்பித்துக் கொள்பவர்கள்தான். நாம் எதை நிஜமான வாழ்வு என்று கூறுகிறோமோ அது நிஜமான வாழ்வு அல்ல. அது வாழ்வைத் திரித்துக் கூறுதலாகும். வாழ்க்கை என்ற பெயரில் வேறு ஏதோ இருக்கிறது. நாம் நிச்சயம் சுயநலமுள்ளவர்கள்தான். ஏனென்றால், அந்த சுயநலத்தில் இருந்து பிறர் நலம் பேணல் பிறக்கிறது.

தனிமனிதனுக்கு உதவிசெய்தால், தனிமனிதன் ஞானம் பெற்றால், வாழ்வைக் கொண்டாடும்படி தூண்டப்பட்டால், வாழ்வை அனுபவிக்கும்படி தூண்டப்பட்டால் மட்டுமே உலகத்தைச் சுற்றியுள்ள சூழ்நிலையை மாற்ற முடியும். ஆனால் அது நமது நோக்கமல்ல, அது நமது குறிக்கோள் அல்ல. அது அந்த காரியத்தின் தொடர்ச்சியாகும்.

சமூகத்தின் பழக்கவழக்கங்கள் குறித்து உங்கள் இயக்கம் என்ன கூறுகிறது? சமூகம் நோயுற்று இருக்கிறது, சமூகம் கெட்டுப் போயிருக்கிறது என்று அது கூறுகிறது. சமூகத்தை மறுசீரமைக்கச் சாத்தியம் இல்லை என்கிறது. காரணம், சமூகத்தை மறுசீரமைத்தால் அது அந்த பழைய கெட்டுப் போன நிலையின் மேம்பட்ட கெட்ட நிலையாகும். கொஞ்சம் அழகுபடுத்தப்பட்டிருக்கிறது, வர்ணம் பூசப்பட்டிருக்கிறது. ஆனாலும் அதே நோயுற்ற நிலைதான். ஐயாயிரம் வருட வரலாற்றில் சமூகம் பலதடவை சீர்திருத்தப் பட்டிருக்கிறது. அடிப்படையில் எதுவும் மாற்றம் அடையவில்லை. எல்லா வகையிலும் அது அப்படியே இருக்கிறது. அதே நோயுற்ற நிலை, அதே அசிங்கம், அதே சுகவீனம் என்று தொடர்கிறது.

நடந்தவரை போதும்.

அறிவுள்ளவர்கள் எல்லாம் புரட்சிகள் தோற்றுவிட்டன என்று விழிப்புணர்வைப் பெற்றார்கள். எல்லா சமூகப் புரட்சிகளும் தோற்றுப்போய்விட்டன. முற்றிலும் புதிய புரட்சிகள் பற்றிச் சொல்லிக்கொண்டிருக்கும் புத்தர்களை நாம் இதுவரை கவனிக்க வில்லை. புரட்சி தனிமனிதனின் இதயத்தில் இருக்கிறது. காரணம், தனிமனிதன் என்பவன் நிஜமானவன். சமூகம் என்பது வெறும் உறவுமுறைதான்.

உதாரணமாக, நாம் இரண்டாயிரம் பேர் இங்கு அமர்ந்திருக்கிறோம். இதை பொது ஜனங்கள் என்றோ சமூகம் என்றோ எண்ணுகிறீர்கள். சமூகம் என்றால் என்ன? பொதுஜனம் என்றால் என்ன? இங்கு இரண்டாயிரம் தனிமனிதர்கள் உட்கார்ந்திருக்கிறார்கள். நீங்கள் சமூகத்தைக் கண்டதில்லை. பொதுஜனத்துடன் கலந்திருந்தது இல்லை. நீங்கள் சந்திக்கும் தருணங்களில் எல்லாம் மனிதர்களையே சந்திக்கிறீர்கள்.

சமூகம் என்பது வெறும் வார்த்தைதான். மிகவும் ஆபத்தான வார்த்தை. ஆபத்தான வார்த்தைகளைக் கண்டுபிடிப்பதில் மனிதன் மிகமிகத் திறமைசாலியாக இருக்கிறான். உதாரணமாக, **மனித வர்க்கம்** என்ற வார்த்தையைச் சொல்லலாம். மனிதவர்க்கத்தை நான் கண்டதில்லை. மனிதர்களைமட்டுமே நான் காண்கிறேன். மனித வர்க்கம் என்பது அனுபவ சாத்தியம் இல்லாதது. ஆனாலும் மனித வர்க்கத்தை நேசிக்கும் மனிதர்களும் இருக்கிறார்கள். நீங்கள் மனித வர்க்கத்தைக் கட்டியணைக்க முடியாது. மனிதவர்க்கத்தை முத்தமிட முடியாது. ஆனால் அது ஒரு மிகமிகச் சூட்சுமமான பாதுகாப்புக் கவசமாகும். மனிதவர்க்கம் என்ற பெயரில் நீங்கள் ஜனங்களை வெறுக்கிறீர்கள். காரணம், நீங்கள் மனிதவர்க்கத்தை நேசிக்கிறீர்கள். மனிதர்களை நேசிக்க அவசியமில்லை.

தேவை ஏற்பட்டால், மனிதவர்க்கத்தை நேசிப்பதற்காக எல்லா மனிதர்களையும் நீங்கள் பலி கொடுப்பீர்கள். அது திரும்பத் திரும்ப நடக்கிறது. மனிதர்கள் தேசங்களை நேசிக்கிறார்கள். **தேசங்களின்** பெயரால் மனிதர்கள், மனிதர்களைக் கொல்கிறார்கள். **தாய்நாடு, தகப்பன் நாடு** என்ற பெயரில் கொல்கிறார்கள். எல்லாம் முட்டாள்தனமான வார்த்தைகள். **தாய்நாடு** என்ற பெயரில் ஆயிரக் கணக்கான மக்களை எளிதாகக் கொன்று விடலாம்.

அனுபவ சாத்தியமற்ற ஒன்றின் பலிபீடத்தில் நிஜம் பலியிடப் படுகிறது. இதுவே உங்கள் முழுமையான வரலாறு ஆகும். கடவுளின் பெயரால், மதத்தின் பெயரால், காதலின் பெயரால், சமாதானத்தின் பெயரால், ஜனநாயகத்தின் பெயரால், பொதுவுடைமையின் பெயரால் அனுபவ சாத்தியமற்ற இவற்றின் பெயரால் - நாம் மனிதர்களைக் கொன்று கொண்டிருக்கிறோம்.

இந்த வார்த்தைகள் ஆபத்தான வார்த்தைகள். இந்த வார்த்தைகளை உதறித் தள்ளுங்கள். மனிதர்களை நேசியுங்கள். தாய்நாட்டுக்காகத் தியாகம் செய்ய வேண்டியது இருந்தால், தாய்நாட்டைத் தியாகம் செய்யுங்கள். அதில் தவறில்லை. மதத்திற்காக தியாகம்

செய்ய வேண்டுமானால் மதத்தைத் தியாகம் செய்யுங்கள். அதில் தவறில்லை. மனிதவர்க்கத்துக்காகத் தியாகம் செய்ய வேண்டி யிருந்தால், தடுமாற்றமின்றி அதைக் கொன்றுவிடுங்கள். மனித வர்க்கம் என்று ஒன்றும் கிடையாது. எனவே நீங்கள் எதையும் கொல்லவில்லை. நிஜத்தை நேசியுங்கள். அனுபவ சாத்தியமற்ற தைத் தவிர்த்துவிடுங்கள். அனுபவ சாத்தியமற்றது பெரிய ஆபத்தை ஏற்படுத்துகிறது.

அனுபவ சாத்தியத்துக்கு எதிரான நிஜத்தை நான் வலியுறுத்து கிறேன். எல்லா புத்தர்களின் பாதையாகவும் அது இருந்து வருகிறது. அவற்றை ஒருபோதும் முயன்று பார்க்கவில்லை. அரசியல்வாதிகள் முயன்று பார்க்கிறார்கள். அரசியல் பரிசோதனைகள் எல்லாம் தோற்றுப் போய்விட்டன. புத்தர்களின் கருத்து முயன்று பார்க்கப்பட வில்லை. நாம் அவற்றை கவனித்துக்கேட்கிறோம். அவற்றை வணங்குகிறோம். ஆனால் அவற்றை ஒருபோதும் முயன்று பார்த்த தில்லை. அவற்றுக்கு ஒரு வாய்ப்பு அளிக்கவில்லை.

இப்போது நேரம் நெருங்கிவிட்டது. புத்தர்கள் கருத்தை முயன்று பார்க்காவிட்டால் எதிர்காலம் இல்லை. மனிதன் அழிக்கப் பட்டு வருகிறான். மெல்ல மெல்ல மோசமான ஆற்றல்கள் கண்டு பிடித்து மேம்படுத்தப்படுகின்றன. அடுத்து வருவது மூன்றாவது உலகப் போராக இருக்காது. இறுதி உலகப்போராக அமையும். அடுத்து வருகின்ற போர் இறுதிப் போராக மாறும். அது எல்லா உயிர்களையும் அழிக்கும். மனித உயிர்களை மட்டுமல்ல, சகல உயிரினங்களும் அழிந்துபோகும்.

அச்சம்பவம் நிகழ்வதற்கு முன்னர் ஒரு வாய்ப்பு கொடுங்கள். கிருஷ்ணர், ஏசு, புத்தர், லாவோ, ஜோராதிஸ்திரர் போன்றவர்கள் திரும்பத் திரும்பச் சொல்கிறார்கள். மனிதனின் மனமாற்றம் என்கிறார்கள். அதற்கு வாய்ப்பு அளியுங்கள். தனிமனிதன் மாற்றம் பெற்றால் சமூகம் தன்னால் மாறிவிடும். அது ஒரு தொடர்நிகழ்வாக அமைந்துவிடும்.

நாங்கள் இங்கே எந்த சமூக மாற்றம் குறித்தும் கருத்து தெரிவிக்கவில்லை. சமூகத்தை நான் கணக்கில் கொள்ளவில்லை. எனது எண்ணம் முழுவதும் தனிமனிதனைப் பற்றியதாகும்.

"அப்படியானால் இது பொறுப்புகளில் இருந்து விலகியோடும் சுயநலக் கலாச்சாரமா?" என்று நீங்கள் கேட்கிறீர்கள். ஒருவகையில் அது விலகிச் செல்லல்தான். நாம் எல்லோரும் மாயைகளில் இருந்து

விலகிக் கொண்டிருக்கிறோம். ஒருவகையில் இது பொறுப்புகளில் இருந்து விலகும் செயல் அல்ல. நிஜங்களில் இருந்து நாம் விலகிப் போகிறோம். மாயையில் இருந்தும், நிஜங்களில் இருந்தும் விலகுகிறோம். எனவே இது விலகி ஓடுதல் அல்ல.

மற்றவர்களுக்கு எதிராக நாம் இருப்பது சுயநலமாகாது. நாம் எந்த கொள்கையையும் போதிக்கவில்லை. எந்த தர்மநியாயத்தையும் போதிக்கவில்லை. எனவே மற்றவர்கள் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை என்று பொருள் அல்ல. மற்றவர்களிடம் பரிவு காட்டுவது எப்படி என்று நமக்குத் தெரியும். மற்றவர்களிடம் பரிவு காட்ட வேண்டுமானால் முதலில் உங்கள்மீது அன்பு கொள்ள வேண்டும் என்பது அடிப்படை விஷயமாகும்.

ஒரு கிறிஸ்தவத் தாய் தனது குழந்தையிடம், "மற்றவர்களுக்குச் சேவை செய். சேவை செய்வதே ஆன்மீகப் பணியாகும். பிறருக்குச் சேவை செய்யவே கடவுள் உன்னைப் படைத்திருக்கிறார்" என்றாள்.

அந்தச் சிறுவன் தாயைப் பார்த்து, "அதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. கடவுள் என்னைப் பிறருக்குச் சேவை செய்யவே பிறப்பெடுக்கச் செய்தார் என்கிறபோது ஒரு கேள்வி எழுகிறது. கடவுள் மற்றவர்களை ஏன் பிறப்பெடுக்கச் செய்தார்? எனக்குச் சேவை செய்யவா?" என்று கேட்டாள்.

மற்றவர்களுக்குச் சேவை செய்ய நான் இங்கு இருக்கிறேன். மற்றவர்கள் எனக்கு சேவை செய்வதற்காக இருக்கிறார்கள். எனக்கு நானே சேவை செய்து கொள்கிறேன். உங்களுக்கு நீங்களே ஏன் சேவை செய்துகொள்ளக் கூடாது? மற்றவர்கள் என் மீது அக்கறை காட்டுவதைக் காட்டிலும் என்மீது நானே சிறப்பாக அக்கறை கொள்ள முடியும். மற்றவர்களை விடவும் நீங்கள் உங்கள் மீது நல்ல அக்கறை கொள்ள முடியும்" என்ற இது அறிவுக்குப் புறம்பானதாகத் தெரிகிறது.

தனக்குச் சேவை செய்துகொள்ள ஒருவருக்குக் கற்றுத் தருகிறேன். அதன் தொடர்நிகழ்வாக முற்றிலும் வித்தியாசமான முறை ஒன்று வெளிப்படும். தனக்குச் சேவைசெய்யும் ஒருவர், தன்னை ரசிக்கும் ஒருவர், தன்னை நேசிக்கும் ஒருவர், தன்னை மதிக்கும் ஒருவர் மற்றவர்களை மதிக்கத் தொடங்குவார். மெல்ல மெல்ல நாம் வாழும் அதே வாழ்க்கைதான் மற்றவர்களிடம் உள்ளது என்ற விழிப்புணர்வை அடைவார். உங்களை நீங்கள் அதிகம் நேசிக்கும்போது, நீங்கள் தனித்திருக்கவில்லை என்ற விழிப்புணர்வு பெறுவீர்கள்.

அன்பினால் மட்டுமே ஒருங்கிணைப்பு எழும். அதிக அளவு நீங்கள் உங்களை நேசிக்கும்போது உங்களுக்குள் நீங்கள் கலந்து கரைகிறீர்கள். அகஉலகில் கலந்து இன்பம் பெறுகிறீர்கள். எல்லா விளக்கங்களும் பொய்யானவை என்று அறிகிறீர்கள். எல்லைக் கோடுகள் அமைத்தல் எல்லாம் மேம்போக்கானவை என்று காண்பீர்கள். நீங்கள் தனியாக இல்லை. உலகம் முழுவதும் ஒன்றுபட்டு இருக்கிறது.

அதனால்தான் உலகை universe என்று கூறுகிறார். uni என்ற சொல்லுக்கு ஒன்றுசேர்ந்தது என்று பொருள். அதை நாம் multiverse என்று அழைப்பதில்லை. அது ஒன்றானது. முழுமையானது. பிறவற்றின் அம்சங்களாக நாம் இருக்கிறோம். மனிதன் ஒரு தீவு அல்ல. நாம் கண்ணுக்குத் தெரியாத முடிவற்ற கண்டமாக இருக்கிறோம். எல்லையற்று இருப்பது நமது இயற்கைப் பண்பாகும்.

இந்த அனுபவம் சுயநேசத்தை நிஜமாக்கும் மனிதர்களுக்கு மட்டுமே கிடைக்கும். தங்கள் மீது பேரன்பு கொண்டவர்கள் கண்களை மூடியபடி பேரின்பத்தில் திளைக்க முடியும். தியானம் என்பது அதுதான்.

தியானம் என்பது தனித்திருந்து ஆனந்தநிலை பெறுதலாகும். தனியே இருந்து இன்பம் அடையும்போது அந்த மகிழ்ச்சி பெரிய அளவில் இருக்கும். அதை முற்றிலும் உள்வாங்கிக் கொள்ள முடியாது. உங்களிடம் வழிந்தோடத் துவங்கும். அப்படி உங்களிடமிருந்து வழிந்தோடும் போது அது அன்பாக மாறுகிறது. அன்பு தோன்றத் தியானம் அனுமதிக்கிறது. தியானம் பற்றித் தெரியாதவர்கள் அன்பை அறிந்துகொள்ள மாட்டார்கள். அன்பு காட்டுவது போல அவர்கள் நடிப்பார்கள். அவர்களால் அது முடியாது. நடிக்க மட்டுமே முடியும். கொடுப்பதற்கு அவர்களிடம் எதுவும் இல்லை. அன்பு வழிந்தோடவில்லை.

அன்பு என்பது பகிர்ந்து கொள்ளல் ஆகும். பகிர்ந்துகொள்ளும் முன்னர் அதை நீங்கள் அடைந்து கையில் வைத்திருக்க வேண்டும். தியானம் என்பது முதன்மை அம்சம். தியானம் என்பது மையம். அன்பு என்பது சுற்றுவட்டப் பகுதி. தியானம் என்பது சுடர். அன்பு என்பது அதன் ஒளிவீச்சு. தியானம் என்பது மலர். அன்பு அதன் நறுமணம்.

நான் தியானம் கற்பிக்கிறேன். அன்பு உங்களுக்குள் தோன்ற அது ஒன்றுதான் வழி. நீங்கள் பிரவாகிக்கத் தொடங்கும் சமயத்தில்

பிறரைச் சார்ந்து இருப்பீர்கள். பிறரிடம் கருணை காட்டுவீர்கள். தியானத்தின் நிழலாகச் சேவை உணர்வு உங்கள் வாழ்வில் நுழையும். அது உங்கள் மீது திணிக்கப்பட்டது அல்ல. அது கடமை அல்ல.

Duty (கடமை) என்பது நான்கு எழுத்துகள் கொண்ட அசிங்க மான வார்த்தை. கடமை என்று நீங்கள் ஏதாவது ஒன்றைச் செய்யும் போது அது உங்கள்மீது திணிக்கப்பட்ட, பழக்கப்படுத்தப்பட்ட ஒரு போலித்தனம். அது போலியானது. அது உங்களை வேடதாரியாக மாற்றுகிறது.

மகிழ்ச்சி பொங்கி வழிந்து, அதைத் தேக்கிவைக்க முடியாத நிலை ஏற்படும்போது முற்றிலும் புதிய நிலை தோன்றுகிறது. நீங்கள் அன்பு செலுத்த வேண்டும், பாசம் காட்ட வேண்டும் என்றாகிறது. அன்பைப் பகிர்ந்துகொள்ளும்போது எந்த அளவுக்குக் கொடுக் கிறீர்களோ அந்த அளவுக்குத் திரும்பக் கிடைக்கும். அதிலுள்ள அழகு அதுதான். எந்த அளவு உங்களிடம் இருப்பதைக் காலி செய் கிறீர்களோ, அந்த அளவுக்கு அது மீண்டும் நிரப்பப்படும்.

மனித இயல்பை மாற்றுவதன்மூலம் சமூகம், மற்றும் உலகத்தை மாற்றியமைக்கலாம் என்று நினைக்கிறீர்களா என்று கேட்கிறீர்கள். நான் அப்படிக் கருத்துக் கூறவில்லை. ஆனால் அப்படித்தான் நடக்கும். மாற்றம் நிகழ **அது ஒன்றுதான் வழி.** என்றாலும் அது நமது லட்சியம் அல்ல.

நீங்கள் ஒரு விளக்கைத் தூண்டிவிட்டால் இருள் தானாகவே அகன்றுவிடுகிறது. வெளிச்சத்தின்வழியே நீங்கள் இருட்டைப் பார்க்கத் தேவையில்லை. எங்கே அது இருக்கிறது என்று பார்க்கவோ அதை அறையைவிட்டுத் துரத்தவோ எந்த காரியமும் செய்ய வேண்டியதில்லை. ஒளி அங்கிருக்கும்போது இருள் அங்கே தங்கி யிருக்காது.

மனிதன் மறுமலர்ச்சி அடையும்போது அவன் ஒளியாக மாறுகிறான். முதலில் தனக்கும், பிறரை மற்றவர்களுக்கும் ஒளி தருகிறான். அது இயல்பான தொடர் நிகழ்வாகும்.

நாம் நிகழ்காலத்தில் வாழ்வோம். நாம் தியானத்தில் வாழ்வோம். அன்பு நிறைந்து வாழ நாம் அனுமதிப்போம். அது பொங்கி வழியட்டும். விஷயம் கற்பனை ராஜ்ஜியம் அல்ல. கனவு ராஜ்ஜியத்தை நாம் தேடவில்லை. உலகிற்குப் பொற்காலம் வர வேண்டும். தேடியலையவில்லை. ஆனாலும் பொற்காலம் இவ் விதம் மட்டுமே வரமுடியும். வேறுவழி ஏதுமில்லை. மற்ற வழிகள் எல்லாம் தோற்றுவிட்டன.

தியானம் அல்லது தற்கொலை. மனிதர்களுக்கு இதில் ஏதாவது ஒன்றுதான் மாற்றாக இருக்கிறது. அடுத்த இருபத்தைந்து வருடங்களில், இந்த நூற்றாண்டின் கடைசிப் பகுதியில் மனிதன் தியானம் செய்பவனாக மாறவேண்டும். தியானம்மூலம் அன்புள்ளவராக மாறவேண்டும். அல்லது மனிதன் உலகளாவிய அளவில் தற்கொலை செய்துகொள்ள நேரிடும்.

**இரண்டாவது கேள்வி**

**ஓஷோ,**

**நான் ஒரு மனநோய் சிகிச்சை நிபுணர். இரவும், பகலும் நோயாளிகள் சொல்வதைக் கேட்டுக் கேட்டு எனக்குப் பித்துப் பிடித்துவிடும் போலிருக்கிறது. நான் என்ன செய்வது?**

அது இயல்புதான். மற்ற தொழில்முறைப் பணியாளர்களைக் காட்டிலும் மனநோய் சிகிச்சை நிபுணர்கள் அதிகம் தற்கொலை செய்து கொள்கிறார்கள். தற்கொலை விகிதாச்சாரம் இரண்டு மடங்கு அதிகமாக இருக்கிறது. மற்ற தொழில்முறைப் பணியாளர்களை விடவும் மனநோய் சிகிச்சை நிபுணர்கள் தான் அதிகம் பேர் புத்தி கெட்டுப் பைத்தியமாகிறார்கள். இதிலும் விகிதாச்சாரம் இரண்டு மடங்கு அதிகமாக இருக்கிறது. அதற்குக் காரணம் மனநோய் சிகிச்சை நிபுணர்களுக்குத் தியானப் பயிற்சி அளிக்கப்படுவதில்லை.

மற்றவர்களைப் போலவே அவரும் இயல்பான மனிதர் என்று கருதப்படுகிறார். அவர் மனநோயாளிகளுக்குச் சிகிச்சை தரும் போது மற்ற மனிதர்களின் பைத்தியக்காரத்தனம், மற்றும் முட்டாள்தனங்களை மட்டுமின்றி தனது முட்டாள்தனத்தையும் எதிர்கொண்டு கண்டறிய நேர்கிறது. அதை மற்றவர்கள் தூண்டிவிடுகிறார்கள். பிறர் முன்னிலையில் அதைத் தூண்டிவிடுகிறார்கள். குப்பைகளை வெளியே தள்ளும்போது மனோதத்துவச் சிகிச்சையாளர் அதைக் காதுகொடுத்துக் கேட்கவேண்டியிருக்கிறது. அந்த மொத்த முட்டாள் தனங்களும் அவருக்குள் இறங்குகின்றன. தனது சொந்த முட்டாள்தனங்களை அவை தூண்டுகின்றன. அதிக அளவு அச்சத்தை அவரிடம் தோற்றுவிக்கின்றன. பைத்தியம் பிடிக்கும் நிலையை நோக்கி அவரை விரட்டுகின்றன.

ஒரு பழைய கதை உண்டு.

**எகிப்தியப்** பேரரசர் ஒருவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. எல்லாவிதமான சிகிச்சைகளும் அவருக்கு அளிக்கப்

பட்டன. ஆனால் எல்லாம் தோற்றுவிட்டன. வெகுதொலைவில் உள்ள இடங்களில் இருந்தெல்லாம் மருத்துவர்கள் வந்தார்கள். ஆனால் அரசர் நிலை மோசமாகிக் கொண்டே சென்றது. அதன் பிறகு யாரோ ஒருவர், "உடற்கூறு வல்லுநர்கள், மருத்துவர்கள் போன்ற வர்களை மறந்துவிடுவோம். யாராவது ஒரு துறவியின் ஆலோசனை யைக் கேட்போம்" என்றார். அவர்கள் தேடி அலைந்து, ஒரு குகை யில் துறவி ஒருவரைக் கண்டார்கள். அரசர் நோய் நீங்க என்ன செய்ய வேண்டும் என்று கேட்டார்கள்.

அந்த துறவி அவர்களிடம், "அரசர் பற்றிச் சில விபரங்களைச் சொல்லுங்கள். அவரது பழக்கவழக்கம், அவரது வாழ்க்கை முறை, அவர் உண்ணும் பொருட்கள் பற்றிச் சொல்லுங்கள்" என்றார். அதை யெல்லாம் அவர்கள் விளக்கிச் சொன்னார்கள். துறவி "இப்போது இது போதும். இது வேலை செய்யும்" என்றார்.

அரசர் சதுரங்க விளையாட்டில் பெருவிருப்பம் கொண்டவர் என்று துறவியிடம் அவர்கள் கூறினர். துறவி அவர்களைப் பார்த்து, "நாட்டிலேயே பெரிய சதுரங்க விளையாட்டு வீரனைக் கண்டு பிடியுங்கள். அவர் எது கேட்டாலும் கொடுங்கள். ஆனால் அவர் பைத்தியம் பிடித்த அரசருடன் சதுரங்கம் விளையாட வேண்டும். ஒரு வருடம் கழித்து மீண்டும் வாருங்கள்" என்றார்.

சிறந்த சதுரங்க விளையாட்டு வீரன் கண்டறியப்பட்டான். பைத்தியத்துடன் சதுரங்கம் விளையாட அவன் விரும்பவில்லை. சதுரங்க விளையாட்டே மனிதனைப் பைத்தியமாக்கக் கூடியது. ஒரு பைத்தியத்துடன் அந்த விளையாட்டை விளையாட வேண்டும்... அதற்கு அவன் நிறையப் பணம் கேட்டான். அதிகப் பணம் தர மாட்டார்கள் என்று அவன் நினைத்தான். ஆனால் அரசரின் ஆட்கள் உடனே அத்தொகைக்குச் சம்மதித்தார்கள். எனவே, அவருக்குத் தப்பிக்க வழி இல்லாது போய்விட்டது. கிறுக்கு அரசருடன் சதுரங்கம் விளையாட வேண்டியதாயிற்று.

ஒரு வருடத்திற்குப் பிறகு அதே ஆட்கள் மீண்டும் குகைக்குச் சென்றனர். துறவி அவர்களிடம், "நிலைமை எப்படி இருக்கிறது?" என்று கேட்டார்.

"நீங்கள் அற்புதம் நிகழ்த்திவிட்டீர்கள். அரசர் இப்போது பூரண மனத்தெளிவு பெற்றுவிட்டார்" என்று அவர்கள் கூறினர்.

துறவி "நல்லது. வேறு விஷயம் உண்டா?" என்றார்.

"ஆமாம். சொல்ல வேண்டியது ஒன்று இருக்கிறது. சதுரங்க வீரர் பைத்தியக்காரராக மாறிவிட்டார்" என்று அவர்கள் தெரிவித்தனர்.

மனநோய் சிகிச்சை நிபுணர் தியானத்தில் ஆழமாக வேரோடாமல் போனால் இப்படித்தான் நடக்கும். இந்த முக்கிய மான விஷயத்தைத் தான் மனநோய் சிகிச்சை நிபுணர்கள் தவறவிட்டு விட்டார்கள்.

மனநோய்ச் சிகிச்சை ஆழ்ந்த தியானத்தை அடிப்படையாகக் கொண்டு அமையவேண்டும். ஒவ்வொரு மனநோய் சிகிச்சை நிபுணரும் சான்றிதழ் பெறுவதற்கு முன்னர் தியானப் பயிற்சி பெற வேண்டும். ஏனென்றால், நீங்கள் முறையாகக் கவனிக்க தியானப் பயிற்சி உதவி செய்யும். நீங்கள் அமைதியாக, நிதானத்துடன், பதட்ட மின்றி ஒருமுகப்பட்ட மனதுடன் இருந்தால், பைத்தியத்தின் பேச்சை கவனிக்கலாம், அவருக்கு உதவிகரமாக இருக்கலாம். அவர் உங்களுக்கு இடையூறாக இருக்கமாட்டார். இல்லாதுபோனால் அப்படித்தான் நடக்கும். அதற்கு ஒரே வழி, அனுபவபூர்வமான முறையில் மனநோய் நிபுணர்கள் தியானம் பயிலவேண்டும் என்பது தான்.

நான் கேள்விப்பட்ட ஒன்றைச் சொல்கிறேன்.

ஒரு இளம் மனநோய் சிகிச்சை நிபுணர், வயது முதிர்ந்த மனநோய் சிகிச்சை நிபுணரிடம் கேட்டார். "நீங்கள் எப்போதும் மகிழ்ச்சியுடனும், கலகலப்பாகவும் இருக்கிறீர்களே! நாள் முழு வதும், இந்த மோசமான வேலையில் ஈடுபட்ட பின்னரும் அப்படியே இருக்கிறீர்களே! நான் இரண்டாவது நோயாளியைச் சந்தித்ததும் சலிப்படைந்து போகிறேன். மாலை நேரத்தில் பலம் இழந்து மந்தமாகிப் போகிறேன். ஆனால் நீங்கள் தளர்ந்து போவ தாகவே தெரியவில்லை. பிறர் சொல்வதைக் கேட்பது பயங்கரமான கனவில் இருப்பது போலிருக்கும். தொடர்ந்து கொடுங்கனவில் தங்கி இருப்பது போலிருக்கிறது" என்றார்.

வயது முதிர்ந்த அந்த மனநோய் சிகிச்சை நிபுணர் சிரித்துக் கொண்டே சொன்னார். "அவர்கள் சொல்வதை எல்லாம் யார் காதில் போட்டுக் கொள்கிறார்கள்?"

தியானம் செய்வது எப்படி என்று நீங்கள் கற்றுக் கொள்ளாது போனால், பிறகு இதுதான் ஒரே தற்காப்புச் செயலாக இருக்கும். நோயாளி சொல்வதைக் கேட்பது போல் மனநோய் சிகிச்சை நிபுணர் நடிப்பார்.

ஃபிராய்டு இதில் சாமர்த்தியம் நிறைந்தவராக இருந்தார். இந்த வகையில் சகலத்தையும் அவர் நிர்வகித்தார். நோயாளியைப் படுக்கையில் படுக்கவைப்பார். நோயாளிக்குப் பின்புறத்தில் உட்கார்ந்துகொள்வார். அப்போதுதான் நோயாளியால் பார்க்க முடியாது. நோயாளி சொல்வதை அவர் கேட்கிறதா இல்லையா, அல்லது தூங்கிவிட்டாரா அல்லது கனவு காண்கிறாரா வேறு ஏதாவது செய்கிறாரா என்று கண்டறிய முடியாது. நோயாளி படுத்துக் கொண்டு "தடையற்ற ஒத்துழைப்பு" என்ற பெயரில் பிதற்றிக் கொண்டிருப்பான்.

ஃபிராய்டு ஜனங்களில் கண்களை நேருக்கு நேர் பார்க்க மிகவும் பயப்படுவார். அது அவருக்கு அச்சம் தந்தது. அவர் தன்னளவில் ஒரு தீவிர நோயாளி. தியானம் மற்றும் வழிபாடு பற்றிய எந்த விழிப்புணர்வும் அவரிடம் இல்லை. இயற்கையுடன் ஆழமான உறவு கொள்ளல் பற்றி அவருக்கு எதுவும் தெரியாது. அவர் சதா பயந்துகொண்டு இருந்தார். நோயாளி அருகில் செல்ல அஞ்சினார். சிகிச்சை அளிப்பவருக்கும், நோயாளிக்கும் இடையே ஒரு நெருக்கம் ஏற்பட அவர் அனுமதிப்பதில்லை. நெருக்கம் கிடையாது. எல்லாமே தொழில்முறையிலான உறவுதான். சொல்லப்போனால் உறவு என்பதே இல்லை.

இப்போது ஃபிராய்டின் கருத்து சார்ந்தோரின் தடைகள் மெல்ல மெல்ல உடைபடுகின்றன. மனநோய் சிகிச்சை நிபுணர்கள் மேலும் மேலும் துணிவு பெறுகிறார்கள். அவர்கள் நோயாளியை எதிர் கொள்கிறார்கள். அவரது கண்களைப் பார்க்கிறார்கள். அது ஆபத் தானது. நீங்கள் உங்கள் மையத்தில் பலமாக வேரூன்றி இருக்காது போனால், அக்காரியம் ஆபத்தைத் தரும். பைத்தியத்தின் கண்களை உற்றுப் பார்ப்பது ஆபத்து. நீங்கள் மறைத்து அடக்கி வைத்திருக்கும் உங்கள் பைத்தியக்காரத்தனத்தை அவன் தூண்டிவிடலாம்.

திடீரென்று பைத்தியமாக மாறிவிட்ட தனது நண்பரைப் பார்க்க பைத்தியக்கார விடுதிக்கு ஹென்றி ஜேம்ஸ் சென்றதாகக் கூறப்படுகிறது. அது குளிர் நிறைந்த ஒரு காலை நேரம். நண்பரின் கண்களை பார்த்த அவருக்கு வேர்க்கத் தொடங்கியது. படபடப்புக்கு ஆட்பட்டார். அவரது மனைவியும் உடன் சென்றிருந்தாள். அவருக்கு என்ன ஆயிற்று என்று அவளுக்குப் புரியவில்லை. ஏன் இப்படி நடுங்குகிறார்? அவரை வீட்டுக்கு அழைத்து வந்தாள். அவர் மிகவும் கவலையோடு காணப்பட்டார். பல நாட்கள் வரை அந்தக் கவலை தொடர்ந்து இருந்து வந்தது.

மனைவி அவரிடம், "உங்களுக்கு என்ன ஆயிற்று? பல பேருக்குப் பைத்தியம் பிடிப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்கள். நீங்கள் ஒரு மனநோய் சிகிச்சை நிபுணர். புகழ்பெற்ற மனோதத்துவ நிபுணர். உங்களுக்கு என்ன வந்து விட்டது?" என்றார்.

அதற்கு அவர் "நான் இதுவரை எந்த ஒரு பைத்தியத்தின் கண்களையும் நேருக்கு நேர் சந்தித்தது இல்லை. அதை நான் தவிர்த்து வந்தேன். எனது நண்பரை அப்படித் தவிர்க்க முடிய வில்லை. எனது நண்பரைப் பார்க்கும்போது மின்னல் போல ஒரு எண்ணம் என் மனதில் தோன்றியது. அவருக்குப் பைத்தியம் பிடிக்கு மானால், எனக்கும் பிடிக்கும் என்ற எண்ணம் ஏற்பட்டது. இன்று நான் இருப்பது போலவே அவரும் நேற்று நல்ல மனத்தெளிவுடன் இருந்தார். இன்று என்ன ஆயிற்று? தெளிவாக இருக்கும் என்னால் இவர் பைத்தியமாவார் என்று ஒருநாளும் நம்பமுடியாது. அவர் பைத்தியமானது பற்றி யாரோ தகவல் சொன்னபோதும் அதை நான் நம்பவில்லை. இதுவரை நான் சந்தித்த மனிதர்களில் மிகவும் தெளிவான மனிதர் அவர்தான். அவர் பைத்தியமாகும்போது நானும் பைத்தியமாக மாட்டேன் என்பது என்ன நிச்சயம்? நான் அதிர்ந்து போய் விட்டேன்" என்று கூறினார்.

நண்பருடைய பைத்தியத்தின் நிழல் காலமெல்லாம் சதா வில்லியம் ஜேம்ஸைப் பாதித்து வந்ததாகச் சொல்லப்படுகிறது. அதன் பின்னர் அவர் தெளிவுபெற்ற மனிதராக மாறவே இல்லை.

என்னால் உங்கள் சிரமத்தைப் புரிந்துகொள்ள முடிகிறது. கவனிப்பது, கேட்பதுமூலம் நீங்கள் மற்றவர்களை நெருங்கிவர அனுமதிக்கிறீர்கள். நிறையப் பைத்தியக்காரத்தனத்தை உங்களுக்குள் சுமந்துகொண்டிருக்கிறீர்கள். மிகப்பெரிய மனநோய்ச் சிகிச்சை யாளர்களும் அப்படித்தான் இருக்கிறார்கள்... ஃபிராய்டு மரணம் குறித்து மிகவும் அச்சம்கொண்டிருந்தார். மரணம்பற்றி நீங்கள் பேசினால் காரணமின்றி கோபம் கொள்வார். பழங்கால எகிப்திய அரசர் மற்றும் ராணிகளின் பதப்படுத்தப்பட்ட மம்மி உடல்களைப் பார்க்க அவர் விரும்பினார். நீங்கள் எதைக்கண்டு அச்சம் கொள் கிறீர்களோ, அதன் பக்கம் ஈர்க்கவும் படுவீர்கள் என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். பயமும், ஆவலும் ஒரு நாணயத்தின் இரு இரு பக்கங்கள். ஒவ்வொரு முறை எகிப்து செல்லத் திட்டமிட்டு ஏற்பாடு செய்யும்போதும் அவர் நோய்வாய்ப்பட்டார்.

இது பல தடவை நடந்தது. எனவே அவர் தானே நோயை வரவழைத்துக் கொள்வதாக எண்ணி விழிப்படைந்தார். பயணத்தை

ரத்து செய்ததும் நோய் விலகியது. கடைசிமுறை அவர் விமான நிலையத்துக்கே சென்றுவிட்டார். அங்கு அவர் வாந்தியெடுக்கத் தொடங்கினார். பயணத்தை ரத்து செய்ய வேண்டியதாயிற்று. அதன் பிறகு அந்தத் திட்டத்தை நிரந்தரமாக ஒதுக்கித் தள்ளிவிட்டார்.

ஃபிராய்டு மிகவும் பயந்து போயிருந்தார். மனநோய் சிகிச்சை நிபுணர்களைக் கண்டும் பயந்துபோயிருந்தார். ஒருமுறை அவர் கார்ல் கஸ்டாவ் ஜூங்குடன் பயணம் செய்தார் என்று கூறப்படுகிறது. எந்த வேலையும் இல்லாததால் ஜூங் ஃபிராய்டை மனோவியல் ஆய்வு செய்தார். ஃபிரய்டின் நரம்புமண்டல நோய்களின் அடி யாழத்தை ஜூங் தொட்டதும், ஃபிராய்டு, "போதும் நிறுத்தி விடலாம். இனி அதுகுறித்துப் பேசவேண்டாம்" என்றார். அவர் மிகவும் பயந்திருந்தார். "உங்களுக்கு என்ன ஆயிற்று? ஏன் உங்களை வெளிப்படுத்திக் கொள்ள மறுக்கிறீர்கள்?" என்று ஜூங் கேட்டார்.

"முடியாது. என்னால் இதற்குமேல் வெளிப்படுத்தமுடியாது. அதிகம் வெளிப்படுத்தினால் எனது நம்பகத்தன்மையை இழந்து விடுவேன்" என்றார் ஃபிராய்டு.

ஒருகணம் மௌனமாக இருந்த ஜூங், "நீங்கள் அதை ஏற்கனவே இழந்துவிட்டீர்கள். நீங்கள் மனநோய் சிகிச்சைக்கு ஆட்பட அஞ்சினால், எப்படிப்பட்ட மனநோய் சிகிச்சையாளராக நீங்கள் இருப்பீர்கள்?" என்றார். அவர் மனோவியல் சிகிச்சையின் தந்தை எனப்பட்டார். தன்னை அவர் ஒருபோதும் மனோவியல் ரீதியாக ஆய்வு செய்ததில்லை. தன்னிடம் நெருங்கிவர யாரையும் அனுமதித்ததில்லை. நிஜமாகவே தனது விழிப்புணர்வற்ற நிலையை அறிந்துகொள்ள அஞ்சினார். அப்படிச் செய்தால் மீண்டும் பழைய மனிதராக இருக்க முடியாது என்று கருதினார்.

அதனால்தான் நாம் அதை தவிர்த்துவிடுகிறோம். ஆனால் மனோநோய் சிகிச்சையாளர் தவிர்க்கக் கூடாது. அது உங்கள் பிரச் சினையாக மாறுகிறது. மனோவியல் பிரச்சினைகள் பற்றி நோயாளி யிடம் வற்புறுத்தல் செய்வதைவிடவும் நீங்கள் மௌனமாக இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். உங்கள் அமைதி நோயாளியை பாதிக்கும். நீங்கள் நிறைய அன்பும் கருணையும் உள்ளே கொண்ட வராக இருக்க வேண்டும். இந்தச் சிகிச்சையில் நீங்கள் அதிக அன்புள்ளவராக இருப்பதே நோய் நிவாரணமாக அமையும். அன்பு ஒரு நோய் தீர்க்கும் ஆற்றலாகும்.

மனநோய் சிகிச்சையாளர், மனநோய் ஆய்வாளர் அல்லது அதுபோன்ற சிகிச்சைகள் செய்வோர், இதில் சம்பந்தப்பட்டவர்கள்

எல்லாம் பல விஷயங்களைக் கற்றுக்கொள்ளவேண்டும். மனோ வியல் ஆய்வு என்பது இன்னும் குழந்தைப் பருவ நிலையில் இருக் கிறது. இன்னும் அதிகமாகத் தெரிந்துகொள்ள வேண்டியுள்ளது.

கிழக்கு நாடு பலவற்றை மேற்குநாட்டிற்கு அளிக்கமுடியும். ஏனென்றால் கிழக்கு நாடு பல்லாயிரம் ஆண்டுகளாக மனித வினோதங்களின்மீது ஆர்வம்காட்டி வருகிறது. மேற்கு நாட்டில் ஃபிராய்டு துவக்கியது, வெகுகாலமாக கிழக்கு நாட்டில் செய்து கொண்டிருந்த செயலையே ஆகும். மிகப் பழைய வேதகாலத்திலும் அகநிலை நிஜங்களை சந்தித்து அறிந்திருக்கிறோம். மனிதனின் அகத்தை நாம் ஆராய்ந்துவருகிறோம். சில அடிப்படை உண்மை களை நாம் கற்றுக்கொண்டிருக்கிறோம்.

முதலாவதாக, மற்றவர்களுக்கு நீங்கள் உதவ விரும் பினால், உயர்நிலை விழிப்புணர்வு பெற்றிருக்கவேண்டும். இல்லாதுபோனால் மற்றவர்களுக்கு உதவ முடியாது. இதுபோன்ற உணர்வுநிலையில் இருப்பவர்களால் அதிகமாக மக்களுக்கு உதவ முடியாது. மற்றவர்களுக்கு உதவுவதற்குப் பதிலாக, மற்றவர்கள் உங்களை அதிகம் பாதிப்பார்கள். உங்களுக்கு அதிகம் இடையூறு செய்வார்கள். உங்கள் சுயநிதானத்தை இழந்துவிடுவீர்கள்.

மனநோய் சிகிச்சையாளரும், நோயாளி போன்ற அதே மன நிலை உள்ளவர்தான். குரு உயர்நிலையில் இருக்கிறார். நீங்கள் மூழ்கிக் கொண்டிருக்கும் குழப்பங்களில் இருந்து உங்களை மேலே இழுக்கிறார். அவர் உயர்நிலையில் இருக்கவேண்டும். இல்லாது போனால் நீங்கள் மூழ்கிக்கொண்டு இருக்கும் குழப்பங்களில் அவரை இழுத்துத் தள்ளிவிடும் வாய்ப்பு நிறையவே இருக்கிறது.

ஒருமுறை இது நடந்தது.

நான் நதிக்கரையோரம் அமர்ந்திருந்தேன். ஒரு மனிதன் நீரில் மூழ்கிக் கொண்டிருந்தான். அதைக் கண்டதும் நான் ஓடினேன். அந்த இடத்தை அடைந்து நீரில் குதிப்பதற்குள் மற்றொருவன் நீரில் குதித்துவிட்டான். தனக்கு நீந்தத் தெரியாது என்பதைக் குதித்தவன் சுத்தமாக மறந்துவிட்டான். ஒருவன் நீரில் மூழ்குவதைப் பார்த்த துடன் தான் நீச்சல் தெரிந்தவன் அல்ல என்பதை முழுமையாக மறந்துவிட்டான். எனவே நான் அந்த இருவரையும் காப்பாற்ற வேண்டியதாயிற்று.

நான் அந்த மனிதனிடம், "உயிரைப் பாதுகாப்பதற்குப் பதிலாக அதிக சிரமத்தை நீ ஏற்படுத்திவிட்டாய். உன்னை நான் முதலில் காப்பாற்றவேண்டியதாகிவிட்டது" என்றேன்.

"நீச்சல் தெரியாது என்பதை நான் சுத்தமாக மறந்துவிட்டேன்" என்றான் அவன்.

நீங்கள் என்னிடம், "நான் ஒரு மனநோய் சிகிச்சை நிபுணன். இரவும், பகலும் நோயாளிகள் சொல்வதைக் கேட்டுக் கேட்டு, அது என்னைப் பைத்தியம்பிடிக்கும் நிலைக்குக் கொண்டுசென்று விட்டது" என்கிறீர்கள். எவ்வாறு நீந்துவது என்று உங்களுக்குத் தெரியுமா? இல்லாது போனால், ஒரு மனிதருக்குப் பதிலாக இரண்டு பேர் சிக்கலில் அகப்பட நேரிடும். முற்றிலும் நிதானத்துடன் இருக்க நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டும். சலனமற்று இருக்க வேண்டும். பிறகு உங்கள் அமைதி உங்களைச் சுற்றி ஒரு சூழலை ஏற்படுத்தி விடும். நோயாளி அந்த அமைதிச் சூழலில் நுழையும் தருணத்தில் அவரும் அமைதியில் ஆழ்ந்துவிடுவார்.

அதுதான் நிஜமான சிகிச்சை. கிழக்கு நாட்டவரின் சத்சங்கம் என்ற சொல்லின் நிஜமான பொருள் அதுதான். குருவுடன் ஒன்றுதல் ஆகும். குருவின் அருகில் அமரும்போது காரியங்கள் நடக்கத் துவங்குகின்றன. எதுவும் பேசப்படுவதில்லை. உயர் விழிப்பு நிலையின் தொடர்பில் இருக்கும் போது உங்கள் விழிப்புநிலை சவாலை எதிர்கொள்கிறது. அந்த சமயத்தில் உயர்நிலைக்கு எழுகிறது. ஏதோ ஒன்று உங்களுக்குள் தூண்டப்படுகிறது.

நவீன மனநோய் சிகிச்சையாளர் தன்னளவில் நோயுற்றுக் கிடக்கிறார். அவர் ஒரு தொழில்முறைப் பணியாளர். நோய் பற்றிய எல்லா விபரங்களும் அவருக்குத் தெரியும். கெடுதல் பற்றியும் தெரியும். ஆனால் அவரது விழிப்புநிலையும் நோயாளியின் அதே மனோராஜ்யப் பிரதேசத்தில்தான் இருந்து வருகிறது. அவர் ஒரு குரு அல்ல. நோயாளி என்ற பழங்காலச் சொல்லின் நிஜமான அர்த்தம் சுகவீனமானவர் என்பது அல்ல. மாணவர் என்றே பொருள். Patience என்ற சொல்லில் இருந்து அது உருவாயிற்று.

மாணவராக இருப்பவர் கற்றுக்கொள்வது அவசியமாகும். நோயாளி, குறிப்பாக மனநோயாளி நிஜமாகவே மாணவராக இருக்க வேண்டும். முழுமை நிலை பெறுவது எப்படி என்று அவர் கற்றுக் கொள்ள வேண்டும். முழுமையான வாழ்க்கை வாழ்வது எப்படி என்று அவருக்குத் தெரியவில்லை. அதுதான் அவரது நோயுற்ற நிலையாகும். முழுமையான வாழ்க்கை வாழாத நீங்கள் அதை அவருக்கு எப்படிக் கற்றுக்கொடுக்க இயலும்? முதலில் நீங்கள் ஒரு குருவாக மாறவேண்டும். அதன் பிறகுதான் ஒரு நோயாளியை மாணவராக மாற்றமுடியும்.

மாணவப் பருவத்துக்கு மூன்று நிலைகள் உள்ளன. முதல் நிலை மாணவர், இரண்டாவதாக சீடர், மூன்றாவதாக பக்தர்.

மாணவர் தன்னளவில் கற்றுக்கொள்கிறார். அறிவு என்ற தளத்தை மட்டுமே அவர் சார்ந்திருக்கிறார். அது ஆரம்பம்தான். அவர் தனிப்பட்ட முறையில் உங்களைச் சார்ந்து நின்றால், உங்கள்மீது நம்பிக்கை கொள்ளத் தொடங்குவார். அதன் பிறகு உணர்வுபூர்வமாகச் சார்ந்து நிற்பார். அது அவரைச் சீடராக்கும். உணர்வுபூர்வமாகச் சார்ந்திருக்கும் போதுதான் ஒன்றிணைதல் நிகழத் தொடங்கும்.

முதல் நிலை, தொடர்பு சார்ந்தது. அவர் ஒரு மாணவராக இருக்கும்போது உங்களை ஒரு ஆசிரியராக நினைக்கிறார். அவர் சீடராக மாறும்போது உங்களைக் குருவாக நினைக்கிறார். அப்போது ஒன்றிணைதல் நிகழத் தொடங்குகிறது. உணர்வுபூர்வமான நிலையில் ஒருவித அன்புகலந்த உறவுநிலை தோன்றுகிறது.

சிகிச்சை அளிப்பவருக்கும், நோயாளிக்கும் இடையில் இது போன்ற அன்பு ஏற்படுவதைக் கண்டு ஃபிராய்டு மிகவும் அச்சப் பட்டார். அவர் அதிகம் பயம் கொண்டதால், எந்த நெருக்கத்தையும் அனுமதிக்கவில்லை. உறவு என்பது நடைமுறையில் உள்ளபடி இயல்பாக இருக்க வேண்டும். சிகிச்சையாளர் வெகுதூரம் தள்ளி, ஒட்டாது இருக்க வேண்டும் என்றார். அவர் மனிதர் என்ற வகையில் செயல்படக் கூடாது. நிபுணர் என்ற வகையில் செயல்பட வேண்டும். அவர் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளக்கூடாது என்று அவர் கருதினார்.

இவ்விதம் செயல்பட்டால் உங்களால் அதிக அளவில் உதவிட இயலாது. அறிவு சார்ந்த தளத்தில் சில விஷயங்களில் மட்டுமே தங்கியிருக்க முடியும். சில தவறான புரிதல்கள் விலக்கப்படலாம். உணர்ச்சிவசமான நிலைதான் நிஜமான பிரச்சினை. இயல்புக்கு மாறுபட்ட நிலை தேவையில்லை. உண்மையான பிரச்சினை எங்கோ உணர்வுகளில் இருக்கிறது. நோயாளிக்கு புதுவிதமான உணர்வு தேவைப்படுகிறது. புதிய பார்வை தேவைப்படுகிறது. புதிய மனக்காட்சி தேவைப்படுகிறது. சிகிச்சையளிப்பவர் உணர்வு பூர்வமாகச் சார்ந்திருந்தால் மட்டுமே அது நிகழ முடியும்.

நீங்கள் உணர்வுபூர்வமாகச் சார்ந்திருக்கும் உயர்தளத்தில் இருந்தால் மட்டுமே, இடையூறு இல்லாமல் இருப்பது சாத்தியம். இல்லாதுபோனால் உங்களுக்கு ஏற்படும் இடையூறு நோயாளிக்கு உதவி செய்வதற்குப் பதிலாக அவருக்கு தொந்தரவாக மாறிவிடும்.

மூன்றாவதாகவும், உயர்ஸ்தானத்தில் இருப்பதாகவும் அமைவது பக்தர் நிலையாகும். அந்த நிலையில் குருவும், சீடரும் பிரிந்து இருப்பதில்லை. பிணைப்பு ஏற்படுகிறது. ஒன்றிணைப்பு மட்டுமல்ல, சங்கமும் நிகழ்கிறது. இதுவே கிழக்கு நாட்டவர் களாகிய நமது பாதையாக இருக்கிறது. ஆர்வமுள்ளவர் மாணவராக வருகிறார். குருவின்மீது அன்புகொள்கிறார். சீடராக மாறுகிறார். ஒருநாள் அந்த அன்பு முதிர்ச்சிபெறுகிறது. குருவும் சீடரும் சந்திக் கிறார்கள். நிஜமாகச் சந்திக்கிறார்கள். அந்த சந்திப்பில் பக்தர் பிறக்கிறார்.

அதன்பிறகு குரு மனிதராக இருப்பதில்லை. குரு கடவுளாக எண்ணப்படுகிறார். அதனால்தான் நாம் புத்தரை பகவான் என்று அழைக்கிறோம். கிறிஸ்தவர்கள் கடவுள் என்று கூறும் அர்த்தம் கொண்டதல்ல அது. குரு மனித வடிவில் வாழ்ந்தாலும் அவர் மனிதர் அல்ல என்ற கருத்தைக் கொண்டிருக்கிறார் பக்தர். இப்போது குருவின் உள்ளுறை ஆற்றல்களைக் கண்டுணர முடிகிறது. குரு பூமியில் வாழும் கடவுளாக உருவகப்படுத்தப்படுகிறார். குரு ஆழங் காண முடியாதவர்.

மனோவியல் சிகிச்சை முறைகள் இந்தத் திசையில் திரும்ப வேண்டும். இல்லாதுபோனால் மனநோய் சிகிச்சை ஒரு மதமாக மாறிவிடும். பிரச்சினை மாறாமல் நிலைத்து நிற்கும்.

டிக் தனது பிரச்சினைகளுக்கு உதவி தேவை என்று உணர்ந்தார். மனநோய் சிகிச்சை நிபுணரிடம் செல்ல முடிவு செய்தார். முதல் சந்திப்பின்போது சிகிச்சை நிபுணர் அவரைக் கட்டிலில் படுக்கச் சொன்னார். அவருக்குச் சிரமம் தரும் எதைப் பற்றியும் பேசலாம் என்றார். சற்றுநேரம் கழித்து நிபுணர் தொடர்ந்து பேசலாம் என்றார். எல்லாவற்றையும் ஒலிப்பதிவுக் கருவி பதிவுசெய்து கொள்ளும் என்றார்.

சிகிச்சை முடிந்த பிறகு மனோவியல் சிகிச்சை நிபுணர் அடுத்த சிகிச்சைக்கான தேதியை முடிவு செய்தார். மறுசிகிச்சையின் போதும் முதல் தடவை போலவே சகலமும் நடந்தன. மூன்றாம் சிகிச்சை நடந்த பிறகு மனநோய் சிகிச்சை நிபுணர் கிளம்பினார். டிக் ஆர்வத் துடன் ஜன்னல் வழியே பார்த்தார். நிபுணர் சாலையின் மறுபக்கம் இருந்த மதுக்கடைக்குச் செல்வது தென்பட்டது.

அடுத்த சிகிச்சைக்கு வந்த டிக் தனது கையில் இருந்த ஒலிப்பதிவு நாடாவை நிபுணரிடம் கொடுத்தார். "நான் எனது

வீட்டிலேயே எல்லாவற்றையும் பதிவுசெய்து எடுத்து வந்து விட்டேன். இப்போது நாம் இருவரும் மதுபானம் அருந்த ஒன்றாகவே போகலாம்" என்றார்.

மனநோய் சிகிச்சை நிபுணர் வெறுமனே தொழில்முறைப் பணியாளராக மட்டும் இருக்கலாகாது. மனநோய் சிகிச்சையை தொழில்முறையாக மட்டும் கற்றால் போதாது. அதில் தனது அன்பு, படைப்பாற்றல் திறன், வழிபாட்டு உணர்வு போன்றவற்றையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். அதை ஒரு நிவேதனமாக இயற்கைக்குப் படைக்கவேண்டும். அப்போதுதான் தனது நோயாளிகள் மூலம் அவர் பித்துப்பிடித்த நிலைக்குத் தள்ளப்படாமல் இருப்பார். இல்லாதுபோனால் அப்படித்தான் நடக்கும். அதுதான் இயற்கை நிலையாகும்.

ஒரு அடிப்படை விதியை கவனத்தில் கொள்ளுங்கள். நீங்கள் ஆரோக்கியமாகவே இருக்கிறீர்கள். உடல்நலக் குறைவு என்பது ஒரு நோய்த் தொற்று ஆகும். வெகுகாலம் நோயாளிகளுடன் பழகினால் நீங்களும் நோயாளியாகி விடுவீர்கள். முழுமை நிலை, ஒருங் கிணைதல் என்ற ஆரோக்கியத்தை எட்டினால் மட்டுமே மற்றவர்க ளுக்கு உதவி செய்ய முடியும். நோய்த் தொற்று, நோய் எதிர்ப்புத் திறன் குறைபாடு போன்றவற்றைக் கடந்துசெல்ல முடியும். பிறகு நோயாளிகளால் உங்களுக்கு இடையூறு தோன்றாது.

அது சாத்தியம்தான். இங்கு அதைச் செய்யவே முயன்று வருகிறோம். சிகிச்சையாளர்களை குரு நிலைக்கு உயர்த்துவதே எனது முயற்சியாகும். அதற்குக் குறைவான ஒன்றைச் செய்ய விரும்பவில்லை.

**மூன்றாவது கேள்வி**

**ஓஷோ,**

**ஆயிரக்கணக்கான மக்கள் உங்களுடைய சிகிச்சைக் குழுவில் கலந்து தங்கள் எல்லைகளைக் கடந்து, உணர்வுத் தடை களைத் தகர்த்து எறிகிறார்கள். அவர்கள் மனோவியல் பாதிப்பு களுக்கு ஆட்படமாட்டார்கள் என்பதற்கு என்ன உத்திரவாதம் இருக்கிறது?**

புதிதாக என்ன மனோவியல் பாதிப்புகள் ஏற்பட முடியும்? ஏற்கனவே நீங்கள் பாதிக்கப்பட்டுவிட்டீர்கள். அந்த வேலை ஏற்கனவே முடிந்துவிட்டது. நீங்கள் இன்னும் கூடுதலாக நோய்

வாய்ப்பட முடியாது. நீங்கள் விழுந்ததைவிட இன்னும் கீழே விழ முடியாது. சமூகம் ஏற்கனவே அதைச் செய்துவிட்டது. நாங்கள் உங்களுக்குக் கெடுதி செய்ய இயலாது. அது இப்போது சாத்திய மில்லை. கெடுதி ஏற்கனவே நடந்தேறிவிட்டது.

நாங்கள் இங்கு செய்வது அதை மாற்ற முயல்வதே ஆகும். நீங்கள் ஒரு இந்துவாக, ஒரு முகமதியராக, ஒரு ஜைனராக, ஒரு பௌத்தராக நிலைப்படுத்தப்பட்டு விட்டீர்கள். அது ஒரு கெடுதி யாகும். சில விஷயங்களை நம்பும்படி வற்புறுத்தப்படுகிறீர்கள். எல்லாவிதமான பாரபட்சமான அபிப்பிராயங்களும் மூடநம்பிக்கை களும் உங்களுக்கு அளிக்கப்படுகின்றன. இல்லாத ஒன்றைப் பற்றிய குழப்பங்களால் உருவான மனநோய் உங்கள்மீது திணிக்கப் பட்டுள்ளது. நீங்கள் சிதைவுபட்டுப் போய்விட்டீர்கள். புகழும், பதவியும் பெறவேண்டும் என்ற ஆசை ஜுரம் உங்களுக்கு ஏற்கனவே கையளிக்கப்பட்டு விட்டது. வாழ்க்கை என்பது போட்டி யும், சச்சரவும், வன்முறையும் நிறைந்தது என்று உங்களுக்குச் சொல்லித்தரப்பட்டு விட்டது. வாழ்வின் ஒரே ஆனந்தம் வெற்றி தான். உங்களால் முடிந்தவரை பணம் சேர்ப்பது மட்டுமே பெரு மகிழ்ச்சி. நாட்டின் ஜனாதிபதியாகவோ, பிரதம மந்திரியாகவோ பதவி வகித்தால் மட்டுமே மனம் நிறைவு கொள்ளும். இதைவிட வேறு என்ன கெடுதி வேண்டும்? இவை எல்லாம் மதிப்பற்ற குப்பைகள். இந்த அத்தனையும் உங்களிடம் நிறைந்து கிடக்கின்றன. நீங்கள் உள்ளே பார்த்தால் அதைக் கண்டறியலாம்.

ஒவ்வொரு குழந்தையும் சுத்தமான கண்ணாடிபோல் பிறக்கிறது. புறச்சூழல்களின் பாதிப்பு இல்லாமல், மேகம் இல்லாத வானம் போல், தூசு படியாத கண்ணாடி போல் இருக்கிறது. நாம் அவன் மீது பாய்கிறோம். நம்மிடமுள்ள அபிலாஷைகளோடு அவன் மீது பாய்கிறோம். குழந்தைக்குப் பெயர் சூட்ட மதபோதகர் உடனே வந்துவிடுகிறார். குழந்தை இயல்பாக வளர நாம் அனுமதிப்ப தில்லை. அவனுக்கு நாம் சுதந்திரம் தருவதில்லை. நாம் மாற்றி யமைக்கிறோம். நாம் அவனை அவலட்சணப்படுத்துகிறோம். நாம் அவனுக்குக் கருத்துகளை வழங்குகிறோம். அவை முற்றிலும் பைத்தியக்காரத்தனமானவை. அவன் ஆதரவற்றுப் போகிறான். அவன் அவற்றை அங்கீகரிக்கிறான். அங்கீகரித்தாக வேண்டியுள்ளது.

அவன் சிறிது விழிப்புணர்வு பெறும் சமயத்தில் முழுமையான அளவில் அவனுக்குக் கெடுதி ஏற்படுத்தப்படுகிறது. அதிலிருந்து எப்படி விடுபட முடியும் என்று அவனால் கற்பனை செய்யவும்

முடியவில்லை. தன்னுடன் அதை அவன் அடையாளப்படுத்திக் கொள்ளும்போது "நான் அதுவாகவே இருக்கிறேன்" என்று எண்ணிக் கொள்கிறான். யாராவது ஒருவர் உங்களிடம், "நீங்கள் யார்?" என்று கேட்டால், அதற்கு பதில் என்ன? "நான் யார்?" என்று உங்களை நீங்களே கேட்டுக் கொள்கிறீர்கள். அதற்குப் பதில் என்ன? நான் இந்து, நான் முகமதியன், நான் இந்தியன், நான் பிராமணன், நான் பொதுவுடமைவாதி. நான் இது.... நான் அது.... என்று உங்கள் பதில் எதுவானாலும் அது கெடுதிதான்.

நீங்கள் இது எதுவுமல்ல. நீங்கள் தூய்மையான சாட்சியாக இருக்கிறீர்கள். வேறு எதுவுமாக இல்லை. தூய விழிப்புணர்வு உலகிற்கு வருகிறீர்கள். ஆனால் ஜனங்கள் குப்பைகளை உங்கள் மீது வீசுகிறார்கள். விழிப்புணர்வு விரைவில் தொலைந்து போகிறது. அதில் நீங்கள் திருப்தி கொள்கிறீர்கள். அதுவே வீழ்ச்சி, நிஜமான பாவமாகும். அது விழிப்புநிலையில் இருந்து திருப்திப்படும் நிலைக்கு மாறும் இயல்பாகும்.

செயல்பாட்டை இங்கே திசைமாற்றும் முயற்சி நடைபெறு கிறது. திருப்தி நிலையில் இருந்து விழிப்பு நிலைக்கு மாறுகிறோம். அதுவே எனது முழுமையான பணி. சந்நியாசம் என்பது அதுதான். இந்த பாதிப்பு நம்மை எப்படி நாசப்படுத்த முடியும்?

ஸ்னோ ஒயிட் மருத்துவரிடம் சென்றாள். "டாக்டர்! நீங்கள் என்னைச் சோதித்துப் பார்த்து நான் இன்னும் கன்னித்தன்மையுடன் இருக்கிறேனா என்று சொல்ல முடியுமா?" என்று கேட்டாள்.

அவள் கட்டிலில் படுத்தாள். மருத்துவர் அவளைப் பரிசோதித்தார். பணி முடிந்தபிறகு அவள், "நான் இன்னும் கன்னி தானே?" எறு வினவினாள்.

"கொஞ்சம் வினோதமாகவே இருக்கிறது. உங்கள் கன்னித்திரை பாதிக்கப்படாது இருந்தாலும், அதில் ஏழு சிறிய காயம்பட்ட அடையாளங்கள் உள்ளன. "தொழில்நுட்ப ரீதியாகப் பார்த்தால் நீங்கள் கன்னிகழியாதவர்தான்" என்றார்.

தொழில்நுட்ப ரீதியாக மட்டுமே நீங்கள் மனிதராக இருக் கிறீர்கள் - தொழில்நுட்ப ரீதியாக மட்டுமே - மற்றபடி ஏழு லட்சம் காயம்பட்ட அடையாளங்கள் உள்ளன. உங்கள் பெற்றோர், நீங்கள் சமூகம் என்று கூறும் அமைப்பு, உங்கள் அரசியல்வாதிகள், உங்கள் மதபோதகர்கள் போன்றோர் பெரிய அளவில் உங்கள் மீது நாசத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

இங்கே, எந்த மனோவியல் பாதிப்பும் மனிதர்களுக்கு ஏற்பட வாய்ப்பு இல்லை. காரணம் நாங்கள் சமூகச் சூழ்நிலைகளுக்கு உட்படுத்துவதில்லை. அதிலிருந்து விடுவிக்கிறோம். மறுசூழலுக்கு அவர்களை ஆட்படுத்தி வைப்பதும் இல்லை. நாங்கள் சூழல்களில் இருந்து விடுவிக்கிறோம். நாங்கள் அவர்களை முற்றிலும் நிர்வாண மாக்க முயல்கிறோம். மனோவியல் ரீதியான நிர்வாணம் அது. எந்த கொள்கையையும் நாங்கள் அவர்களுக்குப் போதிப்பதில்லை. கொள்கை, கோட்பாடுகளுக்கு அப்பால் கொண்டுசெல்கிறோம். கொள்கைப் பிடியில் இருந்து விடுபட உதவுகிறோம். எப்படி வாழ்வது என்ற எந்தக் கொள்கையும் இல்லாதிருக்கச் செய்கிறோம். எப்படி வாழ்வை வாழ்வது என்ற எந்தக் கொள்கையும் இல்லாமல் முழுமையாக வாழச் செய்கிறோம்.

நான் உங்களுக்கு வாழ்க்கைத் தத்துவத்தை வழங்கவில்லை. எல்லா வாழ்க்கைத் தத்துவங்களையும் உங்களிடமிருந்து எடுத்து விடுகிறோம். அதன்பிறகு தூய வாழ்வு தானே உருப்பெருகிறது. நீங்கள் சாதிக்கவேண்டிய ஒரு குறிக்கோளை வழங்கவில்லை. எல்லா இலக்குகளையும் நான் அகற்றுகிறேன். எனவே நீங்கள் எதிர்காலம் குறித்து யோசிக்க வேண்டிய தேவையில்லை. எனவே நீங்கள் நிகழ்காலத்தில் வாழலாம். பூரணத்துவ நிலைகுறித்த கருத்தையும் நான் உங்களுக்கு அளிக்கவில்லை. பூரணநிலை பெற்று நீங்கள் வாழவேண்டும் என்று நான் கூறவில்லை. நீங்கள் பூரணத் துவத்துடன்தான் **இருக்கிறீர்கள்** என்று நான் பறைசாற்றுகிறேன். ஒவ்வொருவரும் பூரணத்துவத்துடனே பிறக்கிறார்கள். பூரணமற்ற நிலை என்பது நாம் கற்க வேண்டிய ஒரு விஷயமாகும்.

இயற்கை பூரணத்துவமானது. இயற்கையில் இருந்து பூரண மற்ற நிலை வெளிப்படுவது சாத்தியமில்லை. நாம் பூரணத்துவத் துடன் வந்திருக்கிறோம். இயற்கையின் கையொப்பம் பெற்று நாம் வந்திருக்கிறோம். பூரணத்துவத்தில் இருந்து பூரணத்துவம் வெளிப் படுகிறது. அதன் பிறகு நாம் மாற்றப்படுகிறோம். தள்ளுமுள்ளுக்கு ஆட்பட்ட மனிதர்களால் நாம் தள்ளப்படுகிறோம், இழுக்கப்படு கிறோம். மற்றவர்களால் திருத்தியமைக்கப்படுகிறோம். உடனே நமது திறந்த வானம் மூடிக் கொள்கிறது. கதவுகளும், ஜன்னல்களும் மூடிக் கொள்கின்றன. அதன்பிறகு நாம் இயற்கைக்கு வசப்படுவ தில்லை. நாம் ஜன்னலற்றவர்களாகி விடுகிறோம். அதுதான் நமது துன்பமாகும்.

பூரணத்துவக் கருத்துள்ளவர் ஒரு பைத்தியம். எந்த வகையிலாவது பூரணத்துவம் பெற்றிட வேண்டும் என்று நினைப்பவர் பைத்தியமாக மாறுகிறார். பைத்தியம் என்பது பூரணத்துவக் கருத்தை ஆதாரமாகக் கொண்டது. நீங்கள் ஒருபோதும் பூரணத்துவம் பெற முடியாது. ஏன் உங்களால் பெறமுடியாது? ஏற்கனவே நீங்கள் அப்படித்தான் இருக்கிறீர்கள். மறுபடியும் அப்படி எவ்விதம் மாற முடியும்? உங்களால் அதை கண்டடைய முடியாது. உங்கள் மூக்குக்கண்ணாடியைத் தேடுகிறீர்கள். அது உங்கள் மூக்கின் மீதே இருக்கிறது. அந்தக் கண்ணாடி வழியாகவே பார்த்துத் தேடுகிறீர்கள். நீங்கள் அதைக் காணமுடியாது. அதற்கு சாத்தியமில்லை.

பூரணத்துவம் என்பது நமது இயற்கைப் பண்பு. நாம் பூரணத்துவத்துடன் தான் இருக்கிறோம். எனது அடிப்படை அறிவிப்பு இதுதான். எனவே நாம் பூரணத்தைத் தேடியலையத் தேவையில்லை. நீங்கள் இருக்கும் இந்த பூரண நிலையுடனே வாழ்க்கை நடத்துங்கள். நான் போதிப்பது இதைத்தான். நான் எப்படி உங்களுக்கு கெடுதி ஏற்படுத்த முடியும்? கொள்கைகள் கெடுதி தருகின்றன. இலக்குகள் தீங்கு செய்கின்றன. பூரணத்துவ தத்துவம் கெடுதல் தருகிறது. இவை எல்லாவற்றையும் நான் உங்களிடமிருந்து அகற்றுகிறேன்.

'இயல்பாக வாழுங்கள்' என்று நான் உங்களுக்குப் போதிக்கிறேன். ஒரு கொள்கையைப் பிடித்துக் கொண்டு வாழ்வது மிகவும் சிக்கலானது. அது தந்திரம் நிறைந்தது. மரங்கள், பறவைகள் போல இயல்பாக வாழுங்கள்.

"நாம் எப்படி வாழவேண்டும்?" என்று யாரோ ஒருவர் ஏசுவிடம் கேட்டார்.

அந்த மனிதனின் கண்களை ஏறெடுத்துப் பார்த்தார் ஏசு, "என்னிடம் கேட்காதே! மரங்கள், மலர்கள், மீன்கள், பறவைகளிடம் சென்று கேள்" என்றார்.

அவர் இப்படிச் சொன்னதன் பொருள் என்ன? அவர் கூறுகிறார்: "நாலா புறமும் பார். ரோஜா ஒரு ரோஜாவாகவே இருக்கிறது. தாமரை தாமரையாகவே இருக்கிறது. மயில் மயிலாகவே இருக்கிறது. புறா புறாவாகவே இருக்கிறது. மயில் சிங்கமாக மாற முயல்வதில்லை. சிங்கம் யானையாக மாற முயற்சிப்பதில்லை. ரோஜா தாமரையாக மாற எண்ணுவதில்லை. தாமரை ரோஜாவாக மாற முயல்வதில்லை". இல்லாதுபோனால் எல்லாப் பொருட்களும் மனநோய் சிகிச்சை நிபுணரின் கட்டிலில் சென்று படுக்க வேண்டி

யிருக்கும். எதுவும் வேறொன்றாக மாற விரும்புவதில்லை. அங்கு தான் நமது துயரம் தங்கியிருக்கிறது. நீங்கள் வேறு ஒருவராக மாறிட எண்ணுகிறீர்கள்.

சிலர் புத்தராக மாற நினைக்கிறார்கள். சிலர் ஏசுவாக மாற எண்ணுகிறார்கள். இப்போது நீங்கள் நீங்களாக ஒருபோதும் இருக்க இயலாது. நீங்கள் எப்போதும் நரகத்தில் துயரத்தில் இருக்கிறீர்கள். நீங்கள் நீங்களாக உங்கள் இயல்பான சாதாரண நிலையில் இருங்கள். வித்தியாசமாக மாறவேண்டாம். தெளிவான சாதாரண நிலையில் இருங்கள். அசாதாரணமான நிகழ்வுகள் நிகழக் காண்பீர்கள். உங்கள் சாதாரண நிலை, பேரானந்தம் என்ற நிலையாக மாறும்.

நீங்கள் அசாதாரணமானவராக மாறவேண்டாம். நீங்களாகவே இருங்கள்! மதிப்புள்ளவராக மாறவேண்டாம். நீங்களாகவே இருங்கள்! நீங்கள் துறவியாக மாற வேண்டாம். முழு இயற்கையும் தெய்வீகம் நிறைந்ததாக இருக்கிறது. எல்லாம் கடவுள் நிலைதான்.

நீங்கள் இயல்பாக, தன்னிச்சையாக, விழிப்புடன், கணத்துக்குக் கணம் வாழுங்கள். எதிர்காலத்துக்காக நிகழ்காலத்தைத் தியாகம் செய்யலாம். நாளைய தினத்துக்காக இன்றைய நாளைப் பலியிடாமல் வாழுங்கள். ஏனென்றால் நாளை என்பது என்றும் இல்லை.

அதுதான் உங்களுக்குக் கெடுதி செய்வதாக இருக்கிறது. நாளை பற்றிய எண்ணம், எதிர்காலக் கனவு, ஏசு போல, புத்தர் போல நீங்கள் மாறநினைப்பது போன்றவைதான் உங்களது துயரங்களாக இருக் கின்றன. உங்களால் அது முடியாது. கடவுள் மீண்டும் தோன்றுவ தில்லை. அவர் தனித்துவமான மனிதர்களை உருவாக்குகிறார். அவர் நகல் பிரதிகளை உருவாக்குவதில்லை. நிஜமானவற்றை மட்டும் அவர் உருவாக்குகிறார்.

ஆயிரக்கணக்கான வருடங்கள் கடந்துவிட்டன. இன்னொரு கிருஷ்ணரை, இன்னொரு புத்தரை, இன்னொரு ஏசுவை நாம் கண்டதில்லை. ஏன்? கடவுள் மீண்டும் தோன்றுவதில்லை. அவர் **உண்மையான** படைப்பாளி. அவர் படைப்பாற்றலாக இருக்கிறார். மீண்டும் தோன்றுவது அசிங்கமானது. அவர் களைத்துப் போய் விட்டார் என்று அர்த்தமாகிறது. கடவுள் களைப்பற்ற ஒரு படைப்பு. அவர் உங்களை உருவாக்கினார். அவர் உங்களுக்கு மதிப்பு அளித் திருக்கிறார். அவர் உங்களை நேசித்தார். உங்களை உருவாக்குவதில் அவர் உங்களிடம் ஏற்கனவே நேசம் கொண்டிருந்தார். உங்களை நீங்கள் நேசியுங்கள்! மற்றவர்போல் மாறும் எண்ணம் சுய வெறுப்பின், சுய குற்றச்சாட்டின் அடிப்படையில் தோன்றியதாகும்.

உலகில் இந்த ஒரு இடம்தான் நீங்கள் மனோவியல் கெடுதியால் பாதிக்கப்படாத இடமாகும்.

**நான்காவது கேள்வி**

**ஓஷோ,**

**நான் இங்கு ஒரு மாதமாகத் தங்கியிருக்கிறேன். நான் கடைசியாக தங்கியிருக்கும் நிலைக்கு வந்துவிட்டேன். நிறைய நன்றி சொல்ல வேண்டும் என்று தோன்றுகிறது. உங்களிடமிருந்து விடைபெற்றுக்கொள்ளாமல், குறைந்தபட்சம் ஆசீர்வாதமாவது பெற்றுக்கொள்ளாமல் பதுங்கி வெளியேற விரும்பவில்லை.**

**உங்களிடமும், உங்கள் போதனைகளிலும் எனக்கு ஏற்பட்ட அனுபவம் முரண்பாடு தொனிப்பது போல் இருந்தாலும் அதில் உண்மை இருக்கிறது என்பது தெளிவாகிறது. அன்பு, விருப்பம், வாழும் ஆசை, நம்பகத் தன்மைபற்றி நீங்கள் பேசும்போது ஒரு என்னுள்ளே அங்கீகார உணர்வு தோன்றுகிறது. அவை எனது உச்சங்களில் தரிசித்த உண்மைகள் என்ற எண்ணம் ஏற்படுகிறது.**

**ஆனால் நீங்கள் விலகியிருத்தல், இடைவெளி ஏற்படுத்திக் கொள்ளல், கவனித்தல் போன்றவை குறித்துப் பேசும்போது அச்சமும், உறைந்து போகும் நிலையும் ஏற்படுகின்றன.**

**முரண்பட்ட நிஜங்களை என்னால் உள்வாங்க முடியவில்லை. அன்பு கொள்ளும் நான் எப்படி விலகியிருக்க இயலும்? அழகான காட்சியில் என்னை மறக்கும் நான் எப்படி விலகி நிற்க முடியும்? அது நிகழுமானால், என்னால் எப்படி அன்பு காட்டியபடி இடைவெளி ஏற்படுத்திக்கொள்ள முடியும்?**

**ஆதரவின்றிச் சொர்க்கத்துக்கும், நரகத்துக்கும் பேரின்பத்துக்கும், அவநம்பிக்கைக்கும் இடையே ஊசலாடுவது நிஜம்தான் என்பதை என் வாழ்வில் அறிந்து, அதை அங்கீகரிக்கிறேன். அந்த ஆதரவற்ற நிறை திருப்தியளிக்காது இருப்பதுடன், துயரம் தருவதையும் காண்கிறேன். உற்சாகமற்ற, ஒதுங்கியிருக்கும் நிலைதான் அதற்கு மாற்றாக இருக்கும் எனும்போது சொர்க்க, நரக, இன்ப, துன்ப நிலைகளில் ஊசலாடிக் கொண்டிருப்பதே மேல். ஞானம் பெறுதல் என்பதை மறந்து விடலாம் என்று தோன்றுகிறது.**

வாழ்க்கை என்பது முரண்பட்ட ஒரு நிஜம் என்பதுதான் நாம் புரிந்துகொள்ள வேண்டிய முக்கியமான விஷயம். வாழ்க்கை முரண்பாடுகளின் மத்தியில் அமர்ந்திருக்கிறது. வாழ்க்கை தர்க்க ரீதியானது அல்ல. அது முரண்பாடானது. அது பிறப்பு, இறப்புக்கு நடுவில் அமைந்திருக்கிறது. இரவுக்கும், பகலுக்கும் நடுவே தங்கி யிருக்கிறது. வெறுப்புக்கும், அன்புக்கும் இடையே அது வாழ்கிறது. ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையே அது ஜீவிக்கிறது. அது நேர் முனை மின்சாரத்திற்கும், எதிர்முனை மின்சாரத்திற்கும் இடையில் வாழ்கிறது. ஆக்கம், அழிவுக்கு நடுவே அது இருக்கிறது. சிவ, சக்திக்கு நடுவே அது இருக்கிறது.

நாலாபுறமும் பாருங்கள். உள்ளும், வெளியிலும் பாருங்கள். எல்லா இடங்களிலும் முரண்பாடு இருப்பதைக் காணலாம்.

வாழ்க்கை தர்க்கம் போன்றதாக இருந்தால் அங்கு முரண்பாடு எழாது. ஆனால் வாழ்க்கை தர்க்கரீதியானது அல்ல. அப்படி இருக்கவும் முடியாது. அன்புமட்டும் உள்ள, வெறுப்பு இல்லாத உலகைப் பற்றி யோசித்துப்பாருங்கள். அங்கு அன்பு சாத்தியமல்ல. வெறுப்புபோலவே அதுவும் மறைந்து போய்விடும். இருள் மட்டும் உள்ள, அல்லது ஒளி மட்டுமே உள்ள ஒரு உலகைக் கற்பனை செய்து பாருங்கள். அது சாத்தியமில்லை. பிறப்புமட்டுமே உள்ள இறப்பு இல்லாத ஒரு உலகம் இருக்குமானால் அது தர்க்கரீதியாக இருந்தால் மட்டுமே இயலும். அப்படி இருந்துவிட்டால் அது சலிப்பூட்டு வதாக அமைந்துவிடும்.

வாழ்க்கை விவாத சாஸ்திரம் சார்ந்தது. தர்க்கம் சார்ந்தது அல்ல. எதிரெதிர் துருவங்களுக்கு இடையே அது பயணிக்கிறது. அந்த துருவங்கள் உண்மையில் எதிரானவை அல்ல. எதிரானவை போல் தோன்றினாலும், ஒன்றுக்கொன்று இசைந்து செயல்படுபவை. வெறுப்பும், அன்பும் இரண்டு விஷயங்கள் அல்ல. உண்மையில் அது ஒன்றேதான். **அன்பு வெறுப்பு. பிறப்பு இறப்பு** என்பதும் ஒன்றுதான். **பகல் இரவு** என்பதும் ஒன்றே. **ஆண் பெண்** என்பதும் ஒன்றே. அவை இமயமலையில் உள்ள சிகரங்கள், பள்ளத்தாக்குகள் போன்றவை. பள்ளத்தாக்குகள் இல்லாமல் சிகரம் இருக்காது. சிகரம் இல்மாமல் பள்ளத்தாக்குகள் இல்லை. அவை இரண்டும் ஒன்று சேர்ந்திருக்கின்றன.

இந்த முரண்பாடு எங்கும் எல்லாத் தளங்களிலும் காணப்படு கிறது.

"உற்சாகமற்று ஒதுங்கியிருக்கும் நிலைதான் அதற்கு மாற்றாக இருக்கும் எனும்போது சொர்க்க, நரக இன்ப, துன்ப நிலைகளில் ஊசலாடிக் கொண்டிருப்பதே மேல். ஞானம் பெறுதலை மறந்து விடலாம் என்று தோன்றுகிறது" என்று கூறுகிறீர்கள். நீங்கள் உற்சாக மற்ற, ஒதுங்கி இருக்கும் வாழ்வை மேற்கொள்ள வேண்டும் என்று நான் கூறவில்லை. ஆசை நிறைந்த அன்பும், உற்சாகமற்ற தனிமையும் முரண்பட்ட நிஜங்கள் என்றுதான் நான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். அதே முரண்பட்ட நிலைதான் பிறப்பு-இறப்பு, அன்பு - வெறுப்பு இடையிலும் நிலவுகின்றது. ஆசைகொண்ட மனிதனால்தான் ஒதுங்கியிருத்தல் பற்றி அறிந்துகொள்ள முடியும். இதுவரை இதற்கு எதிர்ப்பதமாகவே சொல்லித் தரப்பட்டு வந்ததால் இப்போது உங்களுக்கு வியப்பு ஏற்படுகிறது.

புத்தர் உற்சாகமற்ற, ஒதுங்கிய நிலை வாழ்விலிருந்து வெகுதூரம் விலகியிருந்தார் என்று உங்களுக்குச் சொல்லப்பட்டிருக் கிறது. லௌகீகவாதி ஆசை நிறைந்தவன். ஆன்மீகவாதியான துறவி ஆசை துறந்தவர், லௌகீகவாதி பரபரப்பில் வாழ்கிறார். துறவி மடாலயத்தில் குடியேறி அமைதியாக வசிக்கிறார் என்று சொல்லி வைத்திருக்கிறார்கள். இன்றுவரை அப்படித்தான் சொல்லி வருகிறார்கள். அந்த இரண்டும் பொருத்தமற்ற கூற்று. லௌகீகவாதி துருவத்தின் ஒரு பகுதியை மட்டுமே அறிகிறார். அதுவே அவரது துயரமாக மாறுகிறது. அவர் பரபரப்பைமட்டுமே அறிகிறார். புத்தராக இருப்பதில் உள்ள இதமளிக்கும் அமைதியை அறிவ தில்லை. துறவியாக இருப்பவர் அமைதியை மட்டும் உணர்கிறார். இன்பத்தை அறிவது கிடையாது. பரபரப்பான ஆர்வத்தில் உள்ள கொண்டாட்டத்தை, ஆனந்தத்தை அறிவதில்லை.

கிரேக்க ஜோர்பாக்கள் பரபரப்பான ஆவல்பற்றி மட்டுமே அறிகிறார்கள். புத்தர் பற்றிய 'நமது கருத்து' அங்கு உள்ளது. புத்தரின் 'நமது கருத்து' என்று நான் அதை அழைக்கிறேன். நிதானமான அமைதி கொண்டவர்கள் மட்டுமே அறிவார்கள். துருவநிலையை நாம் பாகுபடுத்தியிருக்கிறோம். ஏனென்றால் இந்தப் பாகுபாட்டின்படி லௌகீகவாதி செல்வந்தர் அல்ல. அவர் பாதி கடந்த அரை நிலை யில் உள்ளவர். ஆன்மீகவாதியும் முழுமையானவர் அல்ல. முழுமை பெறாமல் அவர் புனிதம் பெறமுடியாது. மறுதுருவமுனை பற்றி அறியாதவரை முழுமை வந்து சேராது. எனவே இருவரும் துயரப் படுகிறார்கள்.

கடைத்தெருவுக்குச் சென்று பாருங்கள், மடாலயத்திற்குள் சென்று பாருங்கள். மடாலயத்தில் பெருமளவு துயரமும், சலிப்பும், உயிரற்ற தன்மையும் நிலவுவதைக் காண்பீர்கள். உங்கள் துறவிகளின் விழிகளில் முட்டாள்தனம்தான் தெரியும். வேறு ஒன்றும் தென் படாது. ஒற்றைத் துருவத்தில் நீங்கள் வாழும்போது கூர்மையை, பல்வகை நிலைகளை, செழுமையை இழக்கிறீர்கள்.

எதையும் தேர்வுசெய்யத் தேவையில்லை. விஷயங்கள் குறித்த எனது பார்வை இதுதான். தேர்வு செய்யாது இருங்கள். துருவங்களின் விளையாட்டை நீங்கள் காண்பீர்கள். இரண்டும் உங்களுடைய துருவங்கள் இரண்டிலும் வாழ வேண்டும். ஆழமாக, ஆர்வமாக, நம்பகத்தன்மையுடன் விருப்பத்துடன் அமைதியும், மௌனமும், நிதானமும் கொண்ட வாழ்வை வாழவேண்டும். நீங்கள் நேசம் கொள்ள வேண்டும். தியானிக்க வேண்டும். அன்பும், தியானமும் பிரிக்க முடியாதவை. அவை சிகரமும், பள்ளத்தாக்கும் போல ஒன்றிணைந்து உள்ளன.

சிகரத்துக்கு அழகு உண்டு. சூரிய ஒளி மின்னும் உச்சி, புதிய பனி போன்றவை உண்டு. காலை ஒளியில் எல்லாம் தங்க மயமாக இருக்கும். முழு நிலவு வேளையில் வெள்ளியாக ஜொலிக்கும். காற்றில் தூய்மை தென்படும். நட்சத்திரங்களுக்கு அருகில் இருப்பீர்கள். அவற்றோடு நீங்கள் மெல்ல முணுமுணுக்கலாம். அதுபோல பள்ளத்தாக்கும் அழகுதான். இருட்டும், அதில் வெல்வெட் கட்டமைப்பும் காணப்படும். இருளும் அதன் எல்லை யற்ற தன்மையும், அதன் விசித்திரங்களும் உண்டு. மரங்களின் நிழல்களும், நீரோடைகளின் சலசலப்பும் தென்படும். இரண்டும் அழகானவைதான்.

ஒன்றைமட்டும் தேர்வு செய்யவேண்டாம், இரண்டையும் ஏற்றுக்கொள்ளுங்கள் என்று நான் உங்களுக்குப் போதிக்கிறேன். மேலும் கூர்மைபெற அந்த இரண்டும் ஒன்றுக்கொன்று உதவிகரமாக இருக்கும். ஒரு பக்கம் கிரேக்க ஜோர்பா. மறுபுறம் கௌதம புத்தர். நான் ஜோர்பா, புத்தர் என்ற இரண்டையும் போதிக்கிறேன்.

அதனால்தான் ஜோர்பாக்கள் எனக்கு எதிராக இருக்கிறார்கள். காரணம், அவர்களால் புத்தர் பற்றி யோசித்துப் பார்க்கவே முடியாது. பொதுவுடமைவாதிகளும், முதலாளித்துவவாதிகளும் எனக்கு எதிராக இருக்கிறார்கள். காரணம், நான் கடவுளை ஏன் உள்ளே நுழைக்கிறேன் என்று கேட்கிறார்கள். **சங்கராச்சாரியா** எனப்படும் ஆன்மீகவாதிகளும், கத்தோலிக்கப் போப்பாண்டவரும் எனக்கு

எதிராக இருக்கிறார்கள். நான் ஆன்மீகவாதிகள் வாழ்வில் அன்பை எப்படிக் கொண்டுவர முயற்சிக்கலாம் என்று கேட்கிறார்கள். உடலையும், உடல்சார்ந்த இன்பத்தையும் எப்படி எடுத்துவரலாம் என்கிறார்கள்.

இருவரும் என்மீது கோபத்துடன் இருக்கிறார்கள். ஆழ்மனத் திலிருந்து காமம் வரையிலான பாதை என்று நான் கூறுகிறேன். நான் காமத்துடன் நின்றுவிடவேண்டும் என்று ஒருவர் விரும்புகிறார். மற்றொருவர் நான் காமம்குறித்துப் பேசக்கூடாது என்கிறார். ஆழ்மனம் பற்றி மட்டுமே பேசவேண்டும் என்கிறார்.

முழுமையான நிறமாலையுடன் வாழ்வை நான் ஏற்றுக் கொள்கிறேன். வாழ்வை அதன் முழுமைத்தன்மையுடன் அங்கீ கரிக்கிறேன். முழுமையை அங்கீகரிக்கும் போதுதான் அதை ஏற்க முடியும். சிலவற்றை நீங்கள் நிராகரித்தால், கடவுளைவிடவும் புத்தி சாலியாக மாறுவதற்கு முயல்கிறீர்கள் என்றாகிறது. அவர் அதை நிராகரிக்கவில்லை. உங்கள் மகாத்மாக்கள் கடவுளைக்காட்டிலும் புத்திசாலிகளாக மாற முயற்சி செய்கிறார்கள்.

வாழ்க்கை எதிரெதிர் முனைகளில் வாழ்கிறது. அழகுடன் வாழ்கிறது.

நீங்கள் காதல்கொண்டால், தனித்து இருக்கும் விருப்பம் விரைவில் தலைதூக்கும். ஒவ்வொரு காதலரும் உணர்கிறார்கள். உங்களுக்கு அந்த உணர்வு ஏற்படாவிட்டால், நீங்கள் காதல் கொண்டிருக்க மாட்டீர்கள். உங்கள் காதல் அரைமனதாக இருக்கும். அது நிஜமான நேசமல்ல. அது நேசமாக இருந்தால், தனித்திருக்க விரும்பும் ஆவல் பெருமளவு தோன்றும். தனது சுயஸ்தானத்தில், உள்முகமாகச் சென்று, அதில் வீழ்ந்து மறையத் தோன்றும். காதலின் போது அதிகம் ஆர்வம் தோன்றினால் சலிப்பும், தளர்ச்சியும், வெறுமையும் ஏற்படும். உங்களை வெறுமையாக்கிக் கொள்வது அழகானது. ஆனால் உங்களுக்குப் போஷாக்கு வேண்டும் என்ற உணர்வை விரைவில் பெறுவீர்கள். நீங்கள் எங்கிருந்து போஷாக்குப் பெறுவது? நீங்கள் உள்முகமாகப் பயணம் செய்கிறீர்கள். தப்பித்து உள்ளே ஓடுகிறீர்கள். உலகை ஒதுக்கிக் கண்களை மூடிக் கொள் கிறீர்கள். மற்றவர்களைப் பற்றி மறந்துவிடுகிறீர்கள். உள்முகத் தருணங்களில் ஆற்றல்கள் பெருகியிருக்கும். நீங்கள் நிறைந்து போய் விட்டதாக மீண்டும் உணர்கிறீர்கள். அந்த அதீத நிறைவினால் சக்திப்பிரவாகம் ஏற்படுகிறது. உங்கள் சக்தியைப் பகிர்ந்துகொள்ள யாராவது ஒருவர் தேவை என்று விருப்பமும் தேடலும் ஏற்படுகிறது.

உங்கள் பாடலைப் பகிர்ந்துகொள்ளத் தயாராக, நடனமிடத் தயாராக இருப்பவரைத் தேடுகிறீர்கள்.

தனிமையில் இருந்து, சேர்ந்திருக்கத் தூண்டும் பெருவிருப்பம் எழுகிறது. அது ஒரு தாள லயமாகும்.

நான் உங்களை உற்சாகமற்று இருக்கச் சொல்லவில்லை. வாழ்வில் விலகித் தனித்திருக்கவும் சொல்லவில்லை. அவை வாழ்வின் இரண்டு பக்கங்கள் என்று கூறுகிறேன். நீங்கள் பல பரிமாணங்கள் கொண்ட வாழ்க்கை வாழ்ந்திட விரும்பினால், பருப் பொருள், சூட்சும அம்சம், உடல், மனம், அன்பு, தியானம், வெளிப் புறத்தேடல், அகத்தேடல் பயணம் என்று அது பலவகைப்படலாம். வாழ்வை நீங்கள் அதன் முழுமை நிலையுடன் வாழவிரும்பினால், உட்சுவாசம், வெளிச் சுவாசம் என்பதில் நீங்கள் எதையும் தேர்வு செய்ய முடியாது. தேர்வு செய்தால் இறந்து போய்விடுவீர்கள்.

அதனால்தான் கடைத்தெருக்களில் நீங்கள் உயிரற்ற மனிதர் களைக் காண்கிறீர்கள். மடாலயத்து மனிதர்கள் உயிரற்றுக் காணப் படுகிறார்கள். காரணம் சிலர் உள்மூச்சை மட்டும் தேர்வு செய் கிறார்கள். சிலர் வெளி மூச்சைத் தேர்வு செய்கிறார்கள். சுவாசத்திற்கு இந்த இரண்டும் தேவை. மூச்சை வேகமாக வெளியேற்றினால் அதன் மூலம் பலமான உள்மூச்சு கிடைத்து சுவாசம் பூரணமான சுழற்சி நிலை பெறுகிறது. பலமாக மூச்சை உள்வாங்கும்போது அதனால் வேகமான வெளிமூச்சு ஏற்படுகிறது.

உங்கள் உட்சுவாசம் பலமாக இல்லாது போனால் வெளிச் சுவாசமும் பலமாக இருக்காது என்பதை கவனத்தில் கொள்ளுங்கள். உங்கள் உட்சுவாசம் பலமற்று இருந்தால் வெளிச்சுவாசமும் பலமற்றே இருக்கும். அவை ஒன்றையொன்று சமநிலைப்படுத்திக் கொள்கின்றன. நீங்கள் பலமாக மூச்சை வெளியேற்றினால், உள் மூச்சும் பலமாக உட்செல்லும். இந்த ஒற்றுமையை நான் போதிக் கிறேன்.

நீங்கள் கவலைப்பட வேண்டாம். ஆனால் கவலை கொள்ளத் தொடங்குகிறீர்கள். சிலசமயம் நான் அன்பு பற்றி போதிக்கும்போது அது நல்ல உணர்வை உங்களிடம் ஏற்படுத்துகிறது. ஆனால் மனம் திறந்து சொல்கிறேன். அன்பு பற்றி உங்களுக்கு நிஜமாக எதுவும் தெரியாது. நீங்கள் அன்பை அறிந்தால் மறுதுருவத்தையும் உணர்ந்து கொள்வீர்கள். உங்கள் சொந்த அனுபவம் மூலம் காதல் கொண்டால் தனிமையில் இருக்க பெருவிருப்பம் தோன்றும் என்றும், தனிமை

யில் இருந்தால் சேர்ந்திருக்க ஆவல் எழும் என்றும் உணர்ந்து கொள்வீர்கள்.

ஒவ்வொருவரும் கற்றுக் கொள்ள வேண்டிய உண்மை இது தான். காதலர்கள் அதை அறிந்துகொள்வதில்லை. தனிமையில் இருக்கும்போது குற்ற உணர்வு கொள்கிறீர்கள். நீங்கள் தனித்து இருக்க விரும்பினால், மற்றவர் தான் நிராகரிக்கப்பட்டதாக எண்ணுவார். இது முற்றிலும் தவறான புரிதலாகும். "என்னைத் தனியே விடு" என்று கணவன் சொன்னால், தான் ஒதுக்கப்பட்டதாக மனைவி எண்ணுகிறாள். கோபம் கொள்கிறாள். இனி அவள் தேவையில்லை என்று கூறுவதுபோல் இருப்பதாக நினைக்கிறாள். அது அப்படியல்ல. அவர்கள் முழு விஷயத்தையும் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். ஒருநாள் மனைவி "என்னைத் தனியே விடுங்கள்" என்று சொன்னால் கணவன் மனது துயரப்படுகிறது. அவனது தன்மானம் காயம்படுகிறது.

நீங்கள் காதலரிடமோ, அன்பு காட்டுபவரிடமோ "நான் சில நாட்கள் தனியே இருக்க விரும்புகிறேன். மலைப் பிரதேசத்திற்குச் சென்று சில வாரங்கள் தனித்திருக்க எண்ணுகிறேன்" என்கிறீர்கள். மற்றவர் அதை புரிந்துகொள்ளமாட்டார். அன்பு தனிமையை உருவாக்குகிறது என்ற அடிப்படை உண்மையை அவர் தெரிந்து கொண்டதில்லை. தனிமைநோக்கி நீங்கள் செல்லாவிட்டால் உங்கள் காதல் மட்டமானதாகிவிடும். மெல்லமெல்ல அது போலியானதாகி விடும். தனது நம்பகத்தன்மையை இழந்துவிடும்.

வாழ்வின் முழுமையை அப்படியே ஏற்றுக்கொள்ளுங்கள். பரபரப்பான ஆர்வம் வாழ்வில் காட்டுவது நல்லது. உற்சாகமற்று இருப்பதும் நல்லதுதான். அந்த இரண்டும் உங்கள் சிறகுகளாகட்டும். ஒரு சிறகை வெட்டாதீர்கள். உங்களால் நித்தியப் பயணத்தில் ஒரு போதும் ஈடுபடவே முடியாது. தனிமையில் இருந்தே தனிமை நோக்கிச் செல்ல வேண்டும். புளூட்டோனியஸ் இதைத் தனி மனிதன் பிரபஞ்ச ஆன்மாவுடன் இணையும் பயணம் என்று கூறுகிறார். உங்களுக்கு அதற்கு இரண்டு சிறகுகளும் வேண்டும்.

நான் உங்களுக்குக் காதல்பற்றியும், தியானம்பற்றியும் போதிக்கிறேன். இரண்டின் அபாரமான இசைவுபற்றிப் போதிக் கிறேன். நீங்கள் இசைவை ஏற்படுத்தவேண்டும் என்று அதற்கு அர்த்தமல்ல. இணைவு என்பது இயற்கை. அதை நீங்கள் இடைஞ்சல் செய்யாது இருந்தால் மட்டும் போதும். உங்கள் சுயஅனுபவத்தைக் கவனியுங்கள். நான் சொன்னது எதுவோ அது நிரூபணமாகும்.

மதிப்புள்ளதாக அமையும். காரணம், நான் இங்கு கொள்கைபற்றி எதுவும் பேசவில்லை. நான் நிஜங்கள் பற்றித்தான் பேசுகிறேன்.

பெரிதும் சிலாகித்துப் பேசப்பட்ட ரஷ்யநாட்டுப் படைவீரர் ஒருவர் ஃபின்லாந்து நாட்டு எல்லைப் பகுதியில் இருந்து திரும்பி வந்தார். அங்கு அவர் வீரம் செறிந்த சேவை புரிந்திருந்தார். கடுங் குளிர் பருவத்தில் மலையில் மாதக்கணக்கில் பணிபுரிந்திருந்தார். அவர் நீண்டகாலம் குடும்பத்திலிருந்து விலகியிருந்தார்.

ஒரு செய்தியாளர் அவரிடம் வந்தார். கண்சிமிட்டியபடி அவர் கேட்டார். "சொல்லுங்கள் காப்டன் இவான் பெட்ரோவிச், ஒரு ஆண்டுக் காலம் நீங்கள் மனைவியைவிட்டு விலகியிருந்தபிறகு இரண்டாவதாகச் செய்த காரியம் என்ன?"

தயக்கமின்றி இவான் பதில் கூறினார். "இரண்டாவது விஷயமா? நான் பனிச்சறுக்கு செய்யப் புறப்பட்டதுதான்."

நீங்கள் நீண்டகாலம் மலையில் இருந்தால் எப்படி பனிச் சறுக்குக் கட்டையை அகற்ற முடியும்?

கடலில் ஆறுமாதம் பயணம் செய்துவிட்டு ஒரு கப்பல் துறை முகத்திற்குள் வந்துகொண்டிருந்தது. திரும்பிவரும் கணவன் மார்களை வரவேற்க நகரத்துப் பெண்கள் சரக்கு மேடை அருகே நின்றிருந்தார்கள். ஒரு பெண் கப்பலில் முன்புறம் நின்றபடி கணவனைப் பார்த்துக் கையசைத்து "E-F! E-F!" என்று குரல் கத்தித்தாள்.

அவன் "F-F! E-F!" என்று கொடுத்தான்.

"E-F! E-F!"

"F-F! F-F!"

பக்கத்தில் நின்றிருந்த ஒருவர் தன் மனைவியிடம் இதென்ன "E-F! F-F!" விவகாரம்?

அவள் "நாம் முதலில் சாப்பிட வேண்டும் என்று கூறுகிறேன்" என்றாள்.

இன்று இவ்வளவு போதும்.

# சார்ந்திருத்தல் ஒருவழிப் பாதையல்ல

அத்தியாயம் - 9

## முதல் கேள்வி

ஓஷோ

மனமற்ற நிலைதான் உன்னதமான பிரார்த்தனையா?

பிரார்த்தனை என்பது ஒரு செயல் அல்ல. பிரார்த்தனை என்பது சிந்தனையும் அல்ல. பிரார்த்தனை என்பது அமைதிநிலை. முழுமையான அமைதி நிலையாகும். அதில் ஒன்று இருக்கிறது. அதுவே பிரார்த்தனையாகும். நீங்கள் தியானம் செய்யும்போது முழுமையைத் தவறவிடுகிறீர்கள். வெளிவட்டத்தில் தங்கியிருக்கிறீர்கள். செயல் என்பது உங்கள் மையத்தில் நுழையாது.

உங்கள் பிரார்த்தனைகளைச் சொல்லும்போது மீண்டும் தவற விடுகிறீர்கள். பிரார்த்தனை வாசகங்கள் சொல்லும்போது உங்களைப் பற்றிச் சிந்திக்கிறீர்கள். இயற்கையிலிருந்து விலகியிருப்பதாக நினைக்கிறீர்கள். இயற்கை உங்களிடமிருந்து விலகியிருப்பது போலிருந்தாலும் நீங்கள் அதனுடன் சம்பந்தப்பட்டிருக்கிறீர்கள். அதுதான் அடிப்படையான மாயை. இயற்கை உங்களிடமிருந்து விலகியிருக்கவில்லை.

எனவே பிரார்த்தனை என்பது உங்களுக்கும் எனக்கும் இடையிலான உரையாடலாக இருக்கக்கூடாது. நான் என்பதும் நீங்கள் தான். எனவே உரையாடல் நடத்தச் சாத்தியம் இல்லை. நீங்கள் பிரார்த்தனை வாசகங்கள் சொல்லும் கணத்தில், இயற்கை என்பது உங்களிடமிருந்து விலகி வெகுதூரத்தில் இருக்கிறது என்ற தவறான அனுமானத்தை ஏற்றுக் கொண்டவராகிறீர்கள். இயற்கையை பருப்பொருள் நிலைக்குத் தரம் தாழ்த்துகிறீர்கள். ஆனால் அது உணர்வு சார்ந்த உங்கள் ஆழ்மையமாகும்.

உபநிஷதம் 'நீங்கள் அதுவாகவே இருக்கிறீர்கள்' என்று பொருள்படும்படி **தத்துவமஸி** என்று கூறுகிறது.

முழுமையான மௌனத்தில் இருப்பதே பிரார்த்தனையில் இருப்பதற்கான ஒரே வழியாகும். அந்த மௌனத்தில் ஒரு நன்றிப் பிரவாகம் இருக்கும். அது வார்த்தைகளால் உருவானதல்ல. பெரிய அளவில் நன்றி நவிலல் இருக்கும். ஆனால் அது சொல்லப்படுவதில்லை. பேசப்படுவதில்லை. அது ஒரு பேரின்பமாகும். ஒரு தரிசனமாகும்.

ஆம். மனமற்ற நிலை உன்னதமான பிரார்த்தனையாக இருக்கிறது. பிரார்த்தனையும், தியானமும் சந்திக்கும் இடம்தான் மனமற்ற நிலையாகும். தியானமும் மனமற்ற நிலைக்கு அழைத்துச் செல்கிறது. பிரார்த்தனையும் மனமற்ற நிலைக்குக் கொண்டு செல்கிறது. மனமற்ற நிலை என்பது ஒரு உச்சி. அங்கு அறிவின் பாதையும், இதயத்தின் பாதையும் சந்திக்கின்றன. அங்கு ஜென்னும் சூஃபியிஸமும் ஒன்றுபடுகின்றன.

மனஎண்ணங்களை உதறித்தள்ளுவதில் ஜென் பாதை துவங்குகிறது. எண்ணங்களின் செயல்பாடு குறித்து மேலும் மேலும் விழிப்புடன் இருக்கிறது. மிகவும் விழிப்புடன் இருக்கும்போது, அந்த விழிப்பின் உஷ்ணத்தில் எண்ணங்கள் ஆவியாகின்றன. நீங்கள் முழுமையான நிர்வாணத்திலும், தனிமையிலும் விடப்படுகிறீர்கள். அதுவே தியானத்தின் பாதையாகும். மனதின் வழியே அது செயல்படுகிறது. அது மனதுக்கு எதிராக இருக்கிறது. அது மனதை வெல்கிறது. ஆனால் பாதையானது மனதின் வழியேதான் செல்கிறது.

காதலர்கள், பக்தர்கள், சூஃபி பிரிவினர் போன்றவர்களின் பாதை நேரடியாக இயத்தினூடே பயணிக்கிறது. அது மனதை ஒதுக்கித் தள்ளிவிடுகிறது. அது மனதின்வழியே செயல்படுவதில்லை. உணர்வுகள் வழியே செயல்படுகிறது. உணர்வுகள் அமைதி

யானவை. பேச்சு இல்லாதவை. உங்களால் தொடர்புகொள்ள முடியாது. நீங்கள் ஒன்றிணைய மட்டுமே முடியும்.

'ஜென்'னில் எண்ணங்கள் சுருக்கப்படுகின்றன. அவை சுருங்கும்போது உங்கள் சக்தி வெளிப்படுகிறது. நீங்கள் மனமற்ற வராகிறீர்கள். சூஃபியிஸத்தில் எண்ணங்கள் பலப்படுத்தப்படு கின்றன. உணர்வுகள்மீது உங்கள் சக்தியைப் பொழிகிறீர்கள். உணர்வுகள் மேலும்மேலும் பலம் பெறும்போது எண்ணங்கள் தானாகவே மறைகின்றன.

அந்த இரண்டு பாதைகள் வழியாகவும் நீங்கள் மனமற்ற நிலை என்ற கோவிலை அடைகிறீர்கள். அதுவே தியானம், மற்றும் பிரார்த்தனையின் உன்னத நிலையாகும். அங்கு ஜென்வாதி சூஃபி வாதியாகிறார். அங்கு புத்தரும், பஹாவுத்தீனும் சந்திக்கிறார்கள். அங்குதான் எல்லா மதங்களும் முழுமை என்ற கடலுக்குள் நுழைகின்றன.

மதங்கள் நதிகள் போன்றவை. மனமற்ற நிலை சமுத்திரம் போன்றது. எங்கிருந்து வந்தாலும், எந்தத் திசையிலிருந்து வந்தாலும், எந்தப் பாதை வழியே வந்தாலும் மனமற்ற நிலையில் நுழையும் நாள் ஆனந்தத் திருநாளாக இருக்கும். நீங்கள் இல்லம் வந்து சேர்ந்து விட்டீர்கள்.

### இரண்டாவது கேள்வி

**ஓஷோ,**

**இங்குள்ள சந்நியாசிகள் எல்லாம் தங்கள் கால்களால் சுயமாக நிற்க முடியாது போனதால் உங்களிடம் வந்திருக்கிறார்கள் என்ற எண்ணத்தை இங்கு வரும் சமயங்களில் எல்லாம் என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. அவர்களுக்காக முடிவெடுக்கச் சர்வவல்லமையுள்ள தந்தை ஒருவர் தேவைப் படுகிறார். இன்று நான் பெரிய துயரத்தையும், ஆனந்தத்தை யும் உங்கள் பேச்சைக் கேட்டபோது உணர்ந்தேன். இனி என்ன நிகழும்? உங்களைச் சார்ந்து இருந்து விடுவேனோ என்று நான் அச்சம் கொள்கிறேன்.**

சார்ந்திருக்கும் எண்ணம், சார்ந்திருக்க ஆசை கொள்ளல், சார்ந்திருக்க கூடாது என்ற கருத்து, பயம் போன்றவை எல்லாம் ஒரே வகையானவைதான். அவை வேறுபட்டவை அல்ல. சார்ந்திருக்க

நீங்கள் அச்சப்பட்டால் அது இன்னும் நீங்கள் சார்ந்திருக்கவில்லை என்பதைக் காட்டுகிறது.

பயம் என்பது ஒரு எதிர்மறை நிலையாகும். சார்ந்திருக்க வேண்டும் என்ற விருப்பம், சர்வவல்லமை உள்ள தந்தையைத் தேடுவது, சாய்ந்து கொள்ள யாரையாவது விரும்புவது போன்றவை நேர்மறை ஆசைகள். இரண்டும் ஒரே விதமானவை. எதிர்மறையும், நேர்மறையும் சேர்ந்தே முழுமையை உருவாக்குகின்றன.

தனது கால்களில் சுயமாக நிற்கமுடியாத மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்கள் பலசாலிகள் அல்ல. அவர்கள் தங்களது தனித்துவத்தை இன்னும் எட்டவில்லை. யாரையாவது சேர்ந்திருக்க வேண்டும் என்று நினைக்கும் மக்கள் எப்போதும் அச்சத்துடன் இருப்பார். அவர்களும் பலமான மனிதர்கள் அல்ல. அவர்களும் பலவீனமானவர்கள்தான். பயம் அவர்கள் பலவீனத்தை வெளிக் காட்டுகிறது.

நிஜமாகவே சார்ந்துநிற்காத மனிதனே சரணாகதி செய்யத் தகுதி பெற்றவன்.

நிஜமான பலசாலியே காதலில் ஈடுபடவும் தகுதியுள்ளவன். தனது தனித்துவம் முழுமை பெற்ற ஒன்று என்று அவன் அறிவான். எனவே அதை இழக்க ஒருபோதும் வழியில்லை.

உங்கள் பயம் நீங்கள் இன்னும் உங்களுடைய தனித்துவத்தை எட்டவில்லை என்பதைக் காட்டுகிறது. எனவேதான் பயம் ஏற்படுகிறது. இல்லாதுபோனால் ஒருவர் ஏன் பயப்பட வேண்டும்? உங்கள் தனித்துவம்தான் உங்களின் ஆழ்மையம். அதை அகற்ற இயலாது. யாராலும் அதை அகற்றஇயலாது. கடவுளாலும் முடியாது. அது உங்களின் பிரதான அம்சம். அதை உங்களிடமிருந்து அகற்றிட இயலாது. உங்களிடமிருந்து பறிக்கக்கூடிய எதுவும் உங்களின் பிரதான அம்சம் அல்ல. ஒருவர் அதை தந்துவிட விரும்பவும் செய்வார். காரணம் அது சுமையாக அமைகிறது. பிறரிடம் சுமையை ஒப்படைக்க எண்ணுகிறார். அப்போது பொறுப்புகளில் இருந்து அவர் விடுபட முடியும். மற்றொருவர் அதைக் கொடுக்க அஞ்சுகிறார்.

மற்றவர் அதைக் கொடுக்க அஞ்சுவது ஏன்? மற்றவரும் அதை சுமையாகவே நினைக்கிறார். கொடுக்க விரும்புகிறார். ஆனாலும், "இது என்னுடையது. இது இல்லாதுபோனால் நானும் போய்

விடுவேன்" என்ற எண்ணம் காரணமாக பெரிய அளவில் பயம் எழுகிறது.

குருவிடம் நீங்கள் தங்கியிருப்பது, சரணாகதி செய்வது, தனித்துவத்தை அளிக்கும் என்ற ரகசியத்தைக் கற்றுக் கொள்வதற்குத்தான். இந்த முரண்பாட்டையே நீங்கள் கற்றுஅறிய வேண்டும். கற்ற பின்னர் அதுவே பெரிய விடுதலையாக அமையும்.

இதுவரை நீங்கள் காதலித்தது உண்டா இல்லையா? நீங்கள் யாரையாவது காதலித்திருந்தால், அந்த காதல் உலகில் வேறு எதையும் விட உங்களைத் தனித்திருக்கவே தூண்டும் என்பதை அறிந்திருப்பீர்கள். காதல் உங்களை முழுமையான தனிமைக்குள் கொண்டு செல்லும். அது உங்களுக்கு வியப்பூட்டலாம். காதலில் நீங்கள் கரைந்து போவதாக எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். முக்கியத்துவம் இல்லாதவை எல்லாம் நிச்சயம் கரைந்துபோகும். உங்கள் தனிமை பிரதானமானது. அந்த பிரதானம் தெளிவாக வெளிப்படையாகத் தெரிகிறது.

காதலர்கள் தனித்துவமானவர்களாக மாறுகிறார்கள். காதலர்கள் மட்டுமே தனித்துவமானவர்களாக மாறமுடியும். குருவிடம் நேசம் கொள்வது அன்பின் உச்சமாகும். குருவுக்கும், சீடனுக்கும் இடையிலான உறவு காதல் உறவு. அங்கு உணர்வு உச்சத்தில் இருக்கிறது. அது தூய்மையான அன்பின் வடிவம். உயர்ந்த அன்பின் வடிவம். மற்ற நேசங்களில் எல்லாம் வேறு உள்நோக்கம் நிச்சயம் இருக்கும். அவை நோக்கம் சார்ந்தவை. நோக்கம் நிச்சயமாக இருப்பதால் அவை தூய்மையானவை அல்ல. அவை தூய்மையற்றவை. கலப்படமானவை. ஆசை நிறைந்த தேடலும் உலகில் உண்டு. எனவே அவர்கள் பூமியில் தேடிக்கொண்டே இருக்கிறார்கள்.

ஒரு புத்தர்மீதோ, கிறிஸ்து மீதோ நீங்கள் காதல் கொண்டால் அது வானில் பறப்பது போல் அமையும். சீடர்கள் மேலே எழுகிறார்கள். இரண்டாம் விதிமுறை என்ற உலகில், சக்தி விதிமுறையில், அருளின் விதிமுறையில் நுழைகிறார்கள். தேவை சார்ந்த மனமும், செயலும் சார்ந்த விதிமுறைகளில் இருந்து விடுபடுகிறார்கள். புவி ஈர்ப்பு சக்தியில் இருந்து விடுபடுகிறார்கள். ஒரு குறியீட்டு முறையில் வானில் மிதக்கிறார்கள். அவர்கள் உயிர் முற்றிலும் புதிய ஒரு பிரதேசத்தில் நுழைகிறது.

பயம் அங்கு இருந்தால், காதலை நீங்கள் சுவைக்கவில்லை என்றாகிறது. நீங்கள் பயந்து கிடக்கும் காரணத்தால் மற்றவர்களைப்

பற்றி நீங்கள் நினைப்பது எதுவானாலும் அது தவறாகிப் போகிறது. பயத்தினூடே நீங்கள் பார்க்க இயலாது. அச்சம் கண்களை மறைக்கிறது. காட்சியை, தெளிவைத் தடுக்கிறது.

இரண்டு வழிமுறைகள் இருக்கின்றன. இன்ப உச்சத்தில் வாழலாம் அல்லது அச்சத்தில் வாழலாம். பயந்து வாழ்பவர்கள் துரதிருஷ்டசாலிகள். ஏனென்றால், அவர்களுக்கு வாழ்க்கை என்பது என்னவென்று தெரியாது. ஆனந்தமான வாழ்வை வாழ்பவர்கள் மட்டுமே வாழ்வின் உள்முக வினோதங்களை அறிவார்கள். ஆனந்த வாழ்க்கையை வாழ்பவர்கள் சரணாகதியை வேண்டுகிறார்கள். பயத்தில் வாழ்பவர்கள் சரணாகதியை வேண்டுவதில்லை.

நீங்கள் இதுவரை தனித்துவம் பெறவில்லை. பெற்றிருந்தால், எனது சந்நியாசிகளின் வித்தியாசமான தன்மையை அறிந்திருப் பீர்கள். எனது சந்நியாசிகள் என்னைச் சார்ந்து இருக்கவில்லை. நிச்சயம் அவர்கள் கற்றுக் கொண்டார்கள். என்னை உள்வாங்கிக் கொண்டார்கள். என்னைச் சார்ந்திருக்கவில்லை. உண்மையில் அவர்கள் என்னை நேசித்தார்கள். மேலும் மேலும் அவர்களை நான் சுதந்திரமாக இருக்க வைத்தேன். எல்லாத் தளைகளில் இருந்தும் அவர்கள் விடுபடுகிறார்கள். அவர்கள் மீதே நான் அவர்களை வீசும் போது அவர்கள் அன்பு மேலும் ஆழமாகிறது. அவர்கள் நன்றி யுணர்வு ஆழமானதாக மாறுகிறது.

தன்னைச் சார்ந்திருக்க வைக்கும் ஒருவரிடம் நீங்கள் ஒரு போதும் நன்றியுடன் இருக்கமுடியாது. அந்த மனிதரை நீங்கள் வெறுப்பீர்கள். அதனால்தான் குழந்தைகள் பெற்றோரை வெறுக் கிறார்கள். நான் ஒரு தந்தை பிம்பம் அல்ல. முடிந்தவரை ஒரு நண்பனாக இருக்கிறேன். உங்கள் பக்கமிருந்து முதலில் ஒரு தந்தை பிம்பத்தைத் தேடலாம். எனது வலையில் நீங்கள் விழுந்தபிறகு விரைவிலோ, அல்லது தாமதமாகவோ முழு விஷயத்தையும் தவறாகப் புரிந்து கொண்டு விட்டதை ஏற்றுக்கொள்வீர்கள். ஆனால் இப்போது காலம் கடந்துவிட்டது.

நான் தந்தை பிம்பமாகவெல்லாம் இல்லை. எல்லாவித அடிமைத்தனங்களையும் உடைப்பதற்காக நான் இங்கே இருக்கிறேன். யாரும் அடிமைத்தனத்தை விரும்புவதில்லை என்பது உண்மை. நீங்கள் பலவந்தமாகச் சொர்க்கத்தில் தள்ளப்பட்டாலும் அதை வெறுப்பீர்கள். பலவந்தம் என்பது வெறுப்பை உருவாக்கப் போதுமானது.

"கடவுள் இறந்துவிட்டார், மனிதன் சுதந்திரமாக இருக்கிறான்" என்று ஃபிரடரிக் நீட்சே அறிவித்தது தற்செயலானது அல்ல. நியாட்ஷே அதை அறிவிக்காமல் இருந்திருந்தாலும் வேறு யாராவது அதை அறிவிக்கவே செய்திருப்பார்கள். நடந்ததெல்லாம் போதும். இருபது நூற்றாண்டுக்கால கிறிஸ்தவச் சூழல் ஃபிரடரிக் நீட்சே ஷேயை உருவாக்கியது. அவர் கிறிஸ்தவத்தின் ஒரு வெளிப்பாடு. இருபது நூற்றாண்டுக்கால கடவுள் சார்பும், சமூகச் சார்பும் நிறைய வெறுப்பைக் கடவுள் மீது சம்பாதித்துத் தந்துவிட்டன. அப்படித் தான் நடக்கும். அது தர்க்கரீதியானது. இனிமேலும் மனிதன் கடவுளைப் பொறுத்துக் கொள்ள முடியாது என்பதை முன்னறிவிப்பு செய்கிறது. மனிதன் விடுதலை பெறவேண்டும்.

லட்சக்கணக்கான விழிப்புணர்வற்ற மக்கள் மனதில் என்ன இருக்கிறதோ, அதை நியாட்ஷே அறிவித்தார். இந்த நூற்றாண்டின் குரலாக அவர் மாறினார். ஃபிரடரிக் நீட்சே போல வேறு யாரும் இந்த நூற்றாண்டைப் பிரதிநிதித்துவப்படுத்தவில்லை. "கடவுள் இறந்துவிட்டார்" என்று அவர் கூறினார். உடனே இரண்டாவதாக "இப்போது மனிதன் சுதந்திரம் பெற்றுவிட்டான்" என்று அறிவிக் கிறார். கடவுள் என்பது அடிமைத்தனம், ஒரு சுமை என்பதே அதன் பொருளாகும். கடவுள் சமூகத்தை நசுக்கினார். மனிதனை அவனாக இருக்கக் கடவுள் அனுமதிக்கவில்லை. எனவே இறக்க வேண்டிய தாகிவிட்டது.

அவரது புகழ்பெற்ற படைப்பான Thus Spake Zarathustra என்ற நூலில் ஒரு அழகான குட்டிக்கதை இருக்கிறது.

ஒரு பைத்தியக்காரன் கடைவீதிக்கு வந்தான். பகல் வேளை யில் ஒரு விளக்கை ஏற்றி வைத்துக்கொண்டு இங்கும், அங்கும் தேடினான். ஜனங்கள் அவனைப் பார்த்துச் சிரித்தார்கள். "என்ன தேடிக் கொண்டு இருக்கிறாய்? உனக்குப் பித்துப் பிடித்துவிட்டதா? பகலில் ஏன் விளக்கை எடுத்துக்கொண்டு திரிகிறாய்?" என்றனர்.

அவன், "நான் கடவுளைத் தேடுகிறேன். அவனை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? யாராவது எங்காவது பார்த்திருக்கிறீர்களா?" என்றான்.

ஜனங்கள் அதிகமாகச் சிரித்துக் கேலி செய்தார்கள். யாரோ ஒருவர், "கடவுள் என்ன சின்னக் குழந்தையா, தொலைந்து போக? யார் கடவுள்? கடவுள் என்று எதை நீ கூறுகிறாய்?" என்று பலமாக அந்த பைத்தியத்தைக் கேலி செய்தார்கள்.

பைத்தியக்காரன் விளக்கைத் தரையில் வீசியெறிந்தான். சில வினாடிகள் அங்கு மௌனம் நிலவியது. பிறகு அவன், "செய்தியை நீங்கள் இன்னும் கேள்விப்படவில்லை போலிருக்கிறது. கடவுள் இறந்துவிட்டார்! இன்னும் ஒரு விஷயம். நாம்தான் அவரைக் கொன்றுவிட்டோம். செய்தி இன்னும் இங்கு வந்து சேரவில்லை என்று தெரிகிறது. அதற்கு இன்னும் நாள் பிடிக்கும்" என்றான்.

அது மிகவும் முக்கியத்துவம் நிறைந்த அர்த்தமுள்ள குட்டிக் கதை. மனிதன் கடவுளை சுயநினைவற்ற நிலையில் கொன்று விட்டான். அந்த செய்தி இன்னும் விழிப்பு நிலைக்கு எட்டவில்லை. விழிப்புநிலை அந்த செய்தியை அடக்கி வைத்திருக்கலாம். விழிப்பு குற்ற உணர்வு பெற்றிருக்கலாம்.

நீங்கள் உங்கள் பெற்றோருக்கு எதிராகக் கலகம் செய்யும் போது, உங்கள் பெற்றோரைவிட்டு தூரமாக விலகிவிடுகிறீர்கள். குற்றஉணர்வு மனதில் நிழலாடுகிறது. அந்தக் குற்றஉணர்வில் உங்கள் பெற்றோரின் தாக்கம் அங்கு தங்கியிருக்கிறது. எதிர்மறை நிலையில் அது இருந்திருக்கலாம். உங்கள் தாயார், "சுத்தம் கடவுளுக்கு நிகரானது" என்று சொல்லியிருக்கலாம். இப்போது நீங்கள் அழுக்கடைந்து வாழ்கிறீர்கள். இதே வாழ்க்கை வாழ வேண்டியிருக்கலாம். காரணம், உங்கள் தாயை நீங்கள் எதிர்க்கிறீர்கள். இது எதிர்ப்பு அல்ல. இது எதிர்வினை மட்டும்தான். உங்கள் தாயார் இன்னும் பலமான ஆதிக்கத்தில் இருக்கிறாள். அவள் உங்கள் வாழ்க்கை முறையைத் தீர்மானிக்கிறாள். உங்கள் அசிங்கம், அழுக்கு போன்றவற்றைத் தீர்மானிக்கிறாள். அவள் இன்னும் ஆதிக்க நிலையில் இருக்கிறாள்.

நீங்கள் சுத்தமாக இருந்து, உங்கள் தாயின் கருத்தில் நம்பிக்கை கொண்டிருந்தால், உங்களை அவள் நேர்மறை நிலையில் ஆதிக்கம் செய்கிறாள். நீங்கள் அவளுக்கு எதிராக நடந்தால், அழுக்குடன் இருந்தால், மீண்டும் தாயார் உங்களை அதிகாரம் செய்கிறார். எதிர் மறை நிலையில் செயல்படுகிறாள். அதற்கு நீங்கள் ஆயிரத்தொரு காரணம் கண்டுபிடிக்கலாம். ஆனால் அவை உண்மையான காரணங்கள் அல்ல. அவை வெறும் நியாயவாதங்களாகும்.

"சோப்பைப் பயன்படுத்தினால் தோல் கெடும். சோப்பை உபயோகிப்பது இயல்புக்கு மாறானது. எந்த ஒரு மிருகமும் அதைப் பயன்படுத்துவதில்லை. நான் இயல்பான மனிதன். உங்கள் பற்களை துலக்குவது சரியல்ல. எந்த மிருகமும் பல் துலக்குவதில்லை.

அதிகமாக பல் துலக்குவது, பற்பசையும், பிரஸ்ஸும் பயன் படுத்துவது பற்களைக் கெடுத்து விடும்" என்று நீங்கள் கூறலாம்.

நீங்கள் நியாயவாதங்களைக் கண்டுபிடிக்கலாம். ஆனால் விழிப்புணர்வற்ற நிலையை ஆழமாக கவனித்துப் பார்த்தால், உங்கள் தாயார் இன்னும், "பல்லைத் துலக்கு, இல்லாவிட்டால் உனக்கு காலை உணவு கிடையாது" என்று கூறுவதைக் காணலாம். நீங்கள் அழுதபடியே பல் துலக்குகிறீர்கள்.

அந்தக் காட்சி இன்றும் உங்கள் விழிப்புணர்வு இல்லாத மனதில் எங்கோ இருக்கிறது. நீங்கள் நன்கு கற்றவராக, நவநாகரீக மானவராக இருக்கலாம். நீங்கள் பெரிய தத்துவங்கள் பேசலாம். ஆனால் அவை எல்லாம் குப்பைகள். உள்ளே ஆழமாகப் பார்த்தால் அவை எல்லாம் எதிர்வினைச் செயல்கள் என்று அறியலாம். உங்கள் தந்தை போலவே உங்கள் தாயாரும் இன்றும் அதிகாரத்துடன் இருக்கிறார்.

நீங்கள் உங்கள் பெற்றோரைப் பெருமளவு சார்ந்திருக்க வேண்டியிருக்கிறது. நீங்கள் அன்புகாட்ட அஞ்சுகிறீர்கள். ஒருங் கிணைவு கொள்ள அச்சப்படுகிறீர்கள். இது ஒரு எதிர்வினை. யாராவது ஒருவரிடம் நெருக்கமாக இருந்தால், நீங்கள் மறைந்து போய் விட நேரிடும் என்ற அச்சம் சதா இருந்துகொண்டிருக்கிறது. உங்களைக் குறித்த நிச்சயத்தன்மை உங்களிடம் இல்லை. உங்களை நீங்கள் நம்பவில்லை. உங்கள் அகமையம் எப்போதும், எதையும் சார்ந்து இல்லை, அதை அப்புறப்படுத்த வழி இல்லை என்பதை நீங்கள் அறியவில்லை.

உங்கள் அகமையம் குறித்த விழிப்புணர்வு உங்களிடம் இல்லை. உங்கள் குணாதிசயம் குறித்த விழிப்புணர்வுதான் இருக் கிறது. உங்கள் குணாதிசயம் பெற்றோரால் உருவாக்கப்பட்டது. அது பயத்தில் காலூன்றி நிற்கிறது. பயம் காரணமாக ஒரு மனிதன் இறக்க முடியுமே தவிர, வாழ முடியாது.

எனவே லட்சக்கணக்கான மனிதர்களின் வாழ்க்கை மெதுவான தற்கொலையாக இருக்கிறதே தவிர, வாழ்க்கையாக இல்லை. மெல்ல மெல்ல அவர்கள் சாகிறார்கள். அவர்கள் ஒருபோதும் வாழவில்லை. காரணம், அவர்கள் வழியில் சென்று வாழ்வைச் சந்திக்கும்போது, தங்களை இழந்துவிட நேருமோ என்று அச்சப்படுகிறார்கள். தங்களால் வாழ்வில் இறங்கி மேலேறி வரமுடியும் என்ற நம்பிக்கை அவர் களிடம் இல்லை. அது முடியும் என்ற உறுதியான நம்பிக்கை ஏற்பட

வில்லை. எந்த ஒரு அனுபவத்திலும் ஆழமாக மூழ்க அவர்களால் முடியாது. காரணம், அவர்களால் திரும்பிவர முடியாதிருக்கலாம். யார் கண்டது?

இந்த வாழ்க்கை அச்சத்திலிருந்து வெளிப்பட்டதாகும். அச்சம் நிறைந்த வாழ்வு வாழும்போது, எல்லோரும் அச்சத்துடன்தான் வாழ்கிறார்கள் என்று எண்ணத் தொடங்குகிறீர்கள். மற்றவர்கள் மீது அதைப் பிரதிபலிக்கவும் செய்கிறீர்கள்.

அதனால்தான் உங்களைச் சுற்றி இருக்கும் அழகான மனிதர்களை நீங்கள் தவறாகப் புரிந்து கொள்கிறீர்கள். அவர்கள் என்னைச் சார்ந்து இருக்கவில்லை. சந்நியாசம் என்பது புரட்சி. அது எதிர் வினை அல்ல. அது புரட்சி. அது புதிய புரிதலுடன் வாழ்தல். உங்கள் அக ஒளியில் வாழ்தல்.

நான் வெறுமனே கண்ணாடியாக இருந்து உங்களுக்கு உதவுகிறேன். என்னில் உங்கள் முகத்தை நீங்கள் பார்க்கலாம். உங்கள் எதிர்காலத்தை என்னில் காணலாம். உங்கள் அகமையம் என் மீது பிரதிபலிப்பதைக் காணலாம். நான் வெறும் கண்ணாடி. கண்ணாடியைப் பார்ப்பதால் அதைச் சார்ந்து இருப்பவராக மாறிவிட மாட்டீர்கள். உங்களால் அவ்விதம் முடியுமா? கண்ணாடி உங்களைப் பிரதிபலிக்க மட்டுமே செய்கிறது.

உங்கள்மீது திணிக்க என்னிடம் எந்த கருத்தும் இல்லை. உங்களுக்குப் போதிக்க நியாய நெறிமுறைகள் எதுவும் என்னிட மில்லை. உங்களிடம் ஒரு குணாதிசயத்தை ஏற்படுத்தி உதவ நான் இங்கு தங்கியிருக்கவில்லை. **குணாதிசயம், நியாய நெறிமுறைகள், கொள்கைகள்** என்பன மோசமான வார்த்தைகள். குணாதிசயம் என்பது நீங்கள் ஒரு கவசத்துக்குள் புகுந்து வாழ்வதாகும். குணாதிசயம் என்பது நீங்கள் கடந்த காலத்தில் வாழ்வதாகும். நீங்கள் நிகழ்காலத்தில் வாழவில்லை. நிகழ்காலத்தில் மட்டுமே இயற்கை இருக்கிறது.

குணாதிசயமற்று இருக்க நான் கற்றுத் தருகிறேன். எந்தக் கவசமும் இல்லாமல், கடந்தகாலத்தின் ஆதிக்கம் இல்லாமல், ஆயத்தமான பதில்கள் இல்லாமல் வாழ்வதற்குக் கற்றுக் கொடுக் கிறேன். குணாதிசயமின்றி, விழிப்புணர்வுடன், நெறிமுறைகள் குறித்த எண்ணமின்றி, ஆனால் கவனத்துடன் வாழ்வதே நிஜமான நியாய நெறிமுறையாகும். அதுவே நிஜமான குணாதிசயமாகும்.

குணாதிசயமற்று இருப்பதே குணாதிசயம் என்றும், நியாய நெறிமுறைகள் மீதான பிடிப்பு இல்லாமல் இருப்பதே நிஜமான நெறிமுறை என்றும் நான் கூறுவது உங்களுக்கு வியப்பூட்டலாம். விழிப்புணர்வு என்று நான் கூறுவது எது என்று நீங்கள் புரிந்து கொண்டால், அதன் பிறகு தொல்லை இல்லை. எல்லாம் எளிதாக இருக்கும். தான் செய்வது என்ன என்று ஒருவர் கணத்துக்குக் கணம் விழிப்புடன் செயல்பட வேண்டும். கடந்தகாலத்துத் தவறுகள் குறித்து மனவருத்தம் ஒருபோதும் ஏற்படாது. ஒருபோதும் குற்ற உணர்வு தோன்றாது. குற்ற உணர்ச்சியற்ற வாழ்வு பற்றி நான் போதிக்கிறேன். நீங்கள் எப்படி என்னைச் சார்ந்து இருக்க முடியும்? நீங்கள் நன்றியுடன் இருக்கலாம். என்னைச் சார்ந்து இருக்க முடியாது. நீங்கள் அன்பு செலுத்தலாம். சார்ந்து இருக்க இயலாது.

உங்கள் நன்மைக்காக இருந்தாலும், நான் உங்களை வற்புறுத்துவ தில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். பழைய தந்திரமுறை ஒன்று உண்டு. மக்களை ஆதிக்கம் செய்ய உதவும் பழைய ராஜ தந்திரங்கள் அது. "அவர்களின் நலனுக்காக, அவர்கள் நன்மைக்காக, வற்புறுத்துங்கள், அவர்களை அழியுங்கள்."

நீங்கள் நரகத்தைத் தேர்வு செய்தால் அங்கும் நீங்கள் மகிழ்ச்சி யாக இருப்பீர்கள் என்பது எனது அடிப்படைப் புரிதலாகும். உங்கள் விருப்பத்துக்கு எதிராக, சொர்க்கத்தில் பலவந்தப்படுத்தித் தங்க வைத்தாலும் நீங்கள் அங்கு சந்தோஷமின்றியே இருப்பீர்கள். சந்தோஷம் தருவது எப்போதும் சுதந்திரமானதுதான். சந்தோஷமே சுதந்திரத்தின் நறுமணமாகும்.

**ம**தபோதகர் ரெவரண்ட் ஆப்டிமஸ் போக் ஒரு திறமையான கோல்ஃப் விளையாட்டு வீரர். ஒருநாள் அவர் புல்வெளியிலிருந்து பலமாக பந்தை அடித்தார். பந்து மரத்துக்குப் பின்னால் சென்று மறைந்தது. பந்து மேலே இருந்து கீழே வந்து விழுந்தது. துள்ளிக் குதித்துப் புல்வெளியைநோக்கி வந்தது. காந்தத்தினால் கவர்ந்து இழுத்ததுபோல இருநூறு அடிதூரம் கொடியைநோக்கி ஓடிவந்து கடைசியில் சரியாகக் குழிக்குள் விழுந்தது.

"அபாரமாய் குழியில் விழுந்துவிட்டது!" என்று மற்ற வீரர்கள் குரல் எழுப்பினார்கள்.

வானத்தைநோக்கி அவர் தனது கண்களை உயர்த்தினார். "தந்தையே! தயவுசெய்து நானே இதைச் செய்ய உதவுங்கள்" என்று முணுமுணுத்தார்.

அறிவோ, புத்திசாலித்தனமோ இல்லாத ஒருவனும் வற்புறுத் தலை விரும்பமாட்டான். பலவந்தம் ஆசீர்வாதத்தை எடுத்து வரும் என்றாலும் ஏற்கமாட்டான்.

இங்கே நான் உங்களை எந்த வகையிலும் வற்புறுத்தவில்லை. "இங்குள்ள சந்நியாசிகள் எல்லாம் தங்கள் கால்களால் சுயமாக நிற்கமுடியாது போனதால் உங்களிடம் வந்திருக்கிறார்கள் என்ற எண்ணத்தை இங்கு வரும் சமயங்களில் என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை" என்று நீங்கள் கூறுகிறீர்கள். அவர்கள் தங்கள் சொந்த கால்களில்தான் நிற்கிறார்கள். பாரபட்சமற்ற எண்ணமல்லாது மீண்டும் திரும்பி எனது மனிதர்களைப் பாருங்கள். அவர்கள் எனது ஆலோசனையைக் கேட்கிறார்கள். ஆனால் அவர்கள் கீழ்ப்படிந்து பின்பற்றுவதில்லை. நான் எதுசெய்தாலும், என்ன சொன்னாலும் அமைதியாகக் கேட்கிறார்கள் அது உத்தரவு அல்ல, கட்டளை அல்ல. வெறும் அறிவுரை மட்டுமே. அதை ஏற்றுக்கொள்ளவோ, நிராகரிக் கவோ சுதந்திரம் பெற்றிருக்கிறார்கள். அதை ஏற்றுக்கொண்டால், அதை ஏற்றுக் கொண்ட பொறுப்பு அவர்களுடையது. ஏற்றுக் கொள்ளாது போனால், உதறிய பொறுப்பு அவர்களுடையது.

நான் சொல்வதை அவர்கள் பின்பற்றுகிறார்களா இல்லையா என்று நான் ஒருபோதும் அவர்களிடம் கேட்பதில்லை. நான் எந்த விபரங்களையும் உங்களுக்கு அளிப்பதில்லை. நான் விரிவான அட்டவணை தரவேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள். எப்போது எழுந்திருப்பது, என்ன சாப்பிடுவது, எதைச் சாப்பிடக்கூடாது, எப்போது உறங்கச் செல்வது என்று பட்டியலிட விரும்புகிறீர்கள். உங்களுக்காக நான் ஒவ்வொன்றையும் முடிவு செய்ய வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள். என் சந்நியாசிகள் எதிர்கொள்ளும் வியப்பான விஷயம் அதுதான். அவர்களுக்காக நான் எந்த விபரங் களையும் தீர்மானிப்பது இல்லை. நான் பொதுவான பார்வையை மட்டும் தருகிறேன். எனது கண்ணோட்டத்தை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். உங்கள் பாதையை நீங்களே சுயமாகக் கண்டறிந்து கொள்ள வேண்டும். நீங்கள் பின்பற்ற நான் வரைபடம் தருவ தில்லை. எனது ஒளியை மட்டும் உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். எந்த பாதையிலும் நீங்கள் அந்த ஒளியுடன் செல்லும் சுதந்திரம் பெற்றிருக்கிறீர்கள்.

இது முற்றிலும் வித்தியாசமான ஒரு நிகழ்வு. அதனால்தான் பல ஜனங்கள் என்னைத் தவறாகப் புரிந்துகொள்கிறார்கள். நீங்கள் ஒருவர் மட்டும் தவறாகப் புரிந்து கொண்டவர் என்று கூறமுடியாது.

காலகாலமாக ஆன்மீகப் பெரியோர்கள் விரிவான அட்டவணையை மக்கள் கட்டாயம் பின்பற்றவேண்டும் என்று வெளியிட்டிருக் கிறார்கள். நீங்கள் பின்பற்றாது போனால் அது பாவம். நீங்கள் நரகத்தில் மூழ்குவீர்கள். நீங்கள் பின்பற்றி நடந்தால் அது புனித மானது. சொர்க்கத்தில் உங்களுக்கு சன்மானம் கிடைக்கும். பின் பற்றுவது போல நடிப்பது புனிதமானதாகப் பல நூற்றாண்டுகளாக இருந்து வருகிறது. நீங்கள் சுயநிலையில் இருப்பது பல நூற்றாண்டு களாகப் பாவமாக மதிக்கப்பட்டு வருகிறது.

இது முற்றிலும் புதிய செயல்பாடு. இது மிகவும் புதியது. நான் உங்களுக்கு எந்த கட்டளையும் இடவில்லை. 'செய்' என்பதும் கூடாது. 'கூடாது' என்பதும் கிடையாது. நான் எனது அனுபவங் களை மட்டும் பகிர்ந்து கொள்கிறேன். பிறகு நீங்கள் தனித்து விடப் படுகிறீர்கள். தேவையானதை நீங்கள் தேர்வு செய்யலாம். அது எப்போதும் உங்கள் தேர்வாகவே இருக்க வேண்டும்.

நான் எனது மக்களுக்கு இன்பம், அன்பு மற்றும் பயமற்ற வாழ்வு வாழ்தல் பற்றிப் போதிக்கிறேன். உங்கள் தவறான அபிப் பிராயங்களையும் உதறிவிடுவது நல்லது.

"இன்று நான் பெரிய துயரத்தையும், ஆனந்தத்தையும் உங்கள் பேச்சைக் கேட்டபோது உணர்ந்தேன். இனி என்ன நிகழும்? உங்களைச் சார்ந்து இருந்து விடுவேனோ என்று நான் அச்சம் கொள் கிறேன்" என்று கூறுகிறீர்கள். நீங்கள் பயப்படத் தேவையில்லை. நீங்கள் என்னைச் சார்ந்திருக்க எண்ணினாலும், நான் அதை ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. காரணம், நீங்கள் உங்களைச் சார்ந்து இருக்காதவரையில், ஒருவரைச் சார்ந்து உங்களால் இருக்க இயலாது என்று எனக்குத் தெரியும்.

சார்ந்திருத்தல் என்பது ஒருவழிப் பாதையல்ல. நீங்கள் யாரைச் சார்ந்து இருக்கிறீர்களோ அவர் உங்களைச் சார்ந்து இருப்பார். அடிமைத்தனம் எப்போதும் பரஸ்பர நிகழ்வு ஆகும். நான் அடிமை யாக விரும்பவில்லை. யாரைச் சார்ந்திருக்கவும் நான் விரும்ப வில்லை. எனவே, நீங்கள் என்னைச் சார்ந்திருக்க விரும்பினால், எந்த வகையிலும் உங்களுக்கு நான் ஆதரவு அளிக்க முடியாது. என்னால் அது இயலாது. அது சாத்தியப்படாது. ஏனென்றால், இந்த உண்மை மிகவும் அடிப்படையானது. இதற்கு விதிவிலக்கு கிடையாது.

உங்கள் சொந்த வாழ்வை நீங்கள் கவனிக்க முடியும். நீங்கள் உங்கள் மனைவியைச் சார்ந்து இருந்தால், அவள் உங்களைச் சார்ந்

திருப்பதைக் காண்பீர்கள். நீங்கள் ஒரு நண்பரைச் சார்ந்திருந் திருந்தால், அவரும் உங்களைச் சார்ந்து இருப்பார். அது இருபுறமும் கூர்மையுள்ள வாள்போன்றது.

நீங்கள் சுதந்திரமாக இருக்க விரும்பினால், உங்களைச் சுற்றிச் சுதந்திரமாக இருக்க விரும்புவோர்க்கு எல்லாம் நீங்கள் உதவ வேண்டும். சுதந்திரமாக இருக்க அது ஒன்றுதான் வழி. கணவன் சுதந்திரமாக இருக்க விரும்பினால், அவன் தனது மனைவி சுதந்திர மாக இருக்க அனுமதிக்க வேண்டும். மனைவி சுதந்திரமாக இருக்க விரும்பினால், அவள் கணவனையும் சுதந்திரமாக இருக்க அனுமதிக்க வேண்டும்.

அதனால்தான் பெண் விடுதலை இயக்கம் ஆண்களுக்குப் பெரிய வரம் என்று நான் கூறுகிறேன். பெண் நிஜமாகவே சுதந்திரம் பெறும்போது, அது ஆண்களுக்கு கிடைத்த பெரிய நிகழ்வாக அமையும். காரணம், பெண் சுதந்திரம் என்பது ஆண்களின் சுதந்திர மாகும்.

எச்சரிக்கையோடு இருப்பவர்கள் அது நிகழ உதவுவார்கள். பெண் சுதந்திரமடைய வேண்டும். முழுச் சுதந்திரம் பெற வேண்டும். அதன் பிறகுதான் ஆண் சுதந்திரமடைய முடியும். இன்றுவரை இந்த அடிப்படை விதி புரிந்துகொள்ளப்படவில்லை. ஆண் மகன் பெண்ணை அடிமைப்படுத்த முயன்றான். அந்த செயலில் அவனே அடிமையாகிவிட்டான். சொல்லப்போனால், கூடுதலாகவே அடிமைப்பட்டுவிட்டான்.

மனைவிக்கு அடிமையாகாத ஒரு ஆணைக் கண்டறிவது மிகவும் சிரமம். கிட்டத்தட்ட முடியாது என்றே கூறலாம். இது ஏன் நிகழ்கிறது? நீங்கள் அவளை அடிமை நிலைக்குத் தரம் தாழ்த்தி விட்டீர்கள். அவள் அதையே உங்களுக்கும் செய்கிறாள். உங்களுக்கு பதிலுக்குப் பதிலே நடக்கிறது. வாழ்க்கை உங்கள்மீது திருப்பி வந்து விழுகிறது. நீங்கள் செய்வதை வாழ்க்கை எதிரொலிக்கிறது. உங்கள் மீதே திரும்பி வந்து விழுகிறது.

நீங்கள் அன்பு காட்டினால், எல்லா இடங்களில் இருந்தும் அன்பு உங்களைநோக்கிப் பெருகி வரும். நீங்கள் வெறுப்பு காட்டினால், எல்லா இடங்களில் இருந்தும் வெறுப்பு உங்களை நோக்கி ஓடிவரும். நீங்கள் உங்களைச் சுற்றி அடிமைத்தனத்தை உருவாக்கினால், உங்கள் மனைவி, மக்கள் அடிமைகளாவார்கள். பிறகு நீங்கள் காலமெல்லாம் அடிமையாகவே இருப்பீர்கள். நீங்கள்

மட்டும் தனியே சுதந்திரமாக இருந்துவிட முடியாது. சுதந்திரமான சூழல் இருந்தால்தான் சுதந்திரம் ஏற்படும். அதற்கு ஒரு குறிப்பிட்ட சூழ்நிலை தேவைப்படுகிறது.

நான் இங்கு சுதந்திரச் சூழ்நிலையை ஏற்படுத்துகிறேன். நீங்கள் விரும்பினாலும் என்னைச் சார்ந்து இருக்கமுடியாது. பயத்தின் காரணமாக, உங்களிடம் பிறரைச் சார்ந்திருக்கும் விருப்பம் இருப்பதுபோல் தோன்றுகிறது. உங்கள் சுயநினைவற்ற தன்மையைக் கண்டு அஞ்சுகிறீர்கள். "இனி என்ன நிகழும்? உங்களைச் சார்ந்து இருந்துவிடுவேனோ என்று நான் அச்சம் கொள்கிறேன்" என்கிறீர்கள். நிஜமாகவே நீங்கள் சுதந்திரமடைய விரும்பினால் சுதந்திரத்தின் சுவையை நிஜமாகவே சுவைக்க விரும்பினால், ஒன்றிணைப்பில் இறங்குங்கள். சரணடைதல் எவ்விதம் நீங்கள் நீங்களாக மாற எவ்விதம் உதவுகிறது என்பதை அனுபவத்தில் காணுங்கள். வாழ்வின் மிகப்பெரிய முரண்பட்ட நிஜத்தை அனுபவியுங்கள். சரணடைதல் இன்னும் உங்களிடம் தோன்றவில்லை. ஏதேனும் ஒன்றை நீங்கள் சரணடைந்து ஒப்படைக்கவில்லை என்றால், அது உங்களின் முக்கியத்துவம் இல்லாத பொருட்களில் ஒன்றாகிவிடுகிறது.

முக்கியத்துவம் இல்லாத பொருட்கள் எல்லாம் உதறப்பட்ட பிறகு, உங்களை நசுக்கும் மலைகளாக இருந்த அவற்றின் நடுவே உங்கள் சிறிய ஆன்மா என்ற வைரம் மொத்தமாகத் தொலைந்து போயிருந்தது. மலைகள் மறைந்தபிறகு உங்கள் அகவைரத்தின் தெளிவான ஒளியைக் காண்பீர்கள். முதல் தடவை அதைப் பார்க்கும் போது அந்த சரணாகதியில் நீங்கள் ஜனிக்கிறீர்கள்.

சரணாகதி ஒரு மரணம். மரணம் என்பது பிரதானமானது அல்ல. இவை எல்லாவற்றிலிருந்தும் விடுபட்டு மறுபிறப் பெடுப்பது அவசியம், அது உண்மையானது, நிஜமானது ஆகும்.

**மூன்றாவது கேள்வி**

**ஓஷோ,**

**என் மீது நிஜமாகவே அன்பு செலுத்தும் மற்றும் எனது அன்பை ஏற்றுக் கொள்ளும் ஒருவரைச் சந்திக்க எனது வாழ்நாளெல்லாம் முயல்கிறேன். எனது முயற்சிகள் எல்லாம் வலியும், தோல்விகளும் தருவதாக உள்ளன. நான் முழுமையாக நிராகரிக்கப் பட்ட, ஏமாற்றமடைந்த உணர்வைப் பெற்றேன். என்னிட**

**முள்ள தவறு என்ன? எனக்குள்ளே இருக்கும் அன்பை நான் உணர்வது எப்படி? என்னை நான் சந்தித்து அன்பு கொள்வது எப்படி?**

முதலடி எடுத்து வைப்பது தவறாகிப் போனால் உங்கள் முழுப் பயணமும் தவறாகிவிடும். உங்களை நிஜமாகவே நேசிக்கும் ஒருவரைத் தேடியலைந்தீர்கள். அங்குதான் தவறான திசையில் சென்று விட்டீர்கள்.

உங்களை நீங்கள் நேசிக்கவேண்டும் என்பதே பிரதான விஷயமாகும். உங்களை நீங்கள் நேசித்தால், உங்களை நேசிக்கும் பல மனிதர்களைக் கண்டறிவீர்கள். ஏனென்றால், தன்னை நேசிக்கும் ஒருவர் அன்புள்ளவராக, நேசிக்கத்தக்கவராக மாறுகிறார். அவர் கம்பீரமும், கௌரவமும் பெறுகிறார். தன்னை நேசிக்காத மனிதர் அசிங்கமானவராக இருக்கிறார். காரணம், உங்களை நீங்கள் நேசிக்காவிட்டால், நீங்கள் வெறுப்பு கொள்வீர்கள். வேறு தேர்வு இல்லை. உங்களால் நடுநிலையில் இருக்கமுடியாது.

நடுநிலை என்பது வாழ்வில் இருப்பதில்லை. நீங்கள் இதைச் சார்ந்திருக்கிறீர்கள் அல்லது அதைச் சார்ந்திருக்கிறீர்கள். உங்களை நீங்கள் நேசிக்காது போனால், அதிகமான வெறுப்பால் நீங்கள் முடமாகிப் போகிறீர்கள். உங்களுக்கு நீங்களே விஷமிட்டுக் கொள் கிறீர்கள். பிறர் உங்களை நேசிப்பார்கள் என்று எப்படி எதிர்பார்க் கலாம்? உங்களை நீங்கள் நேசிக்கத் தயாராக இல்லாது போனால், யார் உங்களை நேசிப்பார்கள்?

யூத இறைமையியலாளர் ஹில்லஸ் கூறிய புகழ்பெற்ற கூற்றை நினைத்துப் பாருங்கள். நீங்கள் வாழாதுபோனால், உங்களுக்காக பிறர் எப்படி வாழ்வார்கள்?" அந்த கூற்றின் மறுபகுதியும் அழகானது. "உங்களுக்காக மட்டுமே நீங்கள் இருந்தால் உங்கள் வாழ்க்கைக்கு என்ன அர்த்தம் இருக்கிறது?" என்று அவர் கேட்கிறார்.

இதுதான் துருவ நிலையாகும். நீங்கள் உங்களை நேசித்தால், நீங்கள் செய்துகொள்ளும் முதல் உதவி உங்களுக்கேதான். இரண் டாவது விஷயம், சுயநேசத்தில் தன்னை இழந்துவிடாதிருப்பதாகும். இல்லாதுபோனால் உங்கள் வாழ்க்கை முக்கியத்துவம் அடையாது. அது அர்த்தமற்றதாகிவிடும். உங்களை நீங்கள் நேசிக்க முடியு மானால், பிறகு மற்றவர்களை விரும்புங்கள். மற்றவர்களைத் தேடுங்கள். நீங்கள் கண்டுகொள்வீர்கள். உலகம் முழுவதும் அன்பான அழகான மனிதர்கள் நிறைய இருக்கிறார்கள்.

நீங்கள்தான் அழகாக இல்லை. அன்புப் பிரவாகமாக இல்லை. நேசம் நிறைந்தவராக இல்லை. அதனால்தான் உங்களை நேசிப் பவர்களை உங்களால் கண்டறிய முடியவில்லை. இது பலருக்கும் நேர்கிறது. இது உங்களுக்கு மட்டுமான பிரச்சினை அல்ல. பெரும் பாலான மக்கள் இந்த பிரச்சினையால் பாதிக்கப்பட்டு இருக் கிறார்கள். ஒவ்வொருவரும் தான் நேசிக்கப்படவேண்டும் என்று விரும்புகிறார்கள். ஆனால் அன்பு என்றால் என்னவென்று யாருக்கும் தெரியவில்லை. தன்னை நேசிப்பது எப்படியென்று யாருக்கும் தெரியவில்லை.

அன்பு என்பது ஒரு பெரிய கலை. மனிதர்கள் ஓவியம் வரைவது எப்படியென்று கற்றுக்கொள்கிறார்கள். மனிதர்கள் இசைக்கருவி வாசிப்பது எப்படியென்று கற்றுக் கொள்கிறார்கள். பல ஆண்டுக்காலம் வாசிக்கப் பயிற்சிபெறுகிறார்கள். மெல்ல மெல்ல அவர்கள் அழகான ஏதோ ஒன்றைப் படைக்கும் திறமை பெறுகிறார்கள். அன்பே மிகச் சிறந்த அழகு. மிகப்பெரிய விந்தை. அதை நீங்கள் ஒருபோதும் கற்றுக்கொள்வதில்லை. ஒவ்வொரு மனிதரும் தான் பிறந்ததுமே அன்புசெலுத்தத் தகுதி படைத்து விட்டதாக எண்ணம் கொள்கிறார். அது அறிவற்றதனம். அன்பு என்றால் என்ன கற்றுக் கொள்ளும் வாய்ப்பே வாழ்க்கையாகும். உள்ளுறை ஆற்றல் அங்கு இருக்கிறது. அந்த ஆற்றல் நிஜமானதாக மாற்றப்பட வேண்டும். அது நீந்தும் திறன் ஒவ்வொருவருக்கும் இருப்பது போன்றதாகும். உங்களுக்கு நீந்தத் தெரியாது என்று பொருளல்ல. அதைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று பொருள் ஆகும்.

அது முரண்பாடுபோல் தோன்றலாம். ஆனால் அப்படியல்ல. அந்த அறிக்கையைப் பற்றி நன்கு யோசியுங்கள். அந்த ஒன்று என்ன வென்று கற்றுக்கொள்ளவேண்டும். அன்பு அங்கு இருக்கிறது. பண்படுத்தப்படாமல் இருக்கிறது. பட்டைதீட்டப்படாமல் சுரங்கத் திலிருந்து எடுத்த மெருகற்ற நிலையில் இருக்கிறது.

உலகின் மிகப்பெரிய வைரம் கோஹினூர். வைரத்தைக் கண்டெடுத்த சமயத்தில், அதைக் கண்டறிந்தவர் பல மாதகாலம் தான் உலகிலேயே மிகப் பெரிய பணக்காரன் என்பதை அறிய வில்லை. குழந்தைகளிடம் அதை விளையாடக் கொடுத்தார். அதை அழகான கல் என்று நினைத்தார். நவரத்தினம் என்று உணரவில்லை.

குழந்தைகள் அதைவைத்து விளையாடினார்கள். பல மாதங்கள் குழந்தைகளிடம் அது இருந்தது. அதன் பிறகு அது இனம்

காணப்பட்டது. வைரங்களைப் பற்றி அறிந்த ஒரு நகை வியாபாரி யால் அது இனம் காணப்பட்டது. தனது கண்களை அவனால் நம்ப முடியவில்லை! இதுபோன்ற ஒரு பெரிய வைரத்தை அவன் கண்ட தில்லை. அவ்வளவு பெரியதாக அது இருந்தது.

பல நூற்றாண்டுகளாக அது பட்டை தீட்டப்பட்டுப் பட்டை தீட்டப்பட்டு, இன்று அதன் மொத்த எடையில் மூன்றில் ஒரு பங்கு தான் மிச்சமிருக்கிறது. எந்த அளவு பட்டை தீட்டி வெட்டி மெரு கேற்றப்பட்டதோ அந்த அளவுக்கு அதன் மதிப்பு அதிகரித்து விட்டது. இன்று அதன் எடை மூன்றில் ஒரு பங்காகிவிட்டது. ஆனால் மதிப்பு பல லட்சம் மடங்கு கூடிவிட்டது.

அதே நிலைதான் அன்புக்கும் நேர்கிறது. அன்பும் ஒரு வைரம். பட்டை தீட்டப்படாத, மெருகேற்றப்படாத வைரம். அதை நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டும். அது ஒரு பெரிய கலை. அது உங்கள் இதயத்தில் இன்னிசையை நீங்கள் உருவாக்கி வாசிப்பது போன்றது. அது ஆழ்மனதின் நடனத்தைக் கற்பது போன்றது. நல்ல ஆற்றலுடன் நடனமாடும் போதுதான் உங்கள் மனம் பாடல்களால் நிறையும். உங்கள் ஆன்மா தளவாத்திய கோஷ்டியாக மாறும். பிறர் உங்களை நேசிக்க முடியும் என்பதை நீங்கள் உணர இயலும். உங்கள் ஆன்மா தாளவாத்தியக் கோஷ்டியாக மாறும். உங்களை நேசிக்கும் சிலரைக் கண்டறிய வேண்டும்.

உங்கள் சக்தியைப் பகிர்ந்துகொள்ள இயலும்போது உங்களை நேசிப்பவர்களைக் கண்டறிய முடியும்.

என்னை நிஜமாகவே நேசிப்பவர்களைக் கண்டறிய நான் காலமெல்லாம் முயன்றேன். என்னை நிஜமாகவே நேசிப்பவர்கள் என்பதற்கு என்ன அர்த்தம்? உங்களிடம் ஒரு எண்ணம் இருக்கிறது. அந்த இரண்டாவது அம்சம் தவறாகப் போய்விட்டது. உண்மை யான அன்பு என்ன என்பது குறித்து உங்களிடம் ஒரு கருத்து இருக்கிறது. எதிலும் பூரணத்துவம் வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர் நீங்கள். வாழ்வில் எதுவுமே பூரணத்துவம் பெற்றது இல்லை. அதனால்தான் விஷயங்கள் அழகாக இருக்கின்றன. வாழ்வில் எல்லா விஷயங்களும் பூரணத்துவம் பெற்றிருந்தால், வாழ்க்கை முற்றிலும் சலிப்பூட்டுவதாக அமைந்துவிடும்.

"நான் சொர்க்கத்துக்குச் செல்ல விரும்பவில்லை. சொர்க்கம் என்று ஒன்று இருந்தால், அங்கு பூரணத்துவம் நிறைந்த மனிதர்களை மட்டுமே காண முடியும். வாழ்க்கை முற்றிலும் சலிப்பூட்டுவதாக

அமைந்துவிடும்" என்று பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் சொன்னது சரியானது தான் என்று தோன்றுகிறது.

பூரணத்துவம் நிறைந்த மனிதர்களுடன் வாழ்வதை நினைத்துப் பாருங்கள். ஒவ்வொருவரும் பூரணத்துவத்துடன் இருக்கிறார். அதற்குமேல் பரிமாணத்துக்கு வளர்ச்சிக்கு இடமில்லை என்று அர்த்தம். புதிதாக எதுவும் இனி எப்போதும் உருவாகாது. அவர்கள் சொர்க்கத்தில் வாழ்கிறார்கள். சொர்க்கம் என்று ஒன்று இருந்தால், அதில் ஒவ்வொருவரையும் பிணைத்துவைத்தால் அது முற்றிலும் சலிப்பூட்டுவதாக இருக்கும். வேறு எங்கும் செல்ல வழியிருக்காது. ஒரு தடவை சொர்க்கத்தில் நுழைந்துவிட்டால், உங்களால் தப்பிக்க முடியாது. வெளியேற வழியில்லை. பூரணத்துவம் பித்துப்பிடித்த மனநிலையை ஏற்படுத்துகிறது. பூரணத்துவம் என்ற கருத்து பைத்தியத்தை ஏற்படுத்த வல்லது.

இப்போது நீங்கள் அன்புகுறித்துச் சில புதிய கருத்துக்களை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். உண்மையான அன்பு என்று எதை நினைக்கிறீர்கள்? அன்பு என்பது அன்புதான்! பொய்யான அன்பு, நிஜமான அன்பு என்றெல்லாம் கிடையாது. அன்பு, அன்புதான்.

அன்புக்கு அந்த அளவே போதுமானதாகும். அது நிஜமானதாக இருக்க வேண்டியதில்லை. பொய்யானதாகவும் இருக்க வேண்டிய தில்லை. ஆனால் மக்களுக்கு அது குறித்துச் சில கருத்துக்கள் இருக்கின்றன....

உதாரணமாக, அன்பு என்பது நித்தியமான ஒன்று என்றால், அது நிஜமானதுதான் என்ற கருத்து சிலரிடம் உள்ளது. நீங்கள் ஒருபோதும் வாடிப்போகாத, உலர்ந்துபோகாத ரோஜா மலரைத் தேடுகிறீர்கள் என்பதே அதன் அர்த்தம். அதை உங்களால் கண்டு பிடிக்க முடியாது. அப்படிக் கண்டுபிடித்தாலும் அது செயற்கை ரோஜாவாக இருக்கும். உயிருள்ளதாக இருக்காது.

உயிருள்ள ரோஜா அங்கு இருக்கிறது. காலைக் காற்றில் அசைந்தாடுகிறது. சூரியனுடன் ரகசியம் பேசுகிறது. பட்டாம் பூச்சி களுடன் விளையாடுகிறது. எல்லாம் ஆனந்தம்! மாலையில் எல்லாம் போய்விடுகிறது. மலரின் இதழ்கள் உதிர்கின்றன. மறு நாட்காலையில் அது எங்கிருந்து வந்து, எங்கு சென்றது என்பதற்கான எந்த அடையாளத்தையும் உங்களால் கண்டறியமுடியாது. அது சூன்யத்திலிருந்து வந்தது. சூன்யத்தில் சென்று மறைந்துவிட்டது. உயிருள்ள மலராக அது இருந்தது.

அன்புகுறித்து முட்டாள்தனமாக கருத்தைக் கொண்டிருக் கிறார்கள். அது அழிவற்றதாக இருக்க வேண்டும் என்கிறார்கள். அது அவர்களைத் தடை செய்கிறது. முதலில் அவர்கள் ஒவ்வொன்றை யும் உறுதிப்படுத்திக் கொள்ள விரும்புகிறார்கள். "இந்த அன்பு நிலைத்திருக்குமா?" என்கிறார்கள். எப்படி அதை உறுதிப்படுத்திக் கொள்ள முடியும்? யாரும் அதற்கு உத்திரவாதம் தரமுடியாது. அதற்காக எந்தக் காப்பீட்டுத் திட்டமும் இல்லை. இன்று அது இங்கே இருக்கலாம். நாளை போய்விடலாம். நாளை அது போய்விட்டால் அது நிஜமானது அல்ல என்று கூறாதீர்கள். நீங்கள் முழு விஷயத்தை யும் தவறாகப் புரிந்துகொள்ள நேரிடும்.

நிஜம் தொடர்ந்து மாறிக் கொண்டே இருக்கிறது. நிஜமற்றது மட்டுமே நிலைத்திருக்கும். நிஜமானது மாறிக்கொண்டே இருக் கிறது. நிஜம் என்பது வளர்ச்சி. தொடர்ச்சியான வளர்ச்சி. முடிவற்ற வளர்ச்சியாகும். ஏதாவது ஒன்று வாழ்விலும், இயற்கையிலும் நிரந்தரமாக இருக்கிறது என்றால் அது, மாற்றம் என்ற ஒன்றுதான். மாறுதல் ஒன்றைத் தவிர மற்றவை எல்லாம் மாறக்கூடியவை.

எனவே, உங்கள் அன்பு மறையும்போது அது நிஜமானது அல்ல என்று கூறாதீர்கள். நீங்கள் ஒரு அளவீட்டை வைத்திருக்கிறீர்கள். அறிவற்ற அளவீடு அது. நிஜமானதாக இருக்க வேண்டுமானால், அது மாற்றமடையாமல் இருக்க வேண்டும் என்ற அளவீடுதான் அது. இந்த எண்ணம் லட்சக்கணக்கான மக்களைக் காலம் காலமாகத் துன்புறுத்திக் கொண்டிருக்கிறது. அவர்களால் அன்பு செலுத்த முடிய வில்லை. காரணம், அந்த முட்டாள் கருத்துதான். அன்பு நாளை மறைந்துவிடும் என்று நான் கூறவில்லை. நான் அப்படிச் சொல்ல வில்லை. அது மறையலாம், மறையாமல் போகலாம். நாளைய தினத்துக்கு நீங்கள் தயாராக இருக்க வேண்டும்.

சிறிதுநேரம் நிலைத்திருக்கும் ரோஜாக்கள் இருக்கின்றன. விரைவில் வாடும் மலர்களும் உண்டு. அது தோட்டக்காரனைப் பொறுத்திருக்கிறது. எப்படி அவன் பராமரிப்பு செய்கிறான் என்பதையே பெருமளவு அது பொறுத்திருக்கிறது. கூடுதலாக அது சிறிதுநேரம் தாக்குப்பிடிக்கலாம்.

நீங்கள் மிகவும் எச்சரிக்கையுடன் இருக்கவேண்டும். தீவிரமாக **அல்ல.** விளையாட்டுத்தனமாக இருங்கள். ஆனால் எச்சரிக்கையுடன் இருங்கள். அன்பு என்பது சிக்கலான விவகாரம். மிகவும் சிக்கலானது. அதை உருவாக்குவது சிரமம். அதை அழிப்பது மிகவும் எளிது. அது சிரமமான ஒரு இசைக் குறிப்பு. சில கிடார்

வாசிப்பு நிபுணர்களால் மட்டுமே வாசிக்கமுடியும். அது மிகவும் சிக்கலான இசைக் குறிப்பு. அது ஒலியைவிட மௌனமானது. அதில் ஏதாவது ஒலி இருந்தால், அது மௌனத்தின் பின்புலமாகவே இருந்து செயல்படும். அது ஒரு இணைப்புபோலவே இருந்து செயல்படும்.

அன்பு என்றால் என்னவென்று நீங்கள் கற்றுக் கொள்ளவே இல்லை. உங்களை நீங்கள் நேசிப்பது எப்படி என்றும் கற்றுக் கொண்டதில்லை. உங்களை நிஜமாக யாராவது நேசிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள். அதை நீங்கள் அங்கீகரிப்பீர்கள். உங்களை நீங்கள் அங்கீகாரம் செய்தீர்களா? தன்னை அங்கீகரித்த ஒரு மனிதனை காண்பது மிகவும் அரிது. மனிதர்கள் தங்களை மேம்படுத்திக் கொள் கிறார்கள். இதையும், அதையும் செய்கிறார்கள். ஆனால் தன்னளவில் திருப்திப்பட்டுக் கொள்வதில்லை.

"உங்களை மேம்படுத்திக் கொள்ளுங்கள், மேம்படுத்திக் கொள்ளுங்கள்" என்றுதான் உலகில் உள்ள போதனையாளர்கள் எல்லாம் தினமும் போதித்துக் கொண்டிருக்கிறார்கள். மேம்பாடு என்ற இந்த கருத்தின் அர்த்தம், உங்களை நீங்கள் ஏற்றுக் கொள்ள வில்லை என்பதாகும். உங்கள் மீது உங்களுக்கு திருப்தி இல்லை. உங்களை நீங்கள் ரசிக்கவில்லை. மேம்படுத்திக் கொண்டே போகிறீர்கள். மனிதர்கள் ஏணி மீது ஏறுபவர்களாக மாறிவிட்டார்கள். ஏணி மீது ஏறி மேலே செல்வது எப்படி என்ற ஒன்று மட்டும்தான் அவர்களுக்குத் தெரியும். ஏணியின் உச்சியை எட்டிய பிறகு அசட்டுத் தனமாக உணர்கிறார்கள். ஏணியில் ஏறும் கலை ஒன்றுதான் அவர் களுக்குத் தெரியும். ஏணி முடிந்துவிட்டது. அவர்களுக்கு வேறு ஒன்றும் தெரியாது. அவர்களுக்கு ஏணியில் ஏற மட்டுமே தெரியும். தடைபட்டு நிற்பதுபோல் அவர்கள் உணர்கிறார்கள்.

ஜனங்களுக்கு இப்படி எப்போதும் நடக்கவே செய்கிறது. சிலர் பணம் சம்பாதிப்பது எப்படி என்று கற்றுக் கொண்டிருக்கிறார்கள். மேலும் மேலும் சம்பாதிக்கிறார்கள். கடைசியில், அவர் கற்பனை செய்ததற்கும் அதிகமாகப் பணம் சம்பாதித்து விடுகிறார். அதை என்ன செய்வது என்று தெரிவதில்லை. அவர்களுக்குச் சம்பாதிப்பது எப்படி என்று மட்டுமே தெரியும்.

சிலர் அதிகாரப் பாதையில் பயணம் போகிறார்கள். சிலர் நாட்டின் பிரதமாகிறார்கள். அங்கு தடைப்பட்டு நின்று அசட்டுத் தனமாக உணர்கிறார்கள். வெற்றிகரமாக உள்ள சில அரசியல்வாதி களின் கண்களைப் பாருங்கள். அவர்கள் அசட்டுத்தனத்துடனும்,

எதிலோ அகப்பட்டுக்கொண்டது போலவும் தென்படுவார்கள். ஏணி முடிந்துவிட்டது. அவர்கள் பிரதமர்களாகிறார்கள் அல்லது ஜனாதிபதிகளாகிறார்கள். அதற்குமேலே ஏறுவதற்கு ஏணியில் படிகள் இல்லை. ஏறுவது எப்படி என்று மட்டும்தான் அவர்களுக்குத் தெரியும். ஏணியில் முழுவதுமாக ஏறிவிட்டார்கள். இனி என்ன செய்வது? அவர்கள் நாய்கள் போன்றவர்கள். அவை ஒவ்வொரு காரின் பின்னாலும் ஓடும். அவர்கள் முந்திச் சென்றபிறகு முட்டாள் தனமாக உணரும். பிறகு என்ன செய்வதென்று அவைகளுக்குத் தெரியாது.

சட்டென்று அவர்கள் வந்துசேர்ந்துவிட்டார்கள். காலமெல்லாம் அவர்கள் சென்று சேர்வதுபற்றி யோசித்துக் கொண்டிருந்தார்கள். இப்போது அவர்கள் வந்துசேர்ந்துவிட்டார்கள். அவர்கள் மிகவும் குழம்பிக் கிடக்கிறார்கள். அவர்களால் எதையும் சிந்திக்க முடியாது. அவர்களின் முழுமனதும் குழம்பிக் கிடக்கிறது. அவர்களால் செய்யமுடியும் ஒரே காரியம் ஏணியின் கடைசிப் படியில் நிலைத்து நிற்பதுதான். வேறு மனிதர்கள் ஏறுவதற்கு வருகிறார்கள். கால்களைப் பிடித்து இழுக்கிறார்கள். பலவிதமான செயல்களில் ஈடுபடுகிறார்கள். அவர்கள் தங்கள் இருக்கையை இறுகப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

இது காதலர்களுக்கும் நடக்கிறது. நீங்கள் ஒரு அழகான பெண்ணையோ, ஆணையோ தேடுகிறீர்கள். ஒருநாள் கண்டு பிடிக்கிறீர்கள். சட்டென்று இழப்பைச் சந்திக்க நேர்கிறது. ஒரே கலைதான் உங்களுக்குத் தெரியும். அழகான பெண்ணைத் தேடுவது எப்படி என்று மட்டுமே தெரியும். நீங்கள் தேடினீர்கள். இனி என்ன செய்வதென்று தெரியவில்லை.

உங்களுக்குள் இருக்கும் இசைக் கருவியை எப்படி வாசிப்பதென்று தெரிந்து கொள்ளாதவரையில் எதுவும் நடக்காது. அந்த இசையின் பெயர்தான் காதல். அந்த மெல்லிசைதான் காதல். ஒரு அழகான நபரை நீங்கள் கண்டுபிடித்தும் பயனிருக்காது. உறவு உடனே புளித்துப் போகும். தேனிலவு முடிவதற்குள் அவர்கள் உறவு முடிந்துவிடும்.

**"என்மீது நிஜமாகவே அன்பு செலுத்தும் மற்றும் அன்பை ஏற்றுக் கொள்ளும் ஒருவரைச் சந்திக்க வாழ்நாளெல்லாம் முயன்றேன்"** என்று கூறினீர்கள். முதலில், தன்னை ஒருவர் எப்படி அங்கீகரிப்பது என்று கற்றுக் கொள்ள வேண்டும். பிறரிடம் பூரணத்துவத்தை எதிர்பார்க்காதீர்கள். மனிதனாக இருங்கள். மனிதநிலை

கடந்த பூரணத்துவத்தை எதிர்பார்க்காதீர்கள். நீங்கள் அன்பு குறித்து மிகையான கற்பனை எண்ணங்களை வளர்த்துக் கொண்டிருக்கிறீர்கள். அதுதான் துன்பமாக மாறுகிறது. நீங்கள் கற்பனையான, கவித்துவமான கருத்தை எதிர்பார்க்கிறீர்கள். மனிதர்கள் கனவு காண்பவர், கவிஞர் போன்றவர்களின் கருத்தைக் கொண்டிருப்பதில்லை. மனிதர்கள் நிஜமான மனிதர்களாக இருக்கிறார்கள். நீங்கள் கவிதையில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். மற்றவர்களும் அப்படி இருப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். யாராலும் மன நிறைவை அளிக்க முடியவில்லை. ஒவ்வொருவரும் விரைவில் விழுந்து விடுகிறார்கள்.

உங்கள் அன்பை அங்கீகரிக்கும் ஒருவர் தேவை என்று நினைக்கிறீர்கள். மற்றவர் அன்பை நீங்கள் அங்கீகரித்தது உண்டா? யோசித்துப் பாருங்கள். பூரணத்துவம் பெற்ற ஒரு காதலரை நீங்கள் தேடுகிறீர்கள். பூரணத்துவம் பெற்ற ஒரு காதலரை நீங்கள் தேடும் போது, எதிராளியும் ஒரு பூரணத்துவம் பெற்றவரையே தேடுவார் என்பது நினைவிருக்கட்டும். நீங்கள் இருவரும் ஒரே சமூகத்தின் பழக்க வழக்கங்களுக்கு ஆட்பட்டிருக்கிறீர்கள்.

உங்களைப் போலவே ஒருவர் குருவிடம் சென்று "நான் பூரணமான ஒரு பெண்ணுக்காக காலமெல்லாம் தேடியலைகிறேன்" என்று கூறியதாகக் கேள்விப்பட்டேன்.

குரு அதற்கு, "அவளைக் கண்டறிந்து விட்டாயா இல்லையா?" என்று வினவினார்.

அந்த மனிதன் கவலையோடு, "ஆம், கண்டறிந்து விட்டேன்" என்றான்.

குரு அவனிடம், "என்ன நடந்தது? ஏன் கவலையோடு காணப்படுகிறாய்?" என்றார்.

"அவளும் ஒரு பூரணத்துவமான காதலனைத் தேடுகிறாளாம்" என்றார் அந்த மனிதர்.

நீங்கள் எல்லோரும் ஒரே சமூகத்தின் பழக்கவழக்கங்களுக்கு ஆட்பட்டிருக்கிறீர்கள். அதே கற்பனை எண்ணங்களைக் கொண்டிருக்கிறீர்கள். நிஜத்துடன் உறவு கொள்ளாத முட்டாள் கவித்துவம் புகட்டப்பட்டிருக்கிறீர்கள். எனது அனுபவத்தில் கவிஞர்கள் நீங்கள் காதல் பற்றி கற்றுக் கொள்வதற்கான கடைசி மனிதர்களாக இருக்கிறார்கள். கவிஞர்கள் எனப்படுவோருக்கு காதல் பற்றி எதுவும் தெரியாது. அவர்களது கவிதை இழந்த காதலுக்கு மாற்றாக

இருக்கிறது. கவிதைதான் அவர்களது கனவு. கவிதை அவர்கள் அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டது அல்ல. தொடர்ந்து அந்தக் கவிதைகள் நமக்குப் புகட்டப்படுகின்றன.

அவர்கள் காதலர்களாக முடியாது போனதால் கவிஞர்களாகி விட்டனர் என்பது எனது சொந்த அனுபவம். தங்களால் செய்ய முடியாததை எழுத்தில் வடிக்கிறார்கள். அவர்கள் கவிதை பசித்திருப்பவர்களின் கனவு தவிர வேறல்ல. நீங்கள் விரதம் இருந்தால் இரவில் அறுசுவை உணவுபற்றிக் கனவு காண்பீர்கள். அவர்கள் கவிதை என்பது காதலைச் சுவைக்காதவர்களின் கனவு தவிர வேறல்ல. இழப்பைச் சரிக்கட்ட அவர்கள் சிறந்த சிறந்த கனவுகள் காண்கிறார்கள்.

அவர்கள் கவிதை நோயுற்று, ஆபாசம் மலிந்து கிடக்கிறது. அது உங்கள் கற்பனையைத் தூண்டுகிறது. மயக்கத்தை ஏற்படுத்து கிறது. நிஜமான மனிதர்கள் எப்போதும் நிஜமான மனிதர்கள்தான்! உங்கள் கனவுகளை நிறைவு செய்யும் மனிதர்கள் இங்கு இல்லை. உங்கள் கற்பனைகளை உதறுங்கள். அதன் பிறகு உலகில் அழகான மனிதர்கள் நிறைய இருப்பதைக் காண்பீர்கள்.

நீங்கள் அங்கீகரிக்கப்பட வேண்டுமானால், முதலில் உங்களை நீங்கள் அங்கீகரியுங்கள். பிறகு மற்றவர் அன்பை ஏற்றுக் கொள் ளுங்கள். இந்த விதிமுறைகளை நிறைவேற்றுங்கள். நீங்கள் அங்கி கரிக்கப்படுவீர்கள். முடியாத ஒன்றைக் கேட்காதீர்கள். எதிர்மறைச் சிந்தனையுள்ள மனதுடன் நீங்கள் வாழ்கிறீர்கள். எதிர்ப்பு மனோ பாவம் என்பது இதுதான். கொஞ்சம் நேர்மறைத் தன்மையுடன் இருங்கள்.

ஒரு காலத்தில் நியூ இங்கிலாந்து கிராமத்தில் இரண்டு வகை குணாதிசயங்கள் ஊக்குவிக்கப்பட்டன. அற்ப எண்ணம் கொண்ட அரசு ஊழியர், மற்றொரு அற்பனுக்கு நன்மைசெய்ய வாய்ப்பு இருந்தாலும் செய்யமாட்டார். எதிலும் நல்லதையே காண்கின்ற குணவான் யாரைப்பற்றியும் குறைகூறுவதை, யாரும் கேட்டிருக்க முடியாது.

**கா**லமெல்லாம் கெட்டவனாக இருந்த ஒருவன் இறந்து போனான். இறுதிச் சடங்கு தினத்தன்று வழக்கப்படி கூட்டம் தபால் அலுவலகம் அருகே திரண்டிருந்தது. அனுதாபம் தெரிவிக்கும் கடிதங்களைப் பெற்றுக்கொள்ளக் காத்திருந்தார்கள். காலம்சென்ற அந்த மனிதனின் வாழ்வு, அவனது செயல்கள் பற்றிய விவாதம் எழுந்தது.

இறந்தவன் ஒரு கஞ்சன், பொய்யன், திருடன், ஏமாற்று வேலை செய்பவன், நம்பிக்கைத் துரோகி என்றெல்லாம் வர்ணிக்கப் பட்டான். அங்கு நற்குணமுள்ள மனிதனும் வந்திருந்தான். நடந்ததை அமைதியாகக் கவனித்தான். கடைசியாக ஒரு குழு அவன் பக்கம் திரும்பியது.

"சொல்லுங்கள், கிட்! அந்த காலம் சென்ற ஏமாற்றுக்காரன் பற்றி நாங்கள் சொன்னதெல்லாம் உண்மைதானே? அவன் செய்த நல்ல காரியம் ஏதாவது ஒன்றைச் சொல்ல முடியுமா?

நற்பண்பாளன், "நீங்கள் எல்லோரும் அவன் ஹார்மோனிகா இசைக்கருவியை வாசிப்பான் என்பதை ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்கிறான்.

சிறிதளவு நேர்மறை எண்ணங்களுடன் இருங்கள். மோசமான மனிதனிடம் ஒரு அழகான விஷயத்தைக் காணமுடியும். எதிர்மறை எண்ணத்துடன் இருந்தால், அழகான மனிதனிடமும் கெட்ட விஷயம்தான் தென்படும். அசிங்கமான மனிதர்கள் சூழ்ந்த உலகில் நீங்கள் வாழவிரும்பினால், எதிர்மறை எண்ணத்துடன் இருங்கள். உலகம் முழுவதையும் நீங்கள் அசிங்கப்படுத்துவீர்கள். உங்கள் மனம் நாலாபுறமும் அசிங்கத்தை உருவாக்குகிறது. காரணம், நீங்கள் அசிங்கத்தை மட்டுமே பார்க்கிறீர்கள். எதிர்மறையை மட்டுமே, தவறானதை மட்டுமே பார்க்கிறீர்கள். நீங்கள் நரகத்தில் வாழ் கிறீர்கள். நரகம் என்பது இதுதான். எதிர்மறை மனது நரகத்தைச் சிருஷ்டிக்கிறது. நேர்மறை மனது சொர்க்கத்தை உருவாக்குகிறது. நேர்மறை எண்ணத்துடன் இருங்கள். இந்த பூமியே சொர்க்கமாகும். இந்த உடலே புத்தர் வடிவமாக மாறும்.

எல்லாம் உங்களைச் சார்ந்தே இருக்கிறது. எப்படிப் பார்க் கிறீர்கள், எதைப் பார்க்கிறீர்கள் என்பதைப் பொறுத்திருக்கிறது.

ஆயுள் காப்பீடு செய்வதற்காக அமெரிக்க விவசாயி ஒருவர் மருத்துவர்களால் பரிசோதிக்கப்பட்டார்.

பரிசோதித்தவர், "எப்போதாவது கடுமையான நோய் பாதிப்பில் இருந்ததுண்டா?" என்று கேட்டார்.

"இல்லை" என்று பதில் கிடைத்தது.

"எப்போதாவது விபத்து ஏற்பட்டதுண்டா?"

"இல்லை"

"வாழ்வில் ஒரு சாதாரண விபத்தும் ஏற்பட்டதில்லையா?"

“இல்லை. கடந்த வசந்தகாலத்தில் நான் சதுப்பு நிலப் பகுதியில் இருந்தபோது ஒரு காளை என்னை வேலி மீது முட்டித் தள்ளிவிட்டது.”

“இதை ஒரு விபத்து என்று கருதவில்லையா?”

இல்லை. நான் கருதவில்லை. ஒரு காரணத்தோடுதான் காளை அப்படி நடந்து கொண்டது.

வாழ்க்கையை நீங்கள் எப்படிப் பார்க்கிறீர்கள் என்பதைப் பொறுத்தது அது. விஷயம் உங்களைச் சார்ந்து இருக்கிறது. வாழ்வை உருவாக்குபவர் நீங்கள்தான். அதற்கு நிறைய அர்த்தம், அழகு, சந்தோஷம் இருக்கிறது. அதை நீங்கள் உங்கள் இதயத்தில் உருவாக்க வேண்டும். எல்லா இடங்களிலும் பரவச்செய்ய வேண்டும். உங்களுக்குள் நீங்கள் ஏதோ ஒன்றை உருவாக்க வேண்டும். அதன் பிறகு அதை இயற்கையில் காண்பீர்கள்.

**நான்காவது கேள்வி**

**ஓஷோ,**

**நான் சரணாகதி செய்ய முடியுமா? எனக்கு நானே ஒளியாக இருக்க முடியுமா?**

சரணாகதி செய்வதே உங்களுக்கு நீங்கள் ஒளியாக இருக்க ஒரே வழி. வாழ்க்கை முரண்பட்டது. இரவு-பகல், பிறப்பு-இறப்பு, கோடை-குளிர், அன்பு-வெறுப்பு, மற்றும் பல என்று அது கணக்கின்றிச் செல்கிறது.

ஒருவர் இதை முற்றிலும் புரிந்துகொண்டால், அதை ஏற்றுக் கொள்வார். துயரப்பட மாட்டார். வேறு வார்த்தைகளில் சொன்னால், அவர் நேசிக்கும் ஒன்றை விரைவில் வெறுப்பார். எனவே மேலே உயரும்போது சிரிப்பார். தாழ்வு வரும்போது அழுவார். வாழ்வின் முரண்பாட்டைப் புரிந்து கொள்வார். அவரால் பூரணத்துவத்துடனோ, மாற்றமின்றியோ இருக்க இயலாது. நல்ல சூழ்நிலைகளில் எப்போதும் நிலைத்து இருக்க எண்ணம் கொள்கிறோம். அது சாத்தியமில்லை. அது ஒற்றைச் சார்பு கொண்டது. நாம் ஒற்றைச் சார்பு கொண்டவர்கள் அல்ல. நாம் எல்லையற்றவர்கள். நமது உடலில் இரண்டு துருவங்களும் உள்ளன. வாழ்வதற்கு இரண்டு துருவங்களும் தேவை.

எனவே, நீங்கள் சரணாகதியடைந்தால், உங்களுக்கு நீங்களே ஒளியாவீர்கள். உங்களுக்கு நீங்களே ஒளியாக மாறினால், சரணடைய தகுதி படைத்தவராகிறீர்கள்.

புத்தர் தனது சீடர்களிடம் உங்களுக்கு நீங்களே ஒளியாக இருங்கள் என்று எப்போதும் கூறிவந்தார். **ஆப தீபோ பவ** என்பது அவரது அறிக்கை. உங்களுக்கு நீங்களே ஒளியாக இருங்கள். எப்போதும் அது அவரது போதனையாக இருந்து வந்தது. சரணாகதி செய்ய வேண்டும் என்றும் போதித்தார்.

சீடர்கள் தீட்சைபெற வரும்போது மூன்று சரணாகதிகளை அவர்கள் அறிவிக்கவேண்டும். **புத்தம் சரணம் கச்சாமி** நான் வருகிறேன். புத்தரின் பாதங்களில் சரணடைகிறேன். **சங்கம் சரணம் கச்சாமி** நான் சந்நியாசிகளின் கூட்டத்தில் சரணடைகிறேன். **தர்மம் சரணம் கச்சாமி** நான் வாழ்வின் அடிப்படை விதியான லாகோஸ், தாவோ, தர்மம் போன்றவற்றில் சரணடைகிறேன்.

இந்த மூன்று சரணாகதிகள் ஒருவரைச் சீடராக மாற்றுகின்றன. உங்களுக்கு நீங்களே ஒளியாக இருங்கள் என்பதே புத்தரின் முழுமையான போதனையாகும். எனவே அவரிடம் திரும்பத் திரும்ப இப்படி கேட்கப்பட்டது. அதில் முரண்பாடு இருக்கிறது! ஒரு பக்கம் மக்கள் உங்களிடம் சரணடைகிறார்கள். மறுபக்கம் நீங்கள், "உங்களுக்கு நீங்களே ஒளியாக இருங்கள் என்கிறீர்கள்." அதில் முரண்பாடு இல்லை. அவை ஒன்றுக்கொன்று அனுசரணையானவை.

அவ்விதம்தான் வாழ்வும் நடக்கிறது. வாழ்க்கை பரந்து விரிந்துள்ளது. அதில் முரண்பாடுகள் உண்டு. அந்த முரண்பாடுகள் எதிரிகள் அல்ல, எதிர்முனைகள் அல்ல. அவை அனுசரணையானவை. ஒன்றுக்கொன்று உதவி செய்கின்றன. ஒன்றில்லாமல் மற்றொன்று இல்லை.

சரணாகதி விடுதலைக்கு உதவி செய்யும். விடுதலை சரணாகதி செய்ய உதவும். ஒன்றை மட்டுமே தேர்வு செய்யாதீர்கள். அப்படிச் செய்தால் அரைக் கிணறு தாண்டியவர்களாவீர்கள். ஒருமுனையை மட்டும் எப்போதும் தேர்வு செய்யாதீர்கள். அப்படிச் செய்தால் பாதி நிலையில்தான் நிற்பீர்கள். பாதி நிலையில் நிற்பது பிளவுபட்டுப் போவது போன்றதாகும்.

நீங்கள் முழுமையானவராக இருக்கவேண்டும். ஒன்று சேர்ந்தவராக இருங்கள். முழு முரண்பாட்டையும் தேர்வு செய்ய வேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அதன்பிறகு நிம்மதியாக

இருக்கலாம். உங்கள் முழுமையிலிருந்து பேரமைதியும், பேரின்பமும் தோன்றும். அந்த முழுமை ஒரு இசைக் கச்சேரி, இன்னிசை போன்றதாகும்.

**ஐந்தாவது கேள்வி**

**ஓஷோ,**

**நீங்கள் கடவுளைச் சந்திக்காத வரையில் கடவுள் என்ற ஒருவர் கிடையாது என்று சூஃபிக்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். அது நாடகப் பாங்கும், கவன ஈர்ப்பும் கொண்ட அறிக்கையாக இருக்கக் காண்கிறேன். இக்கருத்து நாம் தேடும் விழிப்புணர் வுடன் தொடர்பு உள்ளதா? தயவுசெய்து அதை விளக்கு வீர்களா?**

அந்த அறிக்கை நாடகப் பாங்கும், கவன ஈர்ப்பும் கொண்டது என்றாலும் உண்மை நிறைந்ததாகும். நாடகப் பாங்கும், கவன ஈர்ப்பும் மட்டுமல்ல, அதில் முழு உண்மையும் இருக்கிறது. நீங்கள் கடவுளைச் சந்திக்காத வரையில் அப்படி ஒருவர் இல்லை. கடவுள் எப்படி இருக்க முடியும்? தெரியாத ஒன்றை எப்படி நீங்கள் நம்ப முடியும்? உங்கள் நம்பிக்கைகள் எல்லாம் பொய்யானவை. எல்லாம் கடன் வாங்கியவை. கடன் பெற்றது எதுவானாலும் அது அசிங்க மானதுதான். அது உங்களை ஏமாற்றுகிறது. அது உதவி செய்ய வில்லை. தடை செய்கிறது. அது உங்கள் வளர்ச்சிக்கு உறுதுணை யாக இல்லை. இடையூறாக இருக்கிறது.

நம்பிக்கை ஒரு சுமை. அது விடுதலை அளிக்காது. உண்மை விடுதலை தரும். உண்மை என்பது ஒரு நம்பிக்கை அல்ல. அது ஒரு அனுபவமாகும். நீங்கள் கடவுளை அறியாதபோது அவர் இருக்கிறார் என்று எப்படிச் சொல்ல முடியும்?

இந்த அறிக்கை காரணமாக குர்ட்ஜிஃப் இன்னொரு விஷயத் தையும் கூறினார். அதுவும் உண்மையானதுதான். கூடுதலான நாடகப் பாங்கும் கொண்டது. இந்த அறிக்கையைவிடவும் நாடகப் பாங்கானது. நீங்கள் ஆன்மாவை உருவாக்காது போனால் அது உங்களிடம் இருக்காது என்று அவர் சொல்லி வந்தார். அது மிகவும் நாடகப் பாங்கானது. காரணம், எல்லா மதங்களும் உங்களுக்கு ஆன்மா உண்டு என்று நம்பின. அதை நீங்கள் அறிந்தாலும் சரி அறியாவிட்டாலும் சரி. ஆன்மா உண்டு. உங்களுக்குள் அது இருக்கிறது. அதை நீங்கள் கண்டறிய வேண்டும்.

குர்ட்ஜிஃப், "நீங்கள் ஆன்மாவை உருவாக்காது போனால் அது உங்களிடம் இருக்காது" என்றார். ஆன்மாவை அறியாவிட்டால் அது எப்படி உங்களிடம் இருக்கும்? உங்களிடம் ஆன்மா இருப்ப தாக நீங்கள் எப்படிச் சொல்ல முடியும்? உங்களை நீங்கள் முதலில் அறிய வேண்டும். பிறகுதான் நீங்கள், நீங்களாக இருக்க முடியும். உங்களை நீங்கள் முதலில் அறிய வேண்டும்.

அதனால்தான் சாக்ரட்டீஸ் "உன்னை நீ அறிந்துகொள்" என்ற கோட்பாட்டைத் தந்தார். உங்களை நீங்கள் அறிந்துகொண்டால் தான், நீங்கள் நீங்களாக இருக்கமுடியும். வேறு எந்த வழியும் கிடையாது. இந்த அறிக்கைகள் கூறுவதுபோல நம்பிக்கையை நிராகரி என்ற கருத்தையே அது தெரிவிக்கிறது. எனவே நீங்கள் நம்பிக்கைகளில் திருப்திகொள்ளத் தொடங்காதீர்கள். நீங்கள் சுயமான தேடலில் இறங்க வேண்டும். புத்தர் தேடிக் கண்டறிந்தார். முகமது நபி கண்டறிந்தார். பிதாகோரஸ் கண்டறிந்தார். அதை வைத்துக் கொண்டு நீங்கள் என்ன செய்ய முடியும்? அவரது பார்வை யும், மற்ற யாருடைய பார்வையும் உங்கள் பார்வையாக அமையாது.

லட்சக்கணக்கான மக்கள் பார்வை பெற்றிருக்கிறார்கள். அவர்களுக்கு ஒளிபற்றியும் எல்லா நிறங்கள்பற்றியும் தெரியும். வடிவம், அழகுபற்றியும் அவர்களுக்குத் தெரியும். பார்வையுள்ள லட்சம் மனிதர்களால் ஒரு குருடனுக்கு ஒளி என்றால் என்ன என்று காட்டி உதவிட முடியாது. உண்மை உலகம் என்பது எதிர்ப்பத மானது. ஒரு மனிதர்மட்டுமே அங்கு பார்வை பெற்றிருக்கிறார். லட்சக்கணக்கான மக்கள் குருடர்களாக இருக்கிறார்கள். குருடாக இருக்கும் ஒருவனுக்கு லட்சக்கணக்கான பார்வை பெற்றவர்களால் உதவிட இயலாது எனும்போது, இதற்கு எதிரான நிலையில் இருப்பவர்கள்பற்றி என்ன சொல்வது? எப்போதாவது ஒருவர் புத்தராகிறார் அல்லது பிதாகோரஸாகிறார். லட்சக்கணக்கான மக்கள் வெளிச்சம் அறியாது குருடர்களாக இருக்கிறார்கள். தெய்வீகம் பற்றி, உண்மைநிலை பற்றி அறியாதவர்களாக இருக்கிறார்கள். ஒரு மனிதரின் அனுபவம் எப்படி உங்கள் அனுபவமாக மாற முடியும்?

நீங்கள் நம்பிக்கை கொள்ளலாம். தேடலைத் தவிர்க்கும் ஒரு வழிமுறைதான் நம்பிக்கை. பொறுப்பிலிருந்து ஒதுங்குவதற்கான பாதைதான் நம்பிக்கை. கோழைத்தனம் எப்போதும் கோழைத்தன மாகவே இருக்க நம்பிக்கை உதவுகிறது. உண்மைக்கான பயணத்தை, ஆய்வு பிரயாணத்தை நம்பிக்கை சுருங்க வைக்கும். ஆய்வுப் பயணம் சிரமமானது, துன்பம் தருவது, ஆபத்தானது. பயணம்

நீண்டதாக அமையலாம். யாருக்குத் தெரியும்? அறிமுகமற்ற பிரதேசத்தில் நீங்கள் நுழைகிறீர்கள்... நம்பிக்கை கொள்வது பாது காப்பானது. அதனால் மனிதர்கள் நம்பிக்கை கொள்கிறார்கள். யாரும் தேடலில் இறங்குவதில்லை.

மக்கள் கோவிலுக்குச் செல்கிறார்கள். மதபோதகர்களிடம் செல்கிறார்கள். மதநூல்களையும், வேதாகமங்களையும் சுமந்து செல்கிறார்கள். ஆனால் கடவுள் எங்கே இருக்கிறார் என்று யாரும் பார்ப்பதில்லை. இறைவன் எங்கும் நிறைந்திருக்கிறார். உங்கள் கண்கள் முழுவதிலும் நம்பிக்கைகள் நிறைந்துகிடக்கின்றன. எனவே கடவுளைக் காணமுடிவதில்லை. உங்கள் கண்களில் பாரபட்சமான அபிப்பிராயங்கள் நிறைந்துள்ளன. அதனால் கடவுளை பார்க்க முடிவதில்லை. வெறுமையான கண்களால்மட்டுமே கடவுளைக் காணமுடியும். கண்டறியமுடியும். குழந்தையின் கண்களால்மட்டுமே முடியும்.

நினைவிருக்கட்டும். உங்களின் அகஆழத்தில் இன்னும் குழந்தையின் இயல்பு இருக்கவே செய்கின்றன. ஆச்சரியப்படுதல், கேள்வி கேட்டல், வாழ்க்கைகுறித்த வியப்பு, ஒவ்வொன்றைக் கண்டும் அதிசயத்தல், சாதாரண விஷயங்களைக்கண்டு பிரமித்தல் போன்றவை அங்கு உள்ளன.

குழந்தை கடற்கரையில் கூழாங்கற்களைப் பொறுக்கிச் சேகரிக்கிறது. கிளிஞ்சல்களை வைரங்களுக்கு நிகரான மதிப்புடன் பொறுக்குகிறது. குழந்தையின் பார்வையில் எதுவும் சாமான்யமான தல்ல. எல்லாமே அசாதாரணமானவை. அந்த குழந்தை உங்களுக்குள் இன்னும் இறந்து போகவில்லை. ஒருபோதும் இறக்காது. அறிவு, நம்பிக்கைகளால் அது கண்டறியப்படுகிறது. வார்த்தைகளால் அது தொலைக்கப்படுகிறது. தேடுங்கள். மீண்டும் அந்த குழந்தைத் தனத்தை உங்களுக்குள் கண்டறிவீர்கள்.

நீங்கள் குழந்தையாக இருந்ததைவிடவும் இது முக்கியத் துவம் கொண்டது. ஏனென்றால், இப்போது நீங்கள் உலகின் வழிமுறைகளையும், மனதின் வழிமுறைகளையும் அறிந்து ஏமாற்ற மடைந்து கிடக்கிறீர்கள். ஆயிரத்தொரு விஷயங்களைப் பார்த்து விட்டீர்கள். எதுவும் திருப்தி தரவில்லை. பல விஷயங்கள் உங்களுக்குத் தெரியும். ஆனால் ஒன்றுமட்டும் தெரியாது. உங்கள் குழந்தை நிலைக்கு வியப்பின் ஆதார நிலைக்கு, ஆனந்தம், வினோதம், பயபக்தி நிலைக்குச் சென்றால், மீண்டும் நாலாபுறமும் பார்க்க இயலும்... மரங்கள் கூடுதல் பசுமையுடன், பறவைகளின்

குரல்கள் மேலும் கவித்துவமாக, உங்களைச் சுற்றி இருக்கும் மக்கள் கூடுதல் ஒளியுடன் தெரிவார்கள். அதை நீங்கள் பார்க்க முடியாது. உங்கள் பார்வையிலும் ஒரு பிரகாசம் தோன்றிவிடும்.

கடவுள் என்பது ஒரு நபர் அல்ல. அது சுயப்பிரகாசம் கொண்ட வாழ்க்கைப் பார்வை. கடவுள் ஒரு நபர் அல்ல. அது ஒரு அனுபவம், அழகின் வினோத வடிவம், வாழ்வின் அபரிமித அழகு நிலை ஆகும்.

நீங்கள் கடவுளைச் சந்திக்காதவரையில் கடவுள் என்ற ஒருவர் இல்லை என்று சூஃபிக்கள் சொல்வது சரிதான். ஆகவே, நம்பிக்கை என்ற திரைக்குப் பின்னால் உங்களை மறைத்துக்கொள்ள வேண்டாம். கடன் வாங்கப்பட்ட அறிவின் பின்னால் உங்களை மறைத்துக் கொள்ளாதீர்கள். எல்லா நம்பிக்கைகளையும், அறிவையும் உதறி விட்டுத் தேடலை ஆரம்பியுங்கள். நீங்கள் வெறுமையாகும் போது உடனே இனம் புரியாத ஏதோ ஒன்றால் நிறைக்கப்படுகிறீர்கள். அப்பாலிருந்து ஒரு ஒளி வருகிறது. அதுதான் கடவுள். அன்பு வளர்ந்து பொங்கிப் பாய்கிறது. அதுதான் கடவுள். சிறப்பான இன்னிசை உங்களிடம் பிறக்கிறது. அத்துடன் ஒரு பகிர்தலும் எழுகிறது. அது வளரத் தொடங்குகிறது. அதற்கு முடிவே இல்லை. அதுதான் கடவுள்.

கடவுள் என்பது ஒரு நபர் அல்ல. அது உன்னத ஆனந்த அனுபவம். ஒருவர் முழுமையில் கரைந்துபோகும் இன்ப உச்ச நிலை.

விழிப்புணர்வற்ற ஒரு நிலையில் நாம் வாழ்கிறோம். அதனால் தான் நம்மால் பார்க்கமுடிவதில்லை. நமது கண்கள் திறந்திருந்தாலும் அடைபட்டுக் கிடக்கின்றன. விழித்திருப்பதுபோல் தோன்றுகிறது. ஆனால் தூக்கத்தில் நடக்கும் வியாதியில் இருக்கிறோம்.

**ஸ்**காட்லாந்து மதபோதகர் ஒருவர் அதிகாலையில் நடைப் பயிற்சிக்கு சென்றார். தனது தேவாலயப் பகுதியைச் சேர்ந்த ஒருவர் பள்ளத்தில் படுத்திருப்பதைப் பார்த்தார்.

"இந்த இரவில் என்ன செய்கிறீர்கள் ஆன்ட்ரு?" என்று கேட்டார்.

"இன்னும் எனக்குச் சரியாக விழிப்பு வரவில்லை. இது திருமணமாகவோ, அல்லது சவஅடக்கமாகவோ எப்படி இருந் தாலும் ஒரு அபாரமான வெற்றிதான்" என்றார் படுத்துக் கிடந்தவர்.

உங்களைக் கவனியுங்கள். விழிப்பற்ற, குடிபோதை நிலையில் நீங்கள் நடந்து கொண்டிருப்பதைக் காண்பீர்கள். வாழ்க்கை என்ன வென்று உங்களுக்குத் தெரியாது. நீங்கள் யார் என்று உங்களுக்குத் தெரியாது. எங்கிருந்து வந்தோம், எங்கு போகிறோம் என்று தெரியாது .... நீங்கள் குடிபோதை நிலையில் நீரில் மிதக்கும் கட்டைபோல, தற்செயல் நிகழ்வாக இருக்கிறீர்கள்.

இந்த வழிமுறைகளால் நீங்கள் கடவுளைக் காண முடியாது. நீங்கள் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். விழிப்புணர்வை நீங்கள் வாழ்நாள் முழுவதும் கொண்டிருக்க வேண்டும். ஒவ்வொரு கணமும் அபாரமான கவனத்துடன் இருக்க வேண்டும். அதன் பிறகு தான் அது என்ன என்று தெரிந்துகொள்ள முடியும். அதுதான் கடவுளாகும்.

ஆனால் நாம் அலைந்துகொண்டும், காரியங்களில் ஈடுபட்டுக் கொண்டும் இருக்கிறோம்....

புகழ்பெற்ற மருத்துவர் ஒருவர் வேகமாக நோயாளிகளைப் பரிசோதிப்பதிலும், மருந்து எழுதித் தருவதிலும் வல்லவர். ராணுவ வீரர் ஒருவர் அவசரத்தோடு காத்திருந்தார். நோயாளி ஒருவர் வெளி யேறியதும் அவர் மருத்துவரின் கையைப் பிடித்து மனப்பூர்வமாகக் குலுக்கினார். "நீங்கள் எனக்கு மருந்து எழுதித்தருவது குறித்து எனக்கு மிகவும் சந்தோஷம். என் தந்தை கர்னல் பிளாங்க் உங்களை பற்றி நிறையச் சொல்லியிருக்கிறார்.

"என்ன! நீங்கள் நண்பர் டாமின் மகனா?" என்று வியந்தார் மருத்துவர்.

"ஆமாம்."

"அன்பானவனே! அவசரமாக எழுதப்பட்ட மருந்துச் சீட்டு களைத் தீயில் எறி. உட்கார்ந்து உன் பிரச்சினை என்னவென்று கூறு" என்றார் மருத்துவர்.

முதல் தடவை நோயாளி வந்தபோது மருத்துவர் அவர் சொன்னதைக் கேட்கவில்லை. மருந்து சீட்டு எழுதினார். அந்த சீட்டுகள் அவசரமாக எழுதப்பட்டவை. மருத்துவர், "அவசரமாக எழுதப்பட்ட மருந்துச் சீட்டுகளைத் தீயில் எறி. உட்கார்ந்து உன் பிரச்சினை என்னவென்று கூறு" என்றார்.

இப்படித்தான் காரியங்கள் நடக்கின்றன. நமது வாழ்க்கை ஒருவித உறக்க நிலையில், கண்களில் பற்பல கனவுகளுடன், ஆர்வ

மின்றி, சலிப்புடன், அறிவற்று நடக்கிறது. கடவுளை அறியும் வழி அதுவல்ல.

நீங்கள் அறிவின் உச்சத்தில் இருந்தால், அறிவும் கூர்மையுடன் இருந்தால் மட்டுமே கடவுள் உங்களுக்கு வசப்படுவார். கடவுள் முட்டாளுக்காக அல்ல. கடவுள் அறிவாளிகளுக்கானவர். அறிவின் மூலமாகவே மட்டுமே வாழ்க்கை அமையும். 'அறிவு' என்பதை நான் தனித்துவம் என்ற பொருளில் சொல்லவில்லை என்று நினைவில் கொள்ளுங்கள். தனித்துவம் என்பது திரையிடப்பட்ட முட்டாள் தனம். தனித்துவம் என்பது அறிவின் ஏமாற்றுத்தனமாகும், போலித் தனமாகும். தனித்துவம் என்பது அறிவு அல்ல. மனிதர்கள் புத்தி சாலிகளாக இருக்கலாம். அறிவாளிகளாக இருக்க முடியாது. அது தந்திரம். அறிவு அல்ல.

அறிவு என்பது விழிப்பும், எச்சரிக்கையுமாகும். மனதிலுள்ள எல்லா அழுக்குகளையும் நீங்கள் நீக்கினால், குப்பையான அறிவை யும், நம்பிக்கைகளையும் அகற்றினால், மனம் தூய கண்ணாடியாகி விடும். அதுதான் அறிவு. தியானமே அறிவாகும்.

**கடைசிக் கேள்வி**

**ஓஷோ,**

**அமைதியாக உட்கார்ந்திருந்தால் வசந்தம் வரும், புற்கள் தானே முளைக்கும் என்பது நிஜமான உண்மையா?**

அது நிஜமான உண்மைதான். அது எனது சொந்த அனுபவம். சாட்சியாக இருந்து நான் அதைச் சொல்கிறேன். முழுமையான நம்பகத்தன்மையுடன் கூறுகிறேன். லாவோட்ஸு சொன்னார் என்பதற்காக அதை நான் சொல்லவில்லை. நான் அதை அறிந்து கொண்டேன் என்பதால் சொல்கிறேன். இவ்விதமாக அது எனக்கு நிகழ்ந்தது. உண்மை நிகழ்வு தானே நடந்தேறுகிறது. உங்கள் பக்கத் திலிருந்து தேவைப்படுவதெல்லாம் இணக்கம்தான். ஓய்வான இணக்கம்.

முயற்சியால் நடக்கும் காரியங்கள் இருக்கின்றன. முயற்சியற்று இருக்கும்போது நடக்கும் சம்பவங்களும் இருக்கின்றன. அந்த காரியங்கள் முயற்சி மூலம் நடக்காது. முயற்சி செய்யாமல் நடக்கும் செயல்களும் இருக்கின்றன. முயற்சி மூலம் நடப்பவை எல்லாம் இரண்டாந்தரமானவை. முயற்சியால் நடப்பவை லௌகீகமானவை. மறுஉலகம் சார்ந்தே புனிதமான காரியங்கள் முயற்சியில் நடக்கின்றன.

செயல்களின்மூலம் நீங்கள் புறஉலகை அடைகிறீர்கள். செயலற்று இருக்கும்போது அகஉலகை அடைகிறீர்கள். இந்த அறிக்கை அகம் சார்ந்தது. அமைதியாக உட்கார்ந்திருங்கள். எதுவும் செய்யவேண்டாம் வசந்தம் வரும், உலகின் மிகப்பெரிய செல்வந்த ராக நீங்கள் மாறுவீரர்கள் என்று நான் கூறவில்லை. அப்படி நான் சொல்லவில்லை. அவ்வாறு நீங்கள் மாறமுடியாது. நீங்கள் அதிக ஏழ்மையை அடைய முடியும். உலகின் பெரிய தனவந்தனாக மாற முடியாது. வசந்தம் வரும், நீங்கள் அமெரிக்க அதிபராக மாறி விடுவீர்கள் என்று நான் சொல்லவில்லை. நீங்கள் அமைதியாக உட்கார்ந்து, எதுவும் செய்யாது இருந்தால் இறைவன் வருவான்.

ஒரு அழகான கதையை நான் கேள்விப்பட்டேன்.

**பென்**ஸன் உலகில் எல்லா இடங்களிலும் உள்ள விபசாரி களுடன் இருந்திருக்கிறான். அவனுக்கு ஹாங்காங்கில் புதிய ஒரு அனுபவம் ஏற்பட்டது. அங்கு மிகவும் நோய்வாய்ப்பட்ட ஒரு சீனப் பெண்ணுடன் உறவு கொண்டான். அந்த விபச்சாரி மூலமாக பல வகைப்பட்ட பாலுறவு நோய்களை வரவழைத்துக் கொண்டான். நோய்களின் வகைகளை இனம் பிரித்து அடையாளம் கண்டறிவது மருத்துவர்களுக்குக் கடினமான காரியமாக இருந்தது.

அவன் அமெரிக்க மக்கள் குடியிருந்த பகுதியில் இருந்த ஒரு பெண் நோயாளிகளுக்கு சிகிச்சை செய்யும் மருத்துவரிடம் சென்றான். அவர் புகழ்பெற்ற மருத்துவர். அவனைப் பரிசோதித்த அவர் தலையை ஆட்டினார். "மோசமான செய்தி பென்ஸன். உடனே அறுவைச் சிகிச்சை உங்கள் ஆண்குறியை வெட்டி அகற்றியாக வேண்டும்" என்றார்.

நோய் நீங்குவதற்கு மேற்கொள்ள வேண்டிய சிகிச்சை பற்றிக் கேள்விப்பட்ட அவன் அதிர்ச்சியடைந்தான். தைரியத்தை வரவழைத்துக் கொண்ட அவன் தெருவின் மறுபக்கம் இருந்த மற்றொரு அமெரிக்க மருத்துவரிடம் சென்றான். அங்கும் அவனிடம் அதே சிகிச்சைதான் பரிந்துரைக்கப்பட்டது.

திகைத்துப் போன அவன் வீதிவழியே நடந்து சென்றான். தடுமாற்றத்துடன் நெடுகிலும் நடந்து சீனக் குடியிருப்புப் பகுதியைக் கண்டறிந்தான். அங்கு தாவோயிஸ சீன மருத்துவ அறுவைச் சிகிச்சை மருத்துவரின் அலுவலகம் இருப்பதை விளம்பரப் பலகை ஒன்றைப் பார்த்து அறிந்துகொண்டான்.

மேலும் ஒரு மருத்துவ ஆலோசனை பெறுவதற்கு எண்ணம் கொண்ட அவன் அந்த அலுவலகத்திற்குள் நுழைந்தான். சீன மருத்துவரிடம், இரண்டு அமெரிக்க மருத்துவர்கள் சொன்ன செய்தியை எடுத்துரைத்தான். அவர்கள் தனது ஆண்குறியை உடனே வெட்டி அகற்றவேண்டும் என்று தெரிவித்ததையும் கூறினான்.

சீன மருத்துவர் பென்ஸனைப் பரிசோதித்தார். தடிமனான மருத்துவ நூல்களை வைத்துத் தகவல்களை சரிபார்த்தார். மீண்டும் அவனை பரிசோதித்தார்.

"ஏதாவது நம்பிக்கை தரும் வகையில் இருக்கிறதா மருத்துவரே?" என்று கவலையுடன் கேட்டான்.

"நிச்சயமாக இருக்கிறது. நான் முழுமையாகப் பரிசோதித்துப் பார்த்துவிட்டேன். என்ன தவறு என்று எனக்குத் தெரிந்துவிட்டது. நீ சீனப் பெண்ணிடம் விளையாடிவிட்டாய். அவள் சிக்குப் பிடித்தவள். அமெரிக்க மருத்துவர்களிடம் நீ சென்றது தவறு. சிக்கல் அமெரிக்க மருத்துவர்களிடம் இருக்கிறது. அவர்கள் எப்போதும் பணம், பணம், பணம் என்றே யோசிக்கிறார்கள்."

பென்ஸன் முகம் மலர்ந்தான். "எனக்கு அறுவை சிகிச்சை தேவையில்லை என்றா சொல்கிறீர்கள்? எனது ஆண்குறியை வெட்ட வேண்டியதில்லையா?"

"அவர்கள் சொன்னதை எல்லாம் மறந்துவிட்டு வீட்டிற்குப் போ. இரண்டு அல்லது மூன்று வாரங்கள் பொறு. ஆண்குறி தானாகவே இற்று விழுந்துவிடும்!" என்றார். சீன மருத்துவர்.

தானே நடக்கும் சில விஷயங்கள் இருக்கின்றன.

இன்று இவ்வளவு போதும்.

அழகுணர்ச்சியே
நிஜமான ஒழுக்க
நெறியாகும்

அத்தியாயம் - 10

## முதல் கேள்வி

**ஓஷோ**

**நிஜமான கேள்வி என்பது எது?**

அறிவியல்பூர்வமான கேள்விகள் எல்லாம் உண்மையானவை. ஏனென்றால், அவை பதிலளிக்கக் கூடியவை. ஆன்மீகக் கேள்விகள் எல்லாம் நிஜமற்றவை. ஏனென்றால், அவை பதிலளிக்க முடியா தவை.

ஆன்மிகம் பதிலளிக்க இயலாதவற்றுடன் சம்பந்தப்பட்டு இருக்கிறது. ஆன்மீகம் சம்பந்தப்பட்ட ஒரு கேள்விகேட்பதே அடிப்படையில் தவறான செயல். ஏனென்றால், ஆன்மீகம் என்பது வினோதங்களைத் தேடுவதாகும். பதிலைத் தேடுவது அல்ல. ஆன்மீகம் என்பது அடிப்படையை அறியமுடியாத ஒன்றினுள் ஆழமாகக் குதிப்பதாகும். அது தெரியாததுமட்டுமல்ல, தெரிந்து கொள்ள முடியாததும் ஆகும்.

**தெரிந்தது, தெரியாதது, தெரிந்துகொள்ள முடியாதது** என்ற இந்த மூன்று வார்த்தைகளைப் புரிந்துகொள்ள வேண்டும். தெரிந்தது என்பது நாம் அனுபவங்கள், ஆய்வுகள்மூலம் கடந்த

காலத்திலிருந்து சேகரித்ததாகும். பதில் எதுவாக இருந்தாலும் அதை அளிக்கும்படி இயற்கை வற்புறுத்திப் பெற்றோம். அது தெரிந்ததாகி விட்டது. அறிவியல் என்பது இதுதான். தெரியாத ஒன்றைத் தெரிந்து கொள்ளவே அறிவியல் இருக்கிறது.

வாழ்க்கை இரண்டு பிரிவுகளாக மட்டுமே பிரிக்கப்பட்டுள்ளது. ஒன்று தெரிந்தது, அடுத்தது தெரியாதது என்பவையே அப்பிரிவு களாகும் என்பதே அடிப்படைக் கருத்து அனுமானமாகும். விரை வாகவோ அல்லது தாமதமாகவோ தெரிந்தது என்ற பிரிவு பெரிதாகிக் கொண்டே செல்லும். மேலும் மேலும் விஷயங்கள் தெரியவரும். அதற்கு அறிவியல் பொறுப்பேற்றுக் கொள்கிறது. ஒருநாள், தெரிந்தது என்ற ஒரு பிரிவு மட்டுமே எஞ்சியிருக்கும். தெரியாதது மறைந்துபோகும். காரணம், எல்லாப் பதில்களையும் நாம் கண்டு பிடித்துவிட்டோம்.

இங்குதான் ஆன்மிகம் வித்தியாசப்படுகிறது. தெரிந்துகொள்ள முடியாதது என்று மூன்றாவது பிரிவு ஒன்றும் இருக்கிறது என்று ஆன்மீகம் கூறுகிறது. வினோதமானது என்ற அது எப்போதும் அங்கு இருந்து வருகிறது. அன்பை அறிவு என்ற நிலைக்குத் தாழ்த்த முடியாது. அழகையோ, மகிழ்ச்சியையோ அப்படி மாற்றமுடியாது. இயற்கையை என்ன சொல்வது? உணர்வைத் தெரிந்தது என்று மாற்ற முடியாது. தெரியாதது, தெரிந்தது இரண்டுக்கும் அப்பால் உச்ச நிலை தொங்கிக் கொண்டிருக்கிறது. தைரியம் நிறைந்தவர்களை பாதை தெரியாத அந்த வினோதத்தில் புகுந்து புறப்பட அது அழைக்கிறது.

ஆன்மிகம் உச்சநிலை சார்ந்ததாக உள்ளது. பதிலளிக்க முடியாதது, தெரிந்துகொள்ள முடியாதது போன்றவற்றுடன் அது சம்பந்தப்பட்டிருக்கிறது. எனவே ஆன்மிகம் சம்பந்தப்பட்ட எல்லாக் கேள்விகளும் தவறானவை. எந்த ஆன்மிக கேள்வியும் நம்பகத் தன்மையுள்ளது அல்ல. அப்படியிருக்கவும் முடியாது.

குருவின் செயல்கள் உங்களுக்கு பதில் அளிப்பதற்காக அல்ல. உங்கள் கேள்விகளை அழிப்பதற்காகவே. மெல்ல மெல்ல கேள்வி களற்ற நிலையை எட்ட உதவி செய்வதற்காகவே. கேள்விகள் ஏதும் இல்லாத நிலையை அடையவே. நீங்கள் அமைதியடைந்தால் கேள்விகள் எழுவதில்லை. அதன் பிறகு தான் இயற்கையுடன் ஆழமாக இசைவு கொள்ள முடியும். கேள்விக்குறி உங்கள் இதயத்தில் இல்லாது போனால், இதயம் முழுமையில் கரையும். கேள்விக் குறியுடன் சேர்ந்து அகந்தையும் மறைந்து விடும்.

சம்பவ இடத்திற்கு கேள்விக்குறி எப்படி வருகிறது என்று தெரியுமா? அறிவு விருட்சத்தில் இருந்த கனியை உண்ணும்படி ஏவாளைத் தூண்டிய பாம்பை அந்தக் கேள்விக்குறி உருவகப்படுத்து கிறது. கேள்விக்குறி பாம்பின் உருவகமாகும். ஏவாள் கேள்வி கேட்ட தருணத்திலேயே தேவ கிருபையை இழந்துவிட்டாள். அதே கேள்வியை ஆதாமிடமும் தூண்டியெழுப்பினாள்.

மனிதன் கேள்வியால் வீழ்ந்து விட்டான். கேள்வியற்ற நிலை வந்தால் மீண்டும் மனிதன் எழுவான். ஆதாமும், ஏவாளும் தோட்டத் திலிருந்து வெளியேற்றப்பட்டார்கள். காரணம் அவர்கள் கேள்வி கேட்டதுதான். ஏசு மீண்டும் தோட்டத்தில் நுழைந்தார். காரணம், அவர் சரணடைந்தார், நம்பிக்கை கொண்டிருந்தார். அவர் சிலுவை யில் இருந்த கடைசிக் கணத்தில் சிறிது தயக்கம் கொண்டார். அது மனித இயல்புதான். அதற்காக நான் ஏசுவை நேசிக்கிறேன். அது அவருடைய மனிதத் தன்மையைக் காட்டுகிறது. ஒரு கணம் கேள்வி மீண்டும் பெருவேகத்துடன் வந்தது. பழிதீர்க்கும் வேகத்துடன் வந்தது. கேள்வியின் கடைசி அடுக்கு அவரது ஆழ்மனதில் மறைந் திருந்திருக்கலாம். அவர் கடவுளிடம், "என்னைக் கைவிட்டு விட்டீர்களா?" என்றார். இது ஒரு கேள்வி. "என்னை என்ன செய் கிறீர்கள்?" இது ஒரு கேள்வி. அந்த கேள்வியின் அடிப்படை விஷயம் சந்தேகம். ஒரு சந்தேகம் அவர் மனதில் எழுந்திருந்தது. அவர் சிலுவையில் அறையப்பட்டிருந்தார். கடவுள் அவரைக் கைவிட்டு விட்டார் என்ற எண்ணம் எழுவது இயல்புதான். "தனது கருணை எனக்குக் கிடைப்பதை கடவுள் நிறுத்திவிட்டார். இனி கடவுள் என்னுடன் இல்லை. நான் தனித்துப் போனேன். எல்லோரும் கைவிட்டு விட்டார்கள்" என்று எண்ணினார். ஆனால் சட்டென்று இதுதான் கடைசிக் கேள்வி, கடைசிச் சந்தேகம் என்பதைப் புரிந்து கொண்டார்.

அதைக் கண்டதும் கடைசிக் கேள்வி மறைந்துபோனது. உடனே அவர் "நீங்கள் நடத்துவீர்கள். உங்கள் சாம்ராஜ்ஜியம் வரும்" என்றார். இது நம்பிக்கை. "உங்களால் முடியும். என்னால் இயலாது" இனி கேள்வி இல்லை. அங்கு பெரும் சரணாகதி இருக்கிறது. ஏசு அந்த கணத்தில் மனித நிலையைக் கடந்துவிட்டார். அந்தக் கணத்தில் ஆதாம் மறைந்து போனான். அந்தக் கணத்தில் ஏசு புத்தரானார்.

எப்போது கேள்வியும் இல்லை பதிலும் இல்லை என்ற நிலை ஏற்படுகிறதோ அப்போது நீங்கள் முழு அமைதி பெறுகிறீர்கள். தெளிந்த அமைதியான குளம் போலாகிறீர்கள். இருப்பதை

அப்படியே பிரதிபலித்துக் காட்டுகிறீர்கள். அதில் இறைவன் பிரதி நிதித்துவம் கொள்கிறார்.

நான் உங்களுக்கு மீண்டும் நினைவூட்ட விரும்புகிறேன். புராதன ஹிப்ரு மொழியில் கடவுள் என்ற வார்த்தை அது இதுவாக இருக்கிறது என்ற கருத்தை குறியீட்டு முறையில் உணர்த்துகிறது. G என்றால் அது. O என்றால் இது. D என்றால் இருக்கிறது.

குளம் அமைதியாக இருக்கும்போது அலைகள் இல்லை. சிற்றலைகளும் இல்லை. நிலவு தனது எல்லா அழகும் வெளிப்படும் வண்ணம் ஜொலிக்கிறது. அதுவே ஆன்மீக விழிப்புணர்வு. அது பதில்களுக்கு பிறகு வந்த நிலை அல்ல. விந்தை அனுபவங்களுக்கு பிறகு ஏற்பட்ட நிலையாகும். அது அறிவியல்பூர்வமான கேள்வி களுக்கு அப்பாற்பட்ட முற்றிலும் வித்தியாசமான ஒரு பரிமாண மாகும்.

அறிவியல் என்பது கேள்வி கேட்டலாகும். அறிவியல் சந்தேகத்தில் வேரூன்றி நிற்கிறது. ஆன்மீகம் கேள்விகளற்றது. அது நம்பிக்கையில் காலூன்றி இருக்கிறது. சந்தேகத்திலிருந்து நம்பிக் கைக்கு மாறுவதே மதமாற்றம் ஆகும். ஒரு இந்து கிறிஸ்தவராவது மதமாற்றமல்ல. ஒரு கிறிஸ்தவர் இந்துவாவதும் மதமாற்றம் அல்ல. அது மதமாற்றமே அல்ல. ஒரு சிறையிலிருந்து மற்றொரு சிறைக்கு மாறுவதாகும். எப்போதும் சந்தேகம் மறைந்து நம்பிக்கை எழுகிறதோ அதுவே மதமாற்றம், மறுமலர்ச்சியாகும்.

**இரண்டாவது கேள்வி**

**ஓஷோ,**

**உண்மையான கல்வி எது என்பதுகுறித்த உங்கள் கருத்து என்ன?**

நடைமுறையில் இன்றுவரை இருந்துவரும் கல்விமுறை நிஜமானதல்ல. அது மனிதகுலத்துக்குச் சேவை செய்யவில்லை. அதற்குமாறாக மரபு சார்ந்த விருப்பங்களுக்கு அது சேவை புரிகிறது. அது கடந்தகாலத்திற்குச் சேவை செய்கிறது. ஆசிரியர் என்பவர் கடந்தகாலத்தில் தரகராக இருக்கிறார். அவர் கடந்தகாலத்து நம்பிக் கைகள், முறைசார்ந்த அம்சங்கள், அனுமானங்களை வருகின்ற தலைமுறையினருக்கு வழங்கும் ஒரு இடைத் தரகராகச் செயல்படு கிறார். தொடுவானத்தில் தென்படும் புதிய விழிப்பை அழுக்காக்கி மாசுபடுத்துகிறார்.

அதனால்தான் ஆசிரியர் என்பவர் எல்லாச் சமூகங்களாலும் மதிக்கப்படுகிறார். கட்டமைப்பு ஏற்படக் கல்வி உதவி புரிந்து சேவை செய்கிறது. ஜனங்களை அது திறமையான மனித இயந்திரங்களாக மாற்றுகிறது. அது மனிதர்களைத் தேர்ச்சி பெற்ற இயந்திரங்களாக மாற்றுகிறது. இன்றுவரை கல்வி அப்படித்தான் இருந்து வருகிறது.

கல்வியின் காரணமாக மனிதனின் பரிணாமம் கன்னாபின்னாவென்று மனம்போனபடி அமைந்துவிட்டது. இன்றுவரை அது தவிர வேறு வழியில்லை. ஏனென்றால், விஷயம் கடந்தகாலத்தில் இருக்கிறது. அறிவு மெதுவாகவே வளர்ச்சி பெற்றது. பல நூறு ஆண்டுகள் அது ஒரே விதமாகவே இருந்து வந்தது. ஆசிரியர் தனது பணியைச் செய்வதில் திறமை பெற்றிருக்கிறார். தெரிந்த செய்திகள் எல்லாம் புள்ளி விவரங்கள்தான். அது வளர்ச்சி பெறவில்லை.

இப்போது அறிவு பெருத்த ஓசையுடன் வெடித்து வெளிப்பட்டிருக்கிறது. விஷயங்கள் வேகமாக மாறிக்கொண்டு இருக்கின்றன. கல்விமுறை முற்றிலும் காலாவதியாகிவிட்டது. வழிமுறை பழையதாகிவிட்டது. அதை உதறிவிட வேண்டும். முழுவதும் புதிதான ஒரு கல்விமுறை புழக்கத்திற்கு வரவேண்டும். இப்போது மட்டுமே அது சாத்தியம். இதுவரை அது சாத்தியமற்று இருந்தது.

அறிவு பெருத்த ஓசையுடன் வெடித்து வெளிப்பட்டிருக்கிறது என்று நான் கூறுவதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். அறுபது நிமிடங்கள் அமைந்த ஒரு கடிகார முகப்பைக் கற்பனை செய்து கொள்ளுங்கள். அந்த அறுபது நிமிடங்களும் மூவாயிரம் வருட மனித வரலாற்றைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது. ஒவ்வொரு நிமிடமும் ஐம்பது வருடங்கள் அல்லது ஒவ்வொரு நொடியும் சுமாராக ஒரு வருடம் என்ற கணக்கு. இந்த கணக்குப்படி கடந்த ஒன்பது நிமிடங்களாக எந்த குறிப்பிடத்தக்க ஊடக மாற்றமும் ஏற்படவில்லை. இப்போது அச்சு இயந்திரம் வந்துவிட்டது. மூன்று நிமிடங்களுக்கு முன்னர் தந்தி, புகைப்படக்கலை, புகைவண்டி வந்துவிட்டன. இரண்டு நிமிடங்களுக்கு முன்னர் தொலைபேசி, சுழல் அச்சு இயந்திரம், திரைப்படம், தானியங்கி வாகனங்கள், ஆகாய ஊர்திகள், வானொலி போன்றவை வந்தன. ஒரு நிமிடத்துக்கு முன்பு பேசும் படம் வந்தது. கடைசிப் பத்து வினாடிகளில் தொலைக்காட்சி வந்தது. கடைசி ஐந்தாவது வினாடியில் கணினி இயந்திரம் தோன்றியது. கடைசி வினாடியில் தொலைத்தொடர்பு செயற்கைக்

கோள்கள் உருவாயின. லேசர் கதிரியக்கம் வினாடியின் ஒரு பகுதியில் ஏற்பட்டது.

இதையே சில மனிதர்கள் அறிவு வெடித்து வெளிப்பட்டிருக்கிறது என்று சொல்கிறார்கள். மாற்றம் என்பது புதியது அல்ல. புதியது என்பது மாற்றத்தின் ஒரு வடிவம்தான். அது எல்லா வித்தியாசங்களையும் ஏற்படுத்துகிறது. காரணம், ஒரு குறிப்பிட்ட நிலையில் அளவீடு சார்ந்த மாற்றங்கள், பண்பு சார்ந்த மாற்றங்களாக உருவெடுக்கின்றன.

நீங்கள் தண்ணீரை சூடாக்கினால் அது தொன்னூற்று ஒன்பது டிகிரி உஷ்ணம் வரையிலும் தண்ணீராகவே இருக்கும். அது உஷ்ணத்துடன் இருக்கலாம். ஆனாலும் தண்ணீர் என்ற நிலையில் தான் இருக்கும். ஒரு டிகிரி உஷ்ணம் அதிகரிக்கும்போது நீர் ஆவியாகத் தொடங்குகிறது. அங்கு நீரின் பண்புநிலையில் மாற்றம் ஏற்படுகிறது. சில வினாடிகளுக்கு முன்னர் தண்ணீர் கண்ணால் பார்க்கக் கூடியதாக இருந்தது. இப்போது கண்ணால் காண முடியாததாகிவிட்டது. முன்பு தண்ணீர் கீழ்நோக்கிப் பாய்ந்தது. இப்போது அது மேல்நோக்கிப் பாய்கிறது. புவியீர்ப்பு விசையை அது வென்றுவிட்டது. அதன்பிறகு அது புவியீர்ப்பு விசையின் கட்டுப்பாட்டில் இல்லை.

நினைவில் வையுங்கள். ஒரு குறிப்பிட்ட நிலையில், அளவீட்டு நிலை பண்புநிலையாக மாறுகிறது. அதுதான் இப்போது நடந்திருக்கிறது. மாற்றம் புதியது அல்ல. அது செய்தியும் அல்ல. மாற்றம் எப்போதும் நடந்துகொண்டே இருக்கிறது. ஆனால் மாற்றத்தின் தரநிலை பெரிதும் புதியதாகும். முன்பு இருந்ததுபோல அது இருந்ததில்லை.

ஸ்ட்ராய்சின் என்ற விஷம் அழிவைத் தருவதும், நோய் தீர்க்கும் மருந்தாக மாறுவதும் பொருளின் தரநிலை மாற்றமாகும். சிறிய அளவில் கொடுத்தால் விஷமும் மருந்தாகும். அதே மருந்து அதிகமானால் அழிவைத் தரும் என்று நார்பர்ட் வெய்னர் கூறியது இதைத்தான். ஒரு குறிப்பிட்ட நிலையில் அது மருந்தாக இல்லாது விஷமாகி விடுகிறது.

இப்போது மாற்றம் பெரிய அளவில் நடந்துகொண்டிருக்கிறது. ஆசிரியர் இனி கடந்தகாலப் பாணியில் சேவை செய்ய முடியாது. கடந்த காலத்து வழிமுறையில் கல்வியால் சேவை புரிய முடியாது. மனப்பாடம் செய்வதற்குக் கடந்தகால வழிமுறை

மக்களுக்கு உதவி செய்கிறது. கல்வி இன்றுவரை அறிவு விஷயத்தில் கல்வியாக இருக்கவில்லை. ஞாபகம் வைத்துக் கொள்ளல், மனப் பாடம் போன்றவற்றை மட்டுமே அது செயல்படுத்துகிறது. கடந்த தலைமுறை அதன் அறிவு அனைத்தையும் புதிய தலைமுறைக்கு மாற்றியது. புதிய தலைமுறை அதை ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். நல்ல ஞாபகசக்தி இருந்தவர்கள் அறிவாளிகளாக மதிக்கப்பட்டார்கள்.

அது அவசியமானதல்ல. ஞாபக சக்தியே இல்லாதவர்களும் அறிவாளிகளாக இருக்கிறார்கள். ஆல்பர்ட் ஐன்ஸ்டீனுக்கு நல்ல ஞாபகசக்தி உள்ளவரல்ல. அற்புதமான நினைவாற்றல் பெற்ற மனிதர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்களிடம் அறிவுத்திறன் இல்லை.

மனப்பாடம் என்பது உங்கள் மூளையில் உள்ள இயந்திரத் தனமான விஷயமாகும். அறிவு என்பது உணர்தலாகும். அறிவு உங்கள் உயிரின் ஒரு அங்கமாக இருக்கிறது. நினைவாற்றல் என்பது மூளையின் ஒரு அங்கம். ஞாபகம் என்பது உடல் சார்ந்தது. அறிவு என்பது உங்கள் மனம் சார்ந்தது.

அறிவை நாம் இப்போது கற்றுணர வேண்டும். காரணம், மாற்றம் வேகமாக நடந்து வருகிறது. இனி நினைவாற்றலால் எதுவும் செய்யமுடியாது. மனப்பாடம் செய்துவைத்திருந்த விஷயங்கள் எல்லாம் காலம்கடந்த பழையவைகளாகிவிட்டன. அதுதான் இப்போது நடந்துகொண்டிருக்கிறது. கல்வி தோற்று வருகிறது. பல்கலைக் கழகங்கள் தோற்று வருகின்றன. ஏனென்றால், அவை பழைய வழிகளை பிடிவாதமாகப் பின்பற்றுகின்றன. மூவாயிரம் வருடங்களாக அவை அதைச் செய்துவருகின்றன. இப்போது அவை தங்களுக்கு என்ன தெரியவில்லை என்பதையும், எதைச் செய்ய வேண்டும் என்பதையும் கற்றுக் கொள்ளும் உத்தியை படித்தறிய வேண்டும்.

பழைய செய்திகளைக் குழந்தைகளுக்குக் கற்றுத்தந்தால், எதிர்காலத்தில் வாழும் தகுதியை அவை வழங்க இயலாது. தடை ஏற்படுத்துவது ஆபத்தாக அமையும். வேகமாக நடந்துகொண்டிருக்கும் மாற்றங்களுக்கு ஏற்ப வாழ்வதற்கு அவர்களுக்கு அறிவுத் திறன் வேண்டியிருக்கிறது.

நூறு வருடங்களுக்கு முன்னர் லட்சக்கணக்கான மக்கள் தங்கள் சொந்த நகருக்கு வெளியில் சென்றது கிடையாது. அல்லது

தங்கள் சொந்த நகருக்கு வெளியே ஐம்பது மைல்களுக்கு அப்பால் சென்றது கிடையாது. லட்சக்கணக்கான மக்கள் பிறந்தது முதல் மரணம் வரை ஒரே இடத்தில் வசித்தார்கள். இப்போது சகலமும் மாறிவருகிறது. அமெரிக்காவில் ஒரு சராசரி மனிதன் ஒரு இடத்தில் மூன்று ஆண்டுகள் மட்டுமே வசிக்கிறான். திருமணத்திற்கும் மூன்று வருடம் என்ற அதேகால அளவுதான். பிறகு குடியிருக்கும் நகரத்தை, உத்தியோகத்தை, கணவனை, மனைவியை மாற்றிக்கொள்ளும் நிலை ஏற்படுகிறது.

நீங்கள் வாழ்ந்துகொண்டிருக்கும் இது முற்றிலும் புதிய உலகம். கல்விமுறை உங்களை நடமாடும் கலைக்களஞ்சியமாக மாற்றுகிறது. ஆனால் அது காலாவதியாகிவிட்ட களஞ்சியம். இந்த வித்தியாசம் புதியது அல்ல. புதியது என்பது மாற்றத்தின் தரநிலை யாகும்.

நமது கடிகார முகப்பில் மூன்று நிமிடம் முன்னர் ஒரு வளர்ச்சி ஏற்பட்டது. மாற்றத்தின் அளவீட்டு முறை மாறிவிட்டது. மாற்றத்தில் மாற்றம் ஏற்பட்டு விட்டது.

இப்போது நாம் அறிவைக் கற்பிக்கவேண்டும். தினமும் மாறும் புதிய விஷயங்களுடன் வாழ்வதற்கு அதன் பின்னரே குழந்தைகள் தகுதிபெற முடியும். எதிர்காலத்தில் பயன் தராத விஷயங்களைத் திணித்து அவர்களுக்குச் சுமையை ஏற்றாதீர்கள். எதைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதைப் பழைய தலைமுறை சொல்லித் தரவில்லை. குழந்தைகள் கூடுதல் அறிவாற்றலுடன் இருக்கப் பழைய தலைமுறையினர் கற்றுத்தர வேண்டும். அப்போது தான் மாறிவரும் புதிய உலகத்துடன் சுயமாக இசைந்து செயல்பட அவர்கள் தகுதி பெற முடியும். அந்த புதியவை எப்படி இருக்கும் என்பதை பழைய தலைமுறையினர் கற்பனைசெய்து பார்க்கவும் முயன்றதில்லை.

உங்கள் குழந்தை சந்திரனில் வசிக்க நேரலாம். புதிய சுற்றுச் சூழலில் வாழ வேண்டியது வரலாம். உங்கள் குழந்தை வானத்தில் வசிக்க வேண்டியது வரலாம். காரணம், பூமியில் மக்கள் நெருக்கம் அதிகரித்துப் போய்விட்டது. உங்கள் குழந்தை பூமிக்கு அடியிலோ அல்லது கடலுக்கு அடியிலோ வாழ நேரலாம். உங்கள் குழந்தை எங்கே வாழும் என்று யாருக்கும் தெரியாது. அவர்கள் குளிகை மற்றும் உயிர்ச்சத்து மாத்திரைகளைத் தின்று உயிர்வாழ நேரிடலாம். முற்றிலும் மாறுபட்ட சூழலில் வாழ நேரிடலாம். அவர்களுக்கு கடந்தகாலத்து கலைக்களஞ்சியங்களின் அறிவைப் புகட்டுவதால்

என்ன பயனும் ஏற்படப் போவதில்லை. புதிய வாழ்க்கை முறையை எதிர்கொள்ள அவர்களைத் தயார் செய்ய வேண்டும்.

நாம் அவர்கள் விழிப்புணர்வும், சிந்தனைத் திறனும் பெற்றிடத் தயார்படுத்தவேண்டும். அதன்பிறகே கல்வி நிஜமானதாக இருக்கும். அது காலம்சென்றவர்களுக்கும் கடந்த காலத்துக்கும் சேவை புரியாது. எதிர்காலத்துக்கு அது சேவைசெய்யும். வாழ்க்கைக்கு சேவைசெய்யும்.

எனது பார்வையின்படி கல்வி நிஜமானதாக இருக்க வேண்டும். அது புரட்சிகரமானதாக, சதி செய்வதாக இருக்க வேண்டும். இன்று வரை இது வைதீகமானதாக இருக்கிறது. சமூகக் கட்டமைப்பின் ஒரு அங்கமாகவே இருந்துவருகிறது. மற்ற எந்த நிறுவனங்களும் அளிக்காத விஷயங்களைக் கல்வி வழங்கிடவேண்டும். சமூகக் கட்டமைப்புக்கு குந்தகம் விளைவிக்கும் விஷயங்களைத் தடுப்பதாகக் கல்வி அமையவேண்டும்.

நாடு, கட்டமைப்பு, சமூக நிறுவனங்கள் போன்றவை வளர்ச்சியைத் தடுக்கின்றன. இதை நினைவில் கொள்ளுங்கள். அவை ஏன் வளர்ச்சியைத் தடுக்கின்றன? காரணம், ஒவ்வொரு வளர்ச்சியும் சவால்களைக் கொண்டு வருகிறது. அவர்கள் அமைதியுடன் இருக்கிறார்கள். யார்தான் அமைதியிழக்க ஆசைப்படுவார்கள்? பதவியில் இருப்பவர்கள் புதிய எந்த ஒரு நிகழ்வையும் விரும்புவதில்லை. ஏனென்றால் அது அதிகாரச் சமநிலையை மாற்றிவிடும். அதிகாரத்தில் இருப்பவர்கள் புதிய எந்த விஷயமும் தலையெடுப்பதை விரும்புவதில்லை. காரணம், அந்த புதிய விஷயம் புதிய மனிதர்களுக்கு அதிகாரத்தை வழங்கிவிடும். ஒவ்வொரு புதிய அறிவும் உலகிற்குப் புதிய ஆதிக்கத்தை எடுத்துவருகின்றன. பழைய தலைமுறை தனது பிடியை, ஆதிக்கத்தை இழக்கத் தயாராக இல்லை.

கல்வி என்பது புரட்சிக்கு உதவி செய்ய வேண்டும். சாதாரணமாக அது அரசாங்கம், பாதிரியார் மற்றும் தேவாலயங்களுக்குச் சேவை செய்கிறது. ஒரு நுட்பமான வழியில் அது அடிமைகளை உருவாக்குகிறது. தேசத்திற்காகவும், தேவாலயங்களுக்காகவும் அடிமைகளை உருவாக்குகிறது. கல்வியின் நிஜமான நோக்கம் காலாவதியான கண்ணோட்டத்தை அழிக்கவும், நேர்மறைச் சிந்தனையற்று அழியவும், தற்கொலையும் தரும் நம்பிக்கைகள், யூகங்களைத் தகர்க்கவும் பயன்பட வேண்டும்.

நேர்காணல் நடத்தியவர் எர்னஸ்ட் ஹெமிங்வேயிடம், "ஒருவரைச் சிறந்த எழுத்தாளராக மாற்றும் திறன் படைத்த கூட்டுப் பொருளின் ஒரு பகுதி பற்றிச் சொல்ல முடியுமா?" என்று கேட்டார்.

அதற்கு ஹெமிங்வே, "ஆம். இருக்கிறது. சிறந்த எழுத் தாளராக மாறவேண்டிய மனிதர் அதிர்ச்சியைத் தாங்கும் திறன் மற்றும் குப்பைகளைக் கண்டறியும் சாமர்த்தியம் போன்றவற்றைத் தன்னுள் கொண்டவராக இருக்க வேண்டும்" என்றார்.

நிஜமான கல்வி குறித்த எனது கருத்து என்னவென்றால், குழந்தைகள் கட்டுப்பாட்டுடன் வளரப் பயிற்சியளிக்க வேண்டும். அப்போது அவர்களால் குப்பைகளை இனம்காண முடியும். நிஜமான அறிவுள்ள மனிதர் குப்பைகளை இனம் கண்டறியக் கூடியவராக இருப்பார். ஏதாவது ஒன்றைப் பற்றிச் சொல்லும் போதே அக்கணத்திலேயே அது முக்கியத்துவம் பெற்றதா அல்லது வெறும் சாணமா என்று கண்டுகொள்வார்.

மனித விழிப்புணர்வின் பரிணாமம் என்பது மதிப்பிற்குரிய குப்பைகளுக்கு எதிராக நடந்த போராட்ட வரலாறே ஆகும். மனிதர்கள் குப்பைகளை வணங்கி, வழிபடுகிறார்கள். தொன்னூற்று ஒன்பது சதவீதம் அவர்கள் நம்பிக்கைகள் பொய்யானவை. அவர் களின் தொன்னூற்று ஒன்பது சதவீதம் நம்பிக்கைகள் வாழ்க்கைக்கும், மனிதனுக்கும் எதிரானவை. தொன்னூற்று ஒன்பது சதவீதம் நம்பிக்கைகள் காட்டுமிராண்டித்தனமானவை, கற்காலத்தவை. முற்றிலும் மூடத்தனமானவை. மனிதர்கள் அவற்றை விசுவாசிப்பது நம்பமுடியாத ஒன்றாக இருக்கிறது.

உண்மையான கல்வி எல்லாவிதமான முட்டாள்தனங்களையும் உதற உதவி செய்யும். அது பழைமையானதாக, மதிக்கத்தக்கதாக, வழிபாட்டிற்கு உரியதாக இருந்தாலும் கவலையில்லை. அது உங்களுக்கு உண்மையைப் போதிக்கிறது. எந்தவிதமான மூட நம்பிக் கைகளையும் அது கற்றுத் தருவதில்லை. கூடுதல் ஆனந்தத்துடன் வாழ்வது எப்படி என்று கற்றுத் தருகிறது. வாழ்வை அங்கீகரிக்கக் கற்றுக் கொடுக்கிறது. அது வாழ்வை மதிக்க வேண்டும் என்பதைத் தவிர வேறு எதையும் போதிப்பதில்லை. இயற்கையுடன் எப்படி ஆழமான அன்புகொள்வது என்று போதிக்கிறது. அது அறிவு சார்ந்தது மட்டுமல்ல, இதயம் சார்ந்ததும் ஆகும்.

மனமற்ற நிலையை அடைய அது உதவி செய்கிறது. கல்வி தவறவிட்ட பரிமாணம் அதுதான். அது அறிவு சார்ந்த கருத்துகளில்

மேலும் மேலும் இணைந்து அறிவில் தன்னை இழக்க உதவுகிறது. அறிவு நல்லது, பயனுள்ளதுதான். ஆனால் அது உங்கள் முழுமை நிலை அல்ல. இதயம் என்ற ஒன்றும் உண்டு. உண்மையில் அது அறிவைக் காட்டிலும் கூடுதல் முக்கியத்துவம் பெற்றது. அறிவினால் சிறந்த தொழில்நுட்பங்களை உருவாக்க முடியும். அது சிறந்த இயந்திரங்களை, சிறந்த சாலைகளை, சிறந்த வீடுகளை உருவாக்க இயலும். ஆனால் உங்களைச் சிறந்த மனிதராக மாற்ற முடியாது. அறிவு உங்களை அன்பு நிறைந்தவராக, கவித்துவம் கொண்டவராக, கருணை உள்ளவராக மாற்றாது. அது வாழ்வின் ஆனந்தத்தை, கொண்டாட்டத்தை அளிக்க முடியாது இருக்கிறது. நீங்கள் இசையும், நடனமுமாக மாற அது உதவி செய்யாது.

உண்மையான கல்வி இதயத்தின் பாதைகளையும் கற்றுத் தர வேண்டும். மேம்பாட்டு நிலையையும் போதிக்க வேண்டும். அறிவு, அறிவியலுக்கானது. இதயம் கலை, கவிதை, இன்னிசைகளுக் கானது. ஆன்மீக மேம்பாட்டுக்கு உரியது.

கல்வி இந்த எல்லா அம்சங்களையும் அளிக்காத வரையில் அது நிஜமான கல்வியல்ல. கல்வி இதுவரை அதைச் செய்ய வில்லை. இளைஞர்கள் கல்லூரி, பல்கலைக்கழகப் படிப்பை உதறி விட்டு வெளியேறுவது வியப்புக்கு உரியது அல்ல. அவை எல்லாம் குப்பைகள், முட்டாள்தனங்கள் என்று அவர்கள் கண்டறிகிறார்கள். வேறு எந்த நிறுவனமும் அதைச் செய்யமுடியாது. கல்வியால் மட்டுமே முடியும். பல்கலைக் கழகங்கள் புரட்சி விதைகளாக மாற வேண்டும். அவை மாறுதலை விதைக்க வேண்டும். காரணம், புதிய மனிதன் பூமிக்கு வரவேண்டும்.

அதற்கான முதல் கிரணங்கள் ஏற்கனவே வந்துசேர்ந்து விட்டன. புதிய மனிதன் ஒவ்வொரு நாளும் பயணித்து வந்து கொண்டிருக்கிறான். அவன் வருகைக்கு நாம் பூமியை ஆயத்தப் படுத்த வேண்டும். அந்தப் புதிய மனிதனுடன் சேர்த்துப் புதிய சமுதாயத்திறகும், புதிய உலகிற்கும் ஆயத்தப்படுத்த வேண்டும்.

புதிய மனிதனை வரவேற்கவும், அவனுக்குத் தளம் அமைக் கவும் செய்வது தவிர கல்விக்கு வேறு வழியில்லை. அவனுக்கு நாம் தளம் அமைக்காவிட்டால் ஒளியற்று இருண்டு போவோம்.

நாம் செய்யும் பரிசோதனைகள் எல்லாம் நிஜமாகவே புதிய விதமான பல்கலைக்கழகத்தை உருவாக்குவதற்கான முயற்சி ஆகும். அரசாங்கம் அதற்கு எதிராக இருக்கிறது. சமூகம் அதற்கு எதிராக

உள்ளது. தேவாலயங்கள் - இந்து, முஸ்லிம், கிறிஸ்தவர்கள் எல்லோரும் எதிராக இருக்கிறார்கள். மதபோதகர்கள், அரசியல் வாதிகள் எல்லோரும் எதிராக இருக்கிறார்கள். மக்களின் ஆட்டு மந்தைக் குணம் அதற்கு எதிராக உள்ளது.

அது இயல்புதான். இதுகுறித்து வியப்படைய வேண்டாம். நாம் புரட்சிகரமான, விரோதமான காரியத்தைச் செய்து வருகிறோம். இதைச் செய்ய வேண்டும். உலகின் பல இடங்களில் இதைச் செய்ய வேண்டும். இந்த பரிசோதனை ஒவ்வொரு நாட்டிலும் நடத்தப்பட வேண்டும். ஒரு சிலர் மட்டுமே அந்த சவாலை எதிர்கொள்கிறார்கள். அவர்கள் தூதுவர்களாக இருப்பார்கள். அந்த ஒருசிலர் புதிய யுகத்தை, புதிய மனிதனை, புதிய சமுதாயத்தை, புதிய உலகத்தை அறிவிப்பார்கள். அது துணிச்சலான புதிய உலகமாக இருக்கும்.

வால்ட் விட்மின் இப்படி எழுதினார்.

**அறிவாளியான வானவியலாளர் பற்றிக் கேள்விப்பட்டேன்**
**ஆதாரங்கள், கணக்கீடுகள், விதவிதமான நிரல் வரிசைகள்**
**என்முன் வைக்கப்பட்டன**
**கணக்கிட்டுப் பார்க்க என்னிடம் வரைபடங்கள்,**
**அட்டவணைகள் காட்டப்பட்டன**
**வானவியலாளரின் சொற்பொழிவை அமர்ந்து கேட்டேன்**
**சொற்பொழிவு மண்டபத்தில் கரவொலிகள் எழுந்தன**
**விவரிக்க முடியாதபடி நாள் விரைவில் சலித்துப் போனேன்**
**என்னுள் நான் மேலே எழுந்து வானில் பறந்து திரிந்தேன்**
**வினோதமான பனிக்காற்றில் அவ்வப்போது அலைந்தேன்**
**வானில் இந்த நட்சத்திரங்ளின் பூரண அமைதியைப்**
**பார்த்தேன்**

நிஜமான கல்வி, புதிய கல்வி உங்களுக்கு கணிதம், வரலாறு, புவியியல், அறிவியலை மட்டும் கற்பிப்பது இல்லை. அது உண்மையான நன்நெறி, கலாரசனை போன்றவற்றையும் கற்றுத் தருகிறது. நான் கலாரசனையைத் தான் நிஜமான ஒழுக்க நெறி என்று அழைக்கிறேன். அழகை ரசிக்கும் நுட்பமான உணர்வு. ஏனென்றால் கடவுள் அழகின் வடிவில் வருகிறார். ரோஜா அல்லது தாமரை மலரில், சூரியோதயம் அல்லது அஸ்தமனத்தில், நட்சத்திரங்களில், பறவைகளின் காலை இன்னிசையில் அல்லது பனித்துளியில், பறவை சிறகடிக்கையில் இறைவன் தெரிகிறான்... நிஜமான கல்வி உங்களை இயற்கைக்கு மிக நெருக்கமாகக் கொண்டுசெல்கிறது.

இயற்கைக்கு நெருக்கமாகச் செல்லும்போதுதான் நீங்கள் கடவுளுக்கு நெருக்கமாகச் செல்கிறீர்கள்.

கடவுள் உலகிலிருந்து பிரிந்து தனியாக இருப்பவர் அல்ல. அவர் உலகமாக இருக்கிறார். கடவுள் உலகைப் படைத்தார் என்று சொல்லப்படுவதைத் திரும்பத் திரும்பக் கேட்டிருக்கிறீர்கள். நான் உங்களுக்குச் சொல்கிறேன். கடவுள் இந்த உலகமாக இருக்கிறார். இப்போது இந்த உலகைத் தவிர வேறு கடவுள் இல்லை. படைத்தவர் தனது படைப்பாகவே இருக்கிறார். கடவுள் ஒரு படைப் பாற்றலாக இருக்கிறார். அவர் படைப்பாற்றலாக இருக்கிறார். கடவுள் ஒரு படைப்பாளி என்ற கருத்தை ஒதுக்கித் தள்ளுங்கள். அவரைப் பற்றி சிந்தியுங்கள். படைப்பாகவே அவர் இருப்பதாக யோசியுங்கள். அவர் எங்கும் பரவியிருக்கிறார்.

இரண்டு காதலர்கள் சந்திப்பில் அவர் இருக்கிறார். உங்கள் கண்கள் அழகைக் காணும்போது அவர் அங்கு இருக்கிறார். விண் மீன்கள் நிறைந்த இரவால் நீங்கள் சூழப்படும்போது அங்கு அவர் இருக்கிறார். நீங்கள் ஒரு பெண் அல்லது ஆணின் கண்களை ஆழமாகப் பார்க்கும்போது அங்கு அவர் இருக்கிறார்.

**நிஜமான கல்வியே நிஜமான ஆன்மிகமாக இருக்கும்.**
**அறிவியல் என்பது தாழ்ந்த ஒரு விழிப்புநிலை.**

கலை என்பது அறிவியலைவிடவும் உயர்ந்தது. ஆன்மிகம் என்பது உச்ச நிலை. ஆன்மிகம் என்பதே **நிலைத்து நிற்கும் வாழ்க்கைத் தத்துவம்** ஆகும்.

**மூன்றாவது கேள்வி**

**ஓஷோ,**

**கடவுளை ஏன் ஆண்பாலாக 'அவன்' என்று அழைக்கிறார்கள், அவள் என்று ஏன் குறிப்பிடுவதில்லை?**

கடந்தகாலத்து ஆணாதிக்க மனோபாவம் அது. கடந்த காலத்து மனித சமுதாயத்தின் முழுமையான முட்டாள்தனம். ஆண், பெண்ணை அடக்கி வைத்தான், ஆதிக்கநிலையில் இருந்தான். பெண்ணை அடக்கும்போது, அழிக்கும்போது பூமியின் அழகை எல்லாம் அழிக்கவும் செய்தான்.

அழிக்கப்பட்டது பெண்மைமட்டுமல்ல, மனிதன் இயற் கையை அழித்தான். ஏனென்றால், இயற்கை ஒரு பெண். பூமி

பெண்ணாக இருப்பதால் ஆண் அதனை அழித்தான். பெண் தன்மை யுள்ள எல்லாவற்றையும் அவன் அழித்தான். அழகு என்பது பெண்மை. நேசம் பெண்மை. கொண்டாட்டம் பெண்மை. இசை பெண்மை... எங்கு நீங்கள் நளினத்தைக் கண்டாலும் அது பெண்மை சார்ந்ததுதான். புத்தரைப் பார்த்தால் அவரிடம் ஆண்தன்மையை விடப் பெண்மையே அதிகம் தென்படும். உண்மை வெளிப்படும் போது பெரும் நளினத்துடனும், பேரழகுடனும் வருகிறது.

மனிதன் அவ்விதமாகவே வாழ்கிறான். அவ்வாறே ஆன்மிக நூல்களையும் உருவாக்கினான். தேவாலயங்கள், கோட்பாடுகள், மத சாஸ்திரங்களையும் உருவாக்கினான். கடவுளை அவன் என்று அழைத்தான். கடவுள் தனது பிரதிபிம்பமாக ஆணைப் படைத்தார் என்று கூறினான். பெண்ணை அப்படிப் படைக்கவில்லை. ஆணை மட்டும் அவ்விதம் படைத்தான். ஆணின் உடலில் இருந்து எடுக்கப் பட்ட விலா எலும்பிலிருந்து பெண் படைக்கப்பட்டாள். அவள் ஒரு பின்னிணைப்பு, பிற்சேர்க்கை. கொஞ்ச நாளின் அவன் தனிமைப் பட்டுப் போய்விட்ட ஒரு உணர்வை அடைந்தான். அவனுக்கு சௌகரியம், வெதுவெதுப்பு, ஒத்தாசை செய்ய ஒரு பெண் தேவைப் பட்டாள். எனவே பயன்படுத்திக் கொள்வதற்காகவே பெண் படைக்கப்பட்டாள். கடவுள் ஆணைத் தனது பிரதிபிம்பமாகப் படைத்தார். பிறகு விடுபட்டுப் போய்விட்டதாக எண்ணில் பெண்ணைப் படைத்தார். முதலில் பெண்ணைப் படைக்க அவர் எண்ணியிருக்கவில்லை. தாமாகவே படைத்தார். ஆண் தனிமை யிலும், கவலையிலும் ஆழ்ந்துகிடப்பதைக்கண்டு அவன் உப யோகப்படுத்திக் கொள்வதற்காகப் பெண்ணைப் படைத்தார். அது ஒரு கருவி போல் இருந்தது.

இந்த அசிங்கமான கருத்தை ஆண் உலகிற்கு அளித்தான். இன்றுவரை ஆண் உலகை ஆண்டுவருகிறான். எனவே கடவுளை 'அவன்' என்று ஆண்பாலில் குறிப்பிடுகிறான். கடவுளை அவன் என்று பெண்ணாக என்று அழைப்பதுதான் சிறப்பாக இருக்கும். 'அவளில்' 'அவன்' இருக்கிறான். ஆனால் 'அவனில்' 'அவள்' இல்லை. பெண்ணாக அழைப்பதே சாலச்சிறந்தது. ஆனால் விபரம் தெரிந்தவர்கள் அவன் என்றும் அழைப்பதில்லை. அவள் என்றும் அழைப்பதில்லை. அது என்று குறிப்பிடுகிறார்கள். அதுவே நல்லது.

குறிப்பாக கிழக்கு நாடுகளில் கடவுள் ஆணாகவும் இல்லை பெண்ணாகவும் இல்லை. பாதி ஆணாக, பாதிப் பெண்ணாக அர்த்த நாரீசுவரராக இருக்கிறார். எனவே இந்திய மதநூல்கள் கடவுளை

'அது' என்று அழைக்கின்றன. அவர் இரண்டும் கலந்தவராகவும், இரண்டையும் கடந்து நிற்பவராகவும் இருக்கிறார்.

நானும் கடவுளை அவன் என்றுதான் குறிப்பிடுகிறேன். அது நடைமுறையில் உள்ள ஒரு வார்த்தை என்பதால் பயன்படுத்து கிறேன் என்பதை நினைவில் கொள்ளுங்கள். நான் அவனை 'அவள்' என்று அழைக்கலாம். அது சிறிது தடுமாற்றத்தை ஏற்படுத்திவிடும். அவனும் அவளும் கலந்தது என்று திருப்பித் திருப்பிக் கூறலாம். அது கொஞ்சம் அசிங்கமாகத் தெரியும். எனவே நான் அவன் என்றே அழைக்கிறேன். காரணம், பயன்பாட்டில் உள்ள ஒரு மொழியை நான் உபயோகிக்கிறேன். ஆனால் நான் ஆணாதிக்கக் கருத்துக்கு உடன் பாடானவன் அல்ல என்பதை கவனத்தில் வையுங்கள்.

பாதிரியார்களும், கத்தோலிக்க மதகுருமார்களும் இறந்து போன போப்பாண்டவரின் அருகில் மரியாதை கலந்த மௌனத் துடன் நின்று கொண்டிருந்தார்கள். சட்டென்று அவர் கைகால்களை உதறியபடி கண்விழித்தார்.

அற்புதத்தை நிகழ்த்தியதற்காக ஆண்டவனைப் போற்றிப் பாராட்டிய அவர்கள் ஆர்வத்துடன் போப்பாண்டவரைப் பார்த்து, "கடவுள் எப்படியிருந்தார் என்று எங்களுக்குச் சொல்லுங்கள்!" என்று கேட்டனர்.

**"முதல் விஷயம் அவள் கருப்பு நிறம்" என்றார் போப்.**

**அவள் பெண் மட்டுமல்ல; கருப்பாகவும் இருந்தாளாம்.**

**நான்காவது கேள்வி**

**ஓஷோ,**

**சரணாகதி என்றால் என்ன, அதை எப்படி இறைவனிடம் சமர்ப்பிப்பது? தயவு செய்து தெளிவுபடுத்துங்கள்.**

சரணாகதி என்பது நீங்கள் செய்யும் ஏதோ ஒரு செயல் போன்றதல்ல. அப்படிச் செய்தால் அது பொய்யாக, போலியாக இருக்கும். ஏனென்றால், செயல்புரிபவர் அங்கு இருக்கிறார். செயல் புரிபவர் சரணாகதி செய்ய வேண்டும். அது தவிர சரணாகதி என்பதில் வேறு என்ன இருக்கிறது? செயல் என்ற கருத்து. செய்பவர் என்ற கருத்து. நான் என்ற எண்ணத்தைச் சரணாகதியடையச் செய்ய வேண்டும்.

புரிந்துகொள்ள வேண்டிய அடிப்படை விஷயம் இதுதான். நீங்கள் அதைச் செய்யக்கூடாது. அப்படிச் செய்தால் அந்தச் செயலின் பின்னர் நீங்கள் இருப்பீர்கள். எதை நீங்கள் செய்தீர்களோ அதை நீங்கள் அழிக்கவும் செய்யலாம். காரணம், நீங்கள் அதில் இருக் கிறீர்கள். ஒருநாள் நீங்கள் சரணடையலாம். மறுநாள், "நான் சரண் அடையத் தயாராக இல்லை. அதை திரும்பப் பெற்றுக் கொள் கிறேன், விலகுகிறேன்" என்று நீங்கள் கூறலாம். கடவுள் என்ன செய்ய முடியும்? அவர் எந்த நீதிமன்றத்துக்கும் செல்ல முடியாது.

சரணாகதி என்பது நீங்கள் செய்யும் ஒரு காரியம் அல்ல. அது நிகழ்கிறது. முதலில் புரிந்து கொள்ளப்பட வேண்டிய விஷயம் அதுதான். ஒரு செயல் மூலம் அது நிகழ்வதில்லை. அது எப்படி நிகழும்? நீங்கள் அமைதியாக இருக்கும்போது அது நடக்கிறது. நீங்கள் அமைதியாக இருக்கும் சமயத்தில் நீங்கள் அங்கு இல்லை. உள்ளே நடக்கும் தொடர்ச்சியான சிந்தனையோட்டமே தவிர, வேறு எதுவுமல்ல நீங்கள்.

ஒரு தீவட்டியைக் கையில் வைத்துக்கொண்டு வேகமாகச் சுழற்றினால் நெருப்புவளையம் ஏற்படுவதைக் காண்பீர்கள். நெருப்பு வளையம் ஒரு போலித் தோற்றம். அது இல்லை. தீவட்டி மட்டுமே இருக்கிறது. சுழற்றுவதை நிறுத்தினால் தீவட்டி மட்டுமே இருக்கிறது. ஆனால் வேகமாகச் சுழற்றினால் மாய வளையம் ஒன்றை உருவாக்குகிறது. அதுவும் இது போன்றதுதான். உங்கள் எண்ணங்கள் வேகமாக நகர்கின்றன. அவை நான் என்ற மாயை உணர்வை ஏற்படுத்துகின்றன. எண்ணங்களை மெல்ல அகற்றினால் உங்களுக்குள் எதுவும் இல்லை என்பதைக் கண்டு வியந்துபோவீர்கள். சிந்தனைகளை மறந்துபோகச் செய்தால் நீங்களும் காணாமல் போவீர்கள்.

அந்த அமைதியே சரணாகதியாகும். அந்த அமைதியில் சரணாகதி இருக்கிறது. நீங்கள் செய்யும் செயலில் இல்லை. சட்டென்று நீங்கள் மறையமாட்டீர்கள். நீங்கள் அகலும்போது சரணாகதி வந்துசேர்கிறது.

"சரணாகதி என்றால் என்ன, அதை எப்படி இறைவனிடம் சமர்ப்பிப்பது?" என்று நீங்கள் என்னிடம் கேட்கிறீர்கள். முதலாவ தாக, அதை நீங்கள் செய்ய முடியாது. இரண்டாவதாக சரணாகதி என்பது, நான் என்ற தவறை அகற்றுவதாகும். அது கடவுளுடன் சம்பந்தப்பட்டதல்ல. அது உங்களின் நான் என்ற உணர்வு சம்பந்தப் பட்டது. நீங்கள் கடவுள் பக்கம் பார்த்தால், ஆரம்பத்திலேயே தவறாக

அடியெடுத்து வைக்கிறீர்கள் என்று அர்த்தம். எந்தக் கடவுளைப் பார்க்கிறீர்கள்? உங்களுக்கு எந்தக் கடவுளும் தெரியாது. நீங்கள் சரணாகதி செய்வதற்கு முன்னர் கடவுளை அறிந்துகொள்ள இயலாது. சரணாகதியில் மட்டும் கடவுளை அறியலாம். எந்தக் கடவுளிடம் சரண்புக எண்ணுகிறீர்கள்? அது இந்துக் கடவுளாக இருக்கலாம், முகமதியக் கடவுளாக இருக்கலாம், கிறிஸ்தவக் கடவுளாக இருக்கலாம். அது வெறும் நம்பிக்கை, அனுமானம்தான். கடவுள் அனுமானமல்ல. கடவுள் ஒரு அபாரமான அனுபவம். அது உயிரற்ற நம்பிக்கை அல்ல.

உங்கள் கருத்துகள் கடவுளைப் பிரதிநிதித்துவப்படுத்த வில்லை. எல்லையற்ற, நித்தியத்துவத்தை எதுவும் பிரதிநிதித் துவப்படுத்த இயலாது. எல்லா கருத்தும் பற்றாக்குறையானவை. உங்கள் கடவுளுக்கு நான்கு தலைகள், மூன்று தலைகள், நான்கு கைகள், ஓராயிரம் கைகள் என்று எப்படியும் இருக்கலாம். அவை எல்லாம் மனிதனின் கற்பனைகள். கவித்துவமும், அழகும் நிறைந்தவை. ஆனால் அதில் உண்மை இல்லை. கடவுள் ஒரு நபரே அல்ல. அவரை அறிந்தவர்கள் அவர் ஒரு நபர் அல்ல என்பதை உணர்ந்திருக்கிறார்கள்.

நீங்கள் சரணாகதி செய்யும்போது கடவுளை அறியமாட்டீர்கள். தெய்வீகத்தை உணர்வீர்கள். இயற்கை முழுவதிலும் தெய்விகம் நிறைந்து இருக்கிறது. தெய்வீகம் நிரம்பி வழிகிறது. தெய்விகம் என்ற வார்த்தையை கவனத்தில் கொள்ளுங்கள். ஒரு மலரை மணம் சூழ்ந்திருப்பது போன்ற ஒரு குணம் என்பதை உணருங்கள். பிடிக்கவோ, கைப்பற்றவோ செய்யக்கூடிய பருப்பொருள் அல்ல அது. கண்ணால் நீங்கள் காணக்கூடிய திடப்பொருளும் அல்ல.

கடவுள் ஒரு நபராகவோ, பொருளாகவோ அறியப்பட வில்லை. கடவுள் பெருக்கெடுத்தோடும் ஒரு ஆனந்தம், நிரம்பி வழியும் ஆற்றலாக இருக்கிறார். அவர் புறப்பொருளாக இல்லை. அகப்பொருளாக இருக்கிறார். கடவுள் உங்கள் சூன்யத்தின் மைய மாக இருக்கிறார். உங்கள் வெறுமையின் சக்கர அச்சாணியாக இருக்கிறார்.

நீங்கள் மறையும்போது கடவுள் வருகிறார். ஒரு நபராக, வஸ்துவாக வராமல் முழுமைநிலை என்ற வடிவில் வருகிறார். அதிலிருந்து நீங்கள் விலகியவர் அல்ல. அதனுடன் ஒன்றிணைந்து இருக்கிறீர்கள்.

கடவுளிடம் நீங்கள் சரணடைய முடியாது. நீங்கள் கடவுளிடம் சரணடைவதாக இருந்தால் எந்த கடவுளிடம் சரணடைவீர்கள்? அது கடன் வாங்கிய ஒன்றாகவே இருக்கும். எந்த கோவிலுக்கு நீங்கள் செல்ல வேண்டும் என்று உங்கள் பெற்றோர் சொல்லித் தந்திருக்கலாம். எப்படி வழிபடுவது? எந்த வார்த்தைகளைப் பயன் படுத்துவது? சமஸ்கிருதம், ஹிப்ரூ, அரபியா? வேதத்திலிருந்தா, குரானில் இருந்தா, தல்மத்திலிருந்தா, எந்த மந்திரத்தை உப யோகிப்பது? உங்கள் பெற்றோர் உங்களுக்குக் கற்றுத் தந்திருக்கலாம். இன்னும்பிற பலவற்றையும் கற்பித்திருக்கலாம்.

நீங்கள் வதந்திகளுடன் வாழ்ந்துகொண்டு இருக்கிறீர்கள். அறிவற்ற ஜனங்களின் வழியே அவை உங்களை வந்தடைந்திருக் கின்றன. அவை முழுப் பொய்களாக மாறிவிட்டன. அதை நீங்கள் புத்தரிடமிருந்து கேட்டிருந்தாலும் அந்த கணத்தில் அவர் ஒன்றைச் சொன்னார், நீங்கள் ஒன்றைக் கேட்டீர்கள். இன்றுவரை அது அப்படியே மாறாமல் இருக்கவில்லை. அவர் ஒன்றைச் சொன்னார். நீங்கள் வேறொன்றைப் புரிந்து கொண்டீர்கள். புத்தரே உண்மையை எடுத்துச் சொல்லியிருந்தாலும் அதை உங்களுக்கு மடைமாற்றம் செய்ய முடியாது. அது மடைமாற்றம் செய்யஇயலாது. வாய் மொழித் தொடர்பு சாத்தியமில்லை.

அப்படியானால் உங்கள் பெற்றோர், மதவாதிகளின் நிலை என்ன? கடவுள் என்றால் என்ன என்று தெரியாத அவர்கள் உங்களுக்குப் போதனை செய்தார்கள். நீங்கள் அந்த முட்டாள் கருத்தைச் சுமந்து திரிகிறீர்கள். சரணடைய முயற்சி செய்கிறீர்கள். முதலாவதாக, அந்த கடவுள்கள் எல்லாம் போலியானவை. இரண் டாவதாக, சரணாகதி என்பது செயல் வடிவிலான ஒரு காரியமல்ல. ஒரு பொய்யான கடவுளை லட்சக்கணக்கான மக்கள் பிடித்துக் கொண்டு இருக்கிறார்கள். சரணாகதி செய்வது என்ற கருத்து, உங்களால் செய்யக்கூடிய ஒரு செயலாகும். இரண்டும் தவறானவை. கடவுள் ஒரு பொய்மை. செயல்புரிபவரும் பொய்யானவர்.

நீங்கள் கேட்டறிந்த கடவுள்களை எல்லாம் மறந்து விடுங்கள், உள்ளே பாருங்கள். மேலும் மேலும் அமைதி, மௌனம் போன்ற வற்றை மேற்கொள்ளுங்கள். நிதானத்துடன், சலனமற்று இருங்கள். எண்ணங்களைக் கவனியுங்கள். அதற்கு ஒரு சாட்சியாக இருங்கள். மேலும் மேலும் நீங்கள் சாட்சியாக மாறும்போது உங்கள் எண்ணங்கள் மெல்ல விடுபடத் துவங்கும். இது ஒரு எளிய செயல் முறை. அதிகமாக விழிப்புணர்வு இல்லாது இருந்தால் சிந்தனையின்

வேகம் அதிகரிக்கும். அதிக விழிப்புணர்வுடன் இருந்தால் அதன் வேகம் தணியும்.

சகலமும் வேகம் குறையும்போது நீங்கள் உண்மையைக் காணத் தொடங்குகிறீர்கள். நான் என்ற அகந்தை அங்கு இல்லை. அது வேகமான வீச்சு ஏற்படுத்திய நெருப்பு வளையமாகும். தீவட்டி மெதுவாக நகரும்போது நீங்கள் நெருப்பு வட்டத்தைப் பார்ப்ப தில்லை. உள்ளே யாரும் இல்லை. அதை உணர உள்ளே யாரும் இல்லை. அது அமைதியான பிரதேசம்....

நீங்கள் சூறாவளியின் மையமாக இருக்கிறீர்கள். மனம் தான் சூறாவளி. மையத்தை நீங்கள் பார்க்கும்போது சட்டென்று சரணாகதி நடக்கிறது. உங்கள் பங்களிப்பு எதுவுமில்லாமல் முயற்சியின்றி அது நடக்கிறது. அகந்தை தென்படவில்லை. அதுவே சரணாகதி.

"சரணாகதி என்றால் என்ன?" என்று கேட்கிறீர்கள். அதைத் தன்னுள் கண்டறிந்து யாரும் சரணாகதி செய்ய முடியாது. சரணா கதியில் ஒருவர் கடவுளைக் காண்கிறார். பிறகு நான் என்ற எண்ணம் மறைகிறது. உடனே தெய்வீகம் எங்கும் பரவுகிறது. பிறகு எல்லாம் தெய்விகமாகின்றன. சகலமும் தெய்விகத் துடிப்புடன் விளங்கு கின்றன. அதன்பிறகு வாழ்க்கை நிவேதனமாகிறது.

## ஐந்தாவது கேள்வி

**ஓஷோ,**

**ஒழுக்க நெறியை வளர்ப்பதற்கு எதிரானவராக ஏன் இருக்கிறீர்கள்?**

முதலில், எதை விதைத்தாலும் அது போலிதான். பழக்கப் படுத்துதல் வளர்த்தல் என்பதன் அர்த்தம், நீங்கள் உங்களைச் சுற்றி ஏதோ ஒன்றை உருவாக்குகிறீர்கள். அது நீங்கள் அல்ல. வளர்த்தல் என்றால் பிளவை நீங்கள் உருவாக்குகிறீர்கள். வளர்த்தல் என்பது நீங்கள் ஒரு முகப்பை உருவாக்குதலாகும். வளர்த்தல் என்பது நீங்கள் மூடுதிரையினுள் வாழ்தலாகும். நீங்கள் ஒருவிதமாக இருக்கிறீர்கள். வெளியே வேறுவிதமாக நடிக்கிறீர்கள். நீங்கள் சொல்வது ஒன்று, செய்வது ஒன்றாக இருக்கிறது.

வளர்த்தல் என்றால் நீங்கள் அடக்கிவைக்கிறீர்கள் என்று அர்த்தம். அதனால்தான் நான் வளர்ப்புக்கு எதிராக இருக்கிறேன். வளர்த்தல் என்னும் பழக்கப்படுத்துதல் நிஜமான ஒழுக்க நெறியை

உருவாக்காது. அது மோசமான மதநெறியாளர்களை உருவாக்குகிறது. நேர்மையானவர்கள் என்று சொல்லப்படுவோரைமட்டும் அது உருவாக்குகிறது. அது நடிப்பவர்களை உருவாக்குகிறது. உங்களை விடவும் புனிதம் நிறைந்த மனிதர்கள் என்ற கண்ணோட்டத்தை அது ஏற்படுத்துகிறது. அது பெரிய அகந்தை சார்ந்த திருப்தியை அளிக்கிறது.

பழக்கப்படுத்துதல் ஒரு சிறையை ஏற்படுத்துகிறது. ஏதாவது ஒரு குணத்தை நீங்கள் வளர்க்கும்போது அதில் சிறைப்பட்டுப் போகிறீர்கள். அடியாழத்தில் நீங்கள் அதற்கு எதிரானவராக இருக்கிறீர்கள். உதாரணமாக, நீங்கள் வன்முறையாளராக இருந்தால், அகிம்சையை உருவாக்குகிறீர்கள். ஆனால் அதன் விளைவு எதுவாக இருக்கும்? மேற்பரப்பில் ஒரு மெல்லிய அகிம்சைப் படலம் இருக்கிறது. அது மேலே மட்டும்தான். அது அடியாழத்தில் இல்லை. அகிம்சாவாதி யாரையாவது லேசாக சுரண்டிப் பார்த்தால், வன்முறை மேலே எழுவதைக் காணலாம். அகிம்சாவாதிகளிடம் எச்சரிக்கையாக இருங்கள். நீங்கள் அவர்களைச் சுரண்டினால், அவர்கள் மிகவும் ஆபத்தான மனிதர்களாக மாறுவார்கள்.

நீங்கள் ஒரு வன்முறையாளரைச் சீண்டினால் அவர் அதிகம் வன்முறையில் இறங்க மாட்டார். காரணம், நெடுங்காலம் அடக்கி வைக்கப்பட்ட வன்முறை உணர்ச்சி அவரிடம் தங்கி இருக்கவில்லை. அவர் அதைச் சேகரித்து வைத்திருக்கவில்லை. ஒரே தடவையில் அவர் அனைத்தையும் கொட்டிவிடுகிறார். எனவே அவரிடம் சேமிப்பு இல்லை. ஆனால் அகிம்சையாளர்களிடம் எச்சரிக்கையாக இருங்கள். காந்தியவாதிகள், ஆன்மிகவாதிகளிடம் கவனம் தேவை. அவர் ஒரு ஆபத்தான மனிதர். அவர் வெடித்துக் கிளம்பும் பல உணர்வு வேகங்களைத் தனக்குள் அடக்கி வைத்திருக்கிறார். லேசான ஒரு சுரண்டல் அதை உறுதிப்படுத்தி பொறிகிளம்பி வெடிக்க வைத்துவிடும். அவர் கொலைகாரர், ஆபத்தானவர் என்பதை நிரூபிப்பார். நீங்கள் உங்களைச் சுற்றி உள்ளும், வெளியிலும் அகிம்சை உணர்வை வளர்த்துக் கொண்டால், வன்முறையில் கொதித்துக் கொண்டிருப்பீர்கள். சிறையில் வாழ்ந்து கொண்டிருப்பீர்கள்.

ஒரு பத்திரிகை உள்ளூரில் வசிக்கும் சிறந்த கோட்பாடுகள் கொண்ட, அமைதியான, நற்பண்பு நிறைந்த மனிதரைத் தேர்வு செய்ய ஒரு போட்டி நடத்தியது. போட்டிப் படிவங்களில் ஒன்றில் இவ்வாறு எழுதப்பட்டிருந்தது. "நான் புகை பிடிப்பதில்லை; மது

அருந்துவதில்லை; சூதாடுவதில்லை. நான் எனது மனைவிக்கு விசுவாசமாக இருக்கிறேன். பிற பெண்களை ஏறெடுத்துப் பார்ப்ப தில்லை. நான் கடின உழைப்பாளி. அமைதியும், கீழ்ப்படிதலும் கொண்டவன். நான் நாடக அரங்குக்கோ, திரைப்படத்துக்கோ சென்றதில்லை. நான் விரைவில் படுக்கைக்குச் சென்று அதிகாலை யில் விழிக்கிறேன். ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் தவறாமல் நான் தேவாலய வழிபாட்டுக்குச் செல்கிறேன். நான் மூன்று வருடங் களாக இவ்வாறு நடந்துவருகிறேன். அடுத்த வசந்த காலத்தில் அவர்கள் என்னை வெளியேற்றும்வரை காத்திருங்கள்."

ஒழுக்க நெறியாளர்கள் எனப்படுவோரைக் கவனியுங்கள். அவர்கள் ஒரு சிறையில் இருக்கிறார்கள். அவர்கள் ராஜதந்திரிகளாக மாற வேண்டியுள்ளது. அவர்கள் தங்களது வாழ்க்கைக்கு ஒரு பின் வாசலை வைத்திருக்கிறார்கள். இல்லாதுபோனால் பைத்தியம் பிடித்துவிடும். பழக்கப்படுத்தப்பட்ட ஒழுக்கநெறி இரண்டு மாற்று வழிகளை ஏற்படுத்துகிறது. ஒன்று அவர் பைத்தியமாக வேண்டும். அவர் நேர்மையான மனிதராக இருந்தால் பைத்தியமாகி விடுவார். அடுத்த மாற்று, அவர் வேஷதாரியாக மாறுவார். மக்கள் பைத்திய மாவதற்குப் பதிலாக வேஷதாரியாகவே மாறிட விரும்புகிறார்கள். நான் அவர்களை குற்றம் சொல்லமாட்டேன். அது அறிவான காரியம்.

அதனால்தான் அப்படிப்பட்ட வேஷதாரிகளை உலகின் எல்லா இடங்களிலும் நீங்கள் பார்க்கிறீர்கள். போலியாக நடிப்பவர்கள் எங்கும் இருக்கிறார்கள். அவர்களை உங்களுக்குத் தெரியும். சுவர் களுக்குப் பின்னால் அவர்கள் முற்றிலுமாக மாறுபட்ட வாழ்க்கை வாழ்கிறார்கள். அவர்கள் இரட்டை வாழ்க்கை வாழ்கிறார்கள். அவர்களின் நிஜமான வாழ்வு தலைமறைவாக நடக்கிறது. அவர்கள் அகச்சச்சரவில் வாழ்கிறார்கள். மகிழ்ச்சியாக இருப்பதில்லை. மகிழ்ச்சியற்று இருக்கும் மனிதர் மற்றவர்களையும் சந்தோஷமாக இருக்கவிட மாட்டார். அந்த மனிதர்கள் கவலையுடன் இருக் கிறார்கள். வாடிய முகத்துடன் இருக்கிறார்கள். மன இறுக்கத்துட னிருக்கிறார்கள். அவர்கள் தொடர்ச்சியான சச்சரவிலும், துயரத்திலும் இருக்கிறார்கள். எல்லோரும் அவ்வாறே வாழவேண்டும் என்று விரும்புகிறார்கள். பொதுவாக அவர்கள் எல்லா சந்தோஷங்களையும், சிரிப்பையும் குற்றம் சொல்கிறார்கள். கலகலப்பு, கேளிக்கையுடன் இருக்கும் எல்லோரையும் குறை கூறுகிறார்கள். அவர்கள் உங்களை முற்றிலும் தீவிரமானவராக மாற்றுகிறார்கள். தீவிரம் என்பது நோய் நிலையாகும். சிகிச்சை தரவேண்டிய ஒன்றாகும்.

சந்தோஷமானவர்களுக்கே வாழ்க்கை வசப்படும். வாழ்க்கை தீவிரமானவர்களுக்கு அல்ல. தீவிரம் என்பது கல்லறை போன்றது. கொண்டாட்டமானவர்களுக்கே வாழ்க்கை உரியது. எவ்வாறு கொண்டாடுவது என்று அறிந்தவர்களுக்கானது.

நான் ஒழுக்க நெறியைப் பழக்கப்படுத்தி வளர்க்க முயல்பவர்களுக்கு எதிரானவன். ஒழுக்க நெறியைப் பழக்கப்படுத்தி வளர்ப்பது நிஜமான ஒழுக்கநெறியாக இருக்காது. அதனால்தான் நான் அதற்கு எதிராக இருக்கிறேன். நிஜமான ஒழுக்கநெறியை வளர்த்துப் பழக்கப்படுத்த முடியாது. மனசாட்சியின் நிழலாக அது இருக்கிறது. அது உணர்வின் தொடர் நிகழ்வு.

உங்கள் மனசாட்சி எண்ண உணர்வின் தொடர் நிகழ்வு அல்ல என்றால், மனசாட்சி மோசமானது, ஆபத்தானது, விஷத்தன்மை கொண்டது. உங்கள் மனசாட்சி என்பது சமூகம் நியமித்த காவலர் தவிர வேறல்ல. மனசாட்சி உங்கள் பெற்றோரின் குரல் தவிர வேறல்ல. மதபோதகர்கள் உள்ளே கூச்சலிடுகிறார்கள். "இதைச் செய்யாதே! அதைச் செய்!" என்கிறார்கள். நீங்கள் சுதந்திரமாக இல்லை. நீங்கள் சுதந்திர மனிதர் அல்ல. நீங்கள் உள்ளேயிருந்து கட்டுப்படுத்தப்படுகிறீர்கள். வெகு நுட்பமான ஒரு தந்திரம் மனித இனத்தை கட்டுப்படுத்துகிறது. அதுதான் நீங்கள் மனசாட்சி என்று அழைப்பதாகும்.

உண்மையான மனசாட்சி வெளியில் இருந்து வருவதில்லை. அது உங்கள் உள்ளே வளர்கிறது. அது உணர்வின் ஒரு அங்கமாகும். ஒழுக்க நெறியை வளர்க்க வேண்டும் என்று நான் கூறுவதில்லை. நீங்கள் மனசாட்சியுடன் இருங்கள், ஒழுக்கநெறியுடன் இருப்பீர்கள் என்று கூறுகிறேன். ஆனால் ஒழுக்கநெறி முற்றிலும் வித்தியாசமான சுவையுடன் இருக்க வேண்டும். அது தன்னிச்சையானதாக அமைய வேண்டும். அது ஆயத்த தயாரிப்பு போன்று இருக்கலாகாது. அது கணத்துக்குக் கணம் உயிர்ப்புடன், பிரவாகத்துடன், மாறிக் கொண்டே இருக்கிறது. அது வாழ்வின் எல்லா வர்ணங்களையும் பிரதிபலிக்கிறது. அது கணத்தின் உரிமையாகிறது. அது பொறுப் பேற்கிறது. நீங்கள் முழு விழிப்புடன் சூழலுக்கு இசைய வேண்டும். ஆனால் அப்படி இல்லை. அதனால்தான் மோஸஸ் அவ்வாறு இருக்கச் சொன்னார். ஏசு அதைப் பின்பற்றச் சொன்னார். உங்கள் உள்ளே இருக்கும் தெய்விகம் அந்த பாதைக்கு இசையும்படி உணர்த்துகிறது. நீங்கள் உணர்வின் மையத்திலிருந்து செயல்படத் துவங்குகிறீர்கள். அதுவே நிஜமான ஒழுக்க நெறியாகும். அதை

பழக்கப்படுத்த முடியாது. பழக்கப்படுத்தியது என்றால் அது பொய்யானது.

அதனால்தான் நான் மனிதனின் நிஜமான குணாதிசயம் என்பது குணாதிசயம் அல்ல என்று கூறுகிறேன். குணாதிசயமற்ற நிலையே மனிதனின் நிஜமான குணாதிசயம் ஆகும். மனிதனின் நிஜமான குணாதிசயம் ஒரு குணாதிசயத்தை அளிக்கவல்லது அல்ல. குணாதிசயம் என்பது நீங்கள் கடந்தகாலத்தில் கற்றுக்கொண்ட தாகும். குணாதிசயம் என்பது கடந்தகாலத்து விஷயம். அதற்கு நிகழ்காலத்தில் இசைந்துபோவதாகும். உங்கள் குணாதிசயம் உங்களுக்கும், நிகழ்காலத்துக்கும் இடையில் வந்து நிற்கும். அது கடந்த காலத்து வடிவங்களுக்கு ஏற்பச் செயல்படுமாறு உங்களை நிர்பந்திக்கும். நீங்கள் கடந்தகாலத்துக்கு ஏற்ற வகையில் செயல் படும்போது தற்காலத்துக்குப் பொருந்தி வரக்கூடியவராக இருக்க மாட்டீர்கள்.

நல்லொழுக்கம் கொண்டவர்கள் எனப்படும் மனிதர்கள் பொருந்திவர மாட்டார்கள். அவர்களால் அது இயலாது. அந்த தருணத்தை அவர்கள் இழந்து விடுகிறார்கள். கடந்த காலத்திலிருந்து செயல்படுகிறார்கள். எனவே நிகழ் காலம் சார்ந்து இருக்க இயலாது. ஒரே வாழ்க்கைதான் இருக்கிறது. நிகழ்காலம் சார்ந்த ஒரே வாழ்க்கை தான் அது.

நாம் உள்வாங்கியிருப்பது ஒரு சூட்சுமமான செயல் என்று நான் கருதுகிறேன். அது நுட்பமான அணுகுமுறை. முன்பு நான் அறிந்திருந்த ஒரு கல்லூரி நண்பனின் வெற்றிபோல் அது அமையலாம்.

கால்பந்தாட்ட விளையாட்டின்போது அவர் ஒரு பெண்ணைச் சந்தித்தார். இருவருக்கும் நெருக்கம் ஏற்பட்டுவிடவே, அவளை ஒரு கலை நிகழ்ச்சிக்கு அழைத்துச் சென்றார். நிலைமை இணக்கமாக இருந்ததால், அவளை இரவு விருந்துக்கு அழைத்தார். ஒரு நல்ல விடுதியில் விருந்தை ஓய்வாக அமர்ந்து அனுபவித்தார்கள். அதன் பிறகு இரவு விடுதி, நடனம் என்று உறவு தொடர்ந்தது.

நள்ளிரவு வேளையில் சிற்றுண்டி சாப்பிட்டனர். அவர் அவளிடம், "உனக்குத் தெரியுமா? இன்று பிற்பகல் நாம் சந்தித்த வேளையைப் போன்ற ஒரு அற்புதமான தருணத்தை நான் என்றுமே அனுபவித்ததில்லை. நமது சந்திப்பு இருவரிடையே நெருக்கத்தை ஏற்படுத்திவிட்டதாக நம்புகிறேன்" என்றார்.

"நிச்சயமாக! நானும் அதை அனுபவித்தேன்" என்றாள் அவள்.

"நாளைக்கு உன்னுடன் காலை உணவு அருந்த விரும்பு கிறேன். அதற்கு வாய்ப்பு கிட்டுமா?" என்றார்.

"எனக்கும் அது பிடித்திருக்கிறது" என்றாள் அவள்.

"நல்லது. நான் என்ன செய்யட்டும்? உன்னைக் கூப்பிடட்டுமா முழங்கையால் இடித்து உணர்த்தினால் போதுமா?" என்று கேட்டார்.

இவை எல்லாம் சுற்றி வளைத்துச் செல்லும் தந்திரமான வழிகள். ஒழுக்க நெறியில் நடப்பதாகச் சொல்லப்படும். மனிதர் எதையும் நேரடியாக அணுக மாட்டார். எப்போதும் சுற்றி வளைத்து தான் செல்வார். எப்போதும் எச்சரிக்கையாக இருக்க வேண்டி யுள்ளது. காரணம், தங்கள் முகமூடி வேடத்தைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. முகமூடியை உதற இயலாது. ஒரு பொய், இன்னொரு பொய் என்று எல்லையற்று நீளும். மெள்ள மெள்ள மனிதன் புழுகு மூட்டையாகி விடுகிறான்.

உண்மையான மனிதக் குணாதிசயம் நம்பகத் தன்மை கொண்டது. அவன் எப்படிப்பட்டவனாக இருந்தாலும் சரி. அவன் ஒளிவுமறைவற்று இருக்கிறான். எதையும் மறைத்து வைப்ப தில்லை. அப்படிப்பட்ட துணிச்சலான ஒரு புதிய சமுதாயம் வர வேண்டும் என்றுதான் நான் விரும்புகிறேன். நீண்ட காலம் நாம் கோழைகளாக வாழ்ந்து விட்டோம். நீண்ட நெடுங்காலம் கோழை களாக இருந்து துன்புற்று விட்டோம். ஒளிவுமறைவற்று, நேர்மை யுடன், நம்பகத் தன்மையுடன் நீங்கள் எப்படிப்பட்டவராக இருந் தாலும் அதை வெளிக்காட்டும் நேரம் வந்துவிட்டது. மறைக்க அவசியமில்லை. ஏனென்றால், மற்ற ஒவ்வொரு மனிதரும் உங்களைப் போலவே இருக்கிறார்கள். துறவிகளும் இல்லை, பாவி களும் இல்லை. எல்லோரும் மனிதர்களாக இருக்கிறார்கள்.

பாவி, புண்ணியவான் என்று இரு பிரிவாகப் பிரிப்பது பழக்கப்படுத்தப்பட்ட குணாதிசயத்தின் துணைத் தயாரிப்பாகும். துறவிகள் என்று அழைக்கப்படும் மனிதர்களைக்காட்டிலும் பாவிகள் கபடமற்றவர்கள் என்று அறியும்போது நீங்கள் வியந்து போவீர்கள். பாவிகளின் கண்களில் குழந்தைத்தானம் அதிகம் இருப்பதை நீங்கள் காண முடியும். துறவிகளை விடவும் கூடுதலான நேர்மை, கூடுதலான பேதமை, கூடுதலான உண்மைத்தன்மை போன்றவற்றை அவர்களிடம் காணலாம். துறவிகளின் கண்களில்

தந்திரம் தென்படும். அவர்கள் அப்படித்தான் இருப்பார்கள். பழக்கப் படுத்தல் என்பது தந்திரம் சார்ந்த பணியாகும்.

முற்றிலும் வித்தியாசமான ஒரு சமூகம் உலகில் ஏற்பட வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அங்கு பாவிகள், துறவிகள் போன்றோர் மறைந்துபோவார்கள். நம்பகத்தன்மைகொண்ட மக்கள், காற்றில், மழையில், கதிரொளியில் எப்போதும் திறந்த மனதுடன் இருப்பவர்கள் வருவார்கள்.

இதைச் சமூகம் பெரிய அளவில் வெறுக்கிறது. சமூகத்தின் ஒரு பெரிய பிரச்சினையாக இது இருக்கிறது. நீங்கள் கபடமானவராக இருக்கும்போது திறந்த மனதுள்ளவர் உங்களை சங்கடப்பட வைக்கிறார். திறந்த மனதுள்ளவர் சட்டென்று உங்கள் ஆணிவேரை அசைத்து விடுகிறார். திறந்த மனதுள்ளவர் சட்டென்று உங்களைத் தாழ்வு மனப்பான்மையுள்ளவராக, மோசமானவராக, பொய்யராக உணரச் செய்து விடுகிறார். திறந்த மனதுள்ளவர் உடனே உங்களை அறிவற்றவராக, முட்டாளாக உணர வைத்து விடுகிறார்.

அதனால்தான் சாக்ரட்டீஸ் விஷமிட்டுக் கொல்லப்பட்டார். அவர் திறந்த மனதுள்ளவர். ஒரு துறவியைவிடவும், சாதாரண மனிதன் நிறைய விழிப்புணர்வு பெற்றுத் திகழ்கிறான். முனிவர் என்பவர் துறவி அல்ல. ஏசு சிலுவையில் அறையப்பட்டார். அவர் முனிவர். துறவி அல்ல. அவர் சமூகத்தின் எதிர்பார்ப்புகளை நிறைவு செய்யவில்லை. திருடர்களுடன் கலந்து பழகினார். இன்று முனிவர்கள் திருடர்களுடன் பழகுவதில்லை. அவர் சமூகத்தால் நிராகரிக்கப்பட்ட மனிதர்களுடன் பழகினார். சூதாடிகள், குடி காரர்கள், விபச்சாரிகள் போன்றவர்களுடன் பழகினார். பெரிய அளவில் சமூகத்துடன் எளிதில் கலந்து உறவாடினார். ஒவ்வொரு வருடனும் பழகினார். அது சகித்துக் கொள்ளக் கூடியதாக இல்லை. ராபிக்கள் எனப்பட்ட அக்கால யூதமதத் துறவிகள் ஒழுக்கம் நிறைந்த வர்களாகவும், மதநம்பிக்கை கொண்டவர்களாகவும் கருதப் பட்டார்கள். ஏசுவை அவர்களால் சகித்துக்கொள்ள இயலவில்லை. அவர் சிலுவையில் அறையப்பட்டார்.

இதுதான் காலங்காலமாக நடந்துவருகிறது. இது தடுத்து நிறுத்தப்பட வேண்டும். சிலுவையில் அறையும் வேலையை வேண்டிய அளவு செய்துவிட்டீர்கள். அப்படி யாராவது சிலுவை யில் இடப்பட்டால் அலைகடலெனப் பொங்கி எழ வேண்டும். ஒரு ஏசு சிலுவையிலிடப்பட்டதும், ஒரு சாக்ரட்டீஸ் விஷமிடப் பட்டதும் போதும்....

திறந்த மனதுள்ள பல மனிதர்களை உருவாக்கவே நான் முயற்சி செய்கிறேன். அவர்களை சிலுவையில் அறையவும், விஷம் வைக்கவும் முடியாத நிலை ஏற்படும். திறந்த மனது, எளிமை, கபடம் இல்லாதிருத்தல் போன்ற பண்புகளை உருவாக்கும்போது, நிறைய மனிதர்கள் அந்த பண்பைப் பெறும்போது அது உழுத்துப் போன இந்த சமுதாயத்தை மாற்றக்கூடியதாக அமையும். உயிர்ப் புடன் வைக்கவும் செய்யவும். அது இப்போது ஒய்ந்து, உயிரற்றுக் கிடக்கிறது. வாழ்வின் ரத்த நாளங்களில் உயிரோட்டம் இல்லாது இருக்கிறது.

பழக்கப்படுத்தப்பட்ட குணாதிசயங்களுக்கு நான் எதிரான வனாக இருக்கிறேன். ஏனென்றால், அது ஒழுக்க நெறியும் அல்ல, ஆரோக்கியமானதும் அல்ல. நான் குணாதிசயத்துக்கு எதிராக இருக்கிறேன். காரணம், குணாதிசயம் உங்களைச் சுற்றி ஒரு கவசத்தை மட்டுமே உருவாக்குகிறது. அது ஒரு தற்காப்பு நடவடிக்கை. அது உங்களைத் திறந்த மனதுடன் இருக்க அனுமதிப்பதில்லை. திறந்தமனதுடன் இல்லாத மனிதன் கல்லறையில் வாழ்பவனா கிறான்.

அவன் தந்திரசாலியாக மாறுகிறான்.

**நி**யூயார்க் நகரில் இருந்த ஒரு மதுச் சாலைக்கு ஒருவன் தோளில் கிளியுடன் சென்றான். "யார் ஒருவர் இந்தக் கிளியின் எடையை ஊகித்துச் சொல்கிறாரோ அவரது ஆண்குறியை ஆட்டி இன்பம் அளிக்கப்படும்" என்று கூறினான்.

முரட்டு உருவத்துடன் இருந்த ஒரு மதுச்சாலை வாடிக்கை யாளர், தனது நண்பர்களுடன் அமர்ந்திருந்தார். அந்த சவாலை ஏற்க முடிவு செய்து உரத்த குரலில், "அந்தப் பறவையின் எடை இருநூற்று ஐம்பது பவுண்ட்" என்றார்.

அதற்கு அந்த நபர், "நாங்கள் ஏற்கனவே ஒரு வெற்றியாளரைத் தேர்வு செய்து விட்டோம்" என்றார்.

ஜனங்கள் தந்திரசாலிகளாகி வருகிறார்கள். தங்களுக்கு என்ன வேண்டும் என்பதை அவர்கள் சொல்வதில்லை. அவர்கள் உண்மை யாக நடப்பதில்லை. எப்போதும் தங்களை மறைத்துக் கொள் கிறார்கள். சதிராட்டம் நடத்துகிறார்கள். மற்றவர்களை ஏமாற்று கிறார்கள். தங்களையும் ஏமாற்றிக் கொள்கிறார்கள். பேரழகு நிறைந்த வாழ்வை வாழும் உண்மையான வழி இதுவல்ல. இயற்கை அளித்த கொடையைப் பாராட்டுவதற்கான வழி இதுவல்ல. ஒருவர் நம்பகத்

தன்மை கொண்டவராக வாழவேண்டும். நம்பகத் தன்மைதான் ஒழுக்கநெறியாகும். நம்பகத்தன்மை என்பது யாரோ ஒருவரின் கட்டளைக்குக் கீழ்படிந்து நடப்பது என்ற பொருளில் நான் கூற வில்லை. அது உங்கள் சுயஒளியில் நீங்கள் வாழ்வதாகும்.

உங்களுக்கு நீங்களே ஒளியாக இருங்கள். அவ்வளவுதான். அது ஒன்றுதான் எனது செய்தி. அது குணாதிசயத்தைக் கொண்டு வரும். அந்த குணாதிசயம் ஒரு சிறையாக இருக்காது. அது ஒழுக்க நெறியைக் கொண்டு வரும். அந்த ஒழுக்கநெறி வேஷமாக இருக்காது. அது முற்றிலும் புதிய விதமான வாழ்வை உங்களுக்கு அளிக்கும். பொறுப்புணர்வு, உயிர்ப்பு, கபடமற்றத்தன்மை, கலகலப்பு போன்ற வற்றைத் தரும். அது விந்தை வாசல்களை உங்களுக்குத் திறந்து வைக்கும்.

நீங்கள் நம்பகத்தன்மையுடன் இருந்தால் இயற்கை நாலா புறங்களிலும் இருந்து வர்ஷிக்கும். உங்களுக்கு நன்மை ஏற்பட வேண்டும் என்ற ஆசீர்வாதத்தை அது எடுத்து வரும். பழக்கப் படுத்திய குணாதிசயம் அல்ல. பழக்கப்படுத்தாத தன்னிச்சையான உணர்வை எடுத்து வரும்.

**ஆறாவது கேள்வி**

**ஓஷோ,**

**அரசியல்வாதிகளை முட்டாள்கள் என்று ஏன் நீங்கள் நினைக் கிறீர்கள்?**

நான் நினைக்கவில்லை. அவர்கள் அப்படித்தான் இருக் கிறார்கள். நீங்கள் உலகைப் பாருங்கள். வரலாற்றைப் பாருங்கள். ஏராளமான சான்றுகளை நீங்கள் காணலாம். ஜனங்களுக்கு அவர்கள் என்ன செய்தார்கள் என்று பாருங்கள். அதையே இன்னும் செய்து வருகிறார்கள். அவர்கள் விளையாட்டைப் பாருங்கள்.

விஞ்ஞானப்பூர்வமாக இந்த உலகம் இப்போது ஒன்றாக மாற வேண்டும். விஞ்ஞானப்பூர்வமாக அது ஒன்றுதான். தேசங்கள் என்று எதுவுமே தனியாக இருக்கக் கூடாது. தேசங்கள் இருப்பதால் எழுபது சதவீத மக்களின் சக்தி, எழுபது சதவீத மக்களின் படைப்புத் திறன் போன்றவை யுத்தம் நோக்கிச் செல்கிறது. அழிவு சக்தியாக மாறுகிறது.

யுத்தமற்ற உலகை நினைத்துப் பாருங்கள். அது முற்றிலும் செழிப்பானதாக மாறும். எழுபது சதவீத சக்தி படைப்பாற்றலாக

மாறினால், யாரும் ஏழையாக இருக்க மாட்டார்கள். பட்டினி நிலையில் யாரும் இருக்கமாட்டார்கள். யாரும் நோயுற்று இருக்க வேண்டியதில்லை. அரசியல்வாதிகளால் தேசங்கள் பிரிந்து கிடக்கின்றன. தேசங்களின் காரணமாக, உலகம் ஆதரவற்றுக் கிடக்கிறது.

அதிகமாகக் கோதுமை விளைந்தால் அதைத் கடலில் கொட்டும் நாடுகளும் இருக்கின்றன. மறுபக்கம் ஜனங்கள் பசியால் செத்துக் கொண்டிருக்கிறார்கள். என்ன உலகம் இது? எப்படிப்பட்ட மனிதர்கள் உலகை நிர்வாகிக்கிறார்கள்?

மூவாயிரம் வருடங்களில் ஐயாயிரம் போர்கள் நடந்திருக்கின்றன. நாம் இங்கு சண்டையிடவே, ஒருவரை ஒருவர் அழிக்கவே வந்திருக்கிறோம் என்று தோன்றுகிறது. போர் முயற்சிகளில் நிறைய சக்தி செலவழிக்கப்பட்டு விட்டது. அந்த சக்தி ஆக்க வழியில் செலவழிக்கப்பட்டிருந்தால் இங்கே நாம் சொர்க்கத்தை உருவாக்கியிருக்கலாம்.

இன்று அறிவியல் அதை சாத்தியமானதாக மாற்றியிருக்கிறது. இனி அது கற்பனை ராஜ்ஜியமாக இருக்காது. பூமியில் சொர்க்கத்தை ஏற்படுத்த முடியும். மக்கள் முழுமையான செல்வச் செழிப்பில் வாழலாம். ஒரு சமூகம் செல்வச் செழிப்புடன் வாழும்போது இயல்பாகவே ஆன்மீகத்தில் இணைகிறது. புறஉலகம் தருவதை எல்லாம் கண்டறிந்தபின்னர் உங்களுக்கு அகத்தை ஆராயும் ஆவல் ஏற்படும்.

இந்தியர்கள் ஏன் இங்கு வருவதில்லை என்று மக்கள் தொடர்ந்து என்னிடம் கேட்கிறார்கள். காரணம், எளிமையானது. அவர்களுக்கு அகஉலகின்மீது ஆர்வமில்லை. அவர்கள் இன்னும் அகஉலகில் ஆர்வம் கொள்ளாது இருப்பதால், மிகவும் ஏழைகளாக இருக்கிறார்கள். அவர்கள் முழு வாழ்க்கையும் உணவு மற்றும் வேலை தேடுவதைச் சார்ந்து இருக்கிறது, பிறகு எப்படி அவர்களுக்கு தியானத்தில் விருப்பம் ஏற்படும்?

தியானம் என்பது உன்னதமான ஆடம்பரம் என்பதை நினைவில் வையுங்கள். அதுவே இறுதி ஆடம்பரம். எல்லாவற்றிலும் நிறைவு ஏற்பட்ட பின்னர் ஒருவர் தியானம் பற்றி சிந்திக்கத் தொடங்குகிறார். புறஉலகம் ஆராயப்பட்ட பிறகு அறிந்து, நிறைவு செய்யப்பட்ட பிறகு ஒரு அத்தியாயம் முடிகிறது. அடுத்து நீங்கள் வேறு பக்கத்தைப் புரட்டுகிறீர்கள். புறஉலகம் பாக்கி இருந்தால், அறியப்படாது இருந்தால் நீங்கள் அடுத்த பக்கத்தைப் புரட்ட மாட்டீர்கள்.

நீங்கள் புத்தராக மாறமுடியாது. காரணம், இன்னும் நீங்கள் நிறைவு செய்யவில்லை. புறஉலகில் தளர்ந்து போய்விட்டீர்கள். நீங்கள் பெருமளவு அதில் அக்கறை காட்டுகிறீர்கள். ஒரு பசித்த மனிதனை நினைத்துப் பாருங்கள். அவனிடம் நீங்கள் தியானம் பற்றிப் பேசினால் அது அவனை அவமதிப்பதாக இருக்கும். அவனை இழிவுபடுத்துவதாக இருக்கும். அவன் பசியோடு இருக்கிறான். அவனுக்கு உணவு தேவை. நீங்கள், "உணவினால் மட்டுமே மனிதன் வாழ்வதில்லை" என்று கூறுகிறீர்கள். அவன் உங்களைக் கொன்று விடுவான். அவன் பசியோடு இருக்கும்போது நீங்கள் கடவுள் பற்றிப் பேசினால் வேறு என்ன நடக்கும்?

தினம்தோறும் கிழக்கு நாடு பொதுவுடமைக் கோட்பாடு நோக்கி திரும்புவதற்கு ஒரு எளிய காரணம் இருக்கிறது. கிழக்கு நாடு செழுமை அடையாத போது வேறு வழியில்லை. அது பொது வுடமைத் திசையில் திரும்புகிறது. பணக்கார நாடுகள் தான் முதலில் பொதுவுடமையின் திரும்பும் என்று காரல் மார்க்ஸ் தீர்க்க தரிசனம் கூறியது தவறாகப் போய்விட்டது. ஏழை நாடுகள்தான் முதலில் பொதுவுடமைக்குத் திரும்பும். ரஷ்யா ஏழ்மை நிறைந்த நாடுகளில் ஒன்று. சீனாவும் ஏழை நாடுதான். மூன்றாவது நாடாக இந்தியா இருக்கிறது. மார்க்ஸின் முழு தர்க்கவியலும் தோற்றுவிட்டது. ஒரு நாடு செழிப்பாக இருந்தால் அங்கு செல்வந்தர்களுக்கும், ஏழை களுக்கும் இடையே சச்சரவு ஏற்படச் சாத்தியம் நிறைய இருக்கும் என்று அவர் நினைத்தார்.

ஒரு தேசம் செழிப்படையும்போது ஏழைகள் தொடர்ந்து ஏழைகளாகவே இருக்க மாட்டார்கள் என்ற தெளிவு அவருக்கு ஏற்படவில்லை. அவர்கள் மேலும் மேலும் பணக்காரர்களாக மாறுவார்கள். அமெரிக்காவில் உள்ள ஒரு ஏழை, இந்தியாவில் உள்ள ஒரு செல்வந்தனை விடவும் பணக்காரனாக இருக்கிறான். அவனுக்கு நல்ல மருத்துவ வசதி, வீட்டு வசதி, அழகான கார்கள், வானொலி, தொலைக்காட்சி போன்றவை உள்ளன. அவனோடு ஒப்பிடும்போது இந்தியப் பணக்காரன் ஏழை போல் காட்சி தருகிறான். பணக்காரன் இன்னும் ஆசைப்பட்டுக் கொண்டே இருக்கிறான்.

இந்தியர்கள் ஏன் இங்கு வருவதில்லை என்று மக்கள் என்னிடம் கேட்கிறார்கள். அவர்களால் வர முடியாது. ஏனென்றால், நாம் நிஜமாகவே தியானத்தின் மீது ஆர்வம் கொண்டிருக்கிறோம். அவர்கள் சத்ய சாயிபாபாவிடம் போகிறார்கள். தியானம் பற்றி அங்கு கவலை இல்லை. அற்புதங்கள் நடக்கின்றன. அவர்கள் நம்பு

கிறார்கள். அவர்கள் எல்லோரும் நோயுற்றவர்கள். தனது அற்புதங்களால் சத்ய சாயிபாபா அவர்களின் நோயை அகற்றலாம். அவர்கள் வேலைவாய்ப்பு இல்லாதவர்கள். அவரது ஆசிர்வாதம் மூலம் வேலை கிடைக்கலாம். அவர்கள் ஏழைகள். அவரது ஆசீர்வாதத்தினால் பணக்காரர்களாகலாம். சத்ய சாயிபாபா அவர்கள் தேவை சார்ந்த விஷயங்களில் ஈடுபடுகிறார். எனவே அவரிடம் போகிறார்கள். சுவிட்சர்லாந்தில் தயாரிக்கப்பட்ட கடிகாரங்கள் சூன்யத்திலிருந்து வெளிப்படும்போது அவர்கள் வியந்து போகிறார்கள். அவர்களின் நிஜமான இலக்கு அதுதான். அவர்களுக்குச் சுவிட்சர்லாந்து கடிகாரங்கள் தேவை.

மக்களும் முட்டாள்களாக இருக்கிறார்கள், துறவிகளும் முட்டாள்களாக இருக்கிறார்கள். ஒரு துறவி சாதாரண மாயாஜால வித்தைகள் காட்டுகிறார். எங்களிடமும் சந்நியாசிகள் இருக்கிறார்கள். அவினாஷாலும் அதைச் செய்ய முடியும். சர்வேஷாலும் செய்ய முடியும். அந்த சிறிய வேடிக்கைகளால் எந்த பயனும் இல்லை. அதற்கு ஆன்மிக மதிப்பு கிடையாது. அவை பொழுதுபோக்கு போன்றவை.

ஆனால் இங்கே நாங்கள் தியானத்தின் மீது நாட்டம் கொண்டிருக்கிறோம். அது அகப்பயணம். எனவே உலகின் வெகுதூரத்தில் இருந்தெல்லாம் மக்கள் இங்கு வருகிறார்கள். ஆனால் இந்தியப் பொதுமக்கள் அதிகம் வருவதில்லை. ஒருசிலர் மட்டுமே வருகிறார்கள். அவர்கள் அகஉலகை ஆராயும் விருப்பம் கொண்டவர்கள். அவர்கள் எண்ணிக்கை மிகவும் குறைவு. நிஜமாகவே அறிவுள்ளவர்களாக இருப்பவர்களும், எல்லாவகை முட்டாள் தனங்களையும் அகற்றவேண்டும் என்று விருப்பம் கொள்பவர்களும் மட்டுமே வருகிறார்கள். பொதுமக்களுக்கு அதில் ஆர்வமில்லை. இங்கு என்ன நடக்கிறது என்பதுகுறித்து ஆர்வமில்லை.

எனவே, என்னைப் பற்றி மக்கள் மத்தியில் ஆயிரக்கணக்கான வதந்திகள் பரவுகின்றன. மஞ்சள் பத்திரிகைகள் பலவகையான பொய்களை வினியோகிக்கின்றன. சில சமயங்களில் அவர்கள் உண்மையை வெளியிட்டாலும் அதன் மீது ஒருவித சாயம் பூசுவதால் அந்த தகவல் பொய்யாக மாறிவிடுகிறது.

அரசியல்வாதிகள் என்ன செய்தார்கள் என்று உலகைக் கவனியுங்கள். அது ஒரு சொர்க்கமாக மாறமுடியும். அதில் நுழைவதற்கான பேராவல் ஒவ்வொருவரிடமும் உள்ளது. முதலில் புறஉலக விஷயங்கள் நிறைவு செய்யப்பட வேண்டும். புறஉலக விஷயங்கள்

நிறைவு செய்யப்படும்போது தேசம் மறைந்து விடும். எல்லைகள் அகன்றுவிடும். அதை அரசியல்வாதிகள் அனுமதிக்க மாட்டார்கள். எல்லை அகலும்போது அவர்களும் காணாமல் போய் விடுவார்கள். தேசம் இருந்து, அந்த மக்களும் மோசமான சூழ்நிலையில் இருக்கும் போதுதான் அவர்கள் காலம் தள்ளமுடியும்.

ஈரானில் அது நடந்துகொண்டிருப்பதை அறிந்து நீங்கள் வியப்படைவீர்கள். ஈரானின் ஷா தேசம் செழுமையும், கல்வியும், நற்பண்புகளும் பெற்றிடக் கடுமையாக உழைத்தார். அதில் வெற்றி பெற்றுவிட்டதால் அவர் சிரமத்துக்கு ஆளாகி இருக்கிறார். இப்போது ஜனங்கள் வளமாக இருக்கிறார்கள், கல்வி அறிவுடன் இருக்கிறார்கள், கனவுகளுடன் இருக்கிறார்கள். நாட்டைக் கைப்பற்ற அரசியல்வாதிகள் எண்ணுகிறார்கள். ஷா நீண்ட காலம் இருக்க மாட்டார். தனது செயலால் வந்த வினையை எண்ணி அழுது புலம்புவார்.

விஞ்ஞானிகள் குழு ஒன்று எத்தியோப்பிய மன்னர் இவ்வாறு சொன்னதாக பேசிக் கொள்கிறார்கள். "உங்கள் நாட்டு மக்களின் உடல் ஆரோக்கியத்தை எங்களால் மேம்படுத்த முடியும். சுத்தமில்லாத தண்ணீரை அவர்கள் அருந்துவதுதான் அடிப்படைப் பிரச்சினை. அதனால் அவர்கள் நோய்வாய்ப்படுகிறார்கள். மெலிந்து, சக்தியற்று இருக்கிறார்கள். அதை வெகு எளிதாக மாற்றிவிட முடியும். சுத்த மான தண்ணீர் கிடைக்கச் செய்தால் போதும்."

அதற்கு எத்தியோப்பிய மன்னர் என்ன பதில் சொன்னார் என்று உங்களுக்குத் தெரியுமா? "அதன் பிறகு இங்கே புரட்சி தோன்றும். அப்படி எதுவும் ஏற்படுவதை நான் விரும்பவில்லை. அவர்களை அப்படியே விட்டு விடுங்கள்."

ஒரு வகையில் அவர் சொன்னது சரிதான். மக்கள் ஏழ்மை யிலும், பசியுடனும் இருந்தால் புரட்சிவாதிகளாக மாற இயலாது. நல்ல விஷயங்கள் குறித்து நம்பிக்கை கொள்ள இயலாது. நல்ல விஷயங்களுக்கு ஆசைப்பட முடியாது. அந்த மோசமான நிலையில் மக்கள் இருந்தால் தான் அரசியல்வாதிகள் பிழைத்திருக்க முடியும். மக்கள் போராட மாட்டார்கள். இல்லாது போனால் அரசியல்வாதி களைத் தூக்கியெறிந்து விடுவார்கள்.

ஒரு தேசம் சிறிதளவு வளம் பெறும் போது ஜனங்களுக்கு இதுவரை விழிப்புணர்வு இல்லாத விஷயங்கள் பலவற்றின்மீது விழிப்பு ஏற்படத் துவங்குகிறது. மக்கள் ஏழைகளாக இருக்கும்

போது விதியை, கர்மாவைப் பற்றி யோசிப்பார்கள். பணக்காரர் களாகும்போது விதியை, கர்மாவை மறந்து விடுகிறார்கள். தாங்கள் ஏமாற்றப்பட்டதாகவும், அதனால் தான் ஏழையாக நேர்ந்தது என்றும் நினைப்பார்கள். கோபம் கொள்கிறார்கள். கலக்கத்தில் ஈடுபடு கிறார்கள்.

நாடு நிஜமாகவே வளம் பெற வேண்டும் என்று எந்த அரசியல் வாதியும் விரும்புவதில்லை. ஆனால் நாடு செழுமை பெற வேண்டும் என்கிறார்கள். அது வெறும் பேச்சு. நாடு செழிப்படை வதை அவர்கள் விரும்புவதில்லை. கல்வி சிறந்த நாடாக மாறுவதை விரும்புவதில்லை. மக்கள் சுயமாகச் சிந்திப்பதை விரும்புவதில்லை. மக்கள் நிஜமான ஆன்மிகத்தில் ஈடுபடுவதை விரும்புவதில்லை. அவர்கள் கிறிஸ்தவர்களாக, இந்துக்களாக, முஸ்லிம்களாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். காரணம், நிஜமான ஆன்மிகம் என்பது புரட்சிகரமானதாகும். மக்கள் சிந்தனை ஆற்றலுடன் இருப்பதை அவர்கள் விரும்புவதில்லை. அடிமைவாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்க வேண்டும். சிறப்பான விஷயங்கள் பற்றியும் சிறப்பான சாத்தியங்கள் பற்றியும் சிந்திக்கக் கூடாது.

"அரசியல்வாதிகள் முட்டாள்கள் என்று ஏன் நினைக்கிறீர்கள்?" என்று என்னிடம் கேட்கிறீர்கள். அவர்கள் அப்படித்தான் இருக் கிறார்கள். மூடத்தனத்தில் முழு உலகையும் வைத்திருக்கிறார்கள். அவர்கள் முட்டாள்களல்ல, முட்டாள்தனமான தந்திரசாலிகள். முட்டாள்தனமானவர்கள் மட்டுமே தந்திரசாலிகளாக இருப்பார்கள் என்பதை கவனத்தில் கொள்ளுங்கள். இந்த வகையில் அது பற்றிச் சிந்தித்திருக்கமாட்டீர்கள். அறிவுள்ள மனிதன் தந்திரம் புரிவ தில்லை. அறிவு நிறைவானதாகும். அதற்குத் தந்திரம் தேவையில்லை. முட்டாள் மனிதன் தனது அறிவுக்கு மாற்றாக அதைக் கொள்கிறான். எனவே தந்திரக்காரனாகி விடுகிறான்.

அதிக அதிகாரப் பசி கொண்டவர்களாக அரசியல்வாதிகள் இருக்கிறார்கள். அது அதிகாரப் பித்து. ஆதிக்கம் செலுத்துவது மட்டுமே அவர்களுக்கு சந்தோஷம் தருகிறது. மக்கள் மீது ஆதிக்கம் செலுத்துவதற்காகவே சேவை பற்றிப் பேசுகிறார்கள்.

இந்த விஷயங்கள் எல்லாவற்றையும் நீங்கள் ஆழ்ந்து கவனிக்க வேண்டும். இந்த விஷயங்களின் விழிப்புள்ளவனாக மனிதன் மாற்றப்பட்டால், வரும் இருபத்தைந்து ஆண்டுகளில் உலகம் முற்றிலும் புதிய ஒரு விந்தையாக மாறிவிடும்.

இ.இ. கும்மிங்ஸ், "அரசியல்வாதி என்பவர் மனிதனைத் தவிர மற்ற எல்லோரும் உட்காரும் பிருஷ்டபாகமாக இருக்கிறார்" என்கிறார்.

அது உண்மைதான். அரசியல்வாதி இன்னும் மனிதனாக வில்லை. அவர் ஒரு காட்டுமிராண்டி. பிறரை ஆதிக்கம் செய்ய் நினைப்பது அசிங்கமான ஒன்று. அது வன்முறை. சுத்தமான வன்முறை என்பது தவிர வேறல்ல. மனிதர்களை அடிமைகளாகத் தரம் தாழ்த்துவது மோசமான வன்முறையாகும். அதுவே ஒவ்வொரு அரசியல்வாதியின் விருப்பமாகவும் இருக்கிறது. ஆதிக்கம், முழு மையான ஆதிக்கம் மட்டுமே அவர்களுக்குத் தேவை.

அரசியல்வாதி பதவிக்கு வரும்போது அவர் சர்வாதிகாரியாக மாறுகிறார். சர்வ வல்லமையுள்ளவராக உயர்கிறார். அவர் ஜனநாயகம் பற்றிப் பேசுகிறார். ஆனால் அந்த ஜனநாயகத்தின் பின்னால் யதேச் சதிகாரம் இருக்கிறது. எப்போதும் அது அப்படித்தான் இருந்து வருகிறது. அரசியல்வாதி அதிகாரத்தில் இல்லாதபோது ஜனநாயக வாதியாகி விடுகிறார். அவர் பதவிக்குவந்ததும் ஜனநாயகம் காணாமல் போய்விடுகிறது. அது ஒரு முகமூடியாக இருக்கிறது. எல்லா வகையான மோசமான ஆசைகளும் வெளியே வருகின்றன.

அரசியல்வாதிகள் முட்டாள்கள். மக்கள் அவர்களை அனுமதிக் கிறார்கள். காரணம், **ஜனங்களும்** முட்டாள்கள். மக்களிடம் அறிவைப் பரப்புங்கள். மக்களிடம் சிந்தனையாற்றலைப் பரப் புங்கள். வாழ்வில் என்ன நடக்கிறது என்ற விழிப்புணர்வை மக்களுக்கு ஏற்படுத்துங்கள். அது அவர்கள் வாழ்க்கை. அதற்காக அவர்கள் ஏதாவது செய்ய வேண்டும்.

ஒரு அரசியல்வாதி மனநல மருத்துவமனை எதிரே காரை நிறுத்த வேண்டியதாகிவிட்டது. காரணம் அது பழுதுபட்டு நின்று விட்டது. வெகுநேரம் அவர் காரைச் சுற்றி வந்து ஏதேதோ செய்து பார்த்தார். காரை இயக்க முடியவில்லை. நம்பிக்கையிழந்து முயற்சியைக் கைவிட இருந்த தருணத்தில் ஒருவர் மருத்துவமனை யிலிருந்து வெளியே வந்தார். அரசியல்வாதியின் செயலைக் கவனித்துவிட்டு ஒரு திருகாணியைத் திருகினார். வண்டி உயிர் பெற்று இயங்கியது.

அரசியல்வாதி வியந்துபோனார். "நீங்கள் எல்லாம் பைத்தியங்கள் என்று நினைத்திருந்தேன்" என்றார்.

"ஆம், பைத்தியம்தான். ஆனால் நான் முட்டாள் அல்ல" என்றார் அவர்.

"ஒரு மனிதர் தெளிவாக இருக்கிறார் என்பதை எப்படி அறிந்து கொள்வீர்கள்?" என்று அரசியல்வாதி கேட்டார்.

மனோவியல் சிகிச்சையாளர் அதற்கு, "நான் சராசரி மனிதன் பதிலளிக்கும் அளவுக்கு எளிய கேள்வியைக் கேட்பேன். உதாரணமாக, காப்டன் குக் உலகை ஐந்து முறை வலம் வந்தார். தனது பயணங்களில் ஒன்றில் இருந்தபோது கொலை செய்யப்பட்டார். அது எத்தனையாவது பயணம்?" என்று கேட்பேன்.

அதற்கு அரசியல்வாதி, "வேறு விஷயம் குறித்த கேள்வி ஒன்றைக் கேட்க முடியாதா? சரித்திரத்தில் எனக்கு போதுமான ஞானம் கிடையாது" என்றார்.

அவர்கள் முட்டாள் என்று நான் கூறவில்லை. அவர்கள் அப்படித்தான் இருக்கிறார்கள். நான் ஒரு எளிய உண்மையைக் கூறுகிறேன். அந்த உண்மை மிக எளியது. நீங்கள் சுயமாகவே அது குறித்த பல சான்றுகளைக் காண முடியும். நான் உங்களுக்கு சான்று அளிக்கவில்லை. வரலாறே அதற்குச் சான்றாக இருக்கிறது. தினமும் செய்தித்தாள்கள் ஆயிரக்கணக்கான சான்று உதாரணங்களைக் கொண்டு வருகின்றன. நரகமாக இருக்கும் இந்த உலகின் வாழ்க்கை நிலை அதற்குச் சான்றாகும்.

**கடைசிக் கேள்வி**

**ஓஷோ,**

**தர்க்கரீதியாகச் சிந்திப்பது எப்போதும் தவறானதா?**

எப்போதும் தவறானதாக இருப்பதில்லை. நீங்கள் ஒரு விஞ்ஞானியாக இருந்தால் தர்க்கரீதியாகச் சிந்திக்கலாம். சிந்திக்க வேறு மார்க்கம் இல்லை. படிப்படியாக, தர்க்கரீதியாக முன்னேற வேண்டும். புறஉலகைக் கையாள அது ஒன்றே வழியாகும். நான் தர்க்கத்துக்கு எதிரானவன் அல்ல.

பருப்பொருள் சார்ந்த உலகில் நீங்கள் பணியாற்றினால், தர்க்கம் மட்டுமே ஒரே வழி. செயல்பாடு குறித்து சந்தேகப்படவும், செயல்முறை குறித்துக் கேள்வி எழுப்பவும் ஒரே வழியாகும். ஆனால் நீங்கள் மனஉலகைக் கையாண்டால் செயல்பாட்டு முறைகள் அனைத்தையும் எதிரான திசையில் திருப்ப வேண்டும்.

பிறகு தர்க்கமற்ற நிலை பாதையாக மாறும். கேள்வியற்ற நிலை வழிமுறையாக அமையும். நம்பிக்கை முழுமையாக வழிமுறையாக, செயல்பாடாக அமையும்.

அவை உங்களின் இரண்டு பரிமாணங்கள் ஆகும். வெளிப் பயணம், உள்முகப் பயணம் போன்றவையே அவை. நீங்கள் வெளிப்புறப் பயணம் மேற்கொண்டால் அது ஒரு வகையான இயக்கம். உள்முகப் பயணம் செய்தால் சாலை ஒன்றுதான் ஆனாலும் இயக்கம் முற்றிலும் மாறுபட்டது. உங்கள் திசை எதிர்ப்பக்கம் இருக்கிறது. புறஉலகம் நோக்கி நீங்கள் நெருங்கிச் சென்றால் தர்க்கம் சார்ந்து இருக்க வேண்டியுள்ளது. உங்களை நீங்கள் நெருங்கிச் சென்றால் தர்க்கம் கடந்து அப்பால் செல்ல வேண்டியிருக்கிறது.

உலகம் என்பது அகம், புறம் இரண்டும் கலந்ததாகும். மனிதன் தர்க்கம் சார்ந்து இருந்தால் புறப்பொருள் குறித்து ஆராய் கிறான். அவன் பரிசோதனைச் சாலையில் கணித நிபுணராகவோ, உயிரியலாளராகவோ, வேதியியல்வாதியாகவோ, பௌதீகவியல் வாதியாகவோ, மருத்துவராகவோ எப்படிப் பணிபுரிந்தாலும் முற்றிலும் தர்க்கம்சார்ந்து இருந்திட வேண்டும். ஆனால் தர்க்கம் மட்டும் அவரது வாழ்வின் ஒரே பாதையல்ல. பரிசோதனைச் சாலையில் இருந்து வெளியே வந்ததும் தனது குழந்தைகள், மனைவி, நண்பர்களுடன் அவர் தர்க்கரீதியாகச் செயல்பட முடியாது. அன்புள்ளவராக இருக்கவேண்டும். தர்க்கத்திற்கு அன்புபற்றித் தெரியாது. அவர் வழிபாட்டு உணர்வுடனோ, தியானத்திலோ இருக்கும்போது கேள்வி கேட்பது பற்றி மறந்துவிடுவார். இயற்கை மீது ஆழ்ந்த நம்பிக்கை கொள்வார்.

உண்மையான மனிதர் இரண்டுக்கும் தகுதி பெற்று விளங்க வேண்டும். ஆனால் இன்றுவரை பாதி மனிதனாக அவர் வாழ்ந்து வருகிறார். தர்க்கவாதியாக இருக்கும் ஒருவரால் தர்க்கமற்ற திசை நோக்கிச் சென்றிட இயலாது. தர்க்கம் மீது அவர் வெறுப்பு கொள்கிறார். தர்க்கத்தைப் பயன்படுத்தாதபோது அவர் அதன்மீது வெறுப்படைகிறார். அவர் எஜமானராக இல்லை. தர்க்கம் எஜமானாகி விடுகிறது. அவர் கூண்டில் அடைபடுகிறார். பாதி நிலையில் அவர் இருக்கிறார். மதிப்புமிக்க, மிகவும் முக்கியமான மறுபாதியை அவர் இழந்து போகிறார். அது தர்க்கத்தைவிடவும் மதிப்புமிக்கது. காரணம், அது அகம் சார்ந்தது. தனது அகம்பற்றி அவர் எதுவும் தெரிந்துகொள்ளவில்லை. தான் யார் என்பதை அவர் அறியவில்லை.

உங்களை நீங்கள் அறிந்து கொள்ளாது போனால், வேறு எதை அறிந்து கொண்டாலும் அதிகப் பயனில்லை.

தன்னை அறிதலே நிஜமான அறிவுக்கு அடித்தளம் ஆகிறது.

தன்னுள் ஆழ்ந்துபோன மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தர்க்கமற்றவர்களாக மாறுகிறார்கள். தர்க்கத்திற்கு அவர்கள் ஏற்புடையவர்கள் அல்ல. அதுவே கிழக்குநாடுகளில் நடந்துகொண்டிருக்கிறது. தர்க்கத்திற்கு அவர்கள் ஏற்புடையவர்களாக இல்லாது போகிறார்கள். அவர்கள் அழகான பாடலைக் கோவிலில் பாட முடியும். தனிமையில் நடனமாட முடியும். தர்க்கம் சார்ந்த செயல்பாடு கிழக்குப் பிரதேசத்திலிருந்து முற்றிலும் மறைந்துபோய் விட்டது.

அதனால்தான் கிழக்கில் அறிவியல் வளர்ச்சி பெறவில்லை. மேற்கு நாடுகளில் தர்க்கம் மட்டுமே வாழ்க்கை முறையாக அமைந்திருக்கிறது. அன்பு அங்கு மறைந்துவிட்டது. தெய்விகம் மறைந்துவிட்டது. தியானம் மறைந்துவிட்டது. இப்போது கிழக்கு நாடு கிழக்கு நாடாகவே இருக்கவும், மேற்குநாடு மேற்குநாடாகவே இருக்கவும் தேவையில்லை. ருட்யார்டு கிப்ளிங் சொன்ன அந்த சந்திப்பு நடந்து கொண்டிருப்பதாக நாம் கூற முடியும்.

கிழக்கும் மேற்கும் ஒன்றில் ஒன்றுகலந்து கரையவேண்டும். அப்போதுதான் ஒரு முழுமையான மனிதனை நாம் உருவாக்க முடியும். முழுமை பெற்ற மனிதன் தர்க்கமும், தர்க்கமற்ற நிலையும் கலந்தவனாக இருப்பான். அவன் இரண்டு சிறகுகளையும் பயன்படுத்துவான்.

"தர்க்கரீதியாகச் சிந்திப்பது எப்போதும் தவறாகவே இருக்குமா?" என்று என்னிடம் கேட்கிறீர்கள். இல்லை. எப்போதும் தவறாக இருப்பதில்லை. சிலசமயம் அது ஒரு விஷயம் என்ற அளவில் இருக்கிறது. சில பரிமாணங்களில் அது சிந்திக்கும் ஒரே வழியாக இருக்கிறது.

புதிதாகத் திருமணமான ஒரு தம்பதியர் இரவு ஹோட்டலில் தங்கியிருந்து முதலிரவுக்குத் தயார் ஆனார்கள். மணப்பெண் ஆவலோடு காத்திருந்தாள். மணமகன் ஆடைகளைக் களைந்தான். காலணிகளைக் கழற்றிய மணமகனின் காலில் விரல்கள் இல்லாதிருந்ததைக் கண்ட அவள் அதிர்ந்து போனாள். அவனை அவள் கேள்விகேட்கும் விதமாக ஏறெடுத்துப் பார்த்தாள். கவலைப்பட

வேண்டாம் என்று கூறிய அவன் "குழந்தையாக இருந்தபோது டோலியோ என்ற வியாதி ஏற்பட்டதால் வந்த வினை அது" என்றான்.

டோலியோ? அப்படிப்பட்ட ஒரு வார்த்தையை அவள் அதுவரை கேள்விப்பட்டதேயில்லை.

அவன் தனது கால் சட்டையைக் கழற்றியபோது அவனுக்கு முழங்கால் மூட்டுகள் இல்லாதிருப்பதைக் கண்டு திகைத்தாள். அவனை ஏறிட்டு நோக்கினாள். அவன், "கவலைப்படாதே! நான் இளைஞனாக இருந்தபோது எனக்கு Kneesles என்ற நோய் ஏற்பட்டு விட்டது" என்றான்.

Kneesles ஆ? இப்போதும் அவள் அதுபோன்ற ஒரு வார்த்தையை கேட்டதில்லை.

அவன் தனது உள்ளாடையை அகற்றியபோது மணப்பெண் குறுக்கிட்டார். "எனக்கு Small cox என்ற வியாதி வந்து அதுவும் போய் விட்டது என்று சொல்லிவிடாதே!" என்றாள்.

தர்க்கரீதியாக இருப்பது சில சமயங்களில் நல்லதுதான். முற்றிலும் நல்லதுதான். ஆனால் ஒருவர் தர்க்கரீதியற்ற உடலுக்கு ஆயத்தமாக இருக்கவேண்டும். இரண்டு பரிமாணங்களிலும் செயல்பட அவர் ஆயத்தமாக இருக்க வேண்டும். அதன் பிறகு வாழ்க்கை செழுமை பெறும். நீங்கள் உள்மூச்சு, வெளிமூச்சு இரண்டுக்கும் தகுதியுள்ளவராக இருப்பீர்கள். நீங்கள் தியானம், மனஒருமைப்பாடு இரண்டுக்கும் உடன்பட்டவராக இருப்பீர்கள். நீங்கள் கணிதம், இசை இரண்டுக்கும் ஏற்புடையவராக இருப் பீர்கள். அதன் பிறகு நீங்கள் அன்பு மற்றும் தனிமைக்குப் பொறுத்த மானவராக இருப்பீர்கள்.

முழுமைபெற்ற மனிதன்குறித்த எனது கருத்து இதுதான்.

இன்று இவ்வளவு போதும்.

அத்தியாயம் - 11

முதல் கேள்வி

ஓஷோ

வெகுதூரத்தில் உள்ள நன்மைகள்மீது துரதிருஷ்டசாலிகள் ஆசை வைக்கிறார்கள்

அதன் தோற்றுவாய்களைத் தங்களுக்குள் அவர்கள் கொண்டிருக்கிறார்கள்

சிலர் மகிழ்ச்சியை அறிகிறார்கள்

சிலர் ஆசையின் கைப்பாவையாக மாறுகிறார்கள்

எதிர்ப்பு அலைகளில் அங்கும் இங்கும் வீசப்படுகிறார்கள்

கரைகாணாத கடலில் திசை தெரியாது உழல்கிறார்கள்

எதிர்த்து நிற்கவோ அல்லது ஏற்றுக்கொள்ளவோ முடிவதில்லை

இறைவா! நீ அவர்கள் கண்களைத் திறந்துவிட்டுக் காப்பாற்றலாம்

ஆனால் வேண்டாம்! இது தெய்விகம் நோக்கி மனிதர்கள் ஓடும் ஓட்டம்

தவறுகளை உணர்ந்து உண்மையை அறிவதற்கானது.
இயற்கை அவர்களுக்குச் சேவை செய்கிறது
அந்த ஆபத்தில் ஆழ்ந்து அமிழ்கிறார்கள்
அறிவும், ஆனந்தமும் நிறைந்த மனிதரே அந்த
சொர்க்கத்தில் ஓய்வு கொள்கிறார்

எனது விதிகளை மனதில் கொள்வோர்
லௌகீகத்திலிருந்து விலகுவார், தவறு செய்ய மனம் அஞ்சும்
நன்கு தராதரம் கண்டறியும்
உடலிச்சையை அறிவு அடக்கியாளும்
பிரகாசிக்கும் வானில் உயர்ந்து
சிரஞ்சீவிகளுக்கு நடுவே நீங்களும் ஒரு தெய்வமாக
இருப்பீர்கள்

பூரணத்துவம் குறித்த பிதாகோரஸின் கடைசிச் சூத்திரங்கள்... பூரணத்துவம் என்பது இலக்கு அல்ல. முதல் விஷயமாக அதை நினைவில் கொள்ள வேண்டும். ஞானம் பெற்ற மனிதர் இலக்கு சார்ந்த எண்ணம்கொண்டவராக இருக்கமாட்டார். அவரால் இருக்கவும் முடியாது. இலக்குசார்ந்த எண்ணம் என்பது மனதின் பாதை. இலக்குகளின்வழியே மனம் உயிர் வாழ்கிறது. மனம் எதிர்காலத்தில் வாழ்கிறது. மனம் ஆசைகளில் வாழ்கிறது. மனம் என்பது எப்போதும் சாதிக்கவிரும்பும் மனமாகவே இருக்கிறது.

மனமற்ற நிலையில், ஞானம் பெற்றவர் வாழ்கிறார். மனமற்ற நிலையே ஞானமாகும். எனவே, ஞானம் பெற்றவரால் இலக்கு சார்ந்து இருந்திட இயலாது. அவருக்கு எதிர்காலம் என்பது கிடையாது. அவருக்கு எல்லாமே நிகழ்காலம்தான். அதனால்தான் அவர் எப்போதும் தவறாகவே புரிந்துகொள்ளப்படுகிறார். அவர் நிகழ்காலம்பற்றிப் பேசுகிறார். ஜனங்கள் தங்களது மனதின் வழியே அவர் சொல்வதைக் கேட்கிறார்கள். மனங்கள் உடனே திரித்துக் கூறுகின்றன. மனங்கள் உடனே அதை ஒரு இலக்காக மாற்றுகின்றன. எதிர்காலத்தில் சாதிக்க வேண்டிய ஒரு திட்டமாக வைக்கின்றன.

பூரணத்துவம் என்பது இலக்கு அல்ல. அது வாழ்க்கையாகும். அது சாதிக்கவேண்டிய விஷயமல்ல. அங்கீகரிக்கவேண்டிய ஒன்றாகும். அவர் நிகழ்காலத்தில் இருக்கிறார் என்பதை அங்கீகாரம் செய்ய வேண்டியது மட்டுமே அவசியமாகும். நீங்கள் பூரணத்துவம் பெற்றவராகவே இருந்து வருகிறீர்கள். எனவே பூரணத்துவம் பெற

வேண்டிய தேவை இல்லை. பெற வேண்டும் என்ற கடமையைச் சுமத்தவேண்டியதில்லை. ஏற்கனவே அதைப் பெற்றுவிட்டீர்கள். அதை அங்கீகரித்தால் போதும். அதுகுறித்த விழிப்பு பெற வேண்டும். நீங்கள் யார் என்ற விழிப்பு பெற வேண்டும். பூரணத் துவம் என்பது ஏற்கனவே நடந்தேறிவிட்டது.

ஆனால் மனிதர்கள் அதை ஒரு குறிக்கோளாக வைத்துக் கொள்கிறார்கள். நாம் பூரணத்துவம் பெற்றிட வேண்டும். ஞான மடைய வேண்டும். நிர்வாண நிலை எய்த வேண்டும். நாம் சொர்க்கத்தில் இடம்பிடிக்க வேண்டும்" என்று அவர்கள் கூறு கிறார்கள். தொலைதூரத்தில் உள்ள ஒரு அழகிய இலக்கைக் குறி வைக்கிறார்கள். பிறகு மனம் தொடர்ந்து அதில் ஈடுபடுகிறது.

மனம் எதிர்காலத்தை நாடுகிறது. அது எப்படிப்பட்ட எதிர் காலமாகவும் இருக்கலாம். நீங்கள் செல்வந்தராக வேண்டும், பெரிய பதவி பெறவேண்டும், அழகாக இருக்கவேண்டும், அறிவாளியாக வேண்டும், ஞானம் பெறவேண்டும் என்றெல்லாம் இருக்கலாம். அது பிரச்சினையில்லை. அந்த நிலை இருந்து வருகிறது எனும் போது மனம் பிடிவாதம் பிடிக்கும். மனதின் பிடிவாதம்தான் முழுமையான துயரத்திற்கு காரணம். அது மன இறுக்கத்தை ஏற்படுத்தும். அது ஆபத்து, துயரம், இலக்கு தவறி விட்டதே என்ற அச்சம் போன்றவற்றைத் தொடர்ந்து ஏற்படுகிறது. அது உங்களுக்கு பேராசையைத் தருகிறது. இலக்கை எட்ட வேண்டும் என்ற தொடர் ஆவல் ஏற்படுகிறது. இலக்கு எதுவாக இருந்தாலும் பாதகமில்லை. பணம், கடவுள் நிலை, வெற்றி அல்லது சமாதி என்று எதுவாக இருந்தாலும் பிரச்சினை ஏதுமில்லை.

இலக்கு எங்கு இருந்தாலும், மனம் எங்கு இருந்தாலும், எதிர்காலம் எங்கிருந்தாலும், மனம் எதில் இருந்தாலும் அதை மனதில் ஆழமாகப் பதித்துக் கொள்ளுங்கள். மனக்கருத்துக்கு நாளை வேறு பெயர் இருக்கும். நாளை என்பது மனதைத் தவிர வேறு எங்கும் உயிர்ப்புடன் இருப்பதில்லை. அவை ஒன்றையொன்று சார்ந்து இருக்கின்றன. நாளை என்பதை உதறினால் மனம் ஆவியாகி மறைந்து விடும். அது உயிர்ப்புடன் இருக்காது.

மனதிற்கு நிகழ்காலம் என்பது கிடையாது. அது நிகழ் காலத்தில் இங்கு இருக்க முடியாதது. எனவே அது உங்களுக்குப் புதிய கருத்துகளை அளிக்கத் தொடங்குகிறது. உலகின்மீது நீங்கள் சலிப்படைந்தால் அது வேறு ஒரு உலகம் இருப்பதாகக் கூறும். உங்களுக்கு இந்த வாழ்க்கை உங்களுக்குச் சலித்துப் போகும்போது

அது, "கவலைப்படாதீர்கள். மரணத்துக்குப் பிறகு ஒரு வாழ்க்கை இருக்கிறது. தொடர்ந்து ஓடிக்கொண்டே இருங்கள்" என்று சொல்லும்.

ஸ்டீஃபன் கிரேன் இந்த அழகான வரிகளை எழுதியிருக்கிறார்.

**ஒரு மனிதன் தொடுவானத்தைத் துரத்துவதைக் கண்டேன்.**
**சுற்றிச் சுற்றி ஓடினான்**
**அதைக் கண்டு சங்கடப்பட்டேன்**
**"இது பயனற்ற வேலை**
**உன்னால் ஒருபோதும் தொட முடியாது" என்றேன்**
**"நீ பொய் சொல்கிறாய்" என்று கோபித்தான்**
**பிறகு ஓடத் தொடங்கினான்**

தொடுவானத்தை தொடும் ஓட்டம், அந்த தொடர் ஓட்டம் ஒரு மாயைப் பயணம். தொடுவானம் என்பது இல்லை. ஆனால் அங்கு இருப்பதுபோல் தோற்றம் தருகிறது. அருகில் இருப்பதுபோல மயக்குகிறது. ஆசை காட்டிக் கவர்கிறது. மிகவும் அருகில் இருப்பது போலவும், கொஞ்சம் முயன்றால் சில மைல் தூரத்தில் உள்ள அதை எட்டி விடலாம் என்று தோன்றும். அங்கு அது இருப்பது போல, அங்கு ஜொலித்துக் கொண்டிருப்பது போலத் தென்படும். உங்களால் ஆவல் கொள்ளாதிருக்க எப்படி இயலும்? ஆனால் நீங்கள் ஓடி யோடிச் சென்றாலும், ஒருபோதும் அங்கு சென்று சேரமாட்டீர்கள். உங்களுக்கும் தொடுவானத்துக்கும் இடையே உள்ள தூரம் மாறாமல் அப்படியே இருக்கும். தொடுவானம் என்பது உங்கள் மனதைத் தவிர வேறு எங்கும் இல்லை. அது ஒரு தோற்றம், மாயை ஆகும். எல்லா இலக்குகளும் மாயை நிறைந்தவை. மறு உலகம் சார்ந்தவை. நிகழ் காலத்தில் வாழ்வதே நிஜமானதாக இருக்கும்.

அதை முதலில் புரிந்துகொள்ள வேண்டும். இல்லாது போனால், பிதாகோரஸை நீங்கள் தவறாகப் புரிந்துகொள்ள நேரிடும். உங்கள் மனம் பிதாகோரஸைத் திரித்துக் காட்டிவிடும். "பூரணத் துவம் பெறுவது எப்படி?" என்று உங்கள் மனம் யோசிக்கத் தொடங்கிவிடும். நீங்கள் ஏற்கனவே பூரணத்துவம் பெற்றே இருக் கிறீர்கள். அதைப் பெறுவது பற்றியே பேச்சே இல்லை. பூரணத்துவமே உங்கள் ஆன்ம நிலையாகும். பூரணத்துவம் பெற நினைப்பது இலக்கைத் தேடி ஓடுவது போன்றது. இங்கு இப்போது ஓய்வில் இருப்பது உங்கள் இயல்பாகும். அந்தக் கணத்தில் ஓய்வில் இருக்கும் போது, வசப்படாது இருப்பது சட்டென்று வசப்படுகிறது. அது

பற்றிய விழிப்புணர்வு உங்களுக்கு இல்லை. சட்டென்று அது குறித்த விழிப்பு ஏற்படுகிறது. பூரணத்துவம் ஒரு விழிப்புணர்வாகும்.

**வெகுதூரத்தில் உள்ள நன்மைகள் மீது துரதிர்ஷ்டசாலிகள் ஆசை வைக்கிறார்கள்.**

**அதன் தோற்றுவாய்களைத் தங்களுக்குள் அவர்கள் கொண்டிருக்கிறார்கள்.**

மனம்சார்ந்து வாழ்பவர்களை, பூரணத்துவ முயற்சியில் இருப்பவர்களை, நாளைய நாட்கள் குறித்து யோசிப்பவர்களை எல்லாம் பிதாகோரஸ் துரதிர்ஷ்டசாலிகள் என்று கூறுகிறார். நாளைய நாட்களில் நீங்கள் வாழ முயலும்போது நேற்றைய நாட்களிலும் வாழ்கிறீர்கள். அவை ஒன்றாக நடக்கின்றன. நேற்று, இன்று என்பது தனித்தனியாக இல்லை. இரண்டு பொய்களுக்கு இடையில் நீங்கள் அகப்பட்டு இருக்கிறீர்கள். நேற்று என்பது இல்லை. நாளை என்பது இன்னும் வரவே இல்லை. நேற்று என்பது நிரந்தரமாக அகன்று விட்டது. நாளை என்பது ஒருபோதும் வருவதில்லை. அந்த இரண்டுக்கும் இடையே நிகழ்காலத் தருணம் இருக்கிறது.

ஏசுநாதர், "அந்த அல்லிமலர்களைப் பாருங்கள், அவை எவ்வளவு அழகாக இருக்கின்றன! நாளைய தினத்தைப் பற்றி அவை சிந்திப்பதில்லை. இந்த கணத்தில் அவை வாழ்கின்றன. சாலமன் மன்னர் தனது சகல ஆடம்பரங்களுடன் வந்தாலும் அது இதைப் போன்ற அழகுடன் இருக்காது" என்றார்.

தெய்வீக மகிமையைச் சூடிக்கொள்ள, வாழ்வின் அற்புதத்தை வசப்படுத்த நிகழ்காலத்தில் வாழ்வதே வழியாகும். பேரின்பம் பெற நிகழ்காலத்தில் வாழ்ந்திட வேண்டும். சொர்க்கத்தில் வாழ்ந்திட, நிகழ்காலத்தில் வாழ வேண்டும்.

**வெகுதூரத்தில் உள்ள நன்மைகள்மீது துரதிர்ஷ்டசாலிகள் ஆசை வைக்கிறார்கள். அதன் தோற்றுவாய்களைத் தங்களுக்குள் அவர்கள் கொண்டிருக்கிறார்கள்.** அவை வெகுதூரத்தில் இருப்பதாக எண்ணித் தேடியலையும் அந்த மனிதர்கள் துரதிர்ஷ்டசாலிகள், துன்பம் நிறைந்தவர்கள் என்கிறார் பிதாகோரஸ். யாரும் அவர்களுக்கு துன்பம் தரவில்லை. அவர்களே துன்பத்தைத் தேடிக் கொள்கிறார்கள். அவர்களின் துரதிர்ஷ்டமான வாழ்வுக்கு யாரும் திட்டமிட்டுவிடவில்லை. அந்த வாழ்வுக்கு முழுப் பொறுப்பும்

அவர்களுடையதே ஆகும். அது அவர்களின் முழுமையான கண்டு பிடிப்பு. அவர்களின் சுயமான கண்டுபிடிப்பு.

உங்கள் துயரம் உங்களின் கண்டுபிடிப்பாகும். உங்கள் பேரின்பம் உங்களின் இயல்புநிலையாகும். இயல்பு என்பது இக்கணத்தில் வாழ்வதுதவிர வேறு எதுவும் அல்ல. மரங்கள் இக்கணத்தில் வளர்கின்றன. நதிகள் இக்கணத்தில் பாய்ந்து கொண் டிருக்கின்றன. உங்கள் மனதைத்தவிர மற்ற அனைத்தும் இக் கணத்தில் செயல்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. உங்கள் உடலும் இக்கணத்தில் வளர்ந்து கொண்டுதான் இருக்கிறது. உடலில் ரத்தம் ஓடிக் கொண்டிருக்கிறது. இதயம் இக்கணத்தில் துடித்துக் கொண்டிருக்கிறது. உங்கள் மனதைத் தவிர எல்லாப் பொருட்களும் இக்கணத்தில் இங்குதான் உள்ளன. மனம் வெகுதொலைவில் இருக்கிறது.

உங்கள் துன்பங்களுக்கு இந்த மனமே ஆணிவேராக அமைந் திருக்கிறது. நீங்கள் துன்பப்படுவது உங்கள் கடந்தகால கர்மாக் களால் அல்ல. நீங்கள் துயரப்பட வேண்டும் என்று கடவுள் விதிக்க வில்லை. ஆதாமும், ஏவாளும் பாவம் செய்து விட்டதால் நீங்கள் துன்பம் தாங்க நேரிட்டு விடவில்லை. இவை எல்லாம் பொறுப்பை உதறித் தள்ளுவதற்கான தந்திரங்கள். அதன் பிறகு எதுவும் செய்ய வேண்டியதில்லை. பாவம், ஆதாமும், ஏவாளும் பலி ஆடுகளாகி விட்டார்கள். இந்த குட்டிக்கதை தனது உயிர்ப்பை இழப்பது போல ஒவ்வொரு குட்டிக் கதையும், உவமைகளும் பொழுதுபோக்குகளாக மாறுகின்றன. அவை சலிப்பூட்டும் விஷயங்களாகி, தங்கள் உள்ளுறை ஆற்றலை இழக்கின்றன. அதன் பிறகு நீங்கள் புதிய கருத்துகளை உருவாக்கத் தொடங்குகிறீர்கள்.

அதன் பின்னர் கர்மவினை என்ற கோட்பாடு தலையெடுக் கிறது. கடந்த பிறவிகளில் நீங்கள் பல தவறான காரியங்கள் செய்து விட்டதால், இப்போது துயரப்பட வேண்டியுள்ளது என்ற கருத்து உருவாகிறது. முற்பிறவிகள்மீது பழிபோடாதீர்கள். முற்பிறவி களிலும் நீங்கள் இப்படியேதான் இருந்தீர்கள். அப்போதும் துயரப் பட்டீர்கள். உங்கள் துயரத்திற்கு நிகழ்காலமே காரணம். கடந்த காலம் அல்ல. உங்கள் மனபாரத்தைக் குறைக்க அப்படிச் சொல் கிறார்கள். அப்படி மனபாரத்தைக் குறைப்பது ஆபத்தானது. அதன் பிறகு நீங்கள் மாறுதல் பெறமாட்டீர்கள். பழைய நிலையிலேயே இருப்பீர்கள். கடந்தகாலத்தை உங்களால் என்ன செய்ய முடியும்?

அவை கடந்துபோய்விட்டன. எதுவும் செய்ய இயலாது. நீங்கள் துயரப்பட்டே தீர வேண்டும்.

விதி... உங்களுக்கு யாரும் எந்த ஒரு கெடுதலும் செய்ய வில்லை. கடவுள் மோசமானவர் அல்ல. உங்களுக்குத் துன்பம் தர வேண்டும் என்று கடவுள் முன்னரே திட்டமிட்டு வைத்திருக்க வில்லை. அவ்விதம் செய்பவராக இருந்தால், கடவுள் என்பவர் பிறர் துன்பத்தில் இன்பம் காணும் குணம் உள்ளவர் என்றாகிவிடும். அவர் சாத்தானை விடவும் மோசமானவராகி விடுவார். எந்தக் காரணமும் இல்லாது அப்பாவி மக்களை ஏன் வருத்தப்பட வைக்க வேண்டும்? அப்படி இருக்குமானால் இயற்கை அநீதி கொண்டதாக, மோசமான தாக, வாழத் தகுதியற்றதாக அமைந்துவிடும். ஆன்மீகம் என்பது பரிகாசத்துக்குரிய ஒன்றாகிவிடும். நீங்கள் துன்பப்பட வேண்டும் என்று கடவுள் முன்கூட்டியே திட்டமிட்டு வைத்திருக்கவில்லை. தலைவிதி நிர்ணயித்துவிடவில்லை. ஆனால் அதுவும் மெல்ல மெல்ல மக்களிடம் அதன் சக்தியை இழந்துவிட்டது. அது திரும்பத் திரும்ப சொல்லப்படுகிறது. கர்மா என்ற கோட்பாடு கைவிடப் பட்டு விட்டது. தலைவிதி என்ற கோட்பாடு உதறப்பட்டு விட்டது. நாம் புதிய கருத்தை உருவாக்க ஆரம்பித்து விட்டோம்.

காரல் மார்க்ஸ் ஆன்மிகத்துக்கு எதிரானவர். ஆனாலும் அடிப்படையில் அவர் மாறுபட்டவர் அல்ல. அது காலத்தின் கட்டாயம் என்று அவர் கூறுகிறார். விதி என்பதை வேறு வார்த்தை களில் குறிப்பிடுகிறார். உங்கள் துன்பம் காலத்தால் நிர்ணயிக்கப் படுகிறது. பொருளாதார விதி காரணமாக நீங்கள் துன்பப்படு கிறீர்கள், வர்க்கப் போராட்டத்தால் சிரமப்படுகிறீர்கள் என்கிறார். வர்க்கபேதம் மறையாதவரை துயரம் மறையாது. உங்களால் என்ன செய்ய முடியும் என்று மீண்டும் உங்கள் மனபாரம் குறைக்கப்படு கிறது. கம்யூனிஸம் என்ற அந்தக் கனவுலகம் பூமியில் கைகூடும் போது துயரங்கள் மறைந்துவிடுமாம். பணக்காரர்களால், முதலாளித்துவ வர்க்கத்தினால் துயரங்கள் ஏற்படுகின்றன என்கிறார். உண்மையில் அந்த முதலாளியும் துன்பப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறார். ஏழைகளைவிடவும் பணக்காரர்கள் அதிகமாகத் துன்பப்படுகிறார்கள். அது ஏன்? ஒருவர் துன்பப்படாது இருக்கத் தேவையான அனைத்தையும் பணக்காரர்கள் பெற்றிருக்கிறார்கள். ஆனாலும் அதன் பயனற்ற தன்மையை உணர்கிறார்கள். அவர்கள் துன்பம் அதிகரிக்கிறது.

பசியாக இருப்பதால் ஏழை வருத்தமடைகிறான். பணக்காரன் வருந்துவது பசியால் அல்ல. உங்களுக்கு நல்ல வீடு இருக்கிறது. நல்ல உணவு கிடைக்கிறது. நல்ல மனைவி இருக்கிறாள். அமைதி யான குடும்பம், இணக்கமான சூழல் போன்றவை இருந்தும் உங்களுக்குள்ளே பசி இருக்கிறது. ஒரு ஆன்மிகப் பசி. வாழ்க்கை அர்த்தமற்று, குறிக்கோளற்று, தற்செயலாக, வெறுமையாக இருக் கிறது. பெரிய வருத்தம் எழுகிறது. ஏழை உடலால் வருந்துகிறான். பணக்காரன் மனதால் வருந்துகிறான்.

ஏன் செல்வந்தர்கள் துயரம் கொள்கிறார்கள்? பணம் தான் காரணம் என்றால் செல்வந்தர்கள் துயரப்பட வாய்ப்பு இல்லை. அது மீண்டும் ஒரு சான்று. அறிவுபூர்வமான கருத்து. நீங்கள் உங்கள் பழைய பாதையில், பழைய முறைகளில் தொடர்ந்து செல்லலாம். அதுவும் தவறான வாதம் என்று நிரூபணமாகிறது. மீண்டும் சலிப் பூட்டும் பேச்சாக மாறுகிறது.

சிக்மெண்ட் ஃபிராய்டும் சிலவற்றைக் கண்டறிந்தார். "விழிப் புணர்வற்ற தூண்டுதல் காரணமாக, ஆசைகளை உங்கள் மிருக இயல்பில் இருந்து எடுத்து வந்திருக்கிறீர்கள். விழிப்புணர்வற்று ஏற்படும் அந்தக் காயங்களால் மனிதன் துன்பம் அடைகிறான்" என்கிறார். விழிப்பற்ற நிலையை உங்களால் என்ன செய்துவிட முடியும்?

அந்தப் பழைய தந்திரம், சூழ்ச்சிக்குப் பல்வேறு பெயர்கள் சூட்டப்பட்டுள்ளன. "நான் பொறுப்பல்ல" என்பது போல வேறு சாக்குகள் சொல்லப்படுகின்றன. விழிப்புணர்வற்ற நிலை, காலத்தின் கட்டாயம், பொருளாதார நிலை, கடவுள், தலைவிதி, கர்மவினை என்று எதுவாகவும் இருக்கலாம். ஆனால் ஒன்று நிச்சயம் "எனது துன்பங்களுக்கு நான் காரணம் அல்ல" என்பதில் மட்டும் மாற்ற மில்லை. அந்த தந்திரத்தில் தான் உங்கள் துயரம் முழுமையாக இருந்து கொண்டிருக்கிறது.

உங்கள் துன்பங்களுக்கு நீங்கள்தான் காரணம், வேறு யாருமல்ல. இதை நன்கு புரிந்து கொள்ளுங்கள். ஆன்மிகவாதியாக இருப்பதற்கு இதைப் புரிந்து கொள்வதே முதல் படிக்கட்டாகும். உங்கள் பொறுப்பை மற்றவர்கள் மீது சுமத்தாதீர்கள். "எனது துன்பங் களுக்கு நானே காரணம்" என்ற உண்மையை ஏற்றுக் கொள்ளுங்கள். அதனால் உங்களுக்கு சிறிது கவலை தோன்றலாம். சற்று முட்டாள் தனமாகவும் உணர்வீர்கள். அதற்கு நீங்கள்தான் காரணம் என்றால்,

துன்பத்தை ஏன் ஏற்படுத்திக் கொள்கிறீர்கள்? துன்பப்பட விரும்பாதீர்கள்.

ஆரம்பத்தில் நீங்கள் சிறிது கவலை, முட்டாள்தனம், குழப்பம், தடுமாற்றம் போன்றவற்றை உணர்வீர்கள். ஆனால் விரைவில் பெரிய ஒரு விடுதலை உணர்வைப் பெறுவீர்கள். உங்கள் துன்பங்களுக்கு நீங்கள் காரணமாக இருக்கும்போது, உங்கள் பேரின்பம், ஆசீர்வாதங்களுக்கும் நீங்கள் காரணமாக இருந்திட இயலும். அதன் பின்னர் சிறந்த விடுதலை கிடைக்கும். தனது செயல்களுக்கு அவர் பொறுப்பு ஏற்றுக் கொண்டால் அவர் விடுதலை பெறலாம். கடந்த காலத்து கர்மவினை, தலையெழுத்து. காலத்தின் கட்டாயம், மனோவியல் போன்றவைகளில் இருந்து விடுதலை பெறலாம். எல்லா சாக்குப் போக்குகளில் இருந்தும் விடுபடலாம். ஒருமுறை நீங்கள் நிஜமான காரணம் எது என்பதைத் துல்லியமாக அறிந்து கொண்டுவிட்டால், விஷயங்கள் மாறுதல் அடையத் தொடங்கி விடும்.

**வெகுதூரத்தில் உள்ள நன்மைகள்மீது துரதிருஷ்டசாலிகள் ஆசை வைக்கிறார்கள். அதன் தோற்றுவாய்களைத் தங்களுக்குள் அவர்கள் கொண்டிருக்கிறார்கள்.** நாம் பேரின்பத்தைத் தேடிக் கொண்டிருக்கிறோம். மகிழ்ச்சியைத் தேடிக் கொண்டிருக்கிறோம். அது எங்கோ வெகுதொலைவில், தொலை தேசத்தில், கனவுலகில் இருப்பதாகக் கனவு கண்டு கொண்டிருக்கிறோம். வாழ்க்கை துன்பம் நிறைந்ததாக இருக்கிறது. நாம் சிறந்த தேசங்கள், உயர்வான சமூக நிலை, மரணத்துக்குப் பிந்தைய நல்வாழ்வுச் சொர்க்கம், மோட்சம் பற்றிக் கனவு கண்டுகொண்டு இருக்கிறோம். அவை எல்லாம் கற்பனைகள். அவை நம்மால் உருவாக்கப்பட்டவை. எனவே நமது துன்பங்களைச் சகித்துக் கொண்டு, நம்பிக்கையோடு இருக்கிறோம். அது மிகவும் துரதிருஷ்டவசமானது. அந்த நம்பிக்கை காரணமாகவே நீங்கள் ஆதரவற்ற நிலையில் இருக்க நேர்கிறது. அந்த விருப்பம் காரணமாகவே நீங்கள் தொலைந்து போகிறீர்கள். "தேடுங்கள், தொலைந்துபோவீர்கள்" என்கிறார் லாவோ. தேடினால் ஏன் தொலைந்துபோய்விட நேரிடும்? காரணம் அது உங்களுக்குள் இருக்கிறது. எல்லா விருப்பங்களும், தேடல்களும் மறையும்போது தான் அதைக் கண்டறிய முடியும்.

தேடல் என்பது நீங்கள் ஏதோ ஒரு நிழலை, மாயையை. கனவை, ஆசையைத் துரத்திக் கொண்டு ஓடுவதாகும். கனவின் வசப்பட்டிருக்கும்போது உங்களால் உள்ளே பார்க்கமுடியாது.

தேடுபவரின் உள்ளே உங்களால் பார்க்க முடியாது. நீங்கள் ஆசையின் பின்னால் ஓடிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களால் உள்ளே திரும்ப முடியாது. உங்கள் கண்கள் தொடுவானில் நிலைத்திருக்கின்றன. நீங்கள் புறப்பொருள் மீது கவனம் பதித்திருக்கிறீர்கள். உங்களால் உள்ளே பார்க்க முடியாது. நீங்கள் சூன்யவெளி மீது வெறுப்புக் கொண்டிருக்கிறீர்கள்.

அந்த சூன்யம்தான் உங்கள் பிறப்புமுதல் இறப்புவரை தொடர்கிறது. ஒரு ஒற்றை வினாடி ஓய்வாக நிம்மதியாக இருந்து, உங்களுக்குள் இருந்து தேடுபவர் யார் என்று அறிய முடிவதில்லை.

ஒரு ஜென்குரு தனது சீடர்களுடன் பேசிக் கொண்டு இருந்தார். குருவின் வழிமுறைகள் பற்றிய விழிப்புணர்வு இல்லாத ஒரு அந்நியரும் அந்த பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார். குரு, "நீங்கள் எங்கும் செல்லவேண்டாம், தேடவேண்டாம், விசாரித்தறியவும் வேண்டாம்" என்றார்.

பார்வையாளராக இருந்த அந்நியரால் புரிந்து கொள்ள முடிய வில்லை. ஆன்மிகம் என்பது ஒரு தேடல், விருப்பம், கேட்டு அறிதலாக எப்போதும் இருப்பதாக அவர் உணர்ந்திருக்கிறார். உண்மையைத் தேடுவது, கடவுளை அடைய விரும்புவது, வாழ்க்கை குறித்த கேள்விகள் எல்லாம் வேண்டாமா? இந்த மனிதர் என்ன சொல்கிறார்? விசாரணை வேண்டாம், தேடல் வேண்டாம், ஆசை வேண்டாம் என்கிறார். அவர் எழுந்தார் "நீங்கள் என்ன பேசுகிறீர்கள்? மக்களுக்கு என்ன கற்றுக் கொடுக்கிறீர்கள்? தேடல் இல்லாமல் என்னை எப்படி என்னால் கண்டறிய முடியும்?" என்று கேட்டார்.

குரு மேடையிலிருந்து இறங்கினார். கீழே பார்வையாளர் கூட்டத்திற்கு வந்தார். அந்நியரின் சட்டைக் கழுத்துப் பட்டையை இறுகப் பற்றிக் குலுக்கினார். அந்த அந்நியர் குழம்பிப் போனார். "என்ன மனிதர் இவர்?" அந்நியரின் சிந்தனை ஒருகணம் நின்று விட்டது. காரணம் குருவிடம் இந்த விதமான செய்கையை அவர் எதிர்பார்க்கவில்லை. குரு ஒரு மூர்க்கமான சிங்கம் போல் தோன்றினார். அந்நியரின் சிந்தனை ஒரு கணம் நின்றது. இதுபோன்ற தருணங்களில் அது நடக்கிறது.

குரு, "அதுதான் இது. தேடலின்றி, விசாரித்தல் இன்றி நீ அதுவாகி விட்டாய். அதுதான் இது" என்றார்.

எப்போது உங்கள் மனம் நிற்கிறதோ அப்போது நீங்கள் அதைக் கண்டறிகிறீர்கள். தேடுதல், விருப்பம் என்பதெல்லாம் முக்கிய

மல்ல. தேடல் என்பது வெளியே போதல். தேவை காரணமாகிப் போதல். தேவாதி தேவன் உங்களுக்குள் உறைகிறார். நீங்கள் தெய்வம். விழிப்புணர்வு இல்லாது, தேடலில் உறங்கிக் கொண்டு இருக்கிறீர்கள். உங்கள் உறக்கத்தை நீங்கள் தேடுகிறீர்கள்.

**வெகுதூரத்தில் உள்ள நன்மைகள்மீது துரதிருஷ்டசாலிகள் ஆசை வைக்கிறார்கள். அதன் தோற்றுவாய்களைத் தங்களுக்குள் அவர்கள் கொண்டிருக்கிறார்கள்.** "கடவுளின் ராஜ்ஜியம் உங்களுக்குள் இருக்கிறது" என்று ஏசு திரும்பத் திரும்பக் கூறுகிறார். ஆனால் கிறிஸ்தவர்கள் கடவுளை வெளியே தேடிக்கொண்டு இருக்கிறார்கள். ஏசு இந்தக் கூற்றைப் பலதடவை திரும்பத் திரும்பச் சொன்னார். இதுவரை யாரும் அதைக் காதில் போட்டுக்கொண்டதாகத் தெரிய வில்லை. கடவுளின் ராஜ்ஜியமும் உங்களுக்குள் இருக்கும்போது நீங்கள் எங்கும் போகவேண்டாம். ஒரு எட்டு வெளியே எடுத்து வைத்தாலும் நீங்கள் கடவுளின் ராஜ்ஜியத்திலிருந்து விலகிச் செல் கிறீர்கள். நீங்கள் கடவுள் ராஜ்ஜியத்தை நெருங்கிச் செல்வதில்லை. தேடல் என்றால் விலகிச் செல்லல். லாவோ சொன்னது சரிதான். "தேடினால் நீங்கள் தொலைந்துபோவீர்கள். தேடாதீர்கள், உடனே கண்டறியுங்கள்" என்கிறார்.

நீங்கள் எதுவும் செய்யாதிருக்கும் அந்த அழகிய தருணத்தை சற்று எண்ணிப் பாருங்கள். ஆம். ஒவ்வொருவரும் அதை சிறிதளவு சுவைத்திருக்கிறார்கள். அவை இயற்கையிலிருந்து ஒரு கொடையாக வருகின்றன. நீங்கள் அவற்றை அங்கீகரிக்காது போகலாம். ஒருநாள் கடற்கரையில் சூரியக்குளியல் எடுத்தபடி இருக்கும்போது எதுவும் செய்யாது இருக்கும் போது... சட்டென்று இயற்கை தனது பண்பை மாற்றிக் கொள்கிறது. எந்த காரணமும் இல்லாது மகிழ்ச்சி ஏற்படு கிறது. அது உங்களிடம் உருப்பெறத் துவங்குகிறது. அதற்கு காரணம் எதுவும் இல்லை. வெளிப்புறக் காரணங்கள் எதுவும் இல்லை. உங்களுக்குள் ஏதோ நிகழத்தொடங்குகிறது. சூரிய ஒளியில், காற்றாட ஓய்வு எடுத்துக்கொண்டிருக்கும்போது நீங்கள் வேறு உலகிற்கு மாற்றப்படுகிறீர்கள். அடுத்த பிரதேசத்திற்கு உங்களின் அடுத்த பரிமாணத்துக்கு மாற்றப்படுகிறீர்கள்.

மனிதனுக்கு இரண்டு நிலைகள் உண்டு. ஒன்று, இருக்கும் நிலை. அடுத்தது, மாற்றம் பெறும் நிலை. மாற்றம் பெறுதல் துயர மாகும். இருப்பு பேரின்பமாகும். மாற்றம் என்பது வெளியே பயணிப்பது. இருப்பு என்பது தாயகம் திரும்பி வருதல். மாற்றம் பெறுதல் என்பது தேடலாகும். இருப்புநிலை தேடலற்றது. மாறுதல்

உங்களுக்குத் துயரம் தருகிறது. துரதிர்ஷ்டம் பிடித்தவராக மாற்று கிறது. நிகழ்கால நிலையில் இருந்திடப் பயிலுங்கள். ஒருநாள் சூரிய அஸ்தமனத்தைப் பார்க்கும்போது அது நிகழும். ஒரு கணம் மட்டுமே நிகழும். மின்னல் போல அது வந்துபோகும். உங்கள் அன்புக் குரியவர், நண்பரின் கரம் பற்றுவது போன்ற அனுபவச் சுவை சில சமயம் வரும். அதுதான் பேரின்பம். சில சமயம் மலரைப் பார்த்தால் உங்களுக்குள் ஏதோ ஒன்று திறந்துகொள்ளும். அந்த மலர் உங்களுக்குள் ஒரு மலர்ச்சியைத் தட்டியெழுப்புகிறது. சிலசமயம் வானத்து நட்சத்திரங்களைப் பார்த்தால் உங்களுக்குள் ஏதோ பிரகாசிக்கத் தொடங்கும். அந்த நட்சத்திரங்கள் உங்கள் ஆன்மா வைப் பிரதிபலிக்கின்றன. நீங்கள் மின்னும் இரவாக மாறுகிறீர்கள். அங்கு ஆனந்தம் வருகிறது. பெரும் கொண்டாட்டம் ஏற்படுகிறது. ஒரு பாடல் உங்கள் இதயத்தில் பிறக்கிறது.

அது வருகிறது, போகிறது. காரணம், அந்த கணத்தில் நிலைத் திருக்கும் கலையை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை. அதை நீங்கள் வரவேற்க வேண்டும். விழிப்புடன் அதை வரவேற்க வேண்டும். பிறகு மெள்ள மெள்ள அந்தக் கணத்தின் கதவுகளைத் தட்டவும், விரும்பும்போது அதில் நுழையவும் உங்களால் முடியும். நீங்கள் கடைத்தெருவில் இருந்தாலும் விரும்பும் நேரத்தில் அந்தக் கால கதிக்குள் நுழைய உங்களால் இயலும். நீங்கள் எப்போது வேண்டு மானாலும் அங்கு ஓய்வு கொள்ளலாம். கலக்கம் நிறைந்த உலக வாழ்வில் நீங்கள் இருந்தாலும், அதில் நுழைந்து மையத்தை அடைந்து புத்துணர்வு பெறலாம்.

நீங்கள் புயலின் மையமாக இருக்கிறீர்கள். அந்தப் புயல் மையத்தில் வாழ்கிறீர்கள். அந்த மையத்தைச் சுத்தமாக நீங்கள் மறந்து விட்டீர்கள். மாற்றம் அடைவது என்பதே புயல். இருப்பில் இருப்பது என்பது மையநிலை. நாம் எல்லோரும் வெளிவட்டத்தில் வாழ்கிறோம். எனவே நாம் துன்பத்தில், கவலையில், தவிப்பில், ஆனந்தமற்ற நிலையில் தாயகம் திரும்புகிறோம்.

**சிலர் மகிழ்ச்சியை அறிகிறார்கள்**

அது ஏன்? மகிழ்ச்சி என்பது எல்லோருக்கும் உள்ள பிறப்புரிமை. மகிழ்ச்சியுடன் இருப்பது என்பது இயல்பான ஒரு செயல்பாடு. மரங்களைப் பாருங்கள், இயற்கையைப் பாருங்கள். சகலமும் மகிழ்வுடன் இருக்கின்றன. மகிழ்ச்சி என்பது எளிய விஷயம். மனிதன்மட்டும் விலகிப்போய்விட்டான். மனிதன் மட்டும் மனம் என்ற புதிய பாதையைத் தேர்வுசெய்துவிட்டான்.

மனிதன்மட்டும் கனவுகளை மேம்படுத்திக்கொண்டு நிகழ் காலத்தில் இருந்து விலகிவிலகிப் போகிறான்.

**சிலர் மகிழ்ச்சியை அறிகிறார்கள்....** மகிழ்ச்சி என்பது எல்லோருக்கும் உள்ள பிறப்புரிமை. ஆனால் சிலர் மட்டுமே அதை அறிகிறார்கள். புத்தர், ஏசு, நபிகள் நாயகம், பிதாகோரஸ், பதஞ்சலி போன்ற சிலர் மட்டும் எப்போதாவது அறிகிறார்கள். அப்படி இருக்கக் கூடாது. அது நோயுற்ற நிலை போன்றது. சற்று யோசித்துப் பாருங்கள். உங்கள் தோட்டத்தில் லட்சக்கணக்கான செடிகள் இருக்கின்றன. ஒரே ஒரு செடி மட்டும் ஒரு தடவை பூக்கிறது என்றால், நீங்கள் என்னவிதமான தோட்டக்காரர்? அது என்ன தோட்டம்?

நாம் சிறிது புரிந்துகொண்டால், சிறிது உள்முகமாகப் பார்த்தால், நிகழ்வு திசை திரும்பியதாக இருப்பதைக் காண முடியும். எப்போதோ ஒரு தடவை பேரின்பத்தைத் தவறவிட்ட ஒரே ஒரு மனிதனை நீங்கள் காண்பீர்கள். உலகம் முழுவதும் புத்தர்கள் நிறைந்து கிடப்பார்கள்! ஒரே ஒரு மனிதர் மட்டும் அதை அறியாத வராக இருப்பார். அதில் வாழாதவராக இருப்பார். அதைப் புரிந்து கொள்ள வேண்டும். எப்போதோ ஒருவர்மட்டும் தவற விட்டு விட்டார். எல்லோரும் தவறவிட்டுவிட்டார்கள் என்பது புரிந்து கொள்ள முடியாத ஒன்று.

தவறவிடாதவர்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். புரிந்து கொண்டது மட்டுமின்றி அதை அழிக்கவும் செய்தார்கள். கண் உள்ளவர்கள் குருட்டுத்தனத்தால் அழிக்கப்பட்டார்கள். ஆரோக்கிய மாக உள்ள மனிதர்கள் நோயால் அழிக்கப்பட்டார்கள். காரணம், நோயுற்ற நிலை பெரும்பான்மை கொண்டதாக இருக்கிறது. பெரும் பான்மையை ஆதரிக்கும் இறுதி முடிவாக இருக்கிறார்கள்.

ஏசுவைச் சிலுவையில் அறைவதற்கு முன்னர் போனிடஸ் பிலாத்து மக்களிடம் கேட்டான். சில புனித நாட்களில் குற்றவாளி களில் ஒருவரை மன்னித்து விடுதலை செய்வது அந்தக் காலத்து வழக்கமாக இருந்தது. அன்றைய தினம் நான்கு பேர் சிலுவையில் அறையப்பட இருந்தார்கள். அன்று ஒரு புனித நாள். குற்றவாளி களாக மூன்று திருடர்களும், நான்காவதாக ஏசு நாதரும் இருந்தார்கள். ஜனங்கள் ஏசுவை விடுதலை செய்து விடுமாறு கேட்பார்கள் என்று பிலாத்து எதிர்பார்த்தான். பிலாத்து ஏசுவின் கண்களைப் பார்த்த போது அதில் கபடமற்ற தன்மையைத் தவிர வேறு ஒன்றும் தென்படவில்லை.

"உண்மை என்பது என்ன?" என்று அவன் ஏசுவிடம் கேட்ட போது அவர் பதில் கூறவில்லை. ஒரு வார்த்தையும் பேசவில்லை. அலையற்ற குளம்போல அமைதியுடன், சலனமின்றி இருந்தார். அவர் சாந்தமாக இருந்தார். கேள்விக்கு அதுதான் பதில். பிலாத்துவால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. உண்மையை பேச்சால் உணர்த்தமுடியாது. அதை காட்டவே இயலும். மனிதத்துவத்தை அவனால் உணர முடிந்தது. ஏசு குழந்தை போல கபடமற்று இருந்தார். பேரழகுடன் விளங்கினார். இந்த அழகான மனிதனைச் சிலுவையில் அறைய வேண்டுமே என்ற குற்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது. ஆனால் ஜனங்கள் கொன்று விடுமாறு கூறினார்கள். மக்கள் இரத்த வேட்கையுடன் இருந்தார்கள். மக்களிடம் இருந்து மன்னிப்புப் பெற்றுவிட முடியும் என்று பிலாத்து நம்பினான். அவன் மக்களிடம் கேட்டபோது எல்லோரும் ஒரே குரலில், "இந்த மூன்று திருடர்களில் யாராவது ஒருவரை வேண்டுமானால் மன்னிக்கலாம். ஏசுவை மன்னிக்கக் கூடாது. சிலுவையில் அறைந்தே தீர வேண்டும்" கூச்சலிட்டார்கள்.

பிலாத்து என்ன செய்வான்? ஒரு திருடன் விடுவிக்கப்பட்டான். ஏசு கொல்லப்பட்டார். அவர் செய்த குற்றம் என்ன? பேரின்பம் என்ன என்று தெரியாத மக்கள் மத்தியில் அவர் பேரின்பத்துடன் இருந்ததுதான். பொய்யான மனிதர்களுக்கு நடுவே அவர் நியாய மானவராக இருந்ததுதான். தந்திரசாலிகளுக்கு நடுவே அவர் கபட மற்று இருந்ததுதான். குருடாக இருந்த மக்களுக்கு நடுவே அவர் பார்வையுடன் இருந்ததுதான். குருடர்கள் குற்றம் சாட்டினார்கள். அவர்கள் எப்போதும் குற்றம் சாட்டவே செய்கிறார்கள்.

பிதாகோரஸையும் அவர்கள் குற்றம் சாட்டினர். என்னையும் குற்றம் சாட்டினார்கள். அவர்கள் எப்போதும் குற்றம் சாட்டிய படியே இருக்கிறார்கள். அதற்கான எளிய வழி என்னவென்றால், ஏசு அல்லது பிதாகோரஸ் போன்ற உயர்ந்த மனிதர்கள் தெருவில் நடந்து செல்லும்போது மற்றவர்களுக்குத் தாங்கள் பிக்மி குள்ளர் போன்று இருப்பதாகத் தாழ்வு மனப்பான்மை ஏற்படுகிறது. அவர்களின் ஆழம் தங்களுக்கு வெறுமை உணர்வைத் தருவதால் மன்னிக்க முடிவதில்லை. உயர்ந்த மனிதரை அழிக்க எண்ணுகிறார்கள். தங்களை அவர் குற்றம் சாட்டுவது போலவும், காயப்படுத்துவது போலவும் உணர்கிறார்கள். அவர் பேரின்ப நிலையை எய்தும்போது நான் ஏன் அடையக் கூடாது? கடவுளின் ராஜ்ஜியத்தில் அவர் வாழும்

போது நான் ஏன் வாழக் கூடாது?" என்று எண்ணுவதால், பெரிய அளவில் பொறாமை தோன்றுகிறது.

இது வினோதமானது. ஒருவர் பேரின்பம் பெற்றால் அதே கலையை தாங்களும் கற்க வேண்டும். அதற்கு மாறாக, அவர்கள் பொறாமை கொள்கிறார்கள். பெரிய அளவில் பொறாமை கொள்ளும் போது கொலைவெறி அவர்களிடம் எழுகிறது.

**சிலர் மகிழ்ச்சியை அறிகிறார்கள்**

**சிலர் ஆசையின் கைப்பாவையாக மாறுகிறார்கள்**

**எதிர்ப்பு அலைகளால் இங்கும் அங்கும்**
**அலைக்கழிக்கப்படுகிறார்கள்**

**கரைகாணாக் கடலில் திசை தெரியாது உழல்கிறார்கள்**

**எதிர்க்கவோ அல்லது புயலை ஏற்கவோ இயல்வதில்லை.**

சாதாரணமான மனிதன் என்பவனின் நிலை இதுதான். அவன் சாதாரணமானவன் அல்ல. புத்தர் சாதாரணமானவர், பிதாகோரஸ் சாதாரணமானவர். காரணம் அவர்கள் இயல்பானவர்கள். எனவே சாதாரணமானவர்கள். சாதாரணம் என்ற வார்த்தைக்கு சராசரி என்ற மற்றொரு அர்த்தமும் உண்டு. சாதாரணம் என்பது பேச்சுவழக்கில் சராசரி என்ற பொருள் தருவதாகும். புத்தர் அசாதாரணமானவர் என்றால், சாதாரணமானவர் அல்ல. சராசரியானவர் அல்ல. பிதாகோரஸ் அசாதாரணமானவர். சாதாரணமானவர் என்று அறியப் படும் லட்சக்கணக்கான மக்கள் சாதாரணமானவர்கள் அல்ல. காரணம் அவர்கள் சராசரிகள் அல்ல. அவர்கள் பெரும்பான்மையான வர்கள் என்பது நிஜம்தான். ஆனால் உண்மைக்கு வாக்கெடுப்பு தேவையில்லை. வாக்குகளை அது சார்ந்திருக்கத் தேவையில்லை.

கலிலியோ பூமி சூரியனைச் சுற்றுகிறது, சூரியன் பூமியைச் சுற்றவில்லை என்று சொன்னபோது ஆதரவற்றுத் தனித்து இருந்தார். உலகம் முழுவதும் ஆயிரம் ஆண்டுகளாக சூரியன் பூமியைச் சுற்றி வருகிறது என்று நம்பி வந்தது. பேச்சு வழக்கில் அந்த பழைய நம்பிக்கை இன்னும் நிலைத்து இருக்கிறது. **சூரிய அஸ்தமனம், சூரிய உதயம்** என்று குறிப்பிடுகிறோம். அந்த நம்பிக்கை தொடர்ந்து அப்படியே இருக்கும் என்று நான் நினைக்கிறேன். சூரியன் உதிப்பதும் இல்லை, மறைவதும் இல்லை. அது அங்கேயே இருக்கிறது. நாம்தான் அதை சுற்றிச் சுற்றி வருகிறோம். கலிலியோ முதல் முறைாக அதைச் சொன்னபோது தேவாலயமும், நாடும் அவர் மீது குற்றம் சாட்டின. அவர் நீதிமன்றம் சென்று மன்னிப்புக் கேட்க

வேண்டும் என்று பாதிரியார்களால் வற்புறுத்தப்பட்டார். "எவ்வளவு துணிச்சல் உங்களுக்கு? லட்சக்கணக்கான மக்கள் எப்போதும் நம்பி வருகிறார்கள். மக்கள் நம்பிக்கை தவறு, உங்கள் கருத்துதான் சரி என்று எப்படிச் சொல்லலாம்? உங்களுக்கு பைத்தியம் பிடித்து விட்டதா? எப்படிப்பட்ட அகந்தைக்காரர் நீங்கள்?

கலிலியோ பேரழகு வாய்ந்த மனிதராக இருந்திருக்கலாம். அது உடல்சார்ந்த அழகு அல்ல. அவர், "நல்லது! நான் மன்னிப்பு கேட்கிறேன். ஆனால் அந்த மன்னிப்பு எந்த பெரிய வித்தியாசத்தையும் ஏற்படுத்தி விடாது. பூமி சூரியனைச் சுற்றிக் கொண்டுதான் இருக்கும். என் மன்னிப்பு எந்த மாற்றத்தையும் தோற்றுவித்து விடாது. நான் மன்னிப்பு கேட்கலாம். "ஆம்! சூரியன் தான் பூமியை சுற்றி வருகிறது" என்று கூறலாம். இது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தி விடாது என்று நினைவூட்ட விரும்புகிறேன். பொருட்கள் அதனதன் நிலையில்தான் இருக்கும்" என்றார்.

"மக்களைத் தவறான கருத்து உடையவர்கள் என்று எப்படி நீங்கள் கூறலாம்?" அவரிடம் கேட்கப்பட்டது. ஆனால் உண்மை வாக்கெடுப்பு மூலம் தீர்மானிக்கப்படுவதில்லை. எத்தனை மனிதர்கள் நம்புகிறார்கள் என்பது ஒரு பொருட்டே அல்ல. அது எப்போதும் தனிமனிதனின் அனுபவமாக அமைந்திருக்கிறது. பிதாகோரஸ் அதை அறிந்திருந்தார். அதை அனுபவித்து அறிந்தார். அவர் அறிதல் அவரது அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது. உங்கள் வாக்கை நம்பி இல்லை. பொதுக்கருத்தின் அடிப்படையில் உண்மை தீர்மானிக்கப்படக்கூடாது. அது இப்போதும் பெருமிதத்தை அடிப்படையாகக் கொண்டது. காரணம் அது தனிமனித அனுபவத்தை ஆணிவேராக, அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அது கூட்டம், மனித மந்தையை அடிப்படையாகக் கொண்டதல்ல.

**சிலர் மகிழ்ச்சியை அறிகிறார்கள். சிலர் ஆசையின் கைப் பாவையாகிறார்கள். உலகில் சாதாரண மனிதனின் நிலை என்ன? எதிர்ப்பு அலைகளால் இங்கும் அங்கும் அலைக் கழிக்கப்படுகிறார்கள்....** ,உங்கள் மனநிலையை கவனியுங்கள். எப்படிப்பட்ட நிலையில் வாழ்கிறீர்கள் என்பது புரியும். உங்களுக்கு ஒரு மனம் மட்டுமே இல்லை. இதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். உங்களுக்குப் பல மனங்கள் உள்ளன. நீங்கள் ஒற்றை ஆள் அல்ல. உங்களுக்குள் பல சிறிய ஆட்கள் இருக்கிறார்கள். உள்ளே ஒரு கும்பலாக இருக்கிறார்கள். வெளியே ஒரு கும்பல்

இருக்கிறது. உள்ளே ஒரு கும்பல் இருக்கிறது. நீங்கள் நிஜமாகவே கும்பலாக இருக்கிறீர்கள். நீங்கள் பல்வேறு மன இயல்பு கொண்டவராக இருக்கிறீர்கள். உங்களுக்குள் பல மனங்கள் வாழ்கின்றன.

ஒருகணத்தில் நீங்கள் மிகவும் அன்பாக இருக்கிறீர்கள். அடுத்த கணம் அதிக வெறுப்புடன் இருக்கிறீர்கள். இதை நீங்கள் கண்டுணரலாம். உங்களிடம் எந்த தனித்துவமும் இல்லை. எந்த ஒருங்கிணைப்பும் இல்லை. ஒருகணம் நீங்கள் நம்பகமானவராக இருக்கிறீர்கள். ஒரு கணம் நீங்கள் நம்பகமானவராக இருப்பதில்லை. காரணம், ஒருகணத்தில் உங்கள் மனம் உங்களுக்குள் இருந்து செயல்படுகிறது. அடுத்த கணத்தில் உங்கள் மனம் தலைமீது ஏறி அமர்ந்து விடுகிறது. நீங்கள் சுழலும் சக்கரம் போலிருக்கிறீர்கள். ஒரு கணம் ஒரு ஆரக்கால் மேலே இருக்கிறது. மறுகணம் அது கீழே வந்துவிடுகிறது. மற்றொரு ஆரக்கால் மேலே சென்று விடுகிறது. இது தொடர்ந்து நிகழ்கிறது. சக்கரம் சுழல்கிறது.

நீங்கள் படுக்கைக்குப் போகும் முன்னர், "நாளை காலை நான் ஐந்து மணிக்கு எழுந்திருப்பேன்" என்று முடிவுசெய்கிறீர்கள். காலை ஐந்து மணிக்கு "எல்லாம் முட்டாள்தனம். இதை யார் கவலைப்படப் போகிறார்கள்?" என்று திரும்பிப் படுக்கிறீர்கள். சுருண்டு படுத்துப் போர்வையால் மூடிக்கொள்கிறீர்கள். தூங்கிப் போகிறீர்கள். விடிந்ததும் மறுபடியும் வருத்தப்படுகிறீர்கள் "என்ன ஆயிற்று எனக்கு?" என்று கேட்டுக்கொள்கிறீர்கள். காலமெல்லாம் இப்படித்தான் செய்துகொண்டிருக்கிறீர்கள். முடிவெடுத்துக் கொண்டும், அதை நிராகரித்துக்கொண்டும் இருக்கிறீர்கள். உண்மை என்னவென்றால், மாலையில் முடிவுசெய்யும் மனம் காலையில் இருப்பதில்லை. காலையில் வேறு மனம். எல்லாம் முட்டாள் தனம். யார் கவலைப்படப் போகிறார்கள்?" என்கிறது.

காலையில் உணவு அருந்தும் நேரத்தில் நீங்கள் மோசமாக உணர்கிறீர்கள். ஏனென்றால், உங்களை நீங்களே ஏமாற்றிக் கொண்டு விட்டீர்கள். நீங்கள் மீண்டும் தோற்றுப் போகிறீர்கள். உங்கள் கண்களுக்கே நீங்கள் மதிப்பற்றுத் தோன்றுகிறீர்கள். காலை ஐந்து மணிக்கு எழ வேண்டும் என்ற ஒரு சிறிய காரியத்தை உங்களால் செய்ய முடியவில்லை. நீங்கள் மிகமிக மோசமாக உணர்கிறீர்கள். காரணம், உங்களிடம் மனஉறுதி இல்லை. சிறிதளவும் இல்லை. உயிரற்றவர்போல் உணர்கிறீர்கள். எனவே, பெரிய அளவில் வருத்தம் தோன்றுகிறது. இப்போது மீண்டும் வேறு மனம் அங்கு

செயல்படுகிறது. அது மூன்றாவது மனமாக இருக்கலாம். இப்படியே நீங்கள் சுற்றிச் சுற்றிப் பயணிக்கிறீர்கள்.

நீங்கள் ஒருவரை நேசிக்கிறீர்கள். பிறகு அவரை வெறுக்கிறீர்கள். காலையில் நீங்கள் காதலராக இருக்கிறீர்கள். மாலையில் எதிரியாகிவிடுகிறீர்கள். ஒருகணம் பிறருக்காக உயிர்விடவும் சித்தமாக இருக்கிறீர்கள். மறுகணம் தேவைப்பட்டால் அவரைக் கொல்லவும் தயாராகி விடுகிறீர்கள். இரண்டுமே உங்களிடமுள்ள சாத்தியங்கள்.

நீங்கள் ஒருவர் அல்ல. நீங்கள் தெளிவுடன் இல்லை. நீங்கள் மையம் கொண்டிருக்கவில்லை. நீங்கள் ஒரு தனிமனிதராக இல்லை. இதுவரை நீங்கள் ஒரு மனதுடன் இருந்ததில்லை. இப்படித்தான் நீங்கள் வாழ்ந்துவருகிறீர்கள். இங்கும் அங்கும் எதிர்ப்பு அலைகளால் அலைக்கழிக்கப்படுகிறீர்கள். ஆசையின் கைப்பாவையாக இருக்கிறீர்கள். நீங்கள் என்ன செய்கிறீர்கள், ஏன் செய்கிறீர்கள் என்று உங்களுக்குத் தெரிவதில்லை. இயந்திரமனிதன் போலக் காரியங்களைச் செய்துகொண்டிருக்கிறீர்கள். யாரோ கயிறுகட்டி இழுத்து இயக்குவதுபோல நடந்துகொள்கிறீர்கள். உங்களுக்கு நீங்கள் குருவாக இல்லை. ஆற்றோட்டத்தில் மிதந்து செல்லும் மரத் துண்டு போலிருக்கிறீர்கள். கரைகாணாக் கடலில் திசைதெரியாது உழல்கிறீர்கள். எதிர்க்கவோ அல்லது புயலை ஏற்கவோ இயல்வதில்லை.

மனஇச்சைகளை எதிர்க்கவோ அல்லது அங்கீகரிக்கவோ உங்களால் முடிவதில்லை. பாதிவழியில் நிற்கிறீர்கள். எதிலும் நீங்கள் முழுமையாக இல்லை. ஏதாவது ஒன்றில் முழுமையாக இருந்தால், உடனே நீங்கள் தனிமனிதர் ஆகிவிடுவீர்கள். முழுமைதான் தனிநிலையைக் கொண்டுவரும். நீங்கள் எல்லாவற்றிலும் பூர்த்தியாகாத நிலையில் இருந்துவருகிறீர்கள். ஒரு பகுதி மட்டும் உட்செல்கிறது. உள்ளே சிறிது நுழைந்ததும் நின்றுவிடுகிறீர்கள். ஆர்வமற்ற வாழ்க்கை வாழ்கிறீர்கள். நீங்கள் சூடாகவும் இல்லை. குளிர்ச்சியாகவும் இல்லை.

குளிர்ச்சிக்கென்று தனி அழகு உண்டு. உஷ்ணத்திற்கும் தனி அழகு உண்டு. நீங்கள் அந்த இரண்டில் எதுவாகவும் இல்லை. நீங்கள் பிடிப்பற்று வாழ்கிறீர்கள். தரமற்ற வாழ்க்கை வாழ்கிறீர்கள். தீவிரம் என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியவில்லை. முழுமை என்றால் என்னவென்று தெரியவில்லை. எந்தக் கணத்தில் நீங்கள் முழுமையில் அமிழ்ந்து காணாமல் போவீர்கள் என்று

உங்களுக்குத் தெரியவில்லை. அந்தக் கணம் எது என்று தெரிந்து கொண்டால் வழிபாட்டை அறிவீர்கள். மூழ்குதல், போதை, தொலைந்து போதல், முழுமையில் ஆழ்தல் போன்றவை நூறு சதவீதம் நிகழும்போது நீங்கள் வழிபாட்டை அறிவீர்கள். உங்கள் வாழ்க்கை மாறுதல் அடையும். புதிய மனிதராக மாறுவீர்கள். மறு பிறப்பு எடுப்பீர்கள்.

நீங்கள் முழுமை பெற்ற தனிமையை அறிந்தால், நினைவில் கொண்டால் - முழுமையாக நினைவில் கொள்ளல் என்பது விழிப் புணர்வு தவிர வேறல்ல. நூறு சதவீதம் விழிப்புணர்வு பெறும்போது தியானம் என்றால் என்ன என்று அறிவீர்கள். அது உங்களை மாற்றி விடும்.

வழிபாடு என்பது முழுமையாக மறைந்து போதல், முழுமை யாகச் சரணடைதல், பிடிப்பு என்று எதையும் மிச்சம் வைக்காது இருத்தல், நூறு சதவீதம் அதில் ஈடுபடுதல் ஆகும். எந்தக் காரியத்தில் அப்படி ஈடுபட்டாலும் அது வழிபாடுதான். உங்கள் நடனமாக இருந்தாலும் சரி; அதில் நூறு சதவீதம் முழுமையாக ஈடுபடுங்கள். அது வழிபாடாக மாறிவிடும். கலவியில் ஈடுபட்டாலும் நூறு சதவீதம் முழுமையாக இருந்தால் அது வழிபாடுதான். எதுவாக இருந்தாலும் அப்படித்தான்! அது இது என்ற வேறுபாடு கிடையாது. நூறு சதவீத ஈடுபாடு தோன்றும்போது வழிபாட்டுப் பண்பு உருப் பெறுகிறது. உங்களை முழுமையாக மறக்கிறீர்கள். போதையில் ஆழ்கிறீர்கள்.

வழிபாடு போதைக்கான வழியாக, காதலர் வழியாக இருக்கிறது. ஒருவர் அதில் தன்னை இழந்துவிடலாம். ஒருவர் அதில் காணாமல் போகலாம். அதில் ஆவியாகிவிட முடியும். அது நம்பிக் கையின் பாதையாகும். ஆனால் தொண்ணூற்று ஒன்பது சதவீதம் ஈடுபாடு பயன் தராது. நூறு சதவீதம் முழுமையான ஈடுபாடு தேவை.

மறுதுருவம் தியானமாகும். நூறு சதவீதம் நினைவு கொள்ளல், அக்கறை, விழிப்புணர்வு வேண்டும். நீங்கள் தூய்மை யான ஒளிபோல இருக்கிறீர்கள். விழிப்பு, எச்சரிக்கை, கவனித்தல், சாட்சியாக இருத்தல் போன்றவற்றுக்கு அது பாதையாகும். தனிமை நிலைக்கு அது வழிகோலும்.

வழிபாட்டில் இருவர் இணைகிறார்கள். நேசிப்பவர், நேசிக்கப்படுபவர் இருவரும் ஒன்றாகிறார்கள். அதையே சூஃபிக்கள் நேசிக்கப்படும் கடவுள் என்கிறார்கள். ஜென்னில் கடவுள் என்ற

கருத்து கிடையாது. புத்தர் கடவுள் இல்லை. அதற்குத் தேவையும் இல்லை என்றார். தியானத்தின் பாதையில் கடவுளுக்கு அவசியம் இல்லை. காரணம், தியானம் என்பது ஒரு உறவு அல்ல. வழிபாடு உறவாக இருக்கிறது. வழிபாடு சார்ந்திருப்பதாகும். தியானம் முழுமையான விடுதலை. தனிமை, தனியே தனிமை நோக்கிப் பறத்தலாகும். வேறு ஒன்றும் அல்ல. நீங்கள் மூழ்கிப் போவீர்கள் என்ற கேள்விக்கே இடமில்லை. ஆனால் நூறு சதவீத அக்கறை தேவை. அதற்கு குறைவாக இருந்தால் பயனில்லை. குறைவின்றி இருந்தால் நீங்கள் மாற்றம் பெறுவீர்கள். எப்போது நீங்கள் நூறு சதவீதம் உயிர்ப்புடன் இருக்கிறீர்களோ அந்தத் தருணத்தில் புரட்சி நிகழும்.

ஆனால் பொதுவாக மக்கள் எதிலும் நூறு சதம் அக்கறை காட்டுவதில்லை. மேலோட்டமாக, கலப்படமாக இருக்கிறார்கள். கலப்படம் அவர்களை முரண்பாடுகளில் கொண்டுபோய்ச் சேர்க்கிறது. ஒரு பகுதி வடக்கே செல்கிறது. ஒரு பகுதி தெற்கே போகிறது. அவர்கள் எப்போதும் மனஇறுக்கம், தவிப்பில் இருக்கிறார்கள். அவர்களால் ஏற்கவும் முடியாது, மறுக்கவும் முடியாது. பூரணத்துவத்தை அடைய அவை இரண்டுதான் வழிகள். முழுமையாக எதிர்க்க வேண்டும். அது தியானத்தின் பாதை. முழுமையாக ஏற்க வேண்டும். அது அன்பின் பாதை. ஆனால் ஜனங்கள் இரண்டிலும் பாதிப்பாதி நிலையில் நிற்கிறார்கள். பிளவுபட்டிருக்கிறார்கள். பிளவுபட்டு நிற்கும் வீடு விரைவிலோ அல்லது தாமதமாகவோ விழுந்தே தீரும்.

**இறைவா! நீ அவர்கள் கண்களைத் திறந்துவிடுவதன் மூலம் காப்பாற்றலாம்.**

அது பெருமளவு முக்கியத்துவம் பெற்ற அறிக்கை. முக்கியத்துவம் பெற்றிடக் காரணம் பிதாகோரஸ் அந்த இடத்தில் நிறுத்தி விடவில்லை. சூஃபியிஸம் அங்கு நின்று விடுகிறது. அன்பின் பாதை அங்கு நின்று விடுகிறது. பிதாகோரஸ் தொடர்ந்து மேலே செல்கிறார். அவர் அதைக் குறிப்பிடுகிறார். ஆனால் அவர் வழிபாடு செய்த மனிதர் அல்ல. தியானம் செய்தவர். அவர் புத்தர். பஹாவுத்தீன் அல்ல. அவர் மகாவீரர். மீரா அல்ல. அவர் அதை குறிப்பிடுகிறார்.

**இறைவா! நீ அவர்கள் கண்களைத் திறந்து விடுவதன் மூலம் காப்பாற்றலாம்** என்கிறார். வழிபாடு செய்யும் மனிதர் அந்த இடத்தில் நின்று விடுகிறார். மேலே செல்லும் அவசியம் அவருக்கு

இல்லை. இந்த நூல் வழிபாடு செய்யும் மனிதரால் எழுதப் பட்டிருந்தால், அதுவே கடைசி சூத்திரமாக இருந்திருக்கும். அதன் பிறகு எங்கும் செல்ல வேறு சாத்தியம் இருக்காது. வழிபாடே முடிவானது. வழிபாடு ஒரு முற்றுப்புள்ளி.

இது வழிபாடு: **இறைவா! நீ அவர்கள் கண்களைத் திறந்து விடுவதன் மூலம் காப்பாற்றலாம்.** வேறு என்ன செய்ய முடியும்? "எங்கள் கண்களைத் திறந்துவிடு. குருடாகப் பிறக்காத எல்லோ ருடைய கண்களையும் திறந்துவிடு. குருடாக இருப்பதுபோலக் கண்களை மூடிக்கொண்டிருப்பவர்கள்தவிர மற்றவர்கள் கண் களைத் திறந்து விடு" என்று கடவுளிடம் பிரார்த்தனை செய்யலாம்.

அன்பின் பாதையும் முழுமையிடம் பிரார்த்தனை செய்வதே ஆகும். "நீ மட்டுமே ஏதாவது செய்ய முடியும். நாங்கள் சிறியவர்கள், அற்பமானவர்கள். சுயமாக எங்களால் ஒன்றும் செய்யமுடியாது" என்று பிரார்த்திக்கலாம். அவர் முழுமையாகச் சார்ந்திருக்கும்போது அது நிகழ்கிறது. எந்தவித முயற்சியும் எடுக்கக்கூடாது. முழுமையாக சரணடைய வேண்டும். அந்த பூரண சரணாகதியில் அது நிகழ்கிறது. நீங்கள் எப்போது சரணடைகிறீர்கள் என்பது முக்கியமல்ல. சரணடைதல் ஒரு செயலாகி, அதன் விளைவாக மேம்பட்ட கடந்த நிலை ஏற்படுகிறது என்று இல்லை. சரணடையும்போது, விளைவும் உடனே ஏற்படுகிறது. இரண்டும் ஒன்று சேர்ந்து நடக்கின்றன. அவை இரண்டுக்கும் இடையே இடைவெளி இருப்பதில்லை.

பிதாகோரஸ் வழிபாடுசார்ந்த மனிதர் அல்ல. அவர் மேலே செல்கிறார்.

**ஆனால் வேண்டாம்! இது தெய்விகம்**
**நோக்கிய மனிதர்களின் ஓட்டம்**
**தவறுகளை அறிந்து, உண்மையை உணர்வதற்கானது**

அவர் இந்த வார்த்தையைக் கூறுகிறார். **இறைவா! நீ அவர்கள் கண்களைத் திறந்துவிடுவதன் மூலம் காப்பாற்றலாம்.** அது ஆதரவற்ற நிலை என்பதால் கூறுகிறார். அல்லது தான் அயலான் என்பதால் அப்படிக் கூறுகிறாரா? அல்லது இதுவும் ஒரு பாதை என்று நினைவூட்டுகிறாரா? ஆனால் அது **அவர்** பாதையல்ல. எனவே உடனே அதை மறுக்கிறார்.

**"ஆனால், வேண்டாம் இது தெய்வீகம் நோக்கிய மனிதர் களின் ஓட்டம். தவறுகளை அறிந்து உண்மையை உணர்வதற் கானது"** என்கிறார். "இல்லை. நாங்கள் உன்னிடம் கேட்கவில்லை.

அப்படியே நான் கேட்டாலும் நீ அதைச் செய்யாதே. சுயமாக நாங்களே அதைச் செய்ய வேண்டும். எங்களைத் தூய்மைப்படுத்திக் கொள்ள எல்லாவிதமான காரியங்களையும் செய்யவேண்டும். வாழ்வின் ஆதார ஊற்றைக் கண்டறிய நாங்கள் ஆழமான கிணறு தோண்ட வேண்டும். நீ இதில் தலையிட வேண்டாம். செய்ய வேண்டாம்."

புத்தர் ஒருபோதும் பிரார்த்தித்தது இல்லை. மகாவீரர் ஒருபோதும் பிரார்த்தனை செய்யவில்லை. அவர்கள் மனித சாத்திய முள்ள முயற்சிகள் அனைத்தையும் நூறு சதவீதம் செய்தார்கள். முயற்சியில் சகலத்தையும் பணயம் வைத்தார்கள். அந்த முயற்சியால் விழிப்புணர்வு பெற்றார்கள். அவர்கள் தூய்மை பெற்றார்கள். அவர்கள் விழிப்புணர்வற்ற நிலை அகன்றது. விழிப்புணர்வு மட்டும் கொண்டவர்களாக மாறினார்கள். அந்த விழிப்பே வெற்றி நிலை யாகும். அதை அவர்கள் நினைவில் கொண்டிருந்தார்கள்.

மகாவீரர், புத்தர், பதஞ்சலி, லாவோ, சுவாங் ட்ஜு போன்ற வர்களின் அதே பாதையில் தான் பிதாகோரஸும் சென்றார். வேறு பாதையை அவர் சார்ந்து இருக்கவில்லை. கிருஷ்ணர், ஜோராதிஸ்திரா, ஏசு, நபிகள், மீரா போன்றவர்களின் பாதை சார்ந்து இருக்கவில்லை. ஆனால் அந்த இரண்டு பாதைகளும் சரியானவைதான். ஒவ்வொரு வரும் தனது சுயவழியைத் தேர்வுசெய்ய வேண்டும். தான் எந்த வகை என்பதை முடிவுசெய்ய வேண்டும். தனது சொந்தக் கண்ணோட்டத்தை வைத்து தன்னை அறியவேண்டும்.

சில மனிதர்கள் இருக்கிறார்கள் அவர்களுக்கு அன்பு செலுத்துவது எளிதான காரியம். தியானம் என்பது சிரமமான செயல். தங்கள் இயல்புக்கு மாறாக அவர்கள் நீரோட்டத்தை எதிர்த்து நீந்து கிறார்கள். அதற்கு அவசியம் இல்லை. அன்பான மனிதர்களுக்கு இயற்கையுடன் நேசம் இருந்தால் மட்டும் போதும். இயற்கையுடன் வழிபாட்டு உணர்வு கொண்ட இணக்க நிலை, ஆழமான நன்றி யுணர்வு போதும். மற்றதை இயற்கையிடம் விட்டுவிடலாம். நடப்பது நடக்கட்டும் என்று இயற்கையின் போக்கில் விட்டுவிடுத லாகும். ஒரு பகுதி அனுமதிக்கும்போது முழுமை உடனே பொறுப் பேற்று நடத்திக் காட்டுகிறது. வேறு வழியிலும் அது நடக்கும். ஒரு பகுதி முழுமுயற்சி செய்யும் போதும் நடக்கும்.

கடவுளின் உதவி தியானத்திற்குக் கிடைக்காது என்று அர்த்த மல்ல. இதை நினைவில் வையுங்கள். உதவி கேட்காமலே வரும். உதவி **எப்போதும்** வருகிறது. அன்பானவர்களுக்கு வருகிறது.

கேட்பதன் வாயிலாக வருகிறது. அதனால்தான் ஏசு "கேளுங்கள், கொடுக்கப்படும், தட்டுங்கள் திறக்கப்படும்" என்றார். கேட்பதன் மூலம் அது கிடைக்கிறது. அன்பர் அழைக்கிறார், கூப்பிடுகிறார், பிரார்த்திக்கிறார், அழுகிறார், கதறுகிறார், இடுப்பில் தூக்கி வைத்துக் கொள்ளச் சொல்ல அழும் குழந்தை போன்றவர், அன்பானவர், தியானிப்பவருக்கும் அது கிடைக்கிறது. ஆனால் கேட்பாமல் கிடைக்கிறது.

**ஆனால் வேண்டாம். இது தெய்விகம் நோக்கிய மனிதர்களின் ஓட்டம். தவறுகளை அறிந்து உண்மையை உணர்வதற்கானது.** "நீ வரவேண்டாம். அதை நாங்களே செய்து கொள்கிறோம். அதற்குத் தேவையான சக்தியை எங்களுக்குத் தந்திருக்கிறாய். அதை அடையும் தகுதியை அளித்திருக்கிறாய். எங்களை நாங்கள் அறியும் திறனைத் தந்திருக்கிறாய். உன் உதவியைக் கேட்பது சரியல்ல. அதற்கான ஏற்பாடுகளை நீ ஏற்கனவே ஒரு வகையில் தந்துவிட்டால் கொஞ்சம் முயற்சி செய்தால் அதை நாங்கள் அறிந்து கொள்வோம். இனி நாங்கள் கேட்கக் கூடாது. அது சரியல்ல. அது அழகல்ல" என்றார். இருந்தாலும்,

**இயற்கை அவர்களுக்குச் சேவை செய்கிறது.**

"நாங்கள் கேட்பதில்லை. எந்த உதவியும் கேட்காது சுய முயற்சி செய்பவர்களுக்கும் இயற்கை சேவை செய்கிறது. தங்களுக்குத் தாங்களே உதவிக் கொள்பவர்களுக்கு இயற்கை உதவுகிறது" என்கிறார்.

கேட்பது, கேட்காமல் இருப்பது எல்லாம் ஒரு பிரச்சினை அல்ல. நான் சொல்வதைக் கவனியுங்கள். ஏசுவைவிட சிறிதும் அதிகமாக இயற்கையால் புத்தர் உதவிசெய்யப்படவில்லை. மீராவைப் போலவே மகாவீரரும் இயற்கையால் உதவி செய்யப் பட்டார். அந்த உதவியில் ஏற்றத்தாழ்வு இல்லை. மீரா உதவி கேட்டாள். மகாவீரர் உதவி கேட்கவில்லை. மகாவீரரின் பாதை ஆண் மனம் சார்ந்தது. மீராவின் பாதை பெண் மனம் சார்ந்தது. மீரா கேட்டாள், பெற்றுக் கொள்ள ஆயத்தமாக இருந்தாள். மகாவீரர் கேட்கவில்லை. அது அவர் கௌரவத்துக்கு எதிரானது. அவர் மன இயல்புக்கு எதிரானது. அவர் சுயமாக முயன்றார்.

ஆனால் உதவி சமமாகவே வந்து சேர்ந்தது. கேட்டவருக்கும் வந்தது. கேட்காதவருக்கும் வந்தது. நூறு சதவீதம் ஈடுபாட்டுடன் நீங்கள் பணியாற்றினால், அது கேட்காமல் கேட்கும் வழிமுறை

யாகும். நீங்கள் கடுமையாக உழைப்பதை முழுமைநிலை அறியும் போது நீங்கள் பரிசளிக்கப்படுகிறீர்கள். **இயற்கை அவர்களுக்கு சேவை செய்கிறது. அதில் ஆழ்ந்து அமிழ்கிறார்கள்.**

அன்பின் வாயிலாகவா அல்லது தியானம் மூலமாகவா அவர்கள் அதில் ஆழ்கிறார்கள் என்பது முக்கியமல்ல...

பிதாகோரஸ் கூறுகிறார்:

**அதில் ஆழ்ந்து அமிழ்கிறார்கள்**
**அறிவும் மகிழ்ச்சியும் நிறைந்த மனிதரே**
**அந்த சொர்க்கத்தில் ஓய்வு கொள்ளுங்கள்**
**எனது விதிகளை உள்வாங்குங்கள்**
**விஷயங்களில் இருந்து விலகுபவர்**
**மனம் பயம் கொள்ளும், பேதம் கண்டறியும்**
**உடலிச்சையை அறிவு அடக்கியாளும்**

"எது உங்கள் வழியாக இருந்தாலும்..." கடைசி இரண்டு சூத்திரங்கள் தங்களை மிகவும் நெருங்கி வருபவர்களுக்கானது. **அதில் ஆழ்ந்து அமிழ்கிறார்கள்** என்கிறது சூத்திரம். அதை நீங்கள் காண்கிறீர்கள். அதை அங்கீகரிக்கிறீர்கள். அது உங்களுக்கு வெளிப் படையானதாக இருக்கிறது.

**அறிவும், மகிழ்ச்சியும் நிறைந்த மனிதரே...** அறிவும் மகிழ்ச்சியும் சேர்ந்து வருகின்றன. முட்டாள் மகிழ்ச்சியாக இருக்க முடியாது. நான் முட்டாள் என்று குறிப்பிடுவது அறிவுஜீவித்தனம் இல்லாதவர்களை அல்ல என்பது நினைவிருக்கட்டும். அறிவு ஜீவி யும் அதில் இணைந்துள்ளார், குறிப்பால் உணர்த்தப்படுகிறார். அறிவுஜீவி, அறிவு ஜீவியாக இல்லாதவர் இருவரும் தங்கள் அறிவை ஒதுக்கியே வைக்கிறார்கள்.

அன்பு அல்லது தியானத்தின்வாயிலாக மட்டுமே அறிவு கிட்டுகிறது. அன்பின்வாயிலாக அறிவு இதயத்தில் மலர்கிறது. தியானத்தின்வழியாக அறிவு மூளையில் அமர்கிறது. இரண்டும் ஒரே வகையானதுதான். இருக்கும் இடம் நிச்சயம் வேறுபடுகிறது. அதனால்தான் அன்பான மனிதர்கள், வழிபாடுசார்ந்தவர்கள் கடவுளை இதயத்தில் உணர்வதாகச் சொல்கிறார்கள். அவர்கள் கூற்று சரிதான். அவர்கள் அறிவை முதலில் அங்குதான் உணர்கிறார்கள். அன்பு நேசம் சார்ந்த அறிவு. அன்பின் வர்ணம் அதில் இருக்கிறது. காரணம் அது அன்பு வழியே வந்து சேர்ந்துள்ளது.

ஆனால் பதஞ்சலி **சகஸ்ரம்** என்ற உச்சம் தலையில் இருப்பதாக பதஞ்சலி கூறுகிறார். ஆயிரத்தொரு இதழ்கள் கொண்ட தாமரையாக அது மூளையில் மலர்கிறது. மக்களிடம் இது பெரிய குழப்பத்தை ஏற்படுத்துகிறது. "நிஜமாக அது எங்கு நிகழ்கிறது? இதயத்திலா, மூளையிலா?" என்கிறார்கள். பதஞ்சலி கூறுவதைக் கேட்டால் அது உச்சந்தலையில் ஏற்படுகிறது எனலாம். பஹாவுத்தீன், ஜலாலுதீன் ரூமி, அல்-ஹில்லாஜ் மன்சூர், மீரா, சைதன்யா, தூய ஃபிரான்ஸிஸ், தெரஸா ஆகியோர் கூற்றுப்படி அது இதயத்தில் மலர்கிறது. தாமரை அங்கு மலர்கிறது.

அது ஜனங்களுக்குக் குழப்பத்தைத் தருகிறது. குழப்பம் கொள்ள அவசியமில்லை. உங்களுக்கு இரண்டு சாத்தியங்கள் உள்ளன. தியானத்தின் பாதையை நீங்கள் மேற்கொண்டால், அறிவின் முதல் பொறி தலையில் ஏற்படுகிறது. பிறகு உடல்முழுவதும் பரவுகிறது. ஆனால் முதல் பொறி தலையில்தான் ஏற்படுகிறது. பிறகு அது உங்களைத் தகிக்க வைக்கிறது. முதல் அனுபவம் பெரும் மதிப்புள்ளது. அதனால்தான் ஒருவர் அதை நினைவில் வைத்திருக் கிறார்.

அன்பின் பாதையில் செல்லும்போது முதல் அனுபவம் இதயத்தில் ஏற்படுகிறது. முதலில் தோன்றும் அந்த பொறியும் முந்தையது போன்றதுதான். பிறகு உடல் முழுவதும் கனல்கிறது. ஆனால் முதல் அனுபவம் பேரழகு கொண்டது. அமுதத்தின் முதல் ருசி நினைவில் நிற்கிறது. அதனால்தான் அந்த இரண்டு மையங்கள் பற்றியும் காலம் காலமாகப் பேசப்பட்டு வருகின்றன. அந்த இரண்டு பாதைகளையும் பயிலாதவர்கள் குழப்பம் அடைகிறார்கள். அவர்களால் நம்பமுடிவதில்லை. ஏதோ ஒரு இடத்தில் அது நடக்கிறது. நிஜமான அந்த மையம் எது? இதயமா? தலையா?" என்கிறார்கள். நிஜமான மையம் எது என்பது ஒரு பிரச்சினையே அல்ல. எந்தப் பாதையை நீங்கள் பின்பற்றுகிறீர்கள் என்பதுதான் கேள்வி. நீங்கள் தியானத்தைப் பின்பற்றினால் உங்கள் அறிவு தலையில் சுடர்விடும். அன்புவழியைப் பின்பற்றினால் முதல் பொறி உங்கள் இதயத்தில் தூண்டிவிடப்படும். பிறகு அது பரவுகிறது. நீங்கள் அதுவாகவே மாறிவிடுகிறீர்கள்.

**அறிவும், மகிழ்ச்சியும் நிறைந்த மனிதரே!** உங்கள் பாதை எதுவாக இருந்தாலும், **அதில் ஆழ்ந்து அமிழ்கிறீர்கள். அறிவும், மகிழ்ச்சியும் நிறைந்த மனிதரே! அந்த சொர்க்கத்தில் ஒய்வு கொள்கிறீர்கள்.** நீங்கள் அறிவுள்ள மனிதராகிறீர்கள். மகிழ்ச்சி

நிறைந்தவராகிறீர்கள். ஓய்வு கொள்ளும் தருணம் வருகிறது. ஆனால் இது உச்சம் அல்ல. இன்னும் நீங்கள் அகந்தையில் இருக்கிறீர்கள். மகிழ்ச்சி இருக்கிறது. அறிவு இருக்கிறது. ஆனாலும் அகந்தை இருக்கிறது. கடைசிக்கணத்தில் சூட்சுமத்திலும் சூட்சுமமாக அகந்தை இருந்தது. "நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன்" என்கிறீர்கள். "நான் அறிவாளியாக இருக்கிறேன்" என்கிறீர்கள். நான் என்ற உணர்வு இன்னும் இருக்கிறது. மிகவும் மெலிதாக, கண்ணாடிபோல் தெளிவாக இருக்கிறது. யாரும் அதைக் காணமுடியாது. ஆனாலும் அது இருக்கிறது.

ஒளிபுகும் மெல்லிய கண்ணாடியாக இருந்தாலும் அதுவும் தடைதான். அதனூடே நீங்கள் பார்க்கலாம். தோட்டத்தைப் பார்க்கலாம், மலர்களைப் பார்க்கலாம், பறவைகளைப் பார்க்கலாம். நீங்கள் சூரியனை, மேகங்கள் போன்ற எல்லாவற்றையும் தடையில்லாது இருந்தால் பார்க்கலாம். நீங்கள் அதை நெருங்க முயலும் போது சட்டென்று ஒரு தடையைக் காண்பீர்கள். நீங்கள் விலகியிருக்கிறீர்கள். முதலில் நீங்கள் ஒரு முட்டாளாக விலகியிருக்கிறீர்கள். நீங்கள் அறிவாளிதான். ஆனாலும் விலகியிருக்கிறீர்கள். காரணம், 'நான்' என்பது இன்னும் இருக்கிறது. எனவே பிதாகோரஸ் "எனது விதியை உள்வாங்குங்கள்..." என்கிறார். அந்த விதியை நீங்கள் இன்னும் உதறவில்லை. இன்னும் நீங்கள் அகந்தையை முழுமையாக வெல்லவில்லை.

**விஷயங்களில் இருந்து விலகுவோர்**
**மனம் பயம் கொள்ளும் நன்கு தராதரம் கண்டறியும்**
**உடலிச்சையை அறிவு அடக்கியாளும்**

இன்னும் நினைவில் வையுங்கள். விழிப்புடன் இருங்கள். அறிவுக்கு உதவி செய்கிறீர்கள். காரணம், கடைசி எட்டு எழுத்து வைக்க வேண்டியுள்ளது. ஆனால் எச்சரிக்கை தேவை. விழிப்புடன் இருங்கள். நீங்கள் பாதையைத் தவறவிடலாம், தவறி விழலாம். காரணம், 'நான்' என்ற அகந்தை இன்னும் இருக்கிறது. எனவே, தவறிவிழ நேரிடலாம். நான் என்பது இல்லாது போனால்தான் விழுவதிலிருந்து விலகி அப்பால் செல்ல முடியும். இனி கடைசி சூத்திரம்.

**பிரகாசிக்கும் வானில் உயர்ந்தால்**
**சிரஞ்சீவிகள் நடுவே நீங்களும் ஒரு தெய்வமாக**
**இருப்பீர்கள்**

நீங்கள் அறிவுடன் இருக்கிறீர்கள், மகிழ்ச்சியுடன் இருக்கிறீர்கள். இன்னும் ஒரு எட்டு மேலே சென்றால் நீங்கள் தெய்வமாகலாம். ஒரு எட்டு மேலே சென்றால் நீங்கள் மறைந்துபோவீர்கள். உங்களிடம் தெய்வம் மட்டும் எஞ்சியிருக்கும்.

**பிரகாசிக்கும் வானில் உயர்ந்தால்....** இது கடைசித் துண்டு அகந்தை. உங்களை அது பூமியுடன் பிணைத்து வைத்துள்ளது. இனி அது இரும்புச் சங்கிலியாக இருக்காது. அது தங்கச் சங்கிலி. ஆனாலும் சங்கிலிகள் சங்கிலிகள்தான். உங்கள் முட்டாள்தனத்தினால், நீங்கள் முதலில் நீங்கள் பூமியுடன் பிணைக்கப்பட்டிருக்கிறீர்கள். இரண்டாம் தரம், அறிவற்ற நிலை போன்றவற்றால் பூமியுடன் பிணைக்கப்பட்டிருக்கிறீர்கள். துன்பம், வலி போன்ற அசிங்கமான சங்கிலிகளால் பூமியுடன் நீங்கள் பிணைக்கப்பட்டிருக்கிறீர்கள். இப்போது நீங்கள் மகிழ்ச்சி என்ற அழகான சங்கிலியால் பூமியுடன் பிணைக்கப்பட்டிருக்கிறீர்கள். வைரங்கள் பதித்த தங்கச் சங்கிலி. அவை சங்கிலிகளாகத் தெரியாமல் ஆபரணங்கள் போல் தோற்றமளிக்கின்றன. எனவே, நீங்கள் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும். உங்கள் அறிவு, மகிழ்ச்சி போன்றவற்றுடன் பெரிதும் பிணைக்கப்பட்டிருக்கிறீர்கள். அது அதிக நாசத்தை ஏற்படுத்துகிறது. மேலே நீங்கள் செல்லச் செல்ல அது அதிக ஆபத்தானதாகிறது. அது வீழ்ச்சியாக மாறுகிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள். சிகரத்தை நீங்கள் நெருங்கிச் செல்லும்போது ஒரு எட்டு தவறாக எடுத்து வைத்தால், அடிவாரத்துக்குத் திரும்ப வந்து சேர்வீர்கள்.

ஏணிகளும், பாம்புகளும் நிறைந்த பரமபத விளையாட்டு பற்றி உங்களுக்குத் தெரியுமல்லவா? அது கிறிஸ்தவ இறைமையியலாளர்களால் கண்டுபிடிக்கப்பட்டது. அது ஒரு குறியீடு. உருவகம். நீங்கள் ஏணிகள் வழியே ஏறுகிறீர்கள். ஒரு பாம்பு உங்களைப் பிடிக்கிறது. நீங்கள் கீழே விழுகிறீர்கள். கடைசிப் படியில் மட்டும் பாம்பு இல்லை. இன்னும் ஒரு பாம்பு மிச்சமிருக்கிறது. நீங்கள் உச்சியை அடையாவிட்டால் கீழே விழுந்து விடுவீர்கள். தொன்னூற்று ஒன்பது சதவீதத்திலிருந்து பூஜ்ஜியத்துக்கு வந்து விடுவீர்கள்.

மேலே செல்லச் செல்ல, அதிக எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். சிறந்த இன்பங்கள் கூடுதலான பந்தங்களை ஏற்படுத்தும். அது இயல்புதான். அதில் விஷம் இல்லை. அவை மிகவும் தூய்மையானவை. விஷம் இருக்கும் என்று நீங்கள் சந்தேகம் கொள்ளவும் அவசியமில்லை. அவை சுவையானவை, போஷாக்கு அளிப்பவை.

பலமான பிடிப்பு ஏற்படுவதும் அதே வளர்ச்சி நிலையில் தங்கிவிட நேர்வதும் எளிதாக நடக்கும். அதுதான் நடக்கவும் செய்கிறது.

மனிதர்கள் பணத்தை எளிதாக ஒதுக்கித்தள்ள முடியும். பணம் ஒரு பருப்பொருள். உங்களிடம் மனோசக்தி இருந்தால் - உதாரணமாக, மற்றவர்களின் மனதில் உள்ள எண்ணங்களை உங்களால் அறிய முடியும் என்றால், அந்த சாமர்த்தியம் வேண்டாம் என்று உதறுவது மிகவும் சிரமம். அது உங்கள் அகந்தையைத் திருப்திப்படுத்துகிறது. அதிகமான திருப்தி உணர்வைத் தருகிறது. பிறர் எண்ணங்களை கண்டுகொள்வதால் நீங்கள் அசாதாரணமான மனிதராக ஆகிவிடுகிறீர்கள்.

ஒரு சம்பவம் நடந்தது....

ஒரு குறிப்பிட்ட குருவின் சீடர் மற்றொரு ஜென் குருவைச் சந்திக்கச் சென்றார். சீடர் ஜென் குருவிடம், "என் குரு அற்புதங்கள் செய்து காட்ட வல்லவர். நீங்களும் அதுபோல் செய்ய முடியுமா? எனது குரு அபாரமான காரியங்கள் எல்லாம் சாதிக்கவல்லவர். ஒரு முறை அவர் என்னை நதிக்கரையோரம் சென்று நிற்கச் சொன்னார். துண்டுக் காகிதம் ஒன்றைக் கையில் வைத்துக்கொள்ளச் சொன்னார். நானும் ஒரு காகிதத்தை வைத்துக்கொண்டேன். வெகு தொலைவில் இருந்த ஆற்றின் மறுகரையில் இருந்துகொண்டு குரு அந்த காகிதத்தில் பேனாவால் எழுதத்தொடங்கினார். தூரம் மிக அதிகமாக இருந்தபோதும் அவர் எழுதியது காகிதத்தில் தென்பட்டது. உங்களால் இதுபோல் ஏதாவது செய்ய முடியுமா?" என்று கேட்டார்.

குரு சிரித்துவிட்டுச் சொன்னார், "உனது குருவால் அற்புதங்களை மட்டுமே நிகழ்த்த முடியும் என்றால், அவர் ஞானம் பெற்றவர் அல்ல. அவர் இன்னும் அற்புத ஆற்றல் பெற்றவராக இல்லை. அற்புதங்கள் நிகழ்த்தும் ஆற்றல் பெறாது இருப்பதுதான் அற்புதங்களில் மேலான அற்புதமாகும்."

யாரும் செய்ய முடியாத ஒன்றைச் செய்யும் திறன் பெற்றவராக நீங்கள் இருக்கும்போது, அதைச் செய்யும் ஆசையைத் தடுத்து நிறுத்துவது மிகவும் சிரமம். நீங்கள் பொருட்களை உருமாற்றலாம், வானில் பறக்கலாம், மற்றவர்களின் மனதைப் படிக்கலாம் அல்லது பிறரைத் தொடுவதன் மூலம் அவர்கள் நோயைக் குணப்படுத்தலாம். அந்த ஆற்றல்கள் வேண்டாம் என்று மறுத்து ஒதுக்குவது உங்களால் முடியாத காரியம்.

கிட்டத்தட்ட அது தினமும் இங்கே நடந்துகொண்டிருக்கிறது. பல காரியங்களைச் சாதிக்க எண்ணி மக்கள் தியானம் செய்கிறார்கள். உதாரணமாக, நோய்தீர்க்கும் சக்தி எளிதாக வருகிறது. உடனே அவர்கள் என்னிடம் வருகிறார்கள். காரணம் அவர்கள் விழிப்பு பெற்று விட்டார்கள். யாராவது ஒரு தலைவலியில் அவதிப்படும் போது அவரது தலையை இவர்கள் தொட்டதும் உடனே தலைவலி, இல்லாத ஒன்றாக மாறிப்போகிறது. ஒருமுறை விழிப்பு ஏற்பட்டது அவர்கள் என்னிடம் வருகிறார்கள். "ஓஷோ! நோய்தீர்க்கும் ஆற்றல் அருமையாக என்னிடம் எழுந்து வெளிப்பட்டிருக்கிறது. நான் என்ன செய்யட்டும்? நான் அதைப் பயன்படுத்தலாமா? நோய்தீர்ப்பவராக மாறலாமா?" என்று கேட்கிறார்கள்.

அது அதிகமான ஆசையாகும். அது ஆபத்து நிறைந்தது. இவ்விதமான சக்தியை ஒருவர் பயன்படுத்தக் கூடாது என்ற விழிப்பு வரவேண்டும். இல்லாவிட்டால் அந்த இடத்திலேயே நின்றுவிட நேரிடும். முன்னேற முடியாது. நீங்கள் மேலே முன்னேறிச் செல்ல செல்ல சூட்சும செயல்திறன் அதிகரிக்கும். அவை உங்களின் திறனை அதிகரித்து ஆற்றல்நிறைந்தவராக மாற்றும். நீங்கள் அவற்றைச் செயல்படுத்த விரும்பலாம். அது உங்கள் சக்தியை மோசமாக ெ'ஊடிக்கும் செயலாக மாறும். நீங்கள் வீழ்ந்து போவீர்கள். மோசமாக வீழ்ந்து விடுவீர்கள்.

அதனால்தான் பதஞ்சலி தனது **யோக சூத்திரத்தில்** யோகிகளை விழிப்புடையவர்களாக இருக்க வைக்கிறார். சகல **சித்து வேலைகள்** குறித்து எச்சரிக்கையாக இருங்கள். ஒவ்வொரு சித்தும் ஆசையைத் தூண்டக் கூடியது. அது அதிகரிக்கும்போது ஆசையும் அதிகரிக்கும். அதிகம் அகந்தையை நிறைவு செய்யும். ஒருதடவை அகந்தை திருப்தி கொள்ளத் தொடங்கிவிட்டால் நீங்கள் உச்ச நிலை எய்த மாட்டீர்கள். நீங்கள் தெய்வநிலை அடைய முடியாது.

**பிரகாசிக்கும் வானில் உயர்ந்தால், சிரஞ்சீவிகள் நடுவே நீங்களும் ஒரு தெய்வமாக இருப்பீர்கள்.** நீங்கள் அறிவானவராக இருந்தால், எச்சரிக்கையுடன் இருங்கள். உச்சநிலையில் இருந்து பார்க்கும்போது அறிவும் முட்டாள்தனமாகவே தெரியும். ஏனென்றால், அகந்தை இன்னும் இருக்கிறது. அதுதான் பெரிய முட்டாள்தனம்.

ஒரு சீடர் குருவிடம் வந்து, "குருவே! நீங்கள் இத்தனை வருட காலம் காத்திருந்தது நிறைவேறி விட்டது. நான் வெறுமை அடைந்து விட்டேன்" என்றான்.

குரு அவனைப் பலமாக அடிப்பார். இப்போது குரு அடிக்க மாட்டார் என்று சீடன் நம்பினான். குரு திரும்பத் திரும்பச் சொன்னார். "வெறுமையை நீ கொண்டுவந்து காட்டும்வரை நான் உன்னை அடிப்பேன்" என்றார். அவன் சொன்னது உண்மைதான். அவன் வெறுமையை அனுபவித்தான். அதனால் மகிழ்ச்சி அடைந்தான். அவன் நடனமிட்டபடி ஓடிவந்தான். குருவின் புன்னகைக்காகப் பல ஆண்டுகள் காத்திருந்தான். அவர் வாழ்த்து வதற்காகக் காத்திருந்தான். ஆனால் குரு அவனை முன்பு அடித்ததை விடவும் பலமாக அடித்தார்.

அவன், "இது எனக்குக் குழப்பத்தைத் தருகிறது. நான் வெறுமை அனுபவம் பெற்றுவிட்டேன் என்றுதான் உங்களிடம் கூறினேன்" என்றான்.

குரு அதற்கு, "அது எனக்குத் தெரியும். நீ சொல்லத் தேவை யில்லை. அந்த வெறுமையையும் இப்போது உதறி எறிந்துவிடு. அதன் பிறகு நீ நிஜமாகவே வெறுமையானவனாக மாறிவிடுவாய். இது ஒரு அனுபவமாக மாறவேண்டும். வெறுமை அனுபவம் என்பது எதுவுமற்ற நிலை அல்ல என்றாகிறது. ஒரு அனுபவத்தை நீ பிடித்து வைத்திருக்கிறாய். கடவுள் என்பது ஒரு அனுபவம் அல்ல. கடவுள் என்பது எல்லா அனுபவங்களையும் துறந்துவிட்ட நிலை. கடவுள், அப்படி ஒரு தூய நிலையாகும். அங்கு அனுபவம் ஏற்படாது, அறிவு, பேரின்பம் எதுவும் இருக்காது. எல்லாம் மறைந்து விடும். துயரம் மறைவது மட்டுமல்ல, பேரின்பமும் மறைந்துவிடும். மூடத்தனம் மட்டுமல்ல, விவேகமும் மறைந்து விடும். நீங்கள் முற்றிலும் தனித்து போவீர்கள். எந்த அனுபவமும் உங்களிடம் இருக்காது. மனதில் திருப்தியும் இருக்காது. "நான் ஞானம் பெற்றுவிட்டேன்" என்ற எண்ணமும் இருக்காது.

இப்படி ஒரு சம்பவம் நடந்தது.

ஒரு பேரரசன் புத்தரிடம் வந்தான். புத்தரைத் தரிசிக்க வரும் போது கவலையுடன் வந்தான். புத்தருக்கு ஏதாவது காணிக்கை அளிக்க விரும்பினான். தனது மனைவியிடம் கேட்டறிந்தான். அவன் முதல் முறையாகச் செல்வதால் ஏதாவது காணிக்கை, பரிசு கொண்டு செல்ல வேண்டும் என்று அறிந்தான்.

எது பொருத்தமான பொருளாக இருக்கும்? அழகான ஒரு வைரம் அவனிடம் இருந்தது. உலகின் மிகச் சிறந்த வைரம் அது. எனவே அவன் "அதை நான் எடுத்துச் செல்வேன். அது சிறப்பானது.

புத்தரும் அதைப் போன்ற ஒன்றைப் பார்த்திருக்க முடியாது. அதற்கு நிகரான வைரம் கிடையாது. அதற்கு இணையானது வேறு ஒன்றும் கிடையாது. பல அரசர்கள் அவரிடம் போகிறார்கள். அவருக்குப் பல பொருட்களைத் தந்திருப்பார்கள். என்னை நினைவில் கொள்ளும் வகையில் சிறப்பான ஒன்றை நான் அளிக்க வேண்டும்" என்றான்.

அவன் மனைவி சிரிக்கத் தொடங்கினாள். அவள் புத்தரிடம் சென்று வருபவள். அவள் ஒரு சிஷ்யை. "நீங்கள் முதல்தடவை புத்தரைப் பார்க்கப் போகிறீர்கள். புத்தர் பற்றி உங்களுக்கு எதுவும் தெரியாது. வைரத்தைப் புத்தரிடம் கொடுங்கள். அது அவருக்கு ஒரு கூழாங்கல் போன்றது. உங்களிடம் இருந்தால் அது மகிழ்ச்சி தரும். சந்தோஷ உணர்வு எழும். எனவே அதை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். எனது ஆலோசனை என்னவென்றால், ஒரு தாமரை மலரைப் புத்தரிடம் கொடுத்தால் அவர் மிகவும் மகிழ்வார். நமது குளத்தில் அழகான மலர்கள் இருக்கின்றன. ஒன்றை நான் பறித்து வருகிறேன்" என்றாள்.

அரசன், "ஏன் தாமரையை விரும்புகிறார்?" என்று கேட்டான்.

அதற்கு மனைவி, "அது ஒரு சிறந்த குறியீடு. அது மனிதனின் முழுப் பரிணாமத்தைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது. மனிதன் சேறு போன்றவன். அந்த சேற்றில் இருந்து ஒருநாள் தாமரை உயர்ந்து எழுகிறது. மனிதன் சேறுபோல் இருக்கிறான். ஆனால் தாமரை உருவாவதற்கு ஏற்ற வித்து அவனிடம் உள்ளது. எனவே தாமரை ஒரு பொருட்செறிவுள்ள உருவகம். தாமரையை அவர் அதிகம் பாராட்டுகிறார். காரணம், அது மனிதன் காமத்திலிருந்து சமாதி நிலைக்குச் செல்வதைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது. மனிதன் தாழ்ந்தநிலையில் இருந்து உயர்ந்தநிலைக்கு, லௌகீகத்தில் இருந்து தெய்வீகத்துக்கு உயர்வதைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது" என்று கூறினாள்.

எனவே அரசன் இரண்டு பொருட்களையும் எடுத்துச் சென்றான். தாமரைமலரை அவன் மனம் ஏற்றுக்கொள்ளவில்லை. "அது சாதாரண மலர். எல்லாவிதமான குளங்களிலும் அதைக் காணலாம். ஆயிரக்கணக்கான மக்கள் புத்தருக்குத் தாமரை மலரை அர்ப்பணித்து இருப்பார்கள். எனவே அதில் என்ன விசேஷம் இருக்கிறது? ஆனால் மனைவி சொன்னால் சரியாகவே இருக்கும். எனவே அவளைத் திருப்திப்படுத்த வைரம், தாமரை இரண்டையும் எடுத்துக் கொண்டார்.

அவன் சென்று புத்தரை வணங்கினான். முதலில் வைரத்தை அளித்தான். வைரத்தைத் தரலாம் என்பது அவன் கருத்து என்பது வெளிப்படையான விஷயம். "அவர் வைரத்தை ஏற்றுக் கொள்ளாது போனால் தாமரையைக் கொடுக்கலாம்" என்று எண்ணினான். எனவே ஒரு கையால் வைரத்தைக் கொடுத்தான்.

புத்தர் அவனைப் பார்த்து, "அதை அப்பால் எறி" என்றார். அதை எறிவது அவனுக்குச் சிரமமானதாக இருந்தது. அவர் அதை ஏற்றுக்கொள்ள வேண்டும், சம்மதிக்கவேண்டும், பாராட்ட வேண்டும் என்று விரும்பினான். அப்பால் எறிய முடியுமா? ஆனால் புத்தர் எறிந்துவிடு என்று கூறியபோது பத்தாயிரம் புத்த சந்நியாசிகள் அதைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். முடியாது என்று அவனால் சொல்ல முடியாது. அது சிரமம். தனது வாழ்நாள் முழுவதும் அதை மறைத்துப் பாதுகாத்து வந்தார். அது சிறப்பானது. யாரிடமும் அது போன்ற ஒன்று கிடையாது. அது அவனுக்குப் பெருமையளிக்கும் விஷயம். அந்த வைரத்தினால் அவன் நாடு முழுவதும் பிரத்யாதி பெற்றிருந்தான். ஆனால் இந்த மனிதர் 'அதை எறிந்துவிடு' என்கிறார்.

பத்தாயிரம் சந்நியாசிகள் அமைதியாகப் பார்த்துக் கொண் டிருக்கிறார்கள்.... முடியாது என்று கூறுவது சிரமம். விருப்பமின்றி தயக்கத்துடன் அதை எறிந்தான். ஆனாலும் தனக்குள் அதைப் பிடித்து வைத்திருந்தான். அதை அப்பால் எறிந்தான். அது மனதுக்கு ஏற்புடையதாக இல்லை. உயர்ந்த தரமுள்ள ஒரு பரிசை ஏற்கும் முறை அதுவல்ல.

"என் மனைவி கூறியது சரிதான்" என்று எண்ணிய அவன் மலரைப் பரிசாக வழங்கினான். ஆனால் அவன் மகிழ்ச்சியாக இல்லை. இந்தப் பரிசு அவன் கருத்து அல்ல.

புத்தர் மலரைப் பார்த்தார். மறுபடியும் "அதை எறிந்துவிடு" என்றார். இப்போது அது மிகவும் அதிகம். ஒரு புத்தரை எதிர்க்கும் போது நீங்கள் எதிர்த்துப் போராட முடியாது. மலரை எறிவது சிரமம் அல்ல. அதில் பிரச்சினை ஒன்றும் இல்லை. எளிதாக அதை எறிந்து விட்டார். உண்மையில், அவர் சிறிது சந்தோஷம் அடைந்தார். மனைவி கூறியபடி சிறந்த உருவகம், கவித்துவம் கொண்டது தாமரை என்பது உண்மைதான். அது அப்படியே இங்கு நடக்கிறது. வைரம் மட்டுமல்ல; தாமரையும் நிராகரிக்கப்பட்டுவிட்டது. பொருட்கள் இந்த இரண்டு கைகளும் காலியாகிவிட்டன. அவன் சற்று அசட்டுத்தனமாக உணர்ந்தான். இனி என்ன செய்வது?

அவனைப் பார்த்து புத்தர், "எறிந்து விடு" என்று மீண்டும் கூறினார். இப்போது எறிவதற்கு ஒன்றுமில்லை. அது புரிந்துகொள்ள முடியாத நிலை. இந்த மனிதர் பைத்தியம் போல் தெரிகிறார் என்ற சந்தேகம் அவனுக்கு வைரத்தை வீசி எறியச் சொன்னபோது தோன்றிற்று. இப்போது அது உறுதிப்பட்டுவிட்டது. இந்த மனிதர் பைத்தியம்தான். கையில் எதுவுமில்லாதபோது எதை வீச முடியும்?

புத்தரின் தலைமைச் சீடர் ஆனந்தர் சிரிக்கத் தொடங்கினார். அரசன் அசட்டுத்தனமாக உணர்ந்தார். "உனக்கு என்ன ஆயிற்று? ஏன் சிரிக்கிறாய்? நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார்.

"வைரத்தை எறிந்துவிடு" என்ற பொருளில் கூறவில்லை. தாமரையை வீசி விடவும் அவர் சொல்லவில்லை. உங்களிடம் உள்ள நான் என்ற எண்ணத்தை அகற்றி விடுங்கள் என்கிறார். நீங்கள் இங்கே வந்திருக்கிறீர்கள். நீங்கள் ஒரு பேரரசர். எனவே பெரிய பரிசைக் கொண்டு வந்திருக்கிறீர்கள். யாரிடமும் இல்லாத வைரத்தை எடுத்து வந்திருக்கிறீர்கள். நான் என்ற அந்த அகந்தையை அகற்றிவிடுங்கள். நாம் புத்தருக்கு அளிக்கவல்ல ஒரே காணிக்கை அதுவாகத்தான் இருக்க முடியும். வேறு எதுவும் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. ஏற்றுக்கொள்ளத் தக்கதும் அல்ல. வேறு எதுவும் மதிப்புள்ள ஒன்றாக இருக்கவும் செய்யாது" என்றார் ஆனந்தர்.

அந்தக் கணத்தில் அரசனுக்கு ஒரு பெரிய புரிதல் ஏற்பட்டது. புத்தரின் காலடியில் விழுந்தான். அப்போதே அவனுக்கு ஞானம் வந்துவிட்டதாகச் சொல்லப்படுகிறது. காலில் விழுந்ததுமே அகந்தை அகன்றுவிட்டது. உள்ளே யாரும் இல்லை. யாரும் இல்லை என்றால் கடவுள் அங்கு வந்துவிடுகிறார். கடவுள் எப்போதும் அங்கு பின்னால் மறைவாக இருக்கிறார். நீங்கள் அகலும்போது அவர் தோன்றுகிறார்.

இது ஒரு கண்டுபிடிப்பு, சாதனை அல்ல.

**பிரகாசிக்கும் வானில் உயர்ந்தால்**
**சிரஞ்சீவிகள் நடுவே நீங்களும் ஒரு தெய்வமாக இருப்பீர்கள்**

கடவுள் நிலை பெறுவதே உங்கள் தலைவிதி ஆகும். அது ஒரு இலக்கு அல்ல என்பது நினைவிருக்கட்டும். அது ஏற்கனவே நடப்பில் இருக்கிறது. நீங்கள் கடவுளாக இருக்கிறீர்கள். கடவுள் தவிர வேறு அல்ல. முழு இயற்கையும் தெய்விகத்தைப் பொழிந்து கொண்டிருக்கிறது. கடவுள் மரங்களில் பசுமைநிறமாகவும், சிவப்பாகவும், தங்க நிறமாகவும் இருக்கிறார். காற்றில் கடவுள்

இருக்கிறார். தேவதாரு மரங்களைக் காற்று கடக்கும்போது அது பாடலாக எழுகிறது. கடவுள் கடலில் ஆர்ப்பரிக்கும் அலையாக இருக்கிறார். மேகங்கள் மின்னலில் இருக்கிறார். கடவுள் இருக்கிறார். கடவுள்மட்டுமே இருக்கிறார். உங்களிடம் கடவுள் இருக்கிறார். பக்கத்து வீட்டாரிடம் இருக்கிறார். உங்கள் குழந்தையிடம் இருக்கிறார்.

கடவுள் உங்களிடம் இருப்பதை நீங்கள் முதலில் அங்கீகரிக்க வேண்டும். அதன்பிறகுதான் எல்லா இடத்திலும் இருப்பதை அங்கீகரிக்க முடியும். உங்களிடம் இருப்பதை அறிந்தபிறகு அவர் வெளியிலும் இருப்பதை உணரமுடியும். கடவுள் உள்ளும், வெளி யிலும் இருப்பதை அறிய உண்மையை, விடுதலையை முதலில் அறிய வேண்டும். பயனுள்ள அறிதல் அனைத்திலும் சிறந்தது அதுதான்.

இன்று இவ்வளவு போதும்.

**- நிறைவு -**